# ஜெகந்நாதஸ்தலம்.

## கோஷாயி சுவாமிகள்

# அனுபோகவயித்திய

## பிரம்மரகசியம்.

எட்டு காண்டங்கள் சேர்ந்தது.

இஃது

சிறுமணவூர்

முனுசாமி முதலியார் அவர்கள்

எழுதப்பட்டு,

பூவிருந்தவல்லி

பூ. சு. குப்புசாமி முதலியார்

அண்டு சன்ஸ் அவர்களது

ஸ்ரீ சுந்தர விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

—o—

1935.

 [விலை ரூபா [redacted]

H627

உ

தேவிசகாயம்.

# ANUBOGAVYTHIA
## BRAMAHRAHASIAM.

# அனுபோகவயித்திய
## பிரம்மரகசியம்.

முதற்பாகம்.

இஃது,

ஜெகந்நாதஸ்தலம்.

## கோஷாயிசுவாமிகள்

அனுகிரகத்தின்படி

சிறுமணலூர்

முனிசாமிமுதலியாரால்

எழுதிமுடிவுபெற்று,

பூவிருந்தவல்லி,

சுந்தரமுதலியார் குமாரர்

பூ. சு. குப்புசாமிமுதலியார்

அண்டு சன்ஸ் அவர்களது

ஸ்ரீசுந்தரவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை-புரசை.

1934

K. P. Subramaniyam

உ

தேவிசகாயம்.

# முகவுரை.

இந்த அனுபோகவயித்திய பிரம்மரகசியமென்னும் நூலானது வெளிவந்தகாரணமும், இதனுள் அடங்கிய விஷயங்களுக்கும், இங்கனம் முகவுரையெனப் பெர்வகித்து சுருக்கமாக எழுதி முடிக்கப்பட்டிருக்கிறது.

ஜெகந்நாதஸ்தலம் ஸ்ரீமான் கோஷாயிசுவாமிகளால் நெடுவருடங்களாக காசிமுதலான திவ்வியக்ஷேத்திர யாத்திரைவாசிகளுக்கு தருமத்திற்கு உபயோகித்துவந்த சத்தியமான உத்தமமுறைகள் யாவையும், தமது சிஷ்யவர்க்கத்துள் சிரேஷ்டராகிய சிறுமணவைநல்லண்ணபரதேசியாரவர்களுக்கு அனுக்கிரகித்தவண்ணமும் யிதுவரையிலாக தன்முயற்சிகொண்டனுபோகித்துவந்த கைமுறைகளையும். இவரது, மருமகப்பிள்ளை ம-ள-ள-ஸ்ரீ,சிறுமணவூர் முனிசாமிமுதலியாரவர்களால் இன்னும் சிலவற்றை சேர்த்து சுமார் முன்னூறு முறைகளடங்கக் கோர்வையிட்டெழுதி முடித்து அனுபோகவயித்திய பிரம்மரகசியமென்னும் பேரமைந்திருந்த இந்நூலுக்கு போதுமான பொருளைச் சிலவிட்டு அச்சிடுவித்தவராகிய ம-ள-ள-ஸ்ரீ, பூ. சு. குப்புசாமிமுதலியார் அண்டு சன்ஸ், அனுமதியின்றி இந்நூலை பிறர் எவ்விதத்தும் அச்சிடாதபடிக்கு (கெவர்மெண்ட் சட்டப்படி) ரிஜிஸ்டர் காபிரைட் செய்திருக்கின்றது.

{ அனுபோகவயித்திய பிரம்மரகசியம் 8-காண்டங்களும் தயாராயிருக்கின்றது. }

| | | | |
|---|---|---|---|
| முதற்காண்டம் 1-க்கு விலை அணா | 0 | 8 | 0 |
| ஷெ 8-காண்டமும் ஒரேகட்டடம் | 4 | 0 | 0 |

V. P. போஸ்ட்சார்ஜி பிரத்தியேகம்.

எமதுவிலாசம்,

பூ. சு. குப்புசாமிமுதலியார். & சன்ஸ்.
ஸ்ரீசுந்தரவிலாசம் பிரஸ்.
வேப்பேரிபோஸ்ட் மதராஸ்.

உ

தேவிசகாயம்.

# நூலிநுட்பிரிவு.

உ

தேவிசகாயம்.

# அவுஷதங்களின் அட்டவணை.

அவுஷதங்களின் அட்டவணை.

முற்றுப்பெற்றது.



*****************************

உ

தேவிசகாயம்.

பண்டித பாலசிகைஷ

ஆயுள்வேத அரிச்சுவடி யென்னும்

# அனுபோகவயித்திய

# பிரம்ம ரகசியம்.

## விநாயகர் வணக்கம்.

கலி விருத்தம்.

முந்தியுதித்தனை முக்கணர்க்கோர்கனை
தந்திமுகத்தனை தார்புனைத்தோளனை
சிந்துரிரத்தனை சித்திசமேதனை
வந்தனைச்செய்து வழிபடுவாமரோ.

## கடவுள் வணக்கம்.

நால்வகையோனிபேத மெழுவகைப்பிரப்பாய்நீண்ட
கால்வகையுயிர்கள்யாவுங் காத்தளித்தழிக்கவல்ல
நூல்வகைநிரைந்தமெய்யை நுண்மணக்குரவர்க்கெல்லாம்
மேல்வகைகொடுக்குமொன்றை மனதினில்நினைதல்செய்வாம்.

## நூன்முகம் வியாசர்வாக்கு.

நினைப்பதொன்று சொல்வதொன்று நிகழ்த்தலொன்று
நெஞ்சிரக்கமில்லாத சித்தர்செய்கை
வினைத்தொழிலை யொவ்வுமடா குருவில்லாட்டால்
விவரமதை சுட்டுரைக்க ஆசான்வேண்டும்
அனைத்துயிரும் தன்னைப்போல் கருதலன்றி
ஆந்திரியம் விண்டார்க ளாருமில்லை
மனக்களங்க மற்றல்லோ மார்க்கஞ்சொன்னேன்
மகத்தான வேதத்துக் காதிபோனே. (க)

ஆதியாய்வேதங்கள் நான்குஞ்சொன்னேன்
ஆராகச்சாத்திரத்தைப் பிரித்துவைத்தேன்
நீதியாங்கலைகளறு பத்திநாலும்
நிலைகாட்டுந்தத்துவங்கள் தொண்ணூற்ராறும்
பேதியாதேயுலக வாதாரங்கள்
பேசினதாலிழையேனும் பிசகுண்டோ
வாதிமுதல்வைதியர்கள் சிமாளுக
வரைந்திட்டரகசியமாம் முறையைப்பாரே. (உ)
முறைகளிதுவணுவேனும் பிசகிராது
மூர்த்தியொடுசத்தியிடப் பாகமப்பா
திரையொன்றுமில்லாமல் விரித்துப்போட்டோம்
தெரியாதமானிடர்க்கு வேணுமென்றே
நிறைபோலேபேசுமனு போகவித்தை
நெஞ்சிரங்கிசொன்னமொழி செய்துபாரு
பரைசிவனும்வாதிட்டு சொன்னமார்க்கம்
பாரறியவெளியிட்டோன் வியாசன்தானே. (ஙு)
தானென்றஆன்மாவை யறியவேணும்
தங்குமிடம்பொங்குமிடங் காணவேணும்
நானென்றஐவர்களை யடக்கவேணும்
நல்லவர்க்குவல்லுடம்பை யீயவேணும்
கோனென்றமும்மலத்தை யொடுக்கவேணும்
கோடியுகமானாலும் யிருக்கவேணும்
வானென்றவுலகாள யிதுவேவித்தை
வையகத்துவித்தையெல்லா மவத்தைதானே. (ச)
அவத்தையிலேஆவலிட்டு பணத்தைத்தேடி
அந்தகனுக்காளாகிப் பிரவியாழ்ந்து
தவத்தையெல்லாங்கைச்சோர்ந்து வீணாள்போக்கி
தாருடையான்திகிரியைப்போல் தலைகீழாகி
பவத்துக்கேமனமோர்ந்து சின்னாள்வாழ்வாம்
பாரிடத்தேபுக்குவதில் பலந்தானென்றே
சிவத்துக்கேஆளாகும் பெரியவித்தை
செய்வித்தைமெய்வித்தை செய்துபாரே. (ரு)

பாரப்பாமானிடர்கள் பிணிகுடிர்த்தால்
பராபரத்தினருளுனக்கு பலிக்குமன்றே
ஆரப்பாயிவ்விதமாய் போதித்தார்கள்
அனுபோகமானதொரு முறைகளெல்லாம்
கூறப்பாசித்தருட நூலுக்காளுல்
குருஒருவமில்லாட்டால் குப்பையாகும்
நேரப்பாயின்னூலுக் காசான்வேண்டாம்
நீயாகச்செய்துகொண்டு நெறியைக்காறே. (சு)

காரணமேகத்தின் உதவிபோலே
கனசரக்குபாஷாண தித்தியோடு
தீராதுநோய்களுக்கு கைப்பாகந்தான்
திரட்டிறேம்குளிகைசெந் தூரம்பற்பம்
பாரானதைலமெண்ணெ கிருதங்கட்டு
பற்பலவாம்விஷரீக்கு பரணியோடு
பேரானசிறுமணவூர் முனிசாமிச்சொல்
பிரம்மனூல்ரகசியபா யிரமுமுற்றே. (எ)

---

உ

தேவிசகாயம்.

# முதலாவது
# சரக்குகளின் சுத்திவகை
# பரணி.

கன்மத்தால்வந்தபிணி நீக்கவேண்டி
  கருவறிந்தபண்டிதரே கழறக்கேளீர்
வன்மமென்னசரக்குவகை குணங்களாய்ந்து
  வளமானசுத்திசெய்து வழங்கிறோர்க்கு
தன்மயினிவேருண்டோ தரணிமீது
  தாக்கானசொர்க்கபதி தான்கிட்டாதோ
உன்மதமாய்முறைப்பிசகி யுதவும்பேர்க்கு
  ஒருகாலும்மோட்சமில்லை யூணிப்பாரே.

இந்நூலை விசுவாசிக்கும் புத்திமான்களுக்குக் கூறுவது யாதெனில்? இதில் அடங்கிய அவிழ்தபாகங்களின் யாதொன்றையும் கையாட விரும்பும்போது அம்முறைக்கு வேண்டிய திறுசுகள் யாதோ அதை இங்ஙனம் வரைந்துள்ளபடி சுத்திசெய்து (அதாவது) துற்குணங்களை நீக்கி உபயோகித்தலே புத்திமான்களுக்கழகாம், மற்றபடி கடையினின்று வாங்கிய வண்ணம் புடங்கள், அரைத்தல் கட்டல், கட்டல்முதலான மார்க்கங்களாக கையாடி பிரஜைகளுக்கு உபயோகித்தால் விளைக்கிடாகிய விபாதியானது ஒன்றைவிட்டொன்று அதிகரிப்பதுடன் ஜீவஹிம்சையு மேற்படுமாதலால் முதலாவது சரக்குசுத்தி விபரம் கூறலாயிற்று இது போல் ஒவ்வொருசரக்கையும் சுத்திசெய்துக் கொண்டு பிறகு அவிழ்தங்களுக்கு உபயோகப் படுத்தவும்.

லிங்கசுத்தி—லிங்கம் ஒருகட்டியாக வாங்கி தேனில் ஒருநாள்
,, ஊறி முலைப்பாலில் ஒருநாள்ஊறி மறுநாள்
,, யெடுத்து எலுமிச்சம்பழரசம் குப்பைமேனி
,, ரசம்முலைப்பாலும் சமமாய் கலந்துக்கொண்டு

,, அடுப்பின்மேல் சட்டிவைத்து அதில்மேல்படி
,, லிங்கத்தை வைத்து புகையாமல் சுருக்குக்
,, கொடுக்கவும் சுத்தியாம் இதற்குலிங்கக்கட்
,, டென்றும் பெயர்.

---

வீரசுத்தி—வீரத்தை ஒரு யிளநீரில் (கவ) விராகநிடை கற்பூ
,, ரம் போட்டு கலக்கி சட்டியில் ஊத்தி அடுப்பி
,, லேத்தி ஷை வீரத்தை தொலாந்திரமாகக்
,, கட்டி யெரித்து யெடுத்துக்கொள்ளவும்.

---

பூரசுத்தி—பூரத்தை வெற்றிலை மிளகு கியாழமிட்டு அதில்
,, கிளிக்கட்டி மூன்றுநாள் ஊறவைத்து யெடுத்
,, துக் கொள்ளவும்.

---

முதார்சிங்குசுத்தி—முதார்சிங்கியை வெள்ளாட்டு கோமியத்
,, தில் ஒரு நாழிகை கொதிக்க வைத்து யெடுத்
,, துக் கொள்ளவும்.

---

கெவுரிசுத்தி—வெள்ளை கெவுரியைக் கொண்டுவந்து பசும்
,, பால் அல்லது சாணிப்பால் சுண்ணும்பு நீர்
,, மிளகு கியாழம் இன்னுன்கில் எதிலாவது
,, தொலாந்திரமாகக்கட்டி யெரித்தெடுத்துக்
,, கொள்ளவும் பிறகு பன்றிப்பாலில் கிளிக்
,, கட்டி அவித்தெடுத்துக் கொள்ளவும் சுத்தி
,, யாச்சு.

---

மனேசிலைசுத்தி—மனேசிலையை காடியில் கிளிக்கட்டி யெடுத்
,, துக் கொள்ளவும் வெள்ளாட்டு மூத்திரத்தில்
,, தொலாந்திரம் கட்டி யெரித்தெடுத்துக் கொள்
,, ளவும்.

---

ரசம்சுத்தி—சூதத்தை அருக்கன்பாலில் ஒருநாள்வூரி செங்
,, கத்தான் கொட்டை சற்கரை யிதுகளில்
,, அறைத் தெடுக்கவும்.

வங்கசுத்தி—வங்கத்தை யிலுப்பைபெண்ணெயிலாகிலும் தே
,, ங்கா பெண்ணெயி லாகிலும் நவாச்சாரத்
,, தூள் தூவி அதில் ஏழுதிரம் உருக்கிச் சாய்க்
,, கவும் அல்லது மோர்காடி கோமியம் பழரசம்
,, இதுகளிலும் உருக்கிசாய்க்கலாம் இப்படியே
,, நாகத்தையும் சுத்திசெய்துக் கொள்ளவும்.

கருவங்கசுத்தி—கருவங்கத்தை வெள்ளாட்டு மூத்திரத்தில்
,, பிரண்டைவேர் அரைத்துப்போட்டு நல்லெண்
,, ணெய்விட்டு கலக்கிக்கொண்டு அதில் பத்து
,, திரம் உருக்கிச் சாய்க்கவும் சுத்தியாம்.

நாகசுத்தி—நாகத்தை ஆட்டுநெய் கொண்டுவந்து உருக்கி
,, சிறுநீர் பழரசம் கூட்டி சாரம் கல்சுன்ன
,, மிட்டு கலக்கிவைத்துக்கொண்டு அதில் நாகத்
,, தை பத்துதிரம் உருக்கிச்சாய்க்கவும் சுத்தி
,, யாம்.

கல்னார்சுத்தி—கல்னாரை கழுதைமூத்திரத்தில் மூன்று நாழி
,, கை ஊரினபின் கழுவி யெடுத்துக் கொள்ள
,, வும் சுத்தியாம்.

சிலாசத்துசுத்தி—சிலாசத்தை பழரசத்தில் போட்டு கொதிப்
,, பித்துயெடுத்து எருக்கன்பாலில் மூன்றுநாழி
,, கை ஊரியபின் கழுவி யெடுத்துக்கொள்ளவும்
,, அல்லது அல்லிப்பூ ரசத்தில் ஊரியும் யெடுக்
,, கலாம் ஆவின்பாலில் தொலாந்திரம்கட்டி
,, எரித்தும் யெடுத்துக் கொள்ளலாம்.

கெருடப்பச்சைசுத்தி—கெருடப் பச்சையை பயறுபோல்
,, செய்து கிளிக்கட்டி குமரிச்சாற்றில் (௩௰)
,, நாழிகை ஊரியபின் யெடுத்துக்கொள்ளலாம்

சீனம்சுத்தி—பசும்பாலில் மூன்றுஜாமம் ஊரியபின் எடுத்
,, துக் கொள்ளவும் சுத்தியாம்.

படிகாரம்சுத்தி—எருமைசாணத்தில் கிளிக்கட்டி வைத்து
„ எடுத்துக்கொள்ளவும் அல்லது சிறுநீரில்
„ மூன்றுநாளூரவைத்து எடுத்துக் கொள்ளவும்

வெண்காரம்சுத்தி—வெண்காரம் பொரித்துக்கொள்ள வே
„ ணுமானல் காடியிலாவது அல்லது பழரசத்
„ திலாவது அரைத்து பில்லைதட்டி உலர்த்தி
„ யெடுத்துக் கொள்ளவும்.

முடிதாரம்சுத்தி—பனங்கள்ளு படி நாலில் கிளிக்கட்டி யெ
„ ரித்து யெடுத்துக் கொள்ளவும்.

பால்துத்தம்சுத்தி—கிளிக்கட்டி சிறுவர்கள் மூத்திரத்தில்
„ ஏழுநாள் ஊரினபின் பசும்பாலில் இரண்டு
„ ஜாமம் ஊரவைத்து எடுத்துக்கொள்ளவும்

துரிசிசுத்தி—தயிரிலரைத்து அதைதட்டி ஒடுகாயவைத்து
„ அதில் பிரட்டி எடுத்துக்கொள்ளவும் அல்லது
„ தயிரில் ஒருஜாமம் ஊரியெடுக்கவும்.

மடல்துத்தம்சுத்தி—வெண்ணெய் அல்லது தயிர்கற்றாழை
„ சாற்றில் ஊரவைத்து எடுத்துக்கொள்ளவும்.

பச்சைதுரிசிசுத்தி—பசுங்கோமியத்தில் யெரித்துக்கழுவி
„ உலர்த்தி எடுத்துக்கொள்ளவும்.

பவழப்புத்துசுத்தி—பசும்மோரில் கிளிக்கட்டிவிட்டு நாலு
„ நாழி யெரித்து எடுத்துக்கொள்ளவும்.

அஞ்சனக்கல்சுத்தி—புளியாரை ரசத்தில் ஒருநாள் ஊரி
„ யெடுத்துக்கொள்ளவும்.

கல்மதம்சுத்தி—கல்மதத்தை சிறுநீரில் கழுவி யெடுத்துக்
„ கொள்ளவும்.

நாபிசுத்தி—பருத்தியிலை ரசத்திலூரி முத்திலைக்குள் வைத்து
,, சுத்தி கும்பியில்சொரிகி ஒருநாழி பொருத்
,, தெடுத்து சிந்தில் கிபாழுத்தில் தொலாந்திரங்
,, கட்டி எரித்து பிறகு யெருக்கன் பாலில்
,, சற்றுஊரி கோமியத்தில் கழுவி எடுத்துக்
,, கொள்ளவும்.

---

நேர்வாளசுத்தி—எருமைசாணத்தில் காடிவிட்டு கலந்து
,, அதில் வாளத்தைப்போட்டு கொதிக்கவைத்
,, தெடுத்து நஞ்சுநீக்கி அதாவது அந்த பருப்
,, பைப்பிளந்து முளைநீக்கி காடிமோர் பழரசம்
,, கலந்து அதில் கொதிக்கவைத்து எடுத்துக்
,, கொள்ளவும்.

---

தாளகசுத்தி—தாளகத்தை சிறுதுண்டுகளாகச்செய்து சிறிய
,, மொந்தைக் குடுவையில்விட்டு மேலே மூடும்
,, ஓட்டில் மூனுதுவாரஞ்செய்து கரிநெருப்பின்
,, மீது வைத்து விசுருகையில் முதல்கருப்பு
,, புகை வந்து பிறகு சிகப்பு புகைவருங் காலத்
,, தில் எடுத்துக்கொள்ளவும்.

---

தாளகசுத்தி—தாளகத்தை சுண்ணாம்புக்குள் வைத்து
,, கழுதை மூத்திரம்விட்டு பேழுதிரம் தாளித்து
,, எடுத்து சுன்னநீர் கொள்ளுக் கிபாழம் தயிர்
,, * பூசினிக்காய் நீர்காடி அகத்திக்கீரை விரை
,, தயிலம் இவைகள் கூட்டி இரண்டுஜாமம்
,, சுருக்கு கொடுக்கவும் காங்கை சாற்றில்
,, இரண்டுஜாமம் சுருக்கு கொடுத்து யெடுத்து
,, சத்தி சாட்டரணைவேர் குக்கில் இதை முருங்
,, கிலை ரசத்தாலரைத்து கவசம் செய்து லகு
,, புடமிட மிகுந்தசுத்திபாம் பிறகு சகல அவிழ்
,, தத்திற்கும் உபயோகப்படுத்தலாம்.

---

* பூசினிப்பழத்தை மேலேகீரி (க) விராகனிடையிர் துப்பு போட்டு அடியில்பெழுத்தாணியால் துவாரம்செய்து மேலேதூக்கிக் கட்டி அடியில் பீங்கான்வைத்து யிரங்கும் நீர் பெடுத்துக்கொள்ளவும்.

பாஷாணசுத்தி—அறுபத்திஞலு பாஷாணங்களும் சுத்தி
„ செய்யவேண்டில் குப்பைமேனிரசம் கற்றாழம்
„ பால் சிறுநீர் பழரசம் செம்பருத்தி வெத்திலை
„ ரசம், வகைக்கிப்படி-க, முலைப்பால்படி-வ,
„ இவைகளை பாண்டத்திலிட்டு அதில் பாரை
„ யுப்பு வெடிகாரம் படிகாரம் நவாச்சாரம்
„ வகைக்குப்பலம்-வ, தூள் செய்து கலந்து
„ கிளிக்கட்டியிட்டு நிழலாக காற்றில்லாவிடத்
„ தில் பதினைந்துநாள் வைத்தெடுத்து காடியில்
„ ஊரவைத்து யெடுத்துக்கொள்ளவும்.

---

சுச-பாஷாணமும்ஏகசுத்தி—மேனிரசம் தக்காளிரசம் ஊ
„ மத்தன்ரசம் பழரசம் சிறுநீர் காடி சமனுகக்
„ கலந்து இதில் உப்பு சுன்னம் வெடியுப்பு
„ நவாச்சாரம் சீனம் வகைக்குப்பலம்-க, தூள்
„ செய்து கலந்து சரக்குகளை கிளியாய்கட்டி
„ மண்டலம்யிட்டு எடுத்து உணர்த்திக்கொள்ள
„ மிகுந்தசுத்தியாம்.

---

இரும்புசுத்தி—இரும்புப்பொடியை ஒருநாள் பழரசத்தில்
„ ஊரவைத்து எடுத்து மீறுநாள் எள்ளெண்
„ ணெயில் ஊரவைத்தெடுத்து அயச்சட்டியில்
„ போட்டு வருத்து காடியில்கழுவி வேலம்பட்
„ டைகியாழத்தில் கொதிப்பித்து திரும்பவும்
„ காடியில்கழுவி யெடுத்துக் கொள்ளவும்.

---

காந்தசுத்தி—காந்தத்தை பழரசத்திலும் காடியிலும் மோரி
„ லும் கொதிக்கவைத்தெடுத்து பிறகு சாணி
„ நீரில் ஏழுதிரம் காய்ச்சி காய்ச்சி துவைக்க
„ வும் சுத்தியாம்.

அயத்தோட்டிசுத்தி—பசும்பாலில் நான்குஜாமம் நெய் தேன்
,, இவைகளின் எட்டுநாள் ஊரி யெடுத்துக்
,, கொள்ளவும்.

---

தோட்டிசுத்தி—நாலும் முலைப்பால் வெள்ளாட்டுப் பாலி
,, லும் தனித்தனி பத்துநாழிகை ஊரவைத்து
,, யெடுத்துக்கொள்ளவும்.

---

தோட்டிபாஷாணம்—துண்டு துண்டாய் நருக்கி கிளிக்கட்டி
,, நெல்லில் அவித்து யெடுத்துக்கொள்ளவும்.

---

பொன்னிமிளை—பொன்னிமிளையை மூன்றுநாள் காடியில்
,, ஊரியபின் கிருஷ்ண அபிரேக்குநாள் ஒருபடி
,, யெடுத்து மூணுபடி கோமியத்தில் வேகவைத்
,, தெடுத்து உலர்த்தி நெல்லு சேர்த்து கிளிக்
,, கட்டி காடியில் தோய்த்து யிரங்குந் தெளிவை
,, நீக்கி உணர்த்திக் கொள்ளவும்.

---

சகல்திரபேதிசுத்தி—நாரத்தங்கா ரசத்தில் ஊரவைத்து
,, யெடுத்துக்கொள்ளவும்.

---

செங்கோட்டைசுத்தி—ஜலத்தில் ஊரவைத்து மறுநாள்
,, மூக்கைவெட்டி நீக்கியெடுத்துக்கொள்ளவும்.

---

சிவதைசுத்தி—பசும்பாலில் அவித்து யெடுத்து உணர்த்தி
,, வைத்துக்கொள்ளவும்.

---

அமுக்கிராசுத்தி—ஆவின்பாலிலவித்து எடுத்துக் கொள்ள
,, வும்.

---

சுக்குசுத்தி—மேல்தோல்சீவி சுண்ணும்புபூசி உலர்த்தி யெ
,, டுத்துக்கொள்ளவும்.

மிளகுசுத்தி—புளித்தமோரில் மூன்றுநாள் ஊரி ஒட்டில்
„ வருத்தெடுத்துக் கொள்ளவும்.

திப்பிலிசுத்தி—திப்பிலியை பழரசத்தில் ஊரியெடுக்கவும்.

ஓமம்சுத்தி—ஓமத்தை சுண்ணும்பு தெளிவு நீரில் ஒருஜாமம்
„ ஊரவைத்து உலர்த்தியெடுக்கவும்.

இருசீரகம்சுத்தி—சீரகம்கருஞ்சீரகம் இதுகளை சுண்ணும்பு
„ நீரில் ஏழுஜாமம்வூரி உலர்த்தியெடுக்கவும்.

ஊமத்தின்விரைசுத்தி—ஊமத்தன் விரையை ஒருஜாமம் ஜெ
„ லத்தில் ஊரவைத்து எடுத்துக்கொள்ளவும்.

எட்டிக்கோட்டைசுத்தி—எட்டிக்கொட்டையை நெல்லில்
„ அவித்து சிறுகீரை ரசத்தில் ஒருஜாமம் ஊரிய
„ பின் தேத்தாங்கொட்டைரசத்தில் வேவித்து
„ யெடுத்துக்கொள்ளவும்.

கோம்பரக்குசுத்தி—நல்ல ஜெலத்தில்போட்டு அடுப்பில்
„ வைத்து யெரித்தெடுக்கவும் இப்படி மூன்று
„ தபா யெரித்தெடுத்துக் கொள்ளவும்.

மாசிக்காசுத்தி—பசும்நெய்யில்வருத்து வெடித்தபிறகு யெ
„ டுத்துக்கொள்ளவும்.

எண்ணெய்சுத்தி—சகலவித எண்ணெய்களும் நல்லஜெலத்
„ தில் விட்டு நாலுநாழிகைசென்று யெடுத்துக்
„ கொள்ளவும்.

அமுக்குராவேர்சுத்தி—ஆவின்பாலில் கொஞ்சம் அவித்து
„ யெடுத்துக்கொள்ளவும்.

இன்னு மனேக முறைபாகங்களை இரண்டாங்
காண்டத்தில் வெளியிட்டிருக்கின்றோம்.

உ

தேவிசகாயம்.

# இரண்டாவது

# மாத்திரை வகைபரணி.

## பேதிக்கி பகீரி மாத்திரை.

| | |
|---|---|
| ரசம் | பலம்-வ |
| நெல்லிக்காகெந்தகம் | ,, வ |
| வங்காரம் | ,, வ |
| சுத்திசெய்தநேர்வாளம் | ,, வ |

இந்த நான்கையும் இளநீர்விட்டு அறைத்து குண்டு மணிப்பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி புட்டியில் வைத்துக்கொள்ளவும் (சு) மாதத்து குழந்தைகட்கு ஒரு மாத்திரை முலைப்பாலில் உரைத்துக்கொடுக்க நாலுதிரம் பேதியாகும் ஒருவயது குழந்தைகட்கு இரண்டுமாத்திரை கொடுக்கலாம் அல்லது (கூ) மாத்திரையாம் பெரியவர்களுக்கு தேனில் மூன்று மாத்திரை கொடுக்கலாம் மிளகு நீர்சாதஞ் சாப்பிடவும்.

சுரத்திற்கு இஞ்சிசுரசத்தில் ஒரு மாத்திரை பெரியவர்களுக்கு இரண்டுமாத்திரை கொடுக்கவும், பத்தியம் அரையுப்பு புளியும் முருங்கை கத்திரிப்பிஞ்சு சேர்த்துக் கொள்ளவும்.

---

## இராத்திரிபேதிக்கு.

| | |
|---|---|
| வாளம் | பலம்-வ |
| பூரம் | ,, வ |
| ரசபஸ்பம் | ,, வ |

இரசபஸ்பம் செய்ய சாத்தியப்படாவிட்டால் மருந்துக் கடையில் (கால்மல்) யென்று கேட்டால் கொடுப்பார்கள் அதைவாங்கிவந்து மற்றமூன்று தினுசையும் ஒன்றுப்க்

கல்வத்திலிட்டு ஒருபிடி சாதம்போட்டு அரைத்து மிளகு பிரமாணம் மாத்திரைகளாகச் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும் இராத்திரியில் சாதஞ்சாப்பிட்டு படுக்கும்போது கொஞ்சம் சாதத்தில் முழுமாத்திரையாக திரேகத்திற்குத் தக்கினவாறு ஒன்று அல்லது 2-மாத்திரை வைத்து முழுங்கிவிடவும் மூன்றுவது ஜாமமுதல் பேதியாகும் திரேகத்திற்கு அனுப்பிராது காலையில் சூப்புசாதம் சாப்பிடவும்.

---

## பேதிமாத்திரை.

| | |
|---|---|
| சுக்கு | லிங்கம் |
| திப்பிலி | பூரம் |
| மிளகு | வாளம் |

இந்த ஆறுதினுசுகளில்வாளத்தைமாத்திரம் உ௦-பலம் யெடுத்துக்கொள்ளவும், மற்ற ஐந்து தினுசுகளையும் சமமாய்க்கலந்து ஐந்துங் உட்பட (கவ) பலம் நிறுத்து ஆறு வகையும் ஒன்றுபட கல்வத்திலிட்டு (ாஇய) எலுமிச்சம் பழ ரசம்விட்டு அரைக்கவும் ரசம் கொள்ளாவிட்டால் அப்போதைக் கப்போது உலர்த்தி பிறகுசார்விட்டு அரைத்து இப்படியே ஷை ரசம் பூர்த்தியானபிறகு மிளகுபிரமாணம் மாத்திரைகள்செய்து நிழலில் உலர்த்தி புட்டியில் வைத்துக் கொள்ளவும் வெந்நீரில் இரண்டு மாத்திரைசாப்பிட பேதியாகும்.

(பத்தியம்) கத்திரி, முருங்கை, அவரை, இரைச்சி, சூப்பு ஆகும், அந்தியில் மிளகு, சுக்கு, கியாழம் பேதி யதிகமானல் மோர்சாதஞ் சாப்பிடவும்.

---

## சுகபேதிமாத்திரை.

| | | |
|---|---|---|
| நல்லஜெலத்தில்ஊறிய கோதிமிரவை | பலம் | -கவ |
| சுத்திசெய்து முளைநீக்கியவாளம் | ,, | வ |
| பூரம் | ,, | வ |
| சுக்குத்தூள் | ,, | வ |

இவைகளைக் கல்வத்திலிட்டு இரண்டுபலம் பன்னீர் விட்டு அரைத்து பயறுபோல் மாத்திரைசெய்து நிழலி லுலர்த்தி வைத்துக்கொள்ளவும் (அநுபானம்) குழந்தை களுக்குமுலைப்பாலிலும்,பெரியவர்களுக்குசோம்புதிராட்சி சுக்கு இரத்தகிபாழங்களில் திரேகதிடந்தெரிந்து இரண்டு அல்லது மூன்றுமாத்திரை கொடுக்கவும் மனக்களிப்புடன் சுகுணமாய்பேதியாகும். ———

## குழந்தைகட்கு திந்திப்புபேதி.

| | |
|---|---|
| திராட்சப்பழம் | பலம்-ரு |
| கற்கண்டு | ,, ரு |
| கடுகுரோகணி | ,, ௩ |
| சுத்திசெய்தவாளம் | ,, ரு |
| சுக்கு | விராகனிடை-௧ |
| ஓமம் | ,, ௧ |
| மிளகு | ,, ௧. |

இவையெல்லாம் கல்வத்திற்போட்டு பசுநெய் பலம்உ புதுதேன் பலம்-௫௰, கொஞ்சங் கொஞ்சமாய்விட்டு (௩) ஜாமம் அரைத்து கல்ஜாடியில் வைத்துக்கொள்ளவும், குழந் தைகளுக்கு ஒருகாசியளவு பெடுத்து அரிசி அடையில் தட விக்கொடுக்கவும் பேதியாகும், பெரியவர்களுக்கு காலணு யிடை சாப்பிடவும் பேதி பதிகமானுல் மோருசாதம்சாப் பிடவும், [illegible]சாபத்தியம், சாபரட்சை வசம்பு கியாழம் கொள்ளவும். ———

## குழந்தைகளுக்கு மாந்தமாத்திரை.

| | |
|---|---|
| சுக்கு | விராகனிடை-௧ |
| திப்பிலி | ,, ௧ |
| மிளகு | ,, ௧ |
| * ஆமைபோடு | ,, ௧ |
| ஓமம் | ,, ௧ |
| கடுகுரோகணி | ,, ௧ |
| வாய்விளங்கம் | ,, ௧ |

| | |
|---|---|
| பெருங்காயம் | விராகனிடை-க |
| இந்துப்பு | ,, க |
| நேர்வாளம் | ,, க |

இந்தபத்துவகையும் சேர்த்து கல்வத்திலிட்டு உத்தாமணி சார்விட்டு அரைத்து குண்டுமணிப்பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்திவைத்துக்கொள்ளவும். (இதற்கனுபானம்) அகத்திக்கீரையை வதக்கி சார்பிழிந்து அதில் ஒருமாத்திரை அல்லது (கஉ) மாத்திரையாக கொடுக்கலாம். கலியானமுருக்க யிலையை வதக்கி அதின் ரசத்திலும் கொடுக்கலாம்.

## தீரும்வியாதிகள்.

அள்ளுமாந்தம், முக்குமாந்தம், சுரம்இதுகள் தீரும். இரண்டொருதகுதி வலசுத்தியாகும். பத்தியம் புளிநீக்கவும்.

* மருந்து கூட்டும்போது ஆமைபோட்டை மாத்திரம் உத்தாமணிச் சாற்றில் ஒருராத்திரி பகல் ஊரவைத்தெடுத்து சேர்த்துக்கொள்ளவும்.

## வீரசஞ்சீவிமாத்திரை.

வீரம்உ-பலம் வாங்கி வவத்துக்கொண்டு கெட்டி மிளகு பலம்-ரு, கொண்டுவந்து அரைபடி ஜலத்திலிட்டு அடுப்பிலேற்றி கியாழம்வைத்து கால்படியாக சுண்டவைத்திரக்கி அந்தக் கியாழத்தை ஒருபுட்டியில் வடிகட்டிக்கொண்டு அந்த மிளகை இரண்டுபங்காக்கி ஒருபங்கெடுத்து வீரத்துடன் கலந்து கல்வத்திலிட்டு ஷை கியாழத்தைவிட்டு பதினாறு ஜாமம் அரைத்து உளுந்துப்பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி புட்டியில்போட்டு வைத்துக்கொள்ளவும்.

(அனுபானம்) இஞ்சிசுரசம் தேன் யிதுகளில்கொடுக்கலாம், ஜன்னியைச்சார்ந்த சுரங்களுக்கு முலைப்பாலில் கொடுக்கலாம், திரேகத்திற்கு தக்கினவாறு ஒன்று அல்லது இரண்டு மாத்திரை கொடுக்கவும் (கூச) காய்ச்சலுங் கேழ்க்கும் இச்சாபத்தியம்.

## ஜன்னிபாதவைரவம்.

| | | |
|---|---|---|
| லவுங்கப்பட்டை | விராகனிடை- | உ0 |
| ஏலரிசி | ,, | உ0 |
| சுக்கு | ,, | ரு |
| பூரம் | ,, | உ0 |
| லிங்கம் | ,, | உ0 |
| சுத்திசெய்தவாளம் | ,, | உ0 |

இந்த ஆறுவகையுங் கல்வத்திலிட்டு வெந்நீர்விட்டரைத்து மிளகுப் பிரமானம் மாத்திரைசெய்து நிழலில் உலர்த்தி புட்டியிற்போட்டு வைத்துக்கொள்ளவும், (இதற்கு அநுபானம்) சுக்குகியாழம் முலைப்பால் தேன் இந்தமூன்றில் எதிலாகிலும் ஒருமாத்திரை அல்லது இரண்டுமாத்திரை திரேகதிடமும் நோய்மார்க்கத்தையும் அறிந்து கொடுக்கவேண்டியது இச்சாபத்தியம், சீதளபதார்த்தம் தள்ளவும்

---

## ஏலாதிமாத்திரை.

| | | |
|---|---|---|
| ஏலக்காய் | லவுங்கம் | கோரைக்கிழங்கு |
| அதிமதுரம் | வெட்டிவேர் | வெள்ளைக்கடுகு |
| சடாமாஞ்சி | சந்தனத்தூள் | தேவதாரி |
| சுக்கு | நன்னாரிவேர் | திராட்சப்பழம் |
| கோரோஜனம் | தாளிசப்பத்திரி | நிலப்பனங்கிழங்கு |
| இலுப்பைப்பூ | கடுகுரோகணி | அரிசித்திப்பிலி |

இந்ததினுசுகள் வகைக்கு (கவ) விராகனிடையாக வாங்கி பொடிசெய்து செவ்விளநீர்விட்டு அரைத்து குண்டு மணிப்பிரமானம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி புட்டியில் போட்டு வைத்துக்கொள்ளவும், (இதற்கநுபானம்) இஞ்சிசுரசம் அல்லது தேன் யிதுகளில் கொடுக்கவும், பத்தியம் புளி நல்லெண்ணெய் கடுகு ஆகாது.

---

## மலஜெலகட்டுக்கு மாத்திரை.

| | | |
|---|---|---|
| ரசகற்பூரம் | பலம் - | ரு |
| பூநீக்கிபலவுங்கம் | ,, | ௩ |
| ஓமபொட்டு | ,, | ௩ |

இந்த மூன்றுவகையும் ஒன்றுபடக்கூட்டி தும்மட்டிக் காய்ரசத்தில் ௰உ-ஜாமம் அரைத்து பட்டாணி பிரமாணம் மாத்திரைசெய்து வைத்துக்கொள்ளவும் (இதற்கு அனுபானம்) சோம்பு பலம்-க, திராக்ஷி பலம்-க, இவ்விரண்டுங் கியாழஞ்செய்து அதில்-க, அல்லது கஉ-மாத்திரை உரைத்துக் கொடுக்க உடனே மலஜெலம் உதயமாகும்.

---

## பயிரவ மாத்திரை,

| | | |
|---|---|---|
| சுக்கு-மிளகு | திப்பிலி | லிங்கம் |
| நெல்லிக்காகெந்தகம் | வங்காரம் | வசநாபி |

இந்த தினுசுகள் ஒன்றுக்கு விராகனிடை-க, ஆக வாங்கி முதலாவது லிங்கத்தை கம்மாறு வெற்றிலைச்சாற்றில் ங-நாள் ஊறவைத்தெடுத்து அதேசாற்றில் அஞ்சுநிமிஷம் சுருக்குகொடுத்து எடுத்துக்கொள்ளவும். இரண்டாவது வசநாபியை பசுங்கோமியத்தில் ஒருநாளூறவைத்து நல்ல ஜெலத்தில்கழுவி மேல்பாணி சீவிவிட்டு துண்டு துண்டாக நறுக்கி வெய்யலில் உலரவைத்து பிறகு எடுத்து எல்லா தினுசுகளுங் கலந்து கல்லுரலில் யிடித்து கல்வத்திலிட்டு (௱௫௰) எலுமிச்சம் பழரசம்விட்டு அரைத்து சிறுபயறு மிளகுபிரமாணம் மாத்திரைசெய்து புட்டியில் வைத்துக் கொள்ளவும் (இதற்கு அனுபானம்) ஜன்னிக்கு ஒருமாத்திரையும் இரண்டுமிளகையும் வெத்திலையில் வைத்துமடித்து சாப்பிடவும் கழுத்துநோய், தலைநோய், ஜன்னிக்கு இந்த மாத்திரையை வதக்கின வெத்திலைசார் அல்லது முலைப்பாலில் உரைத்து கலிக்கம்போடவும். பெரியவர் சிரியவர் குழந்தைகளுக்கும் பித்தகாய்ச்சல், வாதகாய்ச்சல், சீதளம், சுரம் இதுகட்கு முலைப்பால் துளசி விஷ்ணுகிரந்தி ஆடாதோடை கண்டங்கத்திரி இந்தரசங்களில் ஒருமாத்திரை கொடுக்கலாம் புளிதள்ளவும்.

---

## இராமபாணக் குளிகை.

பெரும்பாவக்காயைப் பிளந்து அதினுள் வெள்ளை பாஷாணத்தைவைத்து நூல்சுற்றி பசுவின்பால் அறைபடி

அளந்து பழகின மண்பாத்திரத்திலிட்டு அதில் டி பாவக்காயைப்போட்டு அடுப்பேற்றி பால்வற்றுமளவும் எரித்து பிறகு பாவக்காயைபெடுத்து ஆரவைத்து பாஷாணத்தை பெடுத்துக்கொண்டு ஜாதிலிங்கத்தை பாஷாணத்திற்குக் கவசமாய்ப்பூசி வைத்துக்கொண்டு வேறுபாவக்காய் கொண்டுவந்து பிடித்து சார்பிழிந்து அந்தச்சாற்றினுல் கவசித்திருக்கும் மருந்தை ஒருஜாமம் அரைத்து மிளகுபிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும் (இதற்கு அநுபானம்) சீதசுரத்திற்கு வெந்நீரில் ஒருமாத்திரையிடவும், குளிர்சுரத்திற்கு இஞ்சிசுரசத்தில் ஒரு மாத்திரையிடவும், ஜன்னிசுரத்திற்கு முலைப்பாலில் இரண்டுமாத்திரையிடவும் பத்தியம் உப்பு புளி தள்ளவும்.

---

## ஜுரபரணி அல்லது முறைக்காய்ச்சலுக்கு.

சங்குபாஷாணம் அல்லது வெள்ளைபாஷாணத்தைக் கொண்டுவந்து துண்டுதுண்டாய்ப் பொடித்து பெரியபாவக்காயைக்கீறி விரைநீக்கிவிட்டு அதனுள் இந்தபாஷாணத்தை வைத்து நூல்சுற்றி சீலைமூடி செம்மண் கவசம்செய்து (ு) வரட்டியில் புடம்போடவும் மேல்துணி சாம்பலானபிறகு மருந்தை பெடுத்து சாம்பலைதட்டிவிட்டு அந்தபாவக்காயுடன் கல்வத்திலிட் டரைக்கவும் இளகாவிட்டால் வேவித்த பாவக்காய் சாறுவிட்டு அரைத்து சிறுசுண்டக்காயளவாக உருண்டைசெய்து நிழலில் உலர்த்தி புட்டியில் வைத்துக்கொள்ளவும் (இதற்கு அநுபானம்) ஒருமாத்திரை வாயில் போட்டுக்கொண்டு மிளகு ஷியாழஞ்சாப்பிடவும் இச்சா பத்தியம்.

---

## காய்ச்சலுக்கு குங்குமப்பூ மாத்திரை.

| | |
|---|---|
| குங்குமப்பூ | ஜாதிக்காய் |
| சுக்கு | கிராம்பு |
| திப்பிலி | ஏலம் |
| மிளகு | சந்தனத்தூள் |

| | |
|---|---|
| கடுக்காய் | தேவதாரம் |
| தான்றிக்காய் | கடுகுரோகணி |
| நெல்லிக்காய் | கோரோசனை |

இந்தப் பதினொன்குவகையில் முதலாவது குங்குமப்பூ பலம்-க, கடைசியிலுள்ள கோரோசனைபலம்-வ, மற்றதினுசுகள் வகைக்கு அரைபலமாகவாங்கி சகலமும் ஒன்றுபடுத்தி எலுமிச்சம்பழரசத்தில் ஆறுஜாமம் அரைத்துப் பிறகு இஞ்சிரசத்தில் நாலுஜாமம் அரைத்து பிறகு கண்டங்கத்திரி பழரசத்தில் இரண்டுஜாமம் அரைத்து சிறுபயறு பிரமாணம் மாத்திரைசெய்து நிழலில்உலர்த்தி புட்டியில் வைத்துக் கொள்ளவும் காய்ச்சலுக்குத் தக்கவாறு தேன் முலைப்பால் இப்பேர்க்கொற்ற அனுபானங்களிலிட சிதளம் வறட்சி முதலானவைநீங்கும்.

---

## சகலகாய்ச்சலுக்கும் லிங்கமாத்திரை.

லிங்கம்(கவ)விராகனிடை, திப்பிலி(உ)விராகனிடை பசும்பாலில் ஒருஜாமம் அரைத்து பயறளவு மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும் வேண்டிய போது உலர்ந்த இஞ்சிகியாழத்திலிட சகலகாய்ச்சலும் நீங்கும். பத்தியம் சுட்டபுளி வருத்தவுப்பும் கூட்டவும்.

---

## கோரோஜன மாத்திரை.

| | |
|---|---|
| கோரோஜனம் | ஜாபத்திரி |
| சூதம் | கருஞ்சீரகம் |
| கற்பூரம் | ஜாதிக்காய் |
| திப்பிலி | ஓமம் |
| லவுங்கம் | அதிமதுரம் |
| கோஷ்டம் | அக்கிராகாரம் |
| நன்னாரிவேர் | மிளகு |

மேற்கண்ட தினுசில் கோரோசனை பலம்-வ, மற்றதினுசுகள் வகைக்குப் பலம் அரிக்காலாக வாங்கி மணத்தக்காளி

ரசத்தால் ஒருஜாமம் அரைத்து பயறுபிரமாணம் மாத்திரை செய்து தேனில் ஒருமாத்திரை யிழைத்துக் கொடுக்க சுரம் சிதளம் கபங்கள் தீரும் இச்சாபத்தியம்.

## ஜன்னிமுதலானதற்கு ஆநந்தபயிரவமாத்திரை.

| | |
|---|---|
| நாவிக்கிழங்கு | கெந்தகம் |
| சூதம் | ஜாதிலிங்கம் |
| மனோசிலை | வெண்காரம் |

இந்ததிறுசுகள் வகைக்கி விராகனிடை-க, வாங்கி எலுமிச்சம்பழரசத்தில் இரண்டுஜாமம் அரைத்து சிறுபயரளவு மாத்திரைசெய்து வைத்துக்கொள்ளவும் ஜன்னிக்கு முலைப்பாலிலும், குளிர்சுரத்திற்கு இஞ்சிச்சாற்றிலும் கொடுக்கத் தீரும்.

## கஸ்தூரிமாத்திரை.

| | |
|---|---|
| கஸ்தூரி | ஏலக்காய் |
| குங்குமப்பூ | கற்பூரம் |
| கோரோஜனை | ஜாதிக்காய் |
| பச்சைகற்பூரம் | ஜாபத்திரி |
| லவுங்கம் | மிளகு |
| வால்மிளகு | திப்பிலி |

மேற்கண்ட திறுசுகளில் கஸ்தூரிமாத்திரம் இரண்டு விராகனிடை மற்றதெல்லாம்வகைக்கி ஒரு விராகனிடையாக வாங்கி லவுங்கம் கியாழத்தில் அரைத்து சிறுப்பயறுபிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி புட்டியில் வைத்துக் கொள்ளவும் தோஷம், நாவரட்சி, ஜலுப்பு, தலைபாரம் இவைகளுக்கு முலைப்பாலிலிடத் தீரும், இச்சாபத்தியம்.

## கட்டுவாதிமாத்திரை.

| | | |
|---|---|---|
| குரோசாணி | ஓமம் | அதிகிடையம் |
| ஜாதிக்காய் | ஜாபத்திரி | கிராம்பு |
| திப்பிலி | அபினி | |

இதுகளை சமனிடையாய் நிறுத்தெடுத்து குப்பைமேனி சாற்றிலரைத்து மிளகுபிரமாணம் மாத்திரை செய்து வைத்துக்கொண்டு பொன்முசுட்டைவேர் கியாழத்தில் ஒரு மாத்திரையிடவும் இப்படி மூன்றுவேளை கொடுக்கத்தீரும்.

---

## கட்டுவாதிமாத்திரை.

| | |
|---|---|
| ஜாதிக்காய் | அதிமதுரம் |
| ஜாபத்திரி | அதிவிடையம் |
| மாசிக்காய் | இலவு |
| கிராம்பு | விளாம்பிசினி |
| கோஷ்டம் | |

வகைக்கி சமனிடையாய் நிறுத்தெடுத்து அரைத்து மாதளங்காய்க்குள்வைத்து வெள்ளைசீலைசெய்து சாணிஅப்பி (ரு) அல்லது (சு) காட்டெருவில் புடம்போட்டு வெந்தபிறகு எடுத்து சீலைமுதலானதும்நீக்கி கல்வத்திலிட்டு அரைத்து சுண்டக்காய்ப்பிரமாணம் ஒருமாத்திரை தயிர்வடிகட்டி அதில் கொடுக்கவும், அதிசாரபேதிக்கு தேனில் கொடுக்கவும், இச்சாபத்தியம்.

---

## பூபதிகுளிகை.

| | | | |
|---|---|---|---|
| நாபி | சூதம் | தாரம் | கெந்தி |
| சுக்கு | திப்பிலி | மிளகு | காயம் |

இவைகள் சமயிடையாய்ச்சேர்த்து சித்திரமூல கியாழத்தால் ஏழுநாள் அரைத்து மிளகுபிரமாணம்மாத்திரை செய்து தேன் அல்லது இஞ்சிரசத்திலிட ஜன்னி, சுரதோஷம், வாதம் வாய்வு, குன்மம், நாவரட்சி, க்ஷயகாசம், மேகம் இவைகள் தீரும்.

---

## லவுங்காதிமாத்திரை.

| | | |
|---|---|---|
| பூரம் | லிங்கம் | வங்காரம் |
| லவுங்கம் | வாளம் | |

இதுகளில் லவங்கம் விராகனிடை -௰, வாளம் விராகனிடை-௪, மற்ற மூன்றுதினுசுகளையும் ஒவ்வொரு விராகனிடை வாங்கி எலுமிச்சம்பழரசம்விட்டு இரண்டு ஜாமம் அரைத்து குண்டுமணிப் பிரமாணம் மாத்திரைசெய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு சுரத்திற்கு இஞ்சிசுரத்தில் கொடுக்கவும் ஜலுப்புமுதலானதற்கு தேன் அல்லது முலைப்பாலிலும் சம்பந்தப்படுத்தி சாப்பிடத் தீரும்.

## சிவசஞ்சீவிக்குளிகை.

| | |
|---|---|
| சுக்கு | சித்திரமூலம்வேர்பட்டை |
| திப்பிலி | சிந்திற்கிழங்கு |
| கடுக்காய் | சேராங்கொட்டை |
| தான்றிக்காய் | வாய்விளங்கம் |
| வசம்பு | நாவி |

இவைகளை சமஎடைபாய்த் தூக்கி கல்வத்திலிட்டு கோசலம் விட்டரைத்து குன்றிப்பிரமாணம் மாத்திரை செய்து நிழலில் உலர்த்தி புட்டியில்போட்டு வைத்துக் கொள்ளவும் (இதற்கு அநுபானம்) அஜீரணத்திற்கு ஒருமாத்திரை, வாந்திபேதிக்கு இரண்டுமாத்திரை, பாம்பின் விஷத்திற்கு மூன்றுமாத்திரை, ஜன்னிபாதத்திற்கு நான்குமாத்திரை பாக திரேகதிடமறிந்து இஞ்சிச்சாற்றிலிடவும்.

## தாபஜுரத்திற்குமாத்திரை.

| | | |
|---|---|---|
| ரசம் | விராகனிடை | -௧ |
| கெந்தி | ,, | ௨ |
| அரிதாரம் | ,, | ௩ |
| மனோசிலை | ,, | ௧ |
| ஜாதிலிங்கம் | ,, | ௫ |
| வெண்காரம் | ,, | ௪ |
| கடுகுரோகணி | ,, | ௭ |
| சத்திசெய்தவாளம் | ,, | ௮ |
| நாபி | ,, | ௧ |

இவைகளெல்லாம் எலுமிச்சம்பழச்சார்விட்டு அரைத்து குன்றிப்பிரமாணம் மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும் இஞ்சிச்சாற்றில் கொடுக்கவேண்டியது.

---

## கிராணி கழிச்சலுக்கு.

| | |
|---|---|
| அபினி | இலவங்கம் |
| ஜாதிக்காய் | அதிவிடையம் |
| கிராம்பு | சுக்கு |

வகைக்கு (கவ) விராகனிடையாக யெடுத்து மாதுளம் பிஞ்சி இரண்டு எண்ணெய்வார்த்து சுருக்கி ஷை திணுசுகளுங் கூட்டி தயிர்வார்த்து அரைத்து சுண்டக்காய்ப் பிரமாணம் உருண்டைசெய்து தயிரில் மூன்றுநாள் கொடுக்கத்தீரும்:

---

## மகாபோகக் குளிகை.

| | | |
|---|---|---|
| தங்கரேக்கு | விராகனிடை- | க |
| கஸ்தூரி | ,, | க |
| கோரோஜனை | ,, | எ௨ |
| பச்சைகற்பூரம் | ,, | ஙு |
| குங்குமப்பூ | ,, | ஙு |
| மயில்ரோஜனம் | ,, | க |
| படிகாரச்சுன்னம் | ,, | ௨ |

இவைகளை ஈசுரமூலிகைரசத்தால் அரைத்து மிளகு பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி வைத்துக் கொண்டு இரவில் புனிநீக்கி போஜனஞ்செய்த பிற்பாடு ஒரு மாத்திரை சாப்பிட்டு உடனே (ஙு) பலம் பசும்பால் சாப்பிடவும் போகத்திற்கு முபதுங்கால் அதிக உல்லாசமும் மனக்களிப்பும் உண்டாம் சகலசிதளசுர ஜன்னிகளும்நீங்கும்

---

## மகாகோடாசுழிமாத்திரை

| | | |
|---|---|---|
| தாளகம் | வீரம் | பாஷாணம் |
| கெவுரி | லிங்கம் | ரசம் |

| | | |
|---|---|---|
| கெந்தி | துரிசி | வெண்காரம் |
| அன்னபேதி | பால்துத்தம் | மனோசிலை |
| செம்புதொட்டி | படிகாரம் | வாளம் |

இவைகளை சுத்திசெய்யும்முறைப்படி செய்து திநுசுக்கு (கவ) விராகனிடையாகயெடுத்து ஒருபேனத்தில் வைத்துக் கொள்ளவும்.

| | | |
|---|---|---|
| திரிகடுகு | திரிபலாதி | வசுவாசி |
| தேவதாரம் | கிராம்பு | ஜாதிக்காய் |
| ஜாபத்திரி | கோஷ்டம் | கடுகுரோகணி |
| சித்திரமூலம் | குரோசானிஓமம் | கஞ்சாவேர் |
| மந்திஷ்டி | சிறுநாகல்பூ | வலம்புரிக்காய் |

இவைகளை பொன்வறலாக வறுத்து சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து திநுசிற்கு (கவ) விராகனிடையாக யெடுத்து ஒருபேனத்தில் வைத்துக்கொள்ளவும்.

மேற்படி திநுசுகளுடன் பச்சைகற்பூரம், இந்துப்பு காயம், சந்தனத்தூள், பேரீச்சங்காய், திராட்சி, பூண்டு இது கள் வகைக்கி (கவ) விராகனிடையாக யெடுத்து சகல திநுசுகளும் ஒன்றாய்க்கூட்டி கல்வத்திலிட்டு கரிச்சாலை ரசத்தினால் ஏழுநாளரைத்து பிறகு கொச்சிரத்தினால் ஏழுநாளரைத்து பின்பு விஷ்ணுகிரந்தை ரசத்தினால் ஏழுநாள் அரைக்கவும், இப்படி (உக) நாளும் அரைத்தானபிறகு பயறுபிரமாணம் மாத்திரைகள்செய்து புட்டியில்போட்டு வைத்துக்கொள்ளவும்.

(இதற்கு அநுபானம்) வெட்டைக்கி அருகன்வேர்கியாழத்திற் கொடுக்கவும், விஷத்திற்கு பழரசத்தில் அரைத்துப் பூசவும், தேளுக்குக் கடிவாயில்தடவி கலிக்கமிடவும், சுகஜன்னிக்கு இஞ்சிரசத்தில் கொடுக்கவும், தாகத்திற்கு சர்க்கரையில், உள்சுரத்திற்கு மோர், பித்தகிலேற்பனத்திற்கு இஞ்சி, முரைக்காய்ச்சலுக்கு முடக்கொத்தான் கியாழத்தில், விஷவாதம் காமாலைசோகை பித்தங்களுக்கு வேப்பிலை தாணிக்கா, மிளகு, சுக்கு, பசுங்கோமியத்தில் கொடுக்கவும், அண்டவாதத்திற்கு பூலாச்செடி தூளும், அமுக்குறாத்தூளுங் கூட்டி

கொடுக்கவும், மாலைக்கண் குருடு காசத்திற்குகையான்ரசத்திலும் எலுமிச்சம்பழரசத்திலும் கலிக்கமிடலாம். மூலகிராணிக்கு சர்க்கரையில், நஞ்சுதின்றவர்களுக்கு கருவூமத்தின் ரசத்தில் (அச) வாதத்திற்கும் மாவிலிங்கம்ரசத்தில், அஷ்டகுன்மம் தசவாய்வு விப்புருதிகாசம் சுவாசகாசம் பிலிகை நீராம்பல் கோவை அடிவயறுவிக்கம் மந்தாரகாசம் (கூசு) சிலேற்பனத்திற்கும் தும்மட்டிக்காய்ரசத்தில், முசல்வலிக்கு ஊமத்தன்ரசத்தில் நசியமிடவும், கபாலகுஷ்டம் கிரந்தி சூலைசிலவிஷம் கடிவிஷம் வாய்நீரொழுகளுக்கு திரிகடுகு தூளில், பாதசக்கரம் பாதபுத்திற்கு ஜாதிக்காதயிலத்தி லிழைத்துவிடவும்.

---

## அண்டவாதமாத்திரை.

ஒருபலம் பூரத்திற்கு பால்கண்டையிடித்து ரசம் பெடுத்து நாலுஜாமம் சுருக்குகொடுத்து உத்தாமணிவேர் பட்டை ரசத்தினல் மூன்றுஜாமம் சுருக்குகொடுத்து ஷை ரசத்தால் அரைத்து பயறுபோல் மாத்திரைசெய்து முத் தெண்ணெயில் நனைத்து (உய) நாள் சாப்பிடவும். இச்சா பத்தியம், இதற்கு முதல்நாள் பேதிக்கு சாப்பிடவேணும் மாகையால் கற்றாசிவேர் ௩-பலம் எடுத்துயிடித்து கியாழம் வடித்து மிளகுரசஞ்செய்து முத்தெண்ணெய் பலம்-௧, விட்டு சாப்பிட்டுவிட்டு மறுநாள்முதல் ஷை மாத்திரை கொள்ளவும்.

---

## சகலசுரத்திற்கும் சுராங்கிஷ மாத்திரை.

| | |
|---|---|
| இரசம் | நெல்லிமுள்ளி |
| கெந்தகம் | கடுக்கா |
| அரிதாரம் | காந்தம் |
| வெங்காரம் | மிளகு |
| அக்கராகாரம் | திப்பிலி |

இதுகள் வகைக்கு ஒருவிராகனிடையாகவாங்கி கல்வத்திலிட்டு வாளம் பத்துவிராகனிடைகூட்டி முசுமுசுக்கை ஆடாதோடை கண்டங்கத்திரி பெலுமிச்சம்பழரசம் இதுகளினால் ஒவ்வொருநாளைக்கு ஒருவகைரசம்விட்டு அரைத்து மிளகுபிரமாணம் மாத்திரைசெய்து இஞ்சிரசம் தேன் முலைப்பால் இதுகளில் ஒருமாத்திரை யிழைத்துக்கொடுக்க சர்வசுரமுந்தீரும் (௩) நாள் ஆறுவேளை கொடுக்கவும் புளியாகாது.

---

## சுராங்குஷ கருக்குமாத்திரை.

கெந்தகம் ரசம் சமனிடையாபெடுத்து எலுமிச்சம் பழச்சார்விட்டு இரண்டுஜாமம் அரைத்து மிளகுபிரமாணம் மாத்திரைசெய்து இஞ்சி ஒமம் சீரகம் இந்தக் கியாழங்களில் ஒருமாத்திரை கொடுக்கவும் மேகஅனல் உஷ்ணக்காய்ச்சல் மற்ற சுரமும் தீரும், புளியாகாது.

---

## மத்தியானமாத்திரை.

இரசம், உலர்ந்தலிங்கம், கெவுரிபாஷாணம் தொட்டிபாஷாணம், துத்தம், துரிசிவகைக்கு விராகனிடை-க, கெந்தகம் விராகனிடை-௩, இவைகளைக் கையாந்தகரைச்சார் விட்டு இரண்டுஜாமம் அரைத்து பயறுபிரமாணம் மாத்திரை செய்து நிழலிலுலர்த்தி சகலசுரத்திற்கும் முலைப்பால் அல்லது சுக்குகியாழத்தில் ஒருமாத்திரை கொடுக்கவும், மத்தியானத்தில் சுரம்விடும் புளிபுகைதள்ளவும், நல்லெண்ணெய் ஒருமாதம் வரையில் ஆகாது, தலைமுழுகவேணுமானால் விளக்கெண்ணெய்தேய்த்து முழுகவும், சீரம் விக்கம்கண்டால் சிறுகீரை வேராவது பருத்திவேராவது வேவித்து தண்ணீர்கொடுக்கவும், வாய்வெந்தால் மிளகைவேகவைத்து அந்ததண்ணீர் பிருத்துக்கொடுக்கவும்.

---

## ஊழி மாத்திரை.

பூரம்லிங்கம் பொருந்துநற்கெந்தகம்
ஆரும்பத்திரி கிராம்புவசம்புபின்
சாருங்கற்பூரம் சாம்பிராணிஜாதிக்கா
நேரும்பூண்டு விடையநீள்சுக்கிடே. (க)

சுக்குதிப்பிலி சோம்புடனேமமும்
பக்குவங்கரி போமமுங்கோரக்கர்
முக்கியமூலிவெண் காரஞ்சமன்கொடு
நக்கனார்பதம் நாடித்துதித்திடே. (உ)

துதித்துக்கல்வத்தி லிட்டுசுரந்தவர்
மதித்தவஸ்துவால் வாகாயரைத்ததை
விதித்தகடலைபின் வீதமுருண்டையாய்
பதித்தென்னம்மையின் பாதம்பணிந்திடே. (௩)

எடுத்தவூழியா லெய்திடும்பேதிக்கே
வடித்தசுத்தநீர் தன்னிலோர்மாத்திரை
கொடுத்துகோதுமை கஞ்சிகொடுத்திட
எடுத்தவூழிக்கி ஈதூழியாகுமே. (௪)

மாத்திரைவகைபரணி.

முற்றுப்பெற்றது.



இன்னம் அளவிருந்துள்ள மாத்திரைபாகங்களை பின்வரும் இரண்டாங்காண்டத்தில் வெளியிட்டிருக்கின்றோம்.

உ

தேவிசகாயம்.

மூன்றாவது

# கட்டுவகைபாணி.

## லிங்கக்கட்டு.

சிறுலிங்கம் ஒருபலம்வாங்கி சேராங்கொட்டை (௰ரு) பலமெடுத்து துண்டு துண்டுகளாக வெட்டி ஒருசட்டியில் பாதிபோட்டு அதின்மேல் லிங்கக்கட்டியைவைத்து மற்ற பாதி கொட்டையைப்போட்டு லிங்கந்தெரியாமல் மூடி அடுப்பிலேற்றி எரிக்கும்போது விளக்கைக்காட்டினால் திக்கென் றெரியும் அனல் அடங்கியபிறகு லிங்கக்கட்டியை எடுத்துக்கொண்டு பிள்ளைகளுக்கு தேனில் உரைத்துக்கொடுக்கலாம். பத்தியம் புளி கூடாது, அந்த லிங்கக்கட்டியில் பாதி உடைத்து கல்வத்தில் பொடித்து வைத்துக்கொள்ளவும், இதற்கு லிங்கசெந்தூரமென்று பெயராம், பலவிதசுரங்களுக்கு அரிசிபிரமாணம் தேனிற்கொடுக்கலாம்.

---

## வேறுவகை லிங்கக்கட்டு.

ஜாதிலிங்கம் (ரு) விராகனிடை கொண்டுவந்து முலைப் பாலில் ஒருஜாமஞ் சுருக்குக்கொடுத்து எலிமிச்சம் பழரசத்தில் ஒரு ஜாமஞ் சுருக்குக்கொடுத்து மணத்தக்காளி சாற்றிற் ஒருஜாமஞ் சுருக்குக்கொடுத்து எடுத்துப்பார்க்கக் கட்டும், ஜன்னி சுரந் தலைவலி இதுகளுக்கு முலைப்பாலில் உரைத்துக்கொடுக்கலாம் சீதளஜலுப்பு இதுகளுக்கு தேனில் உரைத்துக்கொடுக்கவும், பத்தியம் அரைபுளி இச்சாபத்தியம்.

---

## வன்னிகெற்பமாகிய லிங்கக்கட்டு.

ஒருபலம் லிங்கத்தை தேன் முலைப்பாலில் மூன்று நாள் ஊறவைத்தெடுத்து ஒருபலம்நெல்லிக்காகெந்தகத்தை ஆலம்

பால்விட்டு நனறுய் ரேகிக்க யிடித்து லிங்கத்திற்கு கவசஞ் செய்து உலர்த்தி சிறுகுழியில்வைத்து அதன்மீது மணல் பரப்பி மரைத்து சூடுபடும்படியாக இரண்டுவரட்டியால் புடம்போடவும் ஆரினபிறகு எடுத்து மேல்கவசமிட்ட கெந்தகத்தை நீக்கி வேரேகெந்தகம் ஒருபலங் கொண்டு வந்து முன்மாதிரியாய் பாலிலிடித்து கவசித்து குழியில் வைத்து மணல்பரப்பி ஒருவரட்டி அதிகப்படுத்தி புடம் போடவும், இப்படியே ஒவ்வொருதடவையும் புதுகெந்தகம் கவசித்து ஒவ்வொருவரட்டி அதிகப் படுத்தி (கூ) தடவை புடப்போட்டெடுத்து முடிவில் முன்மாதிரியாக கெந்தகம் கவசஞ்செய்து நாலுசீலைமண்செய்து பூமியில் பத்துவரட்டியில் புடம்போட்டுயெடுத்து சகலவாய்விற்கும் சீதளசுரம் ஜன்னி இவைகளுக்குந் தேன் இஞ்சிரசத்தில் யிழைத்துக் கொடுக்கவும்.

---

## வீரக்கட்டு.

வேண்டியமட்டும் வீரத்தைக் கொண்டுவந்து சாம்பிராணி விராகனிடை-க, நெல்லிக்காகெந்தகம் விராகனிடை-ங, இரண்டுந் தூள்செய்து கரண்டியிலிட்டு அனல் பிடிக்க உருகி வருஞ்சமயத்தில் வீரத்தைப்போட்டுப்புரட்டி எடுத்துக்கொள்ளவும் ஜன்னி வாய்வுகளைக்கேட்கும் இது போல லிங்கத்தையுங் கட்டிக் கொள்ளலாம்.

---

## பூரக்கட்டு.

சீனபூரம் ஒருபலம் வாங்கி முலைப்பாலில் மூன்றுநாள் ஊரவைத்தெடுத்து உலர்த்தி ஒரு சட்டியில் துளசிரசம் பிழிந்து அதில் பூரத்தைவைத்து அடுப்பேற்றி சிறுதீயாக அந்த ரசஞ் சுண்டுகிறவரையிலும் யெரித்தெடுத்தால் அது கட்டும்.

---

## ரசகற்பூரக்கட்டு.

நாலுவிராகனிடை ரசகற்பூரத்திற்கு முலைப்பால் கண்டையிடித்துசாறுபிழிந்து இரண்டுஜாமஞ்சுருக்குக்கொடுத்துப் பிறகு முசுமுசுக்கைச் சாறுபிழிந்து இரண்டுஜாமஞ் சுருக்குக் கொடுக்கக் கட்டும்.

## துருசுசுன்னத்தில் லிங்கக்கட்டு.

நிலைபாவாரைபிலையை துவைத்துசிறுபிள்ளை சிறுநீர் விட்டு சாறுபிழிந்து ஒருகோப்பையில் பெரிய கட்டியாக துரிசி எடுத்து சினகாரத்தை நீரிலரைத்து கவசித்து கோப்பையில் வைத்து துருசமுழுக ஷை சாற்றைவிட்டு எழுநாள் வெய்யலில் வைக்க சாறுவற்றிப்போகும் பிறகு கருப்பு வெத்திலைச்சாறுவிட்டு எழுநாள் வெய்யலில்வைக்க நீர்சுண்டிவிடும் அந்ததுரிசை யெடுத்து பசும்வெண்ணையைதளமாய் பூசி கோப்பையைத்துடைத்து அதின்நடுவே கட்டிவைத்து ஆறுநாள் வெய்யலில் வைக்க அந்ததுரிசி சுன்னமாகும் அதில்கொஞ்சமெடுத்து சப்பாத்திப்பூ நடுவிலிருக்கும் நரம்பைப்போக்கி அத்துடன் சுன்னத்தைவைத்துப் பிசைந்து ஒருஜாமம்வைத்து பிறகுயெடுத்து கம்பிளியிலாவது சீலையிலாவது வைத்துப் பிழிந்தால் தாராளமாய் சாறுயிறங்கும், சாறுவாராதயிலைகளிலே சுன்னத்தைவைத்துக் கொள்ளலாம் ஷை சாற்றை ஒருபலம் லிங்கத்திற்கு மூன்றுஜாமம் சுருக்குக்கொடுத்தால் லிங்கம் மணியாகக்கட்டும் சர்வசுரம் ஜன்னி சீதளம் இதுகட்டு வைரியம்.

---

## வேறுவிதம் வீரக்கட்டு.

துருசு விராகனிடை-௧௨, படிகாரம் விராகனிடை-௧௨, இரண்டையும் தூள்செய்து அடுப்பில் ஓடு காயவைத்து மேற்படிதூளை மூன்றுபங்காக்கி ஒருபங்கை ஓட்டில் தூவி எரிகிற சமையத்தில் ஒருவிராகனிடை வீரத்தைப்போட்டுப் புரட்டி யெடுத்துக்கொள்ளவும், ஓட்டிலுள்ள சுண்டுகளை சுரண்டியெடுத்துவிட்டு மற்றயிரண்டுபங்குதூளையும் இப்படியேசெய்தெடுத்து மறுபடியும் விராகனிடைக்கி ரூடத்தை கொண்டுவந்து கவசித்து கொளுத்திவிட்டால் வீரம் உருகி மணியாகும் க்ஷயம் ஜன்னி இவைகளுக்காகும்.

கட்டுவகை பரணி
முற்றுப்பெற்றது.



உ

தேவிசகாயம்.

நான்காவது

# பற்பவகைபாணி.

## லிங்கபற்பம்.

லிங்கம் வேண்டியமட்டும் கொண்டுவந்து வைத்துக் கொண்டு வெள்ளெருக்கன்வேரில் கொஞ்சம் பொட்டிலுப்பு போட்டு இடித்து சார்பிழிந்து அந்தரசத்தில் பாதியெடுத்து லிங்கத்திற்கு சுருக்குக்கொடுத்து மற்றசார்விட்டு மேற்படி உப்பை அரைத்து உலர்த்தி தூள்செய்து கழுத்து நீண்ட குடுவையில் அரைக்குடுவை அந்த உப்பைப்போட்டு அதின் பேரில் லிங்கத்தைவைத்து அந்தலிங்கத்தின்மேல் உப்பைப் போட்டு நிறப்பி பத்துஎருவில் புடம்போட்டு உப்பு சிவந்த வுடன் எடுத்து ஆரவைத்து லிங்கத்தைபெடுத்துக் கொள்ள வும் (இதற்கு அனுபானம்) தேன் நெய் வெண்ணெய் இதுகளில் பணவிடை கொடுக்க தீரும்வியாதிகள் மேகம், ரணம், கரிமேகம், தழுப்பு, வாய்வு இவையெல்லாந்தீரும். பத்தியம் இரைச்சி,பீர்க்கங்காய்,முருங்கைப்பிஞ்சு, துவரை நெய்கூட்டவும், வாய்பிடித்தால் பசும்பால் கொப்புளித்து முழுங்கவும்,(௩) நாள் அல்லது (௫) நாள் சாப்பிடவேணும்

## வெள்வங்க பற்பம்.

வெள்வங்கம் நாலுபலமெடுத்து அரசம்பட்டையை யிடித்து கோணிப்பட்டையில்வைத்து அதின் நடுவில் வங்கத் தைவைத்து சுருட்டி மண்ணினல் சீலை கவசஞ்செய்து(௩௰) வரட்டியில் புடம்போட்டெடுத்து கல்வத்திலரைத்து சீசா வில்வைத்துக்கொள்ளவும், இதை நெய்யில் கொடுக்க மேகம் உக-ம், நீங்கும். கடுகு நல்லெண்ணெய் மீன் பூசினிக்காய் ஆகாது.

## வேறுவித வெள்வங்க பற்பம்.

சுத்திசெய்த வெள்வங்கத்தை தகடாகச்செய்து பொடி பாகத்தரித்து நொச்சியிலையை உணர்த்தி யிடித்ததூளை ஒரு சோணிப்பட்டையில் இரண்டு விரல்கனம் பரப்பி அதின் மேல் வங்கப்பொடியைத்தூவி அதின்மேல் ஷை மூலிகைத் தூளைத்தூவி தலைபணைப்போல் சுருட்டிக்கட்டி (ரு) படி உமிமத்தியில் வைத்து நெருப்பிடவும் நன்றாய் வெந்தபிறகு எடுத்து வேகாதிருப்பவைகளை நீக்கி பற்பமாய் நீற்றிருப்பதை யெடுத்துக்கொண்டு வெண்ணெயில் உபயோகப் படுத்தவும். மேகம் வெள்ளை இதுகள்தீரும்.

---

## கரிவங்கபற்பம்.

கரிவங்கம் நாலுபலங்கொண்டுவந்து அத்திபட்டை அல்லது மருதம்பட்டையை யிடித்து மேற்கூறிய கவசஞ் செய்து நூறுகைவரட்டியில் கெஜபுடம்போட்டு யெடுத்து கல்வத்திலரைத்துக்கொள்ளவும், நெய்யில்கொடுக்க வெள்ளைமுதலானமேகமுந்தீரும் பத்தியம் மூன்மாதிரியிருக்கவும்.

---

## செம்மேகத்திற்கு பேரண்ட பற்பம்.

பால்போலிருக்கும் அண்டஓட்டை பூநீரில் கொதிக்க வைத்து கழுகியெடுத்து எருமைசாணிபடைத்து மத்தியில் வைத்து அரைகெஜபுடமிட்டெடுத்து இது நான்கு பாகத்திற்கு பூரம் ஒருபாகஞ்சேர்த்து வாய்நீராலரைத்து பில்லை செய் துலர்த்தி அரைகெஜபுடமிட்டு எடுத்துக்கொள்ளவும் (அனுபானம்) தேனில் பணவிடைபாக அரைமண்டலங் கொடுக்க செம்மேகம் தீரும்.

---

## சீமைகல்னார்பற்பம்

கல்னார் ஐந்துபலம்கொண்டுவந்து துண்டுதுண்டாகயிடித்து புதுக்குடுவையில்போட்டு பெலுமிச்சம்பழச்சாரிட்டு

நிழலில் ஊரவைத்து சண்டின பிறகு இதேமாதிரியாய் (ரு) திரம் ஊரவைத்தெடுத்து (கூய) வரட்டியில் புடம் போட்டு பிறகு கல்வத்திலிட்டு அரைத்துக் கொள்ளவும், நெய் அல்லது வெண்ணெயில்கொடுக்க பல்நோய் மார்நோய் இதுகள் தீரும். சூடு நிவர்த்தியாகும் இச்சாபத்தியம்.

## கற்பூரசிலாசத்து பற்பம்.

கற்பூர்சிலாசத்து பத்து களஞ்சிவாங்கி சுண்ணாம்பு தளமாய்ப்பூசி (அ) வரட்டியில் புடம்வைத்தால் பஸ்பமாகும், அதின்மேலிருக்கும் சுண்ணாம்பைத் தட்டிவிட்டு கல்வத்திலரைத்து யெடுத்துக்கொள்ளவும், இதை நெய்யில் கொடுத்தால் சகல மேகம் வாய்வு சூடுநீங்கும், இச்சாபத்தியம்.

## வெள்ளைக்கு இருமலுக்கு படிகார பற்பம்.

சிரிய மண்குடுவையில் ஒருபலம் பசும் வெண்ணையை விட்டு அதின் மத்தியில் ஒருபலம் படிகாரம் ஒரே கட்டியாக அதன் நடுவில் பிரங்க சொரிகிவைத்து வாய்புரம் ஓடுமூடி சீலைமூன்று செய்து (ரு) வரட்டியில் புடம்போடவும் நீர்த்து பஸ்பமாயிருக்கும், அதை வெண்ணெயில் மிளகுயிடை குழைத்துக் கொடுக்க மூன்றுநாள் ஆறுவேளையில் வெள்ளை நீர்க்கடுப்பு இதுகள் நீங்கும், மூன்று குன்றியிடை பஸ்பத்தை முசுமுசுக்கையிலை மூன்றில் பத்தியாய் அடுக்கி மடித்து சாப்பிட இருமல் தீரும், (எ) நாள் சாப்பிடவும் தினம் ஒரு யிலை அதிகப்படுத்தவும்.

## வீரபற்பம் பச்சைவெட்டு.

வீரம் இரதம் பொரிகாரம் இந்த மூன்றும் சமயிடையா யெடுத்து அரைத்து பனவெல்லத்தில் ஒரு பணவிடை பற்பம் வைத்து சாப்பிட புண், வெள்ளை, கிரந்தி, கட்டி, சூலை, சூதகவாய்வு, விஷக்கட்டி, மலக்கட்டு இதுகள் தீரும் (க) நாள் ஆறுவேளை சாப்பிடவும், வருத்தவுப்பு கூட்டவும் புளி ஆகாது.

## பலகாரை பற்பம்.

பலகாரை (ரு) பலம் வாங்கி புதிய குடுவையில்போட்டு எலுமிச்சம் பழச்சார்விட்டு கவசம் செய்து (ய) வரட்டியில் புடம்போட்டு எடுத்து கல்வத்தில் அரைத்து வைத்துக் கொள்ளவும் இதை நெய்யில் தேனில்கொடுக்க பக்கசூலை மார்நோய் வாய்வு நீங்கும், கடுகு நல்லெண்ணெய் மீன் ஆகாது.

---

 ## மான்கொம்பு பற்பம். 

மான்கொம்பு அரைவிசைவாங்கி துண்டு துண்டாய் நருக்கி உடைத்து இதையும் அகத்திக்கீரையையும் பெரிய பானையில் போட்டு ஒருஜாமம் வேகவைத்துபெடுத்து பிறகு நீர்முள்ளியிலையை அரைத்து மேல்கவசஞ்செய்து சிலைமூடி (ருய) கை வரட்டியில் புடம்போட பஸ்புமாகும். கல்வத்திலரைத்து பெடுத்துக்கொள்ளவும், நெய்யில் கொடுக்க மார்நோய், இடுப்பு நோய், நாவரட்சி, வெள்ளை, மேகம் இவைகள் தீரும், இச்சாபத்தியம்.

---

## பவழ பற்பம்.

பவழம் (ரு) பலம்வாங்கி எலுமிச்சம் பழரசத்தில் ஒரு நாள்வூரி கழுவிபெடுத்து வாய் அகலமான குடுவையில் போட்டு முசல் ரத்தம்விட்டு சிலை கவசம்செய்து (ருய) கை வரட்டியில் புடம்வைத்தால் பஸ்பமாகும், கல்வத்தி லரைத்தெடுக்கவும், இதை தேனில் அல்லது நெய்யில் கொடுக்க இருமல் நீங்கும் இச்சாபத்தியம்.

---

## கெட்டிமுத்து பற்பம்.

ஒரு விராகனிடை கெட்டிமுத்து வாங்கி சிமைகரசனும் கன்னி சார்பிழிந்து சிறிய குடுவையில் போட்டு சிலை கவசம் செய்து (ரு) கைவரட்டியில் புடம்போட்டு பெடுக்கவும் நெய்யில் கொடுக்க தேககாந்தி வீரியவிர்த்தி யுண்டாகும் இச்சாபத்தியம்.

## சங்குபற்பம்.

(ரு) பலம் சங்குவாங்கி கல்வத்தில் வைத்து பிரண்டை சார்விட்டு அரைத்து (ய) பில்லையாகச்செய்து உலரவைத்து (உரு) வரட்டியில் புடம்வைக்கவும், இப்படி ஏழுதடவை அரைத்து புடம்வைத்தபிறகு கல்வத்திலரைத்துயெடுத்துக் கொள்ளவும் இதை எலுமிச்சம் பழரசத்தில் சாப்பிடவும் வாத குன்மம் நீர்சுருக்கும் விலகும், இச்சாபத்தியம்.

## ஆமையோடு பற்பம்.

ஆமையோட்டை நருக்கி பச்சை கோரைக்கிழங்கை யரைத்து அதின்மேல்பூசி கவசம் செய்து உலர்த்தி (ருய) வரட்டியில் புடம்வைக்க பஸ்பமாகும், நெய்யில் கொடுக்க பசிதீபனம் உண்டாகும் அசீர்ணம் நீங்கும், இச்சாபத்தியம்.

## கருவங்கபற்பம்.

சுத்திசெய்த கருவங்கம் ஒருபலம் யெடுத்து தகடுதட்டி ஆவாரை சமூலம்யிடித்து ஒரு சட்டியில் பாதி அழுத்தி அதின்மேல் தகட்டை பரப்பிவைத்து மற்றபாதியைப் போட்டுத் தளமாய் அழுத்தி மேல்சட்டிமூடி சீலை மண் செய்து கெஜபுடம் போட பற்பமாகும், இதை பசும்வெண் ணெயில் கற்கண்டு இதுகளில் கொடுக்க (உக) மேகநோய் களையும் தீர்க்கும், கடும்பத்தியமிருக்கவும்.

## கல்நார்பற்பம்.

சுத்திசெய்த இரண்டு பலம் கல்நார்வாங்கி பசுங்கோமி யத்தில் (யரு) நாள் ஊரவைத்தெடுத்து கழுவி யுலர்த்தி ஆவாரையிலையை அரைத்து கவசம்செய்து கெஜபுடத்தில் வைக்க பஸ்பமாகும் இந்தபற்பம் முன்சொன்ன அநுபா னங்களில் கொடுக்க சகலமேகங்களும் தீரும்.

## தங்கபற்பம்.

(எ) அல்லது (அ) மாத்துள்ள பொன்வாங்கி மிக அச்ச பில்லைகளாக தகடுதட்டி சிகப்பு முள்ளுக்கீரை வேரின் பட்டையை அரைத்து தகட்டின்மேல் முத்தையாகமூடி சீலை கவசம்செய்து பத்து வரட்டியில் புடம்வைத்து ஆரி பெடுத்து இங்கிலீஷ் வெள்ளைக்கல்வத்தில் அரைத்தெடுத்து சீசாவில் வைத்துக்கொள்ளவும், இதை நெய்யில் சாப்பிட்டால் வீக்கம் வாய்வுபோம் ஷைமொத்தை ஒருவிராகனிடை தகட்டுக்கு ஒரு எலுமிச்சங்காயளவு யிருக்கவேணும்.



## தாளகபற்பம்.



பச்சைதாளகம் ஒருபலம்வாங்கி கல்சுண்ணம்பை ஜெத்தில்போட்டு தெளிந்தபிறகு ஜெலத்தையிருத்து அந்த ஜெலத்தினல் தாளகத்தை ஏழுநாளரைத்து பில்லைசெய்து உலரவைத்து ஒருகலசத்தில் சுண்ணம்புநீரு நிரைய அழுத்தமாய் வைத்து அதின்மேல் இந்தபில்லையைவைத்து வேரொரு கலசத்தில் சுண்ணம்புநீரை அழுத்தமாய் வைத்து மூடி ஏழுசீலை கவசம்செய்து சுமார் பத்துவரட்டியில் புடம் போட்டுயெடுக்க வெள்ளைபஸ்பமாகும் தேனில்கொடுக்கவும், புளி நல்லெண்ணெய் கடுகு ஆகாது.

## ரசபற்பம்.

ரசம் (உ௰) விராகனிடையெடுத்து சிவகரந்தை சார்விட்டரைத்து பில்லைசெய்து ரவியிலுலர்த்தி ஒட்டில்வைத்து மேல் ஓடுமூடி மூன்று சீலைமண்செய்து கோழிபுடம் போட நீரும், இதை பனவெல்லத்தில் கொடுக்க கிரந்தி மேகம் வெள்ளை தீரும் இச்சாபத்தியம்.

## வெள்ளிபற்பம்.

முக்காவேளையைக் கொண்டுவந்து அரைத்து எலுமிச்சங்காய் அளவு உருட்டி அதனுல் வெள்ளித்தகட்டை அச்மாகத்தட்டி சொருகி சீலைமண் கவசஞ்செய்து பத்து வரட்டியில் புடம்போட்டுயெடுத்துக்கொள்ளவும், தாது விர்த்தி வெண்ணெயில் அரிசிப்பிரமாணம், மேகம் எலும்புருக்கி முதலானதற்கும் கொடுக்கலாம்.

## நாகபற்பம்.

சுத்திசெய்த நாகம் (கஉ) பலம், சூதம் (உ) பலம், இரண்டையும் உருக்கி ஒன்றாகத் தொந்தித்து அஞ்சாங் காய்ச்சல் வெடியுப்பு ஒருபலம் சேர்த்து கல்வத்திலிட்டு உத்தாமணி ரசத்தால் நாலுஜாமம் அரைத்து பில்லைதட்டி உலர்த்தி ஓட்டில் வைத்து மேலோடுமூடி சீலைசெய்து (யஉ) வரட்டியில் புடம்போட்டெடுக்கவும் (இதற்கனுபானம்) பாலில் வேக வைத்து உலர்த்திய சுக்குசூரணத்தில் பனைவெல்லம் சமமாய்ச்சேர்த்து பிசைந்தலேகியத்தில் கழற்சிக்காய்ப் பிரமாணம் எடுத்து அதின் நடுவில் ஷை பற்பத்தை குன்றியிடை வைத்து மூன்றுநாள் கொடுக்க மூலம் சிழ்மூலம் தீரும்.

---

## தங்கபற்பம்.

தங்கரேக்கு விராகனிடை-உ, சுத்திசெய்த சித்தண்ட ஓடு விராகனிடை-க, இவ்விரண்டையும் அரைத்து உத்தாமணிபால் (ரு) துளிவிட்டு பிசரி மூசையிலிட்டு ஓடுமூடி சீலை செய்து ஒரு குண்டுசட்டியில் உமிகொட்டி அதின் மத்தியில் வைத்து தீயிட பற்பமாகும், காசரோகத்திற்கும் அதிக் கொழுமையினு லடைந்த தாதுசோர்வையும் தீரும்.

## பற்பவகைபாணி.

முற்றுப்பெற்றது.



---

இனிவரும் பற்பவகைபாகங்களில் கையாடத்தக்க உத்தமமுறைகள் இரண்டாங் காண்டத்தில் அச்சிட்டிருக் கின்றோம்.

உ

தேவிசகாயம்.

ஐந்தாவது

# செந்தூரவகைபாணி.

## திரிலோக செந்தூரம்.

அயப்பொடி பலம்-க, கெந்தி பலம்-உ, தங்கப்பொடி விராகனிடை-ரு, வெள்ளிப்பொடி விராகனிடை-க, இவைகளை கல்வத்திலிட்டு கல்சுண்ணாம்புசாரமும் சமனாகக்கூட்டி நல்லஜலத்தில் கரைத்து தெளிவுநீரை யெடுத்து அந்த நீரினால் ஷெ சரக்கை நாலுஜாமமரைத்து உணர்த்தி புது ஒட்டிலிட்டு அடுப்பேற்றி லேசாக வருக்கும்போது சிவந்துவரும் பதத்தில் எடுத்துக்கொண்டு தேனில் பணவிடை கொடுத்துவரவும் சோகை, வெளிரு, ஊதல், நீரேற்றம், பசிமந்தம், வாய்வு இவைகள் தீர்ந்து ரத்தவிர்த்தியாகும்.

## அன்னபேதி செந்தூரம்.

அன்னபேதி (ய) விராகனிடைவாங்கி புளிச்சத் தண்ணியில் ஊரவைத்து கல்வத்திலிட்டு (ரு) எலுமிச்சம் பழரசம் விட்டரைத்து பில்லை செய்து உலரவைத்து ஓட்டில் வைத்து மேலோடுமூடி ஒருசீலமண்செய்து பத்து வரட்டியில் புடம்போட்டு எடுக்கவும், அதைதேனிலிட மேகவாய்வு, மார்புநோய் நீங்கும் பசியுண்டாம்.

## வேறு அன்னபேதி செந்தூரம்.

மான்செவிக்கள்ளியில ரசத்திலரைத்து பில்லைதட்டி (ய) எருவில் புடமிட்டெடுக்கவும் தேள்கடி வாய்வு வீக்கந் தீரும்.

## ராமபாண செந்தூரம்.

வீரம், பூரம், ரசம், லிங்கம், ரசச்செந்தூரம், வெல்லி கெந்தகம், வகைக்கிக் களஞ்சிவிதம் யெடுத்து முலைப்பாலில்

(ச) ஜாமம் அரைத்து வெய்யலில் வைத்தால் செந்தூரமாகும் எடுத்துக்கொண்டு பனவெல்லத்தில் அரிசியிடை கொடுக்கவும் இச்சாபத்தியம் வாய்வு, வீக்கம், சுரம், மேகம், ஜன்னி, நீரேத்தம் இவைநீங்கும்.

---

### பாலசூர செந்தூரம்.

சிரியகுடுவையில் கால்பலம் நெல்லிக்காகெந்தியை ஒரு பலம் பாலைரசத்துக்கு கீழ்மேலுமிட்டு ஒடுமூடி சீலைசெய்து மூன்றெருவில் புடமிட்டுயெடுக்கவும், அரிசியிடை தேனிலிட வாய்வு சுரம் தீரும்.

---

### கனமண்டூர செந்தூரம்.

மண்டூரம் (உ) பலம்யெடுத்து உலக்கிடத்தில் காய்ச்சி பசுவின்கோமியத்தில் தோய்க்கவும் இம்மாதிரி ஏழுதடவை காய்ச்சிகாய்ச்சிதுவைத்து உரலில்போட்டு கெட்டப்பாரையினல் யிடித்து வஸ்திரகாயம்செய்து கல்வத்தில்போட்டு பசுங்கோமியத்தில் ஒருநாள் அரைக்கவும், வெள்ளாட்டுமூத்திரத்தில் ஒருநாள் அரைக்கவும், எருமைக்கிடா மூத்திரத்தில் ஒருநாள் அரைக்கவும் பிறகு,

| | |
|---|---|
| கரசனுங்கண்ணிச்சார் | உத்தாமணிச்சார் |
| பூந்துளச்சிச்சார் | கொட்டைகிரந்திசார் |
| பேரண்டைச்சார் | ஆடாதோடைச்சார் |
| குண்டுமணியிலைச்சார் | நெல்லிக்காயிடித்தச்சார் |
| பச்சைமஞ்சள்சார் | கத்தாழைச்சார் |
| சங்கம்பட்டைச்சார் | தேவதாரிகியாழம் |
| ஆனைநெரிஞ்சிச்சார் | சித்திரமூலசமூலகியாழம் |
| நீர்முள்ளிச்சார் | கருவேலம்பட்டைகியாழம் |
| சாம்பிராணியிலைச்சார் | நாகப்பட்டைகியாழம் |
| ஆலம்வேர்யிடித்தச்சார் | எலுமிச்சம்பழரசம் |
| புளியம்பிலையிடித்தச்சார் | புளிச்சத்தண்ணி |
| உலர்ந்தகடுக்காகியாழம் | கொடிநார்த்தைச்சார் |
| அரசம்பட்டைக்கியாழம் | சித்திரகொடிசமூலகியாழம் |

இவ்வகைச்சாறு பொழுங்களில் நாளொன்றிற்கு ஒவ்வொரு திறுசுகளினாலரைத்து முடிவில் பில்லைதட்டி (௱) கை வரட்டி (௰) கூடைஉமி (௰) கூடைகரி கெஜபுடத்தில்வைத்து மூன்றுநாள் பொருத்தெடுத்து கல்வத்திலரைத்து புட்டியில் வைத்துக்கொள்ளவும். இதைதேனில் அரிசியிடைகொடுக்க சுவாசகாசம், உப்புசம், க்ஷயம், (௰௫) கிராணி, அதிசாரம் உள்காய்ச்சல், சோகை, வீக்கம், எட்டுவிதபாண்டு இவையெல்லாந் தீரும் கடும்பத்தியம்.

---

## தன்வந்திரியார் சண்டமாருத செந்தூரம்.

| | | |
|---|---|---|
| சுத்திசெய்தரசகர்பூரம் | | விராகனிடை-௪ |
| லிங்கம் | ,, | ௮ |
| வீரம் | ,, | ௨ |
| நெல்லிக்காகெந்தகம் | ,, | ௨ |
| ரசசெந்தூரம் | ,, | ௧ |

இவைகளைக் கல்வத்திலிட்டு (௨) ஜாமங் கைவிடாமலரைத்து எடுத்து பணவிடையாக பனவெல்லத்திலிட்டு உருட்டி முழுங்கச்செய்யவும் ஆறுவேளை கொடுக்க ஜன்னி (௰௧) குஷ்டம், மகோதரம், பீலிகை, குன்மம், வாதம், (௮௰) கிரந்தி கொருக்கு, காமாலை, பினவைசுரம், (௬௪) விரைவாதம், தனுர்வாதம், குலைபவுத்திரம், கண்டமாலை, கருமேகம், வண்டுகடிகள் போனிப்புத்து முதலான வியாதிகளுக்குத்தக்க அனுபானங்களிலிட தீரும்.

---

## சண்டமார்தாண்ட செந்தூரம்.

| | | |
|---|---|---|
| பூரம் | ,, | விராகனிடை-௰ |
| லிங்கம் | ,, | ௮ |
| ரசசெந்தூரம் | ,, | ௨ |
| நெல்லிக்காகெந்தகம் | ,, | ௧ |

இவைகளை கல்வத்திலிட்டு முலைப்பால்விட்டு எட்டுஜாமமரைத்துகோழிமுட்டைவெள்ளையும்பிசியால்எட்டுநாளரை

ந்து பில்லிசெய்து நிழலிலுலர்த்தி நல்லஜெலம் ஒருபடி கொதிக்கக்காய்ச்சி அதில் இந்த பில்லியைப்போட்டு சூடு ஆறினபிறகு எடுத்து உணர்த்தி கல்வத்தில் அறைக்கச்செந்தூரமாகும் அரிசிப்பிரமாணம் தேனிற்கொடுக்க பாரிச வாய்வு ஜன்னி தீரும், கடுகு நல்லெண்ணெய் தயிர் புளி ஆகாது.

---

## பூநாகி செந்தூரம்.

| | | |
|---|---|---|
| பூங்காவி | பலம் | உ |
| படிகாரம் | ,, | உ |

இவையிரண்டும் கல்வத்தில் அறைத்து வெண்ணெய் அல்லது நெய்யில் சாப்பிடவும் பெரும்பாடு, வெள்ளை, பசிமை, ரத்தகாசம், மேகவெட்டை, உள்காச்சல், உஷ்ண வாய்வு, நாக்குவரட்சி இதுகள் தீரும், இச்சாபத்தியம் கடுகு நல்லெண்ணெய் நீக்கவும்.

---

## தாம்பிர செந்தூரம்.

பழய ஜல்லிகாசியைக் கொண்டுவந்து தட்டானிடத்தில் கொடுத்து காய்ச்சி யிலைபோல் தகடுகளாக தட்டின பிறகு நன்றாய் சிவக்கக் காய்ச்சி பெருமிச்சம்பழரசத்தில் தோய்க்கவும் இப்படி பதினொருதடவை காய்ச்சி தோய்த்த பிறகு அவுத்திக் கீரையை அரைத்து ஒவ்வொரு தகட்டுக்கும் தளமாய்ப்பூசி அதாவது மூத்திரத்தின் நடுவில் தகட்டைச்சொருகி அனைத்தும் ஒரேமுத்தையாய்த் திரட்டி சன்னகோணிப்பட்டையை சேற்றில்புரட்டி கீரைமொத்தைமேல் கவசஞ்செய்து இரண்டு முழ ஆழம் அகலகன முள்ள கெஜபுடத்தில் நூறுவைகவரட்டியில் புடம்வைக்கவும் நாலுநாளானபிறகு அதையெடுத்து கல்வத்தில் வெள்ளெருக்கன்பால் விட்டறைத்து பில்லைகளாகச் செய்து நிழலில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல்மூடி சீலை சீலைசெய்து ஐம்பதுஎருவ வரட்டியில் புடம்வைக்கவும் ஆறினால் எடுத்துப்பார்க்க ஊதா செந்தூரமாகயிருக்கும் அந்தக் கல்

வத்திலிட்டு அரைத்து புட்டியில் வைத்துக்கொள்ளவும் இதற்கநுபானம் கால்படி புளிச்சத்தண்ணீரில் (உ0) பலம் மிளகுபோட்டு (ரு) நாள் ஊரவைத்து நாலானுள் யெடுத்து வெய்யலில் உலர்த்தி சூரணம்செய்து நெய்பழகிய சட்டியில் ஒரு ரூபாயிடை தேன், ஒரு ரூபாயிடை இஞ்சிரசம், ஒரு ரூபாயிடை பசும்நெய், மூன்றும்விட்டு ஷை சூரணம்போட்டு லேகியமாய் கிளரி வைத்துக்கொள்ளவும். புளியங் தொட்கொட்டைப் பிரமாணம் லேகியத்தில் அரிசியிடை செந்தூரம்வைத்து உருட்டி சாப்பிடவும் வாதசுரம், மேகவாய்வு, பாரிசவாய்வு, கண்டமாலை கிரந்தி இப்படிப்பட்ட வியாதிகளெல்லாம் நிவர்த்தியாகும் தாதுவிர்த்தியுண்டாகும், கடுகு நல்லெண்ணெய் நீக்கவும், இச்சாபத்தியம்.

## செந்தூரவகைபரணி.

முற்றுப்பெற்றது.



இனிவரும் செந்தூரவகை பாகங்களில் கையாடத்தக்க உத்தமமுறைகள் இரண்டாங் காண்டத்தில் அச்சிட்டிருக்கின்றோம்.

உ

தேவிசகாயம்.

ஆருவது

# மெழுகுவகைபரணி.

## வெள்ளைப்பாஷாண மெழுகு.

வெள்ளைப்பாஷாணம் இரண்டுபலங் கொண்டுவந்து மெல்லியசிலையில்சுத்தி வண்ணான் வெள்ளாவியில்பேழுதிரம் வைத்துப் பிறகு வேரேதுணிசுத்தி சேத்தின்கீழ் (சய) நாள் புதைத்துவைத்தெடுத்து நாளட்டிப்பாக (அதாவது) ஒரு நாளைக்கு ௩-௪-௫-௬-இவ்விதமாய் ஆயிரத்தி அறுநூறுபெலு மிச்சம்பழ ரசத்தினல் அரைத்து முடிவில் செம்புசட்டியில் (௬) பலம் நல்லெண்ணெய்வார்த்து பதமாய்க் காய்ச்சி பொங்கி வருவதற்குமுன் மேற்படி பழச்சாற்றில் அரைத்த மருந்து பில்லையைப் போட்டால் நாகப்பழநிரமாகும் அப் போதிரக்கி எண்ணெயை சாக்கடை அல்லது குப்பைமேட் டில் ஊத்திப்போட்டு மருந்தைமாத்திரம் பத்திரப்படுத்திக் கொள்ளவும், தேன், அல்லது வெண்ணெயில் சிறுபயறுபிர மாணம் (ய) அல்லது (யக) இருபதுநாள் சாப்பிட மேக ரிணம், படைவாய்வு, மூக்குரிணம், கண்டமாலை, செகப்பு, கரப்பு, படைகிரந்தி, முதலானதும் தீரும். (பத்தியம்) தேங்காய் நல்லவெல்லம் மீன் பூசினிக்காய் ஆகாது.

## கோரோஜன மெழுகு.

| | | |
|---|---|---|
| லிங்கம் | விராகனிடை- | உ௦ |
| பூரம் | ,, | ௰௦ |
| சுத்திசெய்தவாளம் | ,, | உ௦ |
| லவுங்கம் | ,, | உ௦ |
| வீரம் | ,, | க |
| கோரோஜனம் | ,, | க |

| | | |
|---|---|---|
| கரிமஞ்சள் | விராகனிடை-க | |
| ஏலரிசி | ,, | க |
| சுக்கு | ,, | க |

இந்த சரக்குகளில் சுத்திசெய்ய வேண்டியதை சுத்தி செய்து சூரணிப்பதை சூரணித்து பரவுங்கலந்து பௌடர் செய்துக்கொண்டு கல்வத்திலிட்டு பத்து பலம் பனவெல்லம் கூட்டி அரைத்தெடுக்கவும் கருப்பங்கட்டியில் உருண்டைப்பிரமாணம் சாப்பிட இரைப்பு உப்பிசம் வீக்கம் சகலமான வாய்வுந்தீரும்.

## தோஷாமிர்த மெழுகு.

| | | |
|---|---|---|
| வீரம் | விராகனிடை-ு | |
| லிங்கம் | ,, | உ |
| இங்கிலீஷ்ரசபற்பம் | ,, | ஐ |
| பூரம் | ,, | ு |
| அதிமதுரம் | பலம் | க |
| அக்கிராகாரம் | ,, | க |
| கோஷ்டம் | ,, | க |
| சன்ருஷ்டம் | ,, | க |
| சுக்கு | ,, | க |
| அரிசிதிப்பிலி | ,, | க |

இதுகளை பவுடர்செய்து தேன்விட்டரைத்தால் மெழுகாகும் பயறுபிரமாணம் (க) மணிக்கொருதரம் சாப்பிடவும்.

## வாதமாருத மெழுகு.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பரங்கிச்சக்கை | பலம் | ச | வெப்பாலரிசி | பலம் | ு |
| கடுக்காய்த்தோல் | ,, | ச | ஜாதிக்காய் | ,, | வ |
| திரிகடுகு | ,, | உ | ஜாபத்திரி | ,, | வ |
| சித்தமுட்டிப்பட்டை | ,, | உ | ஏலம் | ,, | வ |
| சித்திரமூலப்பட்டை | ,, | உ | லவங்கம் | ,, | வ |
| கசகசா | ,, | க | சித்தரத்தை | ,, | வ |
| கார்போகஅரிசி | ,, | ு | வால்மிளகு | ,, | வ |
| வழலரிசி | ,, | ு | அதிமதுரம் | ,, | வ |

இவைகளை சூரணம்செய்து வைத்துக்கொண்டு,

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கோரோஜனம் | பலம் | வ | லிங்கம் | பலம் | க |
| குங்குமப்பூ | ,, | வ | பூரம் | ,, | வ |
| தாளகம் | ,, | க | ரசசெந்தூரம் | ,, | வ |
| வீரம் | ,, | க | | | |

இவைகளை அரைத்துமேற்கூறிய சூரணத்துடன்கலந்து வைத்துக்கொண்டதின்பிறகு திரிபலாதி கியாழத்திறைல் (௪) ஜாமம் அரைத்து நிழலிலுலர்த்தி தேன்விட்டு (௩) ஜாமம் அரைத்து வைத்துக்கொள்ளவும், இந்தமெழுகை மிளகுப் பிரமாணம் பனவெல்லத்தில்வைத்து இருவேளையும் சாப்பிடவும், புளி நீக்கவேண்டியது நெய்வெள்ளாட்டுவத்தல் சேர்த்துக்கொள்ளவும் தீரும்வியாதிகளாவன முடக்குவாதம், சூலைமேகவாய்வு, பாண்டுவலி, குடல்வாய்வு, சூலைவாய்வு, மண்டைவாய்வு, சூதகவாய்வு, முசல்வாய்வு, மூர்ச்சைவாய்வு, பித்தவாய்வு, பாரிசவாய்வு, அர்ப்புதவாய்வு, திமிர்வாய்வு, இவையெல்லாந் தீரும்.

## கஸ்தூரிமெழுகு.

| | | |
|---|---|---|
| கஸ்தூரி | விராகனிடை-க | |
| பச்சைகற்பூரம் | ,, | ௳ |
| கோரோசனை | ,, | ௪ |
| குங்குமப்பூ | ,, | ௪ |
| புனுகு | ,, | வ |
| ஜவ்வாது | ,, | வ |
| பூநீக்கியலவங்கம் | ,, | ௪ |
| வால்மிளகு | ,, | ௪ |
| ஏலக்காய் அரிசி | ,, | அ |
| சிறுலவங்கப்பட்டை | ,, | அ |

இதில் சூரணிப்பதை சூரணஞ்செய்து சகலமுமொன்றாய்க் கூட்டி கற்பூரவாசனை வெற்றிலைரசத்தாலும் கற்பூரவள்ளி ரசத்தாலும் தூதுவேளைரசத்தாலும் மட்டிநீக்கிய இஞ்சி ரசத்தாலும்மிளகுகியாழத்தாலும் சித்திரமூலவேர் கியாழத்தாலும் மஞ்சள் கரிச்சாலை ரசத்தாலும் தனித்தனியாக வொவ்வொரு ஜாமமரைத்து நிழலில் உலர்த்தி சுத்தேனிறைல் மெழுகுபதமாயரைத்து வைத்துக்கொள்ளவும் இந்த மெழுகில் பயறுபிரமாணம் தேனில்சாப்பிடஜன்னி, சீதசுரம், கபரோகம், உப்பிசமாந்தம், முகவாதஜன்னி, இருமல், மாரடைப்பு, வாதம் இவ்வகை வியாதிகளை நீக்கும்.

மெழுகுவகைபரணி.

முற்றுப்பெற்றது.

உ

தேவிசகாயம்.

---

# ஏழாவது

# லேகியவகைபாணி.

## கட்டுவாதி லேகியம்.

| | | |
|---|---|---|
| சிமைஅதிவிடையம் | விராகனிடை- | க |
| கடுக்காய்ப்பூ | ,, | க |
| மாசிக்காய் | ,, | க |
| மாதுளம்பழத்தோல் | ,, | க |
| ஜாதிக்காய் | ,, | க |
| லவங்கப்பட்டை | ,, | க |
| போஸ்தக்காய் | ,, | க |
| கசகசா | ,, | க |
| மாங்கொட்டைபருப்பு | ,, | க |
| புளியங்கொட்டைதோல் | ,, | க |
| அபினி | ,, | ௨ |
| கோரோஜனம் | ,, | ௨ |
| நல்லவெல்லம் | பலம் | ௨ |
| நெய் | ,, | க |

நெய்யை அடுப்பிலேற்றி வெல்லத்தைப்போட்டு இவ்விரண்டும்கலந்து பாகு ஆகும்போது ஷை தினுசுகளைச் சூரணம்செய்து வைத்துக்கொண்டிருந்து பாகில் சிறுகசிறுக போட்டு கிளறி லேகியம்போல் பிரக்கவும் பெரியவர்கள் குழந்தைகளுக்கும் ஆகும் சுண்டக்காய்விதம் காலையில் கொடுக்கவும் மூன்றுவேளையில் சீதக்கழிச்சல், இரத்தமந்தம் அல்லது அஜீரணம் நீங்கும்.

---

## கடுக்காய் லேகியம்.

கடுக்காய் பலம்(உ௫) இரண்டரைபடி ஜலத்தில் எட்டுக்கொருபங்காய் பிசாழம்வடித்து சிவந்த இஞ்சியிளகு ஓமம் திப்பிலி சுக்கு சக்கரை வகைக்குப்பலம்(ம) சூரணஞ்செய்து

ஷை பொழுத்தை அடுப்பில்வைத்து இந்த சூரணத்தைக் கொட்டி பசும்நெய் கால்படிவிட்டு லேகியமாய்க்கிளரி புன்னைக்காயளவு சாப்பிடவும். (தீரும்வியாதி) அக்கினிமந்தம், சூலை, மலஜெலவாய்வு ஆறுந்தீரும்.

---

## நெல்லிக்காய் லேகியம்.

நெல்லிக்கா பலம்-உ0, முன்போல பொழும்வடித்து திப்பிலி மிளகு சுக்கு ஓமம் கிராம்பு ஏலம் குக்கில் வாய்விளங்கம் சீரகம் தனியா குகைநீரு மதுரம் வகைக்குப்பலம்-வ, சக்கரைபலம்-உ0, நெய்படி-வ, லேகியங்கிளரி பாக்களவு சாப்பிட மேகம், அஸ்திசுரம், காய்ச்சல், கிராணி, வாய்வு, பொருமல், பிருமல், க்ஷயம், சுவை, சிலேற்பனந்தீரும்.

---

## சுக்கு லேகியம்.

சுக்குபலம்-உ0, இரண்டரைபடி தண்ணியில் இட்டு எட்டுக்கு ஒருபங்காய் பொழும்வடித்து பனவெல்லம் இரண்டரைபலம், ஓமம் கால்படி, கரிவேப்பிலை அரைபலம், நெல் அரிக்கால்படி, இவைகளை லேகியமாய்க்கிளரி புன்னைக்காயளவு சாப்பிட கிராணி, மூலம், வாய்வு, அதிசாரம், கடுப்பு, ரத்தம், வீக்கம், பாரிசவாய்வு, மந்தம், புளித்தயேப்பந்தீரும்.

---

## மிளகு லேகியம்.

மிளகுபலம்-உ0, இரண்டரைபடி தண்ணியில் பொழும் வைத்து எட்டுக்கு ஒருபங்காய் சுண்டயிரக்கி கற்கண்டு (உ0) பலம், அக்கிராகாரம், சீரகம், கிராம்பு, ஏலம், கோஷ்டம் மதுரம், சிறுதேக்கு, வாய்விளங்கம், நறுக்குமூலம் வகைக்குக்கால் பலமாகவெடுத்துசூரணித்துநெய்கால்ஆழாக்கு, தேன் அரிக்காலாழாக்கு ஷை லேகியத்திற் சூரணத்தைக் கொட்டி நெய் தேன்முதலானதும் விட்டு லேகியமாய்க்கிண்டி கெச்சக்காய்

வீதஞ்சாப்பிட (௨௲) சிலேற்பனமும் கபங்கள், நீர்தோஷம், சிலவிஷம், மூன்றுசுரமும் வாதமுந்தீரும்.

---

## இருமலுக்கு லேகியம்.

மிளகுபலம்-க, பசும்வெண்ணெய் பலம்-க, சீனாகற்கண்டு பலம்-க, மிளகைசூரணித்து ஒருசட்டியை அடுப்பில் வைத்து நெய்யையூற்றி உருகினவுடன் மிளகுசூரணம் போட்டு கற்கண்டுபோட்டு சிவந்து வருமளவுங்கிளரி லேகியமாக்கிவைத்துக் கொண்டு களற்சிக்காய்வீதஞ் சாப்பிடவும் இச்சாபத்தியம்.

---

## திப்பிலி லேகியம்.

திப்பிலி பலம்-உ௦, வாங்கியிடித்து இரண்டரைபடி ஜலத்தில் பொழமிட்டு எட்டுக்கு ஒருபங்காயிரக்கி கற்கண்டு இரண்டரைபலம், சுக்கு கடுக்கா, அக்கிராகாரம், அரத்தை ஓமம் சீரகம், தனியா, வெட்பாலரிசி, செண்பகப்பூ, கோஷ்டம் வகைக்கிப் பலம்-க, தேன் உரி-வ, நெய்ஆழாக்கு, மேல்படி பொழத்தில் சகலமும் விட்டு லேகியமாய்க்கிண்டி கெச்சக்காய்ப் பிரமாணம்சாப்பிட சிலேற்பனம், வாதம், இருமல் வாய்வு, உப்பிசம் தீரும்.

---

## மதனகாமேசுர லேகியம்.

| | | |
|---|---|---|
| சுக்கு | பெருஞ்சீரகம் | அதிமதூரம் |
| கிராம்பு | மிளகு | வால்மிளகு |
| திப்பிலி | சிறுநாகப்பூ | திரிபலாதி |
| ஏலம் | ஜாதிக்காய் | ஜாபத்திரி |
| லவங்கப்பட்டை | லவங்கப்பத்திரி | கோஷ்டம் |
| கொத்தமல்லி | தாளிசம் | கருஞ்சீரகம் |
| அசுவகெந்தி | செண்பகப்பூ | கஸ்தூரிமஞ்சள் |
| தக்கோலம் | கசகசா | நீர்முள்ளிவித்து |
| உளுந்து | முள்வேலம்பிசினி | கிலப்பனங்கிழங்கு |
| திராட்சி | அபினி | |

இதில் வகைக்கி அரைபலமாக வெடுத்து வருக்கவேண்டியதினுக்களை வருத்து தூள்செய்து வஸ்திரகாயம் பண்ணி வைத்துக்கொண்டு இதற்குச் சரியிடையாய் கெஞ்சாவை நிறுத்தெடுத்து நல்லஜெலத்தில் (எ) திரம் கழுவியெடுத்து விறைகாம்பு முதலானதும் நீக்கி (உ) படி நல்லஜெலத்தில் (அ) படி பசும்நெய்விட்டு அதில் கஞ்சாவைப்போட்டு நன்றாய்க் காய்ச்சி கிட்டி கட்டி நெய்யை அயச்சட்டியில் பிழிந்துக் கொண்டு மற்றநெய்யையும் கையால் நன்றாய் வழித்துக் கொண்டு பசும்பால் உழக்கு, சர்க்கரைபலம் (௩௰) ஒன்றாய் விட்டு அடுப்பேற்றி பாகுபதத்தில் சூரணங்களைக்கொட்டி நெய்யைவிட்டு வெந்தசமயத்தில் தேன்பலம் (அ) விட்டு பதமாய்க்கிளரி யிரக்கவும். இரவில் புசித்தானபிறகு ஒருகளஞ்சி முதல் மூன்றுகளஞ்சிவரையில் புசிக்கலாம். வீரியம் அதிகரிக்கும். தேகம் சிவக்துவரும் கண்குளிர்ந்து பிரகாசிக்கும் பீனி, யிருமல், மந்தம், சூலை, பழையசுரம், க்ஷயம், இவைகள் நீங்கும். தேக ஆரோக்கியமும் மனதிடமும் உண்டாகும்.

## இந்திரியவலுவிற்கு மாணிலேகியம்.

வெள்ளாட்டின்பீஜம் (௫௰) வாங்கி பொடிபாக அரிந்து வெய்யலில் உணர்த்தி தூள்செய்து வஸ்திரகாயம் செய்து வைத்துக்கொண்டு அமுக்கனுங்கிழங்கு பலம்-௧, கசகசா திரிகடுகு ஓமம் ஜாதிக்காய் ஜாபத்திரி கிராம்பு அதிமதுரம் கோஷ்டம் அக்கராகாரம் லவுங்கப்பட்டை லவுங்கப்பத்திரி நீர்முள்ளிவிரை பூனைக்காலிவிரை முருங்கைவிரை நத்தைச் சூரிவிரை ஆலன்வித்து அரசன்வித்து சாரைப்பருப்புபாதம் பருப்பு வகைக்குப்பலம்-௳, இளம்வருப்பாகவறுத்து சூரணம்செய்து வைத்துக்கொண்டு கெஞ்சா இரண்டுபலம் வெடுத்து நல்லஜெலத்தில்(எ) திரம்கழுவி விரைகாம்புமுதலானதும் நீக்கி உலர்த்தி நெய்யில்வருத்து சூரணம் செய்துக் கொள்ளவும். பசும்பால் (௩) படி அடுப்பின்மேல்வைத்து சக்கரை (௨௰) பலம்போட்டு பாகுபதத்தில் சூரணங்களைக் கலந்துகொஞ்சம் கொஞ்சமாய்கிளரிக்கொடுத்து நெய்(௰) பலம்தேன் (௰) பலம்விட்டு லேகிய பாகமாய்க்கிண்டி யிரக்கி வைத்துக்கொண்டு கொட்டைப்பாக்குப் பிரமாணம் இரவில் புசித்தானபிறகு சாப்பிடவும்.

## லேகியவகைபரணி-முற்றிற்று.



உ

தேவிசகாயம்.

எட்டாவது

# எண்ணெய் வகைபரணி.

## கிரந்திக்கும் மேகவெட்டைக்கும் எண்ணெய்.

சித்தாமணக்கெண்ணெய் சேர் (க) க்கு செங்கொட்டை சேர் (வ) சாம்ராணி சேர் (வ) செவிபம் சேர் (வ) சித்திர மூல பச்சைவேர்பட்டை (வ) எண்ணெயை அடுப்பில் வைத்து செங்கொட்டையை இரண்டு துண்டுகளாக வெட்டிப் போட்டு மற்ற மருந்துகளெல்லாம் இடித்துப்போட்டு முருக்கக் காய்ச்சி பிருத்துக்கொள்ளவும் நித்தம் ஒருகரண்டிவிதம் (சய) நாளைக்கி இரண்டுவேளையும் சாப்பிடவும் சர்வகிரந்தி மேகம் மேகவெட்டை ஊரல் இதுகள் தீரும், இச்சாபத்தியம்.

## குளிர்ச்சி எண்ணெய்.

| | | |
|---|---|---|
| சித்தாமணக்கெண்ணெய் | படி | க |
| பழச்சார் | ,, | க |
| இளநீர் | ,, | க |
| பசம்பால் | ,, | க |

இவைகளை ஒன்றாய் ஊற்றிக்கலக்கி அடுப்பில்வைத்து மெழுகுபதமாய்க் காய்ச்சி வடிக்குஞ்சமயத்தில் பரங்கிச் செக்கை தனியா சீரகம் வால்மிளகு லவங்கப்பட்டை ஜாபத்திரி வகைக்குப் பலம்-௩, இளவருப்பாகவருத்து ஷை எண்ணெயில் போட்டு சற்று பொருத்து உடனே இரக்கி வைத்து கோரோஜனை விராகனிடை-உ௦, குங்குமப்பூ விராகனிடை-உ௦, கற்கண்டு பலம்-ய, செவ்வாழைப்பழம்-அ, இவைகளை வெண்ணெயில் போட்டு கலக்கி வைத்துக் கொள்ளவும் அரைபல விதமாய் (ஐ) நாள் அல்லது (எ)

காலைக்கி சாப்பிடவும், இச்சாபத்தியம் சகலரும்தணியும் திரேகம் குளிர்ச்சியாகும்.

---

## சுகபேதி எண்ணெய்.

சித்தாமணக்கெண்ணெய் படி-ற, பசும்பால்படி-உ, அதிமதுரம் கடுக்கா இந்துப்பு கடுகுரோகணி வாளம் வகைக்கிப் பலம்-வ, இந்தசரக்குகளை பிடித்துக் கலக்கி காய்ச்சி வடித்துப் பெரியவர்களுக்கு அரைபலம் கொடுக்கவும் ஒரு நாழிசென்று வென்னீர் கொடுக்கவும் பேதியிருத்த வேண்டில் உப்பு கஞ்சிமோர் மாலையில் மிளகு சக்கு பொழும் இராத்திரிக்கும் மிளகு நீர்சாதம் சாப்பிடவும் துவரை துவையலாகும்.

---

## வெள்ளை, மேகம், வாய்வு, புண்ணு கிரந்தி இதுகளுக்கு சேர்ந்த மங்கலத்து எண்ணெய்

| | | |
|---|---|---|
| ஜாதிக்கா | பலம் | க |
| லவங்கப்பூ | ,, | உற |
| வால்மிளகு | ,, | உற |
| கருஞ்சீரகம் | ,, | ௫ |
| சோம்பு | ,, | க |
| வாய்விளங்கம் | ,, | கவ |
| தாளிசப்பத்திரி | ,, | க |
| பரிங்கிச்செக்கை | ,, | ௫ |
| கடுக்கா | ,, | உ |
| லவுங்கம் | பலம் | உற |
| சிறுலவுங்கப்பட்டை | ,, | உற |
| ஜாபத்திரி | ,, | ௩ |
| கடுகுரோகணி | ,, | உற |
| கசகசா | ,, | கற |
| குரோசாணிஓமம் | ,, | க |
| வெட்பாலையரிசி | ,, | க |
| உரித்தபூண்டு | ,, | அ |

இந்த திறுசுகளைபிடித்து வஸ்திரகாயம் செய்துவைத்துக்கொண்டு விளக்கெண்ணெய் ஒருவீசை வாய் அகண்ட சட்டியில் ஊத்தி அடுப்பேற்றி எரிக்கும்போது அதில் போடவேண்டிய திறுசுகள் பூவரசன்பட்டை ஒருபிடி பஞ்சுபோல் நருக்கிப் போடவும் சங்கம்வேர் கரிச்சாலையில் இரண்டும் ஒரு குத்து பஞ்சுபோல் பிடித்துப்போடவும்

மேல் கூறிய வகையில் பூண்டைமாத்திரம் உரித்து பல்லு பல்லாய் பெடுத்துப்போடவும் தீ சிறுகபெரித்து சிலக்கைக் கொதிவருகையில் முன் வஸ்திரகாயம் செய்துவைத்து யிருக்கும் மருந்தைக்கொட்டி கலக்கி யிரக்கும்பொழுது (உ௦) பலம் வாளத்தை சுத்திசெய்து பொடிப்பண்ணிப் போட்டுக் கலக்கி இரக்கவும் கற்கண்டுபலம் (ரு) திராட்சி பலம் (ரு) இதுகள்போட்டுக் கலந்து வைத்துக்கொண்டு காலையில் ஒரு சிறுகரண்டிவீதம் (எ) நாள் சாப்பிடவும். பத்தியம் வருத்தவுப்பு சுட்டபுளி, மறுபத்தியம் (எ) நாளும் இப்படியேயிருக்கவும், திரும்வியாதிகள் புண்ணு, நணைக்கா கிரந்தி, மேகம், வெள்ளை, சிலவாய்வுகள் இவைகளெல்லாம் தீரும்.

---

## கொர்ப்பஸ்திரீகளுக்கு பழயது எண்ணெய்.

விளக்கெண்ணெய் ஒருவீசை அடுப்பிலேற்றி தாளி வேர் ஒருபிடி கொண்டுவந்து யெண்ணெயில் போட்டு காய்ச்சவும் அந்தவேர் மளக்கென்று உடைந்தால் எண் ணெயை இரக்கி வைத்துக்கொண்டு சாப்பிடும் விவரம் காலை யில் அரைபலம் யெண்ணெய் சாப்பிட்டு உடனே பழயது சாப்பிடவும் கெணச்சூடு தீரும். கெர்ப்பத்திலுள்ள சிசுவுக் கும் யாதொரு வியாதியும் அணுகாது கெர்ப்பஸ்திரீயான வள் (ரு) வது மாதமுதல் (கூ) மாதம்வரையில் அந்தந்த மாதம் முதலில் (௩) நாள் சாப்பிடவும் இச்சாப்த்தியம் ஆரோக்கியமாயிருக்கும்.

---

## திமிர், தடிப்பு, குஷ்டரிணம், படை, சட்டை, மேகம், குஷ்டம், சொரி, இவைகட்கு எண்ணெய்.

பூவரசம்பட்டைரசம் அத்திப்பட்டைரசம் வெள்ளருகு ரசம் கோவைரசம் பீச்சங்கன்ரசம் வகைக்குப்படி (வ) வேவித்த முத்துயெண்ணெய் படி (உ) அமுக்கிறாக்கிழங்கு பலம் (உ௦) பரங்கிச்செக்கை பலம் (௩) லவுங்கப்பட்டை

கார்போக அரிசி, கடுகுரோகணி, வாய்விளக்கம், திப்பிலி, வகைக்கு பலம்-௧, மிளகு பலம்-௨, பூரம் பலம்-௰, இதுகளை தூள் செய்து மேற்படி சாறுவகைகளை எண்ணெயில்ஊத்தி அடுப்பேற்றி சிலங்கைக்கொதி பக்குவத்தில் தூள்செய்த மருந்தைப் போட்டுக் கலக்கி வடித்துக்கொண்டு சாப்பிடும் விதம் வேளைக்கு அரைபலவீதம் (௩) தடவை (௭) நாள் விட்டு(௭)நாள் சாப்பிடவும் பிர்க்கன்காய், முருங்கைக்காய், துவரம்பருப்பு,உப்பு, அரைக்கீரை ஆகும். புளி நீக்கவேண்டியது மேல்கண்ட வியாதியெல்லாம் தீரும்.

---

## சர்வமேகசட்டை குட்டரிணங்களுக்கு நாரசிம்ம எண்ணெய்.

வெள்ளைக்கலியாண முருக்கன்பட்டை பூவரசன் பட்டை இலவன்பட்டை தனித்தனி இளநீர்விட்டு இடித்துப் பிழிந்தரசம் வகைக்கிப்படி-௰, பிரம்மதண்டிரசம் படி-௰, துத்தியிலைரசம் படி-௰, சிறுசின்னிரசம் படி-௰, கத்தாழைச் சாதம் தேங்காய்ப்பிரமாணம். வெந்தியம் பலம் (௨௰) தூள் செய்து (௫௰) பலம் சித்தாமணியெண்ணெயை அடுப்பி லேற்றி வெந்தியத்தூளைப்போட்டு கத்தாழைசாதத்தையும் போட்டு மேல்படி பிழிந்துவைத்திருக்கும் ரசங்களையும் ஊத்தி காய்ச்சி பதத்தில் வடித்துக்கொண்டு பூரம் அரை பலம் மேல்படி எண்ணெய்விட்டரைத்து அதில்கலந்து வைத்துக்கொண்டு காலையில் ஒருரூபாயெடை. எண்ணெய் புசித்து வென்னீர் சாதம்சாப்பிடவும் (௫) நாள் அல்லது(௭) நாள் சாப்பிடவும், மருபத்தியம் அரை உப்பு அரை புளி சேர்த்துக்கொள்ளவும் மேல்கண்ட வியாதிகளெல்லாம் நீங்கும்.

---

## குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் அட்சரம் மேகவெட்டை கெணம் இதுகட்கு குளித்தி எண்ணெய்.

மணத்தக்காளி, துளசி, துத்தி, பிரமி, வில்வம், வல்லாரை, கையான்பொடுதலை, நுணா, புங்கு, சங்கு, இந்த இலை

களின் ரசம் வகைக்குப் படி-அ, முத்தெண்ணெய் படி-அ, இவைகளை ஒன்றாய்க்கலந்து திப்பிலி அரத்தை ஓமம் வசம்பு கஸ்தூரிமஞ்சள் வகைக்குப் பலம்-ற, ஜாதிக்கா பலம் அரிக் கால் தூளாயிடித்து வஸ்திரகாயஞ்செய்து ஷை எண்ணெ யில்போட்டு பதமாய்க் காய்ச்சி வடித்து குழந்தைகளுக்கு கரண்டி வீதமும் பெரியவர்களுக்குக் கால்பல வீதமும் (எ) நாள் கொடுக்கவும் இச்சாபத்தியம்.

---

## கெணச்சூட்டிற்கு குளிர்ச்சி எண்ணெய்.

சிந்தாமணக்கு பெண்ணெய் படி-அ, வல்லாரை ரசம் படி-ற, வெந்தியம்பலம்-உ, ஆவின்பாலிலரைத்து எண்ணெ யில்கலந்து காய்ச்சிவடித்து கொஞ்சம் சக்கரையிட்டு கொடு த்து வரவும் தேகம் தணித்து குளிர்ச்சி புண்டாகும்.

---

## குழந்தைகட்கு மாந்த எண்ணெய்.

| | | |
|---|---|---|
| உத்தாமணிரசம் | பலம் | எற |
| விளக்கெண்ணெய் | ,, | எற |

இரண்டுங்கலந்து அடுப்பேற்றி காய்ச்சியிரக்கினவுடன் பூரம், ஏலரிசி, லவுங்கப்பட்டை, சுக்குவகைக்கு விராகனிடை உற, கடுகுரோகணி ஒன்னேஅரிக்கால்விராகனிடை, இவை களை தூள்செய்து கல்வத்திலரைத்து எண்ணெயில் கலந்து வைத்துக்கொண்டு வேளைக்கு சிறுகரண்டிவிதம் கொடுக்க வும் உப்பில்லாத பத்தியம் தாயார்கூட பத்தியமிருக்க வேண்டியது.

---

## குழந்தைகட்கு சகலமாந்த எண்ணெய்.

(கூய) பலம் முத்தெண்ணெயில் தூளசி, முசுமுசுக்கை, உத்தாமணி, சிலந்திநாயகம் தேள்கொடுக்கு, செருப்படை, கையாந்தகரை, கொச்சிபில்லை, வெள்ளருகு, பிரமிபில்லை, இவை கள் ரசம் வகைக்கு அரிக்கால்படி, கத்தாழை மடல்சாதம்கிச்

சிவிக்காய்ப் பிரமாணம், வரகுவைக்கலில் வெதுப்பி யெடுத்த ஆறு ஆத்து தும்மட்டிக்காய் ரசம் இவைகளை ஷை எண்ணெயில்விட்டுக்காய்ச்சி சேறுபதமாயிருக்குஞ்சமயத்தில் கருஞ்சீரகம், வெந்தியம், கோஷ்டம் வகைக்குப் பலம்-௨, செண்பகமொக்கு விராகனிடை-க, பூண்டுபலம்-௨, போட்டு பதமாய்க்காய்ச்சிவடித்து திரேகதிடத்தின்படி (௳) அல்லது (௨௰) பலம்வீதமாய்க் கொடுத்து மாலையில் மிளகு சாம்பலாக்கி தத்தியிலே வெந்தியம் வெங்காயம் பொழுமிட்டுக் கொடுக்கவும் சகல மாந்தமுந்தீரும்.

---

## குழந்தைகட்கு அள்ளுமாந்த எண்ணெய்

(௬) பலம் சித்தாமணக் கெண்ணெயில் ஒன்னரைபலம் வெப்பாலன் பாலவிட்டு ஒன்னரைபலம் வெங்காயரசம்விட்டு கருஞ்சீரகம் கடுகுரோகணி வகைக்கிப் பலம் அரிக்கால் பொடித்துப்போட்டு காய்ச்சி வடித்துக்கொள்ளவும் பால் குடிக்குங் குழந்தை யாயிருந்தால் கால்பலம்வீதமாய் (௫) நாள் கொடுத்து தாயாருக்கு புளியில்லாமல் பத்தியம் வைக்கவும்.

---

## சுழிமாந்தத்திற்கு எண்ணெய்

இண்டையிலைச்சார், சங்கம்பிலைச்சார், தூதுவேளைச்சார், துளசிச்சார், நொச்சிச்சார், உத்தாமணிச்சார், நாய்துளசிச்சார், ஏரண்டத்தயிலம் வகைக்கிப்படி அரிக்கால், கடுகுரோகனி பலம்-௨, இந்துப்பு பலம்-௳, வென்காரம் பலம்-௳, சன்ருஷ்டகம் பலம்-௳, ஓமம் பலம்-௳, கருஞ்சீரகம் பலம்-௳, வசம்பு பலம்-௳, பூண்டுபலம்-௨, இதுகளை அரைத்து ஷை சாறுவகையுடன் எல்லாம் ஒன்றாய்க்கலந்து அடுப்பேற்றி பதமாய்க் காய்ச்சிவடித்து காலையில் ஒருகாண்டி விதம் உள்ளுக்குக் கொடுக்கவும், இச்சாபத்தியம், சுழிமாந்தம் பொறைமாந்தம் வாதமாந்தம் இதுவெல்லாந்தீரும்.

---

## எலவம்பேட்டு எண்ணெய்.

புங்கம் பட்டை, பூவரசம் பட்டை, உமலத்திப் பட்டை, * வென்வாயிப்பட்டை, மணிப்புங்கன்பட்டை, வெள்

வேலன்பட்டை, இவைகள் நிறுசுக்கு அரைவிசை விதமாய் நிருத்தெடுத்து பஞ்சுபோல் யிடித்து (அ) படி தண்ணீரில் போட்டு ஒருபடிகியாழுமாயிரக்கி சங்கங்குப்பியிலே பெருகு மிழியில இரண்டுஞ் சிறுநீர்விட்டுயிடித்து பிழிந்தரசம்பத்து பலம் பிரமியிலேரசம் பத்துபலம் இவைகளை ஷை யொழுத்தி லூற்றி விளக்கெண்ணெய் ஒருவிசை கூடவிட்டு கலக்கி அடுப்பேற்றி பதமாய்க்காய்ச்சி யிருத்து ஒருகாண்டிவிதம் எழு நாளைக்கிச் சாப்பிடவும், கடும்பத்தியம் மருபத்தியத்தில் புளிகால் கூட்டவும் மோர் நெய் யிரச்சிகூட்டவும் (யச) நாளும் போனபிறகு பதினைந்தாம்நாள் விளக்கெண்ணெய் தேய்த்து ஸ்நானஞ்செய்யவும், மேகம் கிரந்தி சிலந்தி சிலதழும் புகள் படை இதுகள் தீரும்

---

* வெள்வாயிப்பட்டையென்பது குருவி ஆலமரம்போல்விழுது விட்டு அந்தயிலே போலிருக்கும் அதுதானென்றறியவும்.

---

## அணைக்காட்டாத்தூர் எண்ணெய்.

கரசலாங்கண்ணி, பொன்னாங்கன்னி, நிலக்கடம்பு, நுணையிலே, பிரமியிலே, முடக்கத்தான் பொடுதலே, செருப்படை வெள்ளருகு, முசுமுசுக்கை, புங்கம்வேர், வெங்காயம், எலுமிச்சம்பழம் இவைகளின்சாறு நிறுசுக்கு அரிக்காற்படி, விளக்கெண்ணெய் (சுடு) பலம் இவையெல்லாம் ஒன்றாய்க்கலந்து அடுப்பேற்றி பதமாய்க்காய்ச்சி மெழுகுபதத்தில் இரக்கிவைத்துக்கொள்ளவும், காலையில் ஒருகாண்டி யெண்ணெயில் அரிக்காற் பலம் சற்கரை ஒருபலம் சீராகாரங்கூட்டி சாப்பிடவும் உப்பு கூட்டலாம் மேகம் (உக-ம்) ரெத்தப்பிரமியம், கண்டமாலே, மேகரிணம், பவுத்திரம், மூலம், முடக்கு, பிடிப்பு, மேகவாய்வு, மேகஊரல், மேகபடலம், புண்சிலந்தி, கிரந்தி, அண்டவாய்வு, இவைகள் தீரும்.

---

## கெணத்துக்கு எண்ணெய்.

விளக்கெண்ணெய்ப்படி (க) கையாந்தகரை பொன்னாங்கன்னிசேர்த்து கத்தாழை வெள்ளை வெங்காயம் கோவைபுளி

யாரைகற்பூரவல்லி இந்த திறுகளின்ரசம் வகைக்கி படி(வ) ஜாதிக்காய் ஜாபத்திரி மாசிக்கா கடுக்காப்பூ கோஷ்டம் அமுக்கனுங்கிழங்கு சீரகம் லவுங்கப்பத்திரி லவுங்கப்பட்டை பூண்டு வகைக்கிப் பலம்(அரிக்கால்) பசும்பால் படி(க)மேல் கூறிய கடைசரக்குகளை அறைத்து பாலில்கலக்கி சாறுவகை யெண்ணெய் முதலானதும் ஒன்ருய்க் கலந்து காய்ச்சி வடித்துகோரோஜனை குங்குமப்பூ வகைக்கி அரிக்காற்பலம்தூள் செய்துப்போட்டு வைத்துக்கொண்டு களஞ்சிவீதம் காலை ஒருவேளையாக (ரு) நாள் அல்லது (எ) நாள் கொடுக்கவும். கெனவெட்டை கெணசுரம் மாந்தம் உப்பிசம் ரெணங்கள் கெற்பவெட்டை இதுகள் தீரும்.

---

## சகலகரப்பானுக்கும் எண்ணெய்.

பூவரசன்பட்டை செங்கத்தாரிப்பூ தகரப்பட்டை கண்டங்காலி நிலாவிரை வகைக்கிப் பலம் (ய) யெடுத்து யிடித்து (ரு) படி தண்ணீரில் கியாழம்வைத்து ஒருபடியாக சுண்டக் காய்ச்சி யிருத்து முத்தெண்ணெய் ஒருபடி வெள்ளாட்டுப் பால் ஒருபடி ஒன்ருய்க்கலந்து மிளகு கருஞ்சீரகம் கார்கோலரிசி பூண்டு வசம்பு சதகுப்பை வலம்புரிக்காய் பரங்கிப்பட்டை இதுகள் வகைக்கிப்பலம் (வ) யெடுத்து யிளம்வருப்பாய் வருத்து யிடித்து வஸ்திரகாயம்செய்து மேல்கூட்டிய யெண்ணெயில்போட்டு காய்ச்சி வடித்துபிரதி காலையிலும் கரண்டி வீதம் கொடுக்க சகல கரப்பானும் தீரும். அடியில்நின்ற கடு கெடுத்து ரெணமீது தடவவும்தீரும். (ரு) நாள் அல்லது (எ) நாள் கொடுக்க தாயார்கூட இச்சாபத்தியமிருக்கவும்.

---

## குழந்தைகள் சகலகரப்பானுக்கும் யாழ்பாணத் தெண்ணெய்.

விளக்கெண்ணெய் படி (வ) நொச்சி கருநொச்சி செம்முள்ளி சிலந்திநாயகம் சங்கங்குப்பி சங்கிலை முருக்கெலை செந்தொட்டி பூவரசன் சிறுசெருப்படை கோழியாவாரை கத்தாழை இதுகளின் சாறு வகைக்கி ஒரு பலம் யெடுத்து ஷை

எண்ணெயில்விட்டு அடுப்பேற்றி செங்கத்தாரிபட்டை கருஞ்சீரகம் கடுக்காய் களிப்பாக்கு வெங்காயம் வகைக்கு (ரு) விராகனிடைபாக பொடித்து தூளாகயிடித்து வஸ்திரகாயம் செய்து எண்ணெயில்போட்டு மெழுகுபதமாய்க் காய்ச்சி காலையில் ஒரு கரண்டிவிதம் (ஙு) நாள் (எ) நாள் அல்லது (ய) நாள் கொடுக்க சகலகரப்பான் ரணம் சொரிசிரங்கு முதலானதும் நீங்கிவிடும் தாயும் பிள்ளையும் பத்தியமிருக்க வேணும்.

---

## பக்கசூலை கெற்பசூலைக்கு எண்ணெய்.

மூளகரனையிலையை உரலிலிட்டு ஜெலம்வார்த்துயிடித்து (யஉ) பலம் ரசம்பிழிந்துக்கொண்டு அதில் (யஉ) பலம் முத்தெண்ணெய்விட்டு உரித்தெடுத்தபூண்டு நிரி (ச) பலங்கூட்டி காய்ச்சிவடித்துதிரேகதிடப்படி (ங)நாளைக்கு கொடுத்துவர பேதியாகும் பேதியதிகமானால் ரோகம் நீங்கினதென்று தெரிந்துக்கொண்டு நிறுத்திவிடவும். இச்சாபத்தியம்.

---

## விரைவாத சஞ்சீவி எண்ணெய்.

| | |
|---|---|
| கெச்சக்காய்பருப்பு | ஏலம் |
| வால்மிளகு | பரிங்கிச்செக்கை |
| சன்னலவங்கப்பட்டை | பூரம் |
| சுத்திசெய்தவாளப்பருப்பு | கடுகுரோகணி |

வகைக்கு அரைபலமாகபொடித்து யிடித்து வஸ்திரகாயம் செய்து வைத்துக்கொண்டு கெச்சக்காயிலை வேறு முதலான சமூலம்கொண்டுவந்து (ய) பலம் இறுத்து பஞ்சுபோல் யிடித்து ஒருபடிதண்ணியில் யிபாழும்வைத்து கால்படியாகக் காய்ச்சி வடிக்கட்டி அதற்குச்சரியாய் சித்தாமணக்கெண்ணெய்விட்டு ஷை தூளைப்போட்டுக் கலக்கி அடுப்பேற்றி கமலாக்கினியாக கொஞ்சம் சிறுகபெரித்து பக்குவமாய்க் காய்ச்சி வைத்துக்கொண்டு காலையில் ஒருகரண்டிவிதம் (எ) நாளைக்கு சாப்பிடவும். இச்சாபத்தியமாக கடுகாய்லெண்ணெய் அழுத்திக்கிரை புகைபோகம் நீக்கவேண்டியது. விரைவீக்கம் காம்புரோகம் முதலானதும் தீரும்.

## மேகங்களுக்கு சித்திரமூல எண்ணெய்.

நல்லெண்ணெய் படி (௧) பசும்நெய் படி (௧) சித்திரமூல வெண்ணெய் படி (௨) பால்வார்த்தரைத்து வெண்ணெயில் கலக்கி மெழுகுபதமாய் காய்ச்சிவடித்து கரண்டிவீதம் காலையில் சாப்பிடவும். தீரும்வியாதிகளாவன மேகம், குஷ்டவாரவெடிப்பு, லிங்கபுத்து, கிரந்தி, வாய்நாற்றம், சூலை, வெடிரணங்கள் தீரும். கடுகு நல்லெண்ணெய் நீக்கவும், வாய்வு பதார்த்தங்களும் ஆகாவாம்.

---

## சகலவாய்வுக்கும் எண்ணெய்.

| | | |
|---|---|---|
| தும்மட்டிக்கா | சாறுபடி- | ௨ |
| ஆமணக்கெண்ணெய் | ” | ௨ |
| பசுங்கோமியம் | ” | ௨ |
| வெள்ளாட்டுக்கோமியம் | ” | ௧ |
| நொச்சிச்சாறு | ” | ௪ |
| பசுமஞ்சள்ச்சாறு | ” | ௪ |
| இஞ்சிச்சாறு | ” | ௪ |
| குமரிச்சாறு | ” | ௪ |

கடுக்காய் கடுகுரோகணி வாய்விளங்கம் திரிகடுகு ஏலம் இந்துப்புகல்லுப்பு நவாச்சாரம்எவாச்சாரம் அப்பளாகாரம் வால்மிளகு ஆனைத்திப்பிலி வெள்ளுள்ளி வகைக்கு களஞ்சி (௫) நிலாவிரை கண்டங்கத்திரி வெள்ளைசார்வேளை சத்திச்சாரணைக்கிழங்கு வகைக்குப் பலம் (௪) இவைகளை இடித்து நன்றாயரைத்து ஷை சாறுவகைபாகவும் ஒன்றாய்க்கூட்டி அரைத்த மருந்தை அதில்கரைத்து அடுப்பேற்றி மெழுகு பதமாய்க்காய்ச்சிவடித்து காலையில் ஒருகரண்டிவீதம் (௰)நாள் சாப்பிடவும், தீரும் வியாதிகளாவன வாய்வுகள், வாய்வுக் கட்டிகள், மகோதரம், குன்மம், தெற்பவலி, கெற்பசூலை, பிசிவு, கைகால்சூலை, சூலைக்கட்டு இவைகள் தீரும். பத்தியம் சுட்டபுளி வறுத்தவுப்பு அரைபுளி அரைவுப்பு அரைகாரம் கூட்டவும். மறுபத்தியமும் இம்மாதிரி, உப்பு முழுபங்கு சேர்க்கலாம்.

எண்ணெய்வகைபரணி.

முற்றுப்பெற்றது.

******************************

உ

தேவிசகாயம்.

ஒன்பதாவது

# தைலவகைபரணி.

## பிரம்ம ராகாசித் தைலம்.

### ஜன்னிக்கு.

இராகாசிமடல் வேண்டியது கொண்டுவந்து வாருவைக் கலில் வதைக்கி சார்பிழிந்து அந்தசார் அளவுக்கு நல்லெண் ணெய்கலந்து அடுப்பேற்றி சிறுதீயாக பெறிக்கவும் சாறும் பெண்ணெயும் ஒன்றுப்பட்டபிறகு டிக்காமல்லி அரைபலம் சிமைகிச்சிலிக்கிழங்கு அரைபலம் இரண்டும்தூளாக்கி இரக் கும்போது போட்டு யிரக்கவும், படிதைலமிருக்கும் பட்சத் தில்மேற்கண்டதினுசுகளை அறைபலம்போடலாம் (ச) நாளை க்கொருதகுதி தலைமுழுகிவந்தால் புரம்கழுத்துநோய் தலை வலி பல்ஜிஹுஜிஹுப்பு வெகுசீக்கிரம் வாங்கும். கோழிகுப்பு, யிரைச்சி, ஆட்டிரைச்சி, கத்திரிபிஞ்சு, முருங்கை, துவரை, மினகுநீர், இதுகளாகும் ஸ்னானஞ்செய்ததினம் பகல் நித்திரை, புகை, பொடி, புத்தகங்கள் வாசிப்பு, அதிகநடை கூடாது.

---

## ஜன்னிக்கு சாதாரணத் தைலம்.

ஜடாமாஞ்சில் கோஷ்டம் பூலாக்கிழங்கு தேவதாரம் செம்புராப்பட்டை கருஞ்சீரகம் கார்போகஅரிசி செண்பக மொக்கு சிறுநாகப்பூ செவியம் சிறுதேக்கு குருவேர் நன் னாரிவேர்பச்சிலை சந்தணத்தூள் கொம்பரக்கு சித்தாமுட்டி பளிங்கு சாம்ராணி கிச்சிலிக்கிழங்கு டிக்காமல்லி வகைக்கி விராகனிடை (க) நன்றுயிடித்து வஸ்திரகாயம்செய்து வைத்

துக்கொண்டு இரண்டரைபலம் நல்லெண்ணெய்க்கி (ஏ) பலம் தூள்போட்டு காய்ச்சி முழுகவும். மேல்கண்டவியாதிகள் தீரும். பத்தியமும் அப்படியே.

---

## வில்வாதித்தைலம்.

வில்வவேர் பத்துபலம் கொண்டுவந்து பஞ்சுபோல் யிடித்து (உ) படி ஜெலத்திலிட்டு கால் படியாகச் சுண்டக் காய்ச்சி வடிகட்டி யெடுத்து அதற்குச் சரிபாகமாக நல்லெண்ணெய்வார்த்து அடுப்பேற்றி சந்தனம் ஒருபலம் அரைத்துப்போட்டு கலக்கி மெழுகுபதமாய்க்காய்ச்சி முழுகிவர பித்தம் கபாலவெட்டை மேகம் தீரும், கண்குளிர்ச்சியுண்டாகும். இச்சாபத்தியம்.

---

## வெட்டிவேர்தைலம்.

புதியவெட்டிவேர் (ய) பலம் கொண்டுவந்து பஞ்சுபோல் யிடித்து இரண்டுபடி ஜெலத்தில்போட்டு கால்படியொழுமாக யிரக்கிவடித்து கால்படி நல்லெண்ணெய்விட்டு ஒருபலம் அதிமதுரம் அரைத்துப்போட்டு மெழுகுபதமாய் காய்ச்சிவடித்து தலைமுழுகிவர பீனிசம், மண்டைசூலை, கண்புகைச்சல், காதுமந்தம் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

---

## கீழாநெல்லித்தைலம்.

கீழாநெல்லி சமூலமாக பிடுங்கிவந்து யிடித்து (வ) படி சாறுபிழிந்து கால்படி நல்லெண்ணெய்விட்டு சந்தனம் அதிமதுரம்சித்தாமுட்டி வகைக்கிஒருபலம் அறைத்துப்போட்டு மெழுகுபதமாய்க் காச்சி தலைமுழுகிவா பித்தம் கைகாலெரிவு வெள்ளோக்காளம் வாயூரல் கிருகிருப்பு நீர்சுருக்கு இதுகள் நீங்கும் இச்சாபத்தியம்.

---

## மண்டைசூலைக்கு தைலம்.

நெல்லிக்காய்ச்சாறு கரிச்சாலைச்சாறு பசும்பால் வகைக்கிஆழாக்குநல்லெண்ணெய்மூன்றுழாக்கு ஒன்றாய்க்கலந்து

அதிமதுரம் ஒருபலம் அரைத்துப்போட்டு மெழுகுபதமாய் காய்ச்சி முழுகிவர மண்டைகுல் கண்ணோய் கண்ணெரிவு கண்ணீர்வடிதல் இவைநீங்கும்.

---

## கபாலசூட்டுக்கு சீரகத்தைலம்.

(உ) பலம் சீரகத்தைபிடித்து இரண்டுபடி ஆத்துஜெலத்தில்போட்டு கியாழம்வைத்து பெட்டில் ஒருபங்கா யிரக்கி அதில் ஒருபடி நல்லெண்ணெய்விட்டு கார்போகியரிசி ஒருபலம் ஷை கியாழத்தால் அரைத்து யாவும்கலந்து அடுப்பில் வைத்து மெழுகுபதமாய் காய்ச்சியிரக்கி (ச) நாள் வட்டமாக முழுகிவரவும் தீரும்வியாதிகள் உள்ளனல், வாய்வு, மேகத்தடிம்புகள், சோகை, கபாலச்சூடு, இவைகள் தீரும். இச்சாபத்தியம்.

---

## பொன்னுங்காணித் தைலம்.

பொன்னுங்காணி சமூலமாக பிடிங்கிவந்து யிடித்து உழக்குச்சாறு பிழிந்துக்கொண்டு அதில் உழக்குநல்லெண்ணெவிட்டு (க) பலம் கோஷ்டம் கொண்டுவந்துயிடித்து பசும்பால்விட்டு அரைத்து கலந்து மெழுகுபதமாய் காய்ச்சி வடித்து முழுகிவர தீரும்வியாதிகளாவன பித்தம் (சஅ) கிருகிருப்பு மண்டையிடி ஊஷ்ணங்கள் உட்சுரங்கள் கைகாலெரிவு கண்ணெரிச்சல் இதுகள் தீரும், கண்கள் குளிர்ச்சியுண்டாகும் இச்சாபத்தியம்.

---

## ஒண்டிதலைநோவுக்குத் தைலம்.

சித்திரமூலமும் கஸ்தூரிமஞ்சளும் சமயெடையாய் அரைத்து அடைதட்டி நல்லெண்ணெயை காயவைத்து அதில்போட்டு அந்தஅடை சிவக்கிறவரையில் காய்ச்சவும் அடையை திருப்பிப்போட்டு காய்ச்சி அடைவெந்து சிவந்த பிறகு யிரக்கி அந்த யெண்ணெயை தலைநோய் வருவதற்கு (ரு) மணிநேரத்திற்கு முன்னதாக தலைமுழுகவும் இப்படி நாள்விட்டு நாள் முழுகவும் பத்தியம் பருப்புதோர்வையல் ரசம் பகலில் நித்திரையாகாது.

## சுகநாததைலம்.

சுத்தமான நல்லெண்ணெய் (ஏ) படி அகத்திக்கீரை ரசம் (ஏ) படி இவ்விரண்டும்கூட்டி வெய்யலில் வைத்து மறுநாள் ஒருபலம் கோஷ்டம் பசும்பாலில் அரைத்து அதிற்கலந்து காய்ச்சிவடித்து ஸ்நானம் செய்துவரவும் மேகம் உஷ்ணம் முதலான அனல்நீங்கி மிகவும் குளிர்ச்சிதரும்.

## சாலேசுரத்தைலம்.

(சய) பலம் நல்லெண்ணெயில் நிலாவிளாயிலே விளாங்காய்ப்பிரமாணம் வில்வப்பழம் (க) பசும்பாலில் அரைத்து சீரகம் (க) பலம் முலைப்பாலி லரைத்துக்கூட்டி காய்ச்சி வடித்து ஸ்நானம்செய்து வரவும் சாலேசுரம் தீரும்.

## பித்தகோடரித்தைலம்.

நல்லெண்ணெய் பசும்பால் யிளநீர் வகைக்கி ஒருபடி ஒன்ருய்க்கூட்டி இத்துடன் அதிமதுரம் குங்குமப்பூ கோஷ்டம் ஏலம் சந்தணம் லவுங்கம் விலாமிச்சுபூண்டு ரோகணி நன்னாரி பசும்பாசி நெய்தற்கிழங்கு சடாமாஞ்சி தண்ணீர் விட்டான்கிழங்கு செண்பகப்பூ ஜாதிக்கா கோரைக்கிழங்கு புனுகு பச்சைகற்பூரம் வகைக்கி (கவ) விராகநிடை எடுத்து அம்மியில் வைத்து யிளநீர் விட்டரைத்து கலக்கி காய்ச்சி வடித்து உச்சிமுதல் உள்ளங்கால்வரையில் தேய்த்து (க) மணிநேரமுழுகவும் இப்படி (ச-ரு) வாரம் முழுகிவர நேத்திரத்தைச்சார்ந்த சகலவியாதியும் தீர்ந்து குளிர்ச்சியுண்டாம் வாய்நீரூரல் வாந்தி மயக்கம் நெஞ்செரிப்பு திரேககாந்தல் கண்புகைச்சல் யாவுந் தீரும்.

## பீனிசத்தைலம்.

நெல்லிமுள்ளி மிளகு கடுக்கா கஸ்தூரிமஞ்சள் வேப்பம் விரை இதுகள் வகைக்கி ஒருபலம் எடுத்து கையாந்தகரை சாற்றில் (ச) ஜாமமரைத்து (ய) பில்லையாகத்தட்டி வெய்யலில் காயவைத் தெடுத்துக்கொள்ளவும் ஒருபில்லையை பசும்பால்விட்டு அரைத்து தலையில்தடவி நன்ருய் தேய்த்துக் கொண்டு வெந்நீரில்ஸ்நானம்செய்யவும் இப்படி நாலுநாளைக் கொருதடவை முழுகிவரப் பீனிசம் நீங்கிவிடும் இச்சாபத்தியம்.

## திரேகநிதானத்தைலம்.

வாததேகிகளுக்கு பசம்நெய் (க) வெள்ளெண்ணெய் (உ) முத்தெண்ணெய் (ங) இந்த வெடைகளாகக்கூட்டிக்காய்ச்சி முழுகவும். பித்ததேகிகளுக்கு வெள்ளெண்ணெய் (க) முத்தெண்ணெய் (உ) நெய் (ங) இந்த வெடைகளாகக் கூட்டி காய்ச்சி முழுகிவரவும். சேத்துமதேதிகளுக்கு முத்தெண்ணெய் (க) நெய் (உ) வெள்ளெண்ணெய் (ங) இந்த வெடைகளாகக் கூட்டிக்காய்ச்சி உரவுசெய்து முழுகவும் அரப்பு சீரகம்.

## ஐங்கூட்டுத்தைலம்.

வேப்பம்வெண்ணெய்புங்கெண்ணெய் எள்ளெண்ணெய் முத்தெண்ணெய் புன்னைவெண்ணெய் இவைகளை சமமாகக் கூட்டி காய்ச்சிமுழுகிவர தனுர்வாதம் மகாவாதம் ஜன்னி பாதசுரம், தோஷங்கள் நிவர்த்தியாகும்.

## அப்பியங்க ஸ்தானவிதி.

கஸ்தூரிமஞ்சள் மிளகு கடுக்காய்த்தோல் நெல்லிப் பருப்பு இவைகளை கிரமப்பிரகாரம் காராம்பசுவின் பால் விட்டரைத்து கொதிக்கவைத்து ஒப்பற்ற சிரசில்தேய்த்து ஸ்நானஞ்செய்தால் என்னாளும் பிணிகளுக்கு கிஞ்சிற்றேனு மிடமில்லை இதுவே பஞ்சகற்பவிதியென் றறியக்கடவது.

## தைலஸ்தான காலவிதி.

சித்திரை வைகாசி மாதங்களில் சூரியன்உதயமான ஐந்து நாழிகைக்குள்ளாகவும், ஆனிஆடி மாதங்களில் எட்டு நாழிகைக் குள்ளாகவும், ஆவணி புரட்டாசி அற்பிசி கார்த்திகை மாதங்களில் நாலுநாழிகைக்குள்ளாகவும் மாசி பங்குனி மாதங்களில் மூன்று நாழிகைக்குள்ளாகவும் எவ்வித தைல ஸ்நானங்களும் செய்யப்படுவது தைலவிலக்ஷண முள்ளதாயினும் தேகசுபலக்ஷண முண்டுபண்ணும், மற்றகாலங்கள்யாவும் தைலத்திற்கு அகாலமென்றறியவும்.

தைலவகைபாணி

முற்றுப்பெற்றது.

***************************

உ

தேவிசகாயம்

பத்தாவது

# வீரியவிர்த்திவகைபரணி.

## இந்திரியகட்டுக்குச் சூரணம்.

நறுவலியின்பிஞ்சு கருவேலன்பிஞ்சு காட்டுப்பேரண்டையிலை இவைகளைத் தனித்தனியாய் நிழலிலுணர்த்தியிடித் துசூரணமாகச்செய்து அதற்குச் சரியிடையாய் சக்கரைக் கூட்டி இரவில் போஜனஞ்செய்தபிறகு திருகடிப்பிரமாணம் புசித்து ஆழாக்குபால்சாப்பிடவும் இப்படி பதினைந்துநாட் புசிக்க நீத்திருந்த இந்திரியங்கட்டும்.

## இந்திரியபுஷ்டிக்கி.

ஒருகோழிமுட்டை வெள்ளைக்கருவும், தேன், இஞ்சிரசம் பசும்நெய், வெள்ளைவெங்காயம், இவ்வைந்தும் சமயிடையாய் கூட்டி மத்தித்து சிறுலவங்கப்பட்டை விராகனிடை அரைகூட்டி புசிக்கவும் இவ்விதம் ஏழுநாளைக்கு புசிக்கும் போது ஒருபலம் நல்லெண்ணெயில் கால்தோலா குங்குமப்பூ கூட்டி யிழைத்து லிங்கத்திற்கு லேப்செய்துவரவும் அதாவது மூலாம் பூசுவதுபோல் மேலே தடவிவரவும் இந்திரியம் அதிகரிக்கும் லிங்கம் வலிவுதரும்.

## இந்திரியங்கட்ட.

பச்சை நிலப்பனங்கிழங்கு சீனம் தண்ணீர்விட்டான் கிழங்கு ஆனைநெரிஞ்சிக்காய் வகைக்கி தோலா (க) இவைகளை மைபோலரைத்து காற்படி பசும்பாலில் கலக்கிக் காய்ச்சி இரவில் புசித்தானபிறகு சாப்பிடவும் இப்படி மூன்றுநாள் கொள்ள நீத்திருந்த இந்திரியங்கட்டும்.

## இந்திரியபந்தனம்.

பிரண்டை முடிச்சிவிழுந்திருக்கிற வேரைப்பார்த்து நாயற்றுக்கிழமையில் மஞ்சள் நூலால் காப்புக்கட்டி தேங்

காப்ப் பலிகொடுத்து வேரைப்பிடிங்கி முடிச்சிபைக் கத் தரித்து கருப்பு சிகப்பு வெள்ளை இந்த மூன்றுவகை நூலினுல் குளிசமாடி அரையின் முன்பக்கமாய் கட்டிக்கொண்டு புணர்ந்தால் யிந்திரியம் விழாது மறுபடி பின்பக்கமாக தன் ளிப்புணர்ந்தால் கலிதமாகும்.

### வீரியவிர்த்திக்கு.

காலையிலெழுந்து பொன்னுங்கண்ணியிலைகளைப் பிடிங்கி வாய்கொண்டமட்டும் மென்று தின்னவும் இப்படி (சய)நாளை க்கி தின்றுவர வீரியவிர்த்தியாம்

### இந்திரியதம்பனம்.

கலிவிருத்தம்.

நிலக்காரி நிலப்பனை சர்க்கரை
ஆவின்பால் லரைத்து விழுங்கிட
மானைப்போல்விழி மங்கையர் தங்களை
ஊனிப்போடி ஓலக்கைய தருமே.

### லேபனத்திற்கு.

(மு) சங்கம்பழத்தை மெல்லியபலகையில்போட்டு பிழிந் தவருகிற ரசத்தை பீங்கானில்பிடித்து வைத்துக்கொண்டு பச்சைகற்பூரம் ஒருபணவிடை உள்ளங்கையில்வைத்து அந் தரசம் கொஞ்சம்விட்டு பிசைந்து லிங்காரம்புமீது தடவ லிங்கம் பருத்திருக்கும்.

### விந்துகலித மாகாதிருக்க.

தாழம்பூவின் உள்ளேயிருக்கும் விபூதியைபெடுத்து கோழிமுட்டை வெள்ளைக்கருவாலே பிசைந்து லிங்காரம்பு மீது பூசினுல் விந்து சீக்கிரத்தில் கலிதமாகாது.

### பீஜம் கெட்டிப்பட.

எட்டிக்கொட்டை அமுக்கனுங்கிழங்கு வசம்பு சம னிடையாகபெடுத்து பசும்பால் விட்டரைத்து லிங்காரம்பு மீது ஒருவாரம் தேய்த்துவர கெட்டிப்படும் பிருத்த வலிவு கொள்ளும்.

### இதுவும் லேபன தைலம்.

தித்திப்பு மாதளம்பழத்தோல் (ச) பலம்பெடுத்து கால் படிஜலத்தில் வேகவைத்து (ச) பலம் பொழுமாக வடித்து

எள்ளெண்ணெய் (உ) பலம் லவுங்கப்பட்டை சிறுநாகப்பூ சாதிக்காய் விரை வெங்காயவிரை அக்கராகாரம் கோஷ்டம் வெள்ளைக் காப்பூ பூர்க்கும் அலரிவேர்பட்டை செப்புப்பூவின் அலரி வேர்பட்டை வகைக்கு தோலா (ரு) வெடுத்திடித்து வஸ்திரகாயஞ்செய்து அரைத்து ஷை யெல்லாம் எண்ணெய் பாவும் ஒன்றாக்கலந்து காய்ச்சி யிறக்கி வைத்துக் கொண்டு (யசு) நாளைக்கி தினம் லிங்கத்தின்மீது தடவிவர சோர்வைநீக்கி மிக்கவலிவுதரும்.

## இதுவுமது.

அக்கராகாரம் மருதோன்றிவிரை அபினி சமனிடையாக வெடுத்து தேனில் அரைத்து (யசு) நாள் லிங்கத்தின் மீது தடவிவர நீண்டு கெட்டிப்படும்.

## வீரியவிர்த்திக்கு.

ஜாதிக்கா அபினி காம்ப்பூ லவுங்கம்வகைக்கு (கவ) விராகனிடையாக எடுத்தரைத்து ஒரு ஆட்டுக்குருவின் வயற்றைக்கிழி குடல்முதலான அசுத்தங்களைநீக்கி அதனுள்வைத்து நூலினால்தைத்து அதற்குப்போதுமான நெய்யில்போட்டு பொரித்துவெடுத்து வெறும்புபோக்கி மெழுகுபோலரைத்து கெச்சக்காய்ப்பிரமாணம் சாப்பிட்டு உடனே ஆழாக்கு பால்சாப்பிடவும் இப்படி (சுய) நாள் சாப்பிட வீரியவிர்த்தியும் திரேகவலிவும் கொடுக்கும்.

## இதுவுமது.

தென்னம்பாளை இளசிபாகக் கொண்டுவந்து அதனுள்ளிருக்குங் கொழுந்து அரிசிகளில் ஒருபிடி வெடுத்து பசும்பால் விட்டரைத்து எலுமிச்சங்காய்ப் பிரமாணம் சாப்பிடவும் இப்படி காலை மாலை இரண்டுவேளையும் (சுய) நாள் சாப்பிட வீரியவிர்த்தியும் தாதுவலிவுபடும் இரவில் புசித்தவுடன் ஆழாக்கு பால்சாப்பிடவும் இதுவரையில் ஸ்திரிபோகங் கூடாது.

## வீரியவிர்த்திலேகியம்.

ஜாதிக்கா, சாரப்பருப்பு, பாதிமிபருப்பு, காமப்பூ, மாவுசுக்கு, தேத்தான்கொட்டை, முருங்கைப்பிசின், முருங்கைப்பூ, வகைக்கு உ௦-விராகனிடையாக வெடுத்து ஒரு கோழிமுட்டை வெள்ளைக்கருவினால் மெழுகுபோலரைத்

துரைருபலம் நெய்யில்போட்டு அரைபலம் சற்கரைகூட்டி அடுப்பேற்றி லேகியம்போற்கிண்டி கெச்சக்காய்பிரமாணம் இருவேளை சாப்பிடவும் இப்படி (உய) நாள் அதுவரையிலும் ஸ்ரீசம்பந்தங்கூடாது.

## இருதயவலிவிற்கு.

சிறுலவங்கப்பட்டை சிகப்புநிறமான காவிசந்தனத் தூள் வகைக்கு விராகனிடை (க) தூள்செய்து வெள்ளைசற் கரை (சு) விராகனிடையில் கூட்டி புசிக்கவும்.

## இதுவுமது.

(ஞ) எலுமிச்சம்பழ ரசத்தில் குலாப்புத்தூள் சந்தனத் தூள் ஜாதிக்காதூள் வகைக்கு தோலா (க) காவிக்கல் விராக னிடை (க) கூட்டி வைத்துக்கொண்டு வேளைக்கு தோலா வீதம் புசிக்கவும்.

## இதுவுமது.

சந்தனத்தூள் பலம்-உ, சுக்கு பலம்-உ, காசினிவிரை பலம்-க, சீரகம் பலம்-க, இவைகளை கல்வத்தில் அரைத்து பில்லை பில்லையாக செய்துணர்த்தி வேளைக்கு ஒரு தோலா வீதம் கொடுத்து வுடனே பன்னீராகிலும் நெல்ல ஜெலமாகி லும் ஒருரூபாயிடை சாப்பிடவும்.

## இதுவுமது.

இலவங்கோர்ந்து, சுக்கு, ஏலரிசி, சோம்பு, அதிமதுரம் சந்தனம், வில்வசதை, ரோஜாப்பூ, வகைக்கு தோலா-க, தனி யாபலம்-சு, சிறுகற்கண்டு பலம்-உ, இவைகளை சூரணஞ் செய்து முன்னுக கற்கண்டை அடுப்பேற்றி ஜெலம் கொஞ் சம்விட்டு பாகுசெய்து அதில் சூரணங்களைக் கொட்டிப் பாகமாய்க்கிளரி வேளைக்கு தோலாவீதம் சாப்பிடவும்.

## சாரீரம் நன்ருக.

சுக்கு கடுக்கா திப்பிலி வாலுளுவைபரிசி சமனுக சேர்த்து தேனிலரைத்து தூதுவங்காய்ப் பிரமாணம் சாப் பிட்டு உடனே ஆழாக்குபால் சாப்பிடவும்.

## வீரியவிர்த்திவகைபரணி.

முற்றுப்பெற்றது.



உ

தேவிசகாயம்.

# பதினோராவது

# கண்டாவிழ்தபரணி.

## ஆரோக்கியகலிக்கம்.

தும்பைப்பூ-ா களாப்பூ-ா, மிளகு பலம்-க, மிளகைமாத்திரம் ஒன்றிரண்டாய் தட்டி இந்தமூன்றுதினுசும்கால்படி நல்லெண்ணெயில் போட்டு ஒரு புட்டியிலூற்றி கார்க்கு அடைத்து பூமியில் (ஐ) கெஜ ஆழத்தில் குழிவெட்டி புதைத்து சய-நாள் பொருத்தெடுத்துக்கொண்டு வெள்ளிக் கம்பியினல் தொட்டு கலிக்கம் போல காலையில் தீட்டி வந்தால் சூடு, கண்ணெரிச்சல் காரிகம், நீங்கிவிடும், கண்குளிர்ச்சியாயிருக்கும் வெகுஆரோக்கியங் கொடுக்கும்.

## நேத்திரபேதி.

ஈனுபெருமைப்பாலில் சித்தாமணக்கு பருப்பையிழைத்துத்தீட்டினல் மறுநாள் வரையில் கண்களில் பீளை சாறும் நேத்திரங்கள் பரிசுத்தமாயிருக்கும்.

## அந்திமாலைக்கி.

கிருஷ்ண துளசியிலைரசம் இரண்டு துளியாக நேத்திரத்தில் விடவும் இப்படி மூன்றுநாளைக்கிகாலையில்விட குணப்படும்.

## நேத்திரசுத்திகம்பி.

காரீயத்தை திருப்பலாதி பொழுதிலும் மழை நீராலும் கரிச்சாலை ரசத்தாலும் பசும் நெய்யிலும் தேனிலுந் தனித்தனியாக வுருக்கியூற்றி ச-அங்குல நிகளத்தில் கம்பி போல்நீட்டிவைத்துக்கொண்டு காலையில் எழுந்தவுடனே கண்களில் தீட்டிவந்தால்நேத்திர ரோகங்கள் வாராதிருக்கும்.

## தூர்மாமிச வளர்த்திக்கு.

பத்து கெஞ்சாவிரையை ஊசியில்குத்தி தீபத்தில்காட்டிகருக்கி வெண்ணெயில்குழைத்து கண்களில் தீட்டிவரவும்.

## காதுசீழுக்கு.

மனேசிலை, தாளகம், செங்கொட்டை, வகைக்கி விராகனிடை-க, வாங்கி தூளாகயிடித்து மூன்றுபலம் நல்லெண்ணெயில்போட்டு வெள்ளாட்டு நீர் ஆழாக்குவிட்டு பதமாய்க் காய்ச்சி வைத்துக் கொண்டு

காதுக்கு மூன்றுவேளைவிட தீரும்.

**இதுவுமது.**

வில்வப்பழஞ்சதையைநல்லெண்ணெயில் போட்டுவேகவைத்து காதில்விட தீரும்.

**காதுசீழ்க்குத்தலுக்கு.**

பருத்திபிஞ்சுகாயும் எருக்கன் பிஞ்சுகாயும் வெதுப்பிச் சார்பிழிந்து காதில்விடவும்.

**காதுசீழ்வேதனைக்கு.**

இந்துப்புசுக்குஎண்ணெயில் விட்டுகாய்ச்சி காதில் விடவும் தீரும். அல்லது,

பெருங்காயம் முள்ளிவேர் முருங்கைவேர் யிலைகள்ளியிலை சமனுபெடுத்து அரைத்து நல்லெண்ணெயில் காய்ச்சிகாதில்விடவும். அல்லது.

வெள்ளைப்பூண்டு முருங்கைவேர்பட்டை எருக்கம்பூ கள்ளிப்பால் வகைக்கு விராகனிடை-க, நண்டு-க, இவைகளை சிதைத்து-வ,படி வேப்பெண்ணெயில் போட்டு காய்ச்சிவிடவும்.

**காதிரைச்சலுக்கு.**

தைவேளைச்சாறு நல்லெண்ணெயும் சமமாய்கூட்டி காய்ச்சி காதில்விடவும்.

**காதில் சதைவளர்ந்திச்சு.**

(க) பலம் நல்லெண்ணெயில் ஒரு கரப்பான் பூச்சியைப் போட்டு காய்ச்சிவிடவும்.

**காதுபொங்குதல் சீழ்.**

ஒரு பலகாரையை அடுப்பில் நன்றாய் சுட்டு யிடித்து தூளாக்கி ஒருசிட்டிகைகாதில் போட்டு எலுமிச்சம்பழரசம் கொஞ்சம் பிழியவும்.

**நீர்சுருக்கிற்கு.**

முள்ளங்கி கிழங்கை யிடித்து சார்பிழிந்து வெள்ளைச்சக்கரை கலந்து சாப்பிடவும்,

**இதுவுமது.**

காசினிவிரை வெள்ளரிவிரை துளசிவிரை புரசுவிரை வினாம் பிசின் வால்மிளகு வகைக்கி (உ) பலம் பெடுத்து சூரணமாக்கிசம்விடை பனங்கற்கண்டுசேர்த்து ஆழாக்கு பசும்பாலில்கலந்து காலையில் சாப்பிட நீர்சுருக்குவெள்ளையும் நீங்கும்.

**நீரடைப்பிற்கு.**

வால்மிளகுவிராகனிடை(உ) யிடித்துவஸ்திரகாயம்செய்து தண்ணீர் பலம்(ய)ல் கரைத்து ஒருநாளைக்கி (ச) திரம் கொடுக்கவும்.

**ஆசனகடுப்பிற்கு.**

கால்படி பசும்பாலில் (ரு) எலுமிச்சம்பழம்பிழிந்துசிறுகுச்சியினால் கடைவதுபோல் சிலுப்பி தெளிய வைத்தால் மேலே தெளிவான ஜெலம் நிற்கும் அந்தபிறத்துக்குடி

த்தால் உடனே ஆசனகடுப்பு நிற்கும்.

## வெள்ளைக்கு.

லவுங்கப்பட்டை ஏலரிசி ஜாதிக்கா ஜாபத்திரி வெள்ளை மிளகு வகைக்கு விராகனிடை அரை, பூரம்விராகனிடை-க, விளக்கெண்ணை பத்துபலத்தில் அறைத்துப்போட்டு காய்ச்சி வேளைக்குஒருகரண்டிவீதம் ஏழுநாள் சாப்பிடவும்.

## நீராதவெள்ளைக்கு.

வெள்ளைக்குங்கிலியம் பொடிசெய்து ஆத்து ஜெலத்தில் போட்டு கொதிக்கவைத்து யெடுத்து இப்படி எழுதருதி கொதிக்கவைத்தெடுத்து அந்தயிடைக்கிஇரண்டிடை சீனி கற்கண்டு தூள்சேர்த்து அந்திசந்தி திருகடிப்பிரமாணம் கொடுக்கவும். இச்சாபத்தியம்.

## புதுவெள்ளைக்கு.

பழம்பாசி யிலையையும் சீரகமும் அறைத்து எருமை தயிரிற்கலந்து(ந) நாள்கொடுக்கவும் இச்சாபத்தியம்.

## இதுவும்வெள்ளைக்கு.

பச்சைமுளகாயிலைஒருபிடி யெடுத்து(சு) மிளகுயெண்ணி வைத்து அறைத்து தயிரில் கலந்து காலையில் (ந) நாள் கொடுக்கவும் இச்சாபத்தியம்.

## இதுவுமது.

பிச்சங்கான்யிலைகீழாநெல்லியிலை பழம்பாசியிலை மூன்றும் சமயிடையாய்சேர்த்து அரைத்து எலுமிச்சங்கா யளவு எடுத்து அத்துடன் பொங்க வைத்து படிகாரத்தூள் திருகடிபிரமாணம் சேர்த்து தயிரில் கலந்து காலையில் சாப்பிடவும் கடும்பத்தியம் இப்படி மூன்றுநாள் சாப்பிட்டு மறுபத்தியம்(ரு)நாள் ஆனபிறகு ஓமம்தேய்த்துதலைமுழுகவும்.

## இரத்தவெள்ளைக்கு.

நெச்சக்காயிலைரசம் பலம்(உ) தயிரிற்கலந்துக் கொடுக்கவும் ஒருபலம் சிறுலவங்கப்பட்டையைக்கியாழும் வைத்து அந்தியில்கொடுக்கவும் கடும்பத்தியம் இப்படி (ந) நாள் கொடுக்கவும்.

## மேகந்தீர.

சிந்துப்பு மூங்கிலுப்பு ஏலக்கா கற்கண்டுகூட்டி அரைத்து சுண்டக்காய்பிரமாணம் கொடுக்கவும்.

## கொருக்கிற்கு.

லிங்கம், பூரம், முதார்சிங்கு படிகாரம், படிகாரத்தைமாத்திரம் நெருப்பிலிட்டு பொங்க வைத்துநன்றாய்பூர்த்தபின் யெடுத்து(ச)திருசும் ஓரிடையாய்நிறுத்துமைபோல்தூளாக்கி கொஞ்சம் வெண்ணெய்யிட்டு மெழுகுபோல்குழைத்து டப்பியில் வைத்துக்கொண்டு லிங்கத்தின் மேல்வரும் மேக

ரிணத்திற்கு சுவர்லெட்டு நீரி ினல் கழுவி துடைத்துவிட்டு இந்தமுலாமைத் தடவமூன்று வேளையில் உலரும்,

{ ஆராத ரிணங்களுக்கு களிம்பு }

| | | |
|---|---|---|
| துருசு | விராகனிடை | ௫ |
| முதார்சிங்கு | ,, | ௧௦ |
| மொழுக்கு | ,, | ௧௨ |
| வெள்ளைக்குங்கிலியம் | | ௬ |
| தலைமண்டையோடு | | ௧ |
| நல்லெண்ணை | பலம் | ௫ |

ஒருபெருஞ்சட்டியில் எண்ணையை வூற்றி மெழுகைப் போட்டு காச்சி உருகினவுடன்மற்றமருந்துகளைப் பொடித்து தூள்செய்து போட்டு காய்ச்சி ஒரு பெருஞ்சட்டியில் தண்ணீர்விட்டு அதில் காய்ச்சிய மருந்தை சாய்த்து கையால்பிசைந்தால் வெண்ணைபோல் வரும் அதைஎடுத்துக்கொண்டு சீலையில்தடவி கொருக்கு குழிப்புண் மேகரிணம் இதுகட்குப் போட மூன்றுவேளையில் தீரும்.

மேகசூட்டுக்கு சாந்தி.

துத்தியிலையை கியாழம் வைத்திருந்து பாலுஞ் சர்க்கரையுங் கலந்து சாப்பிட்டு வரவும் சாந்தமாயிருக்கும்.

நீர் கடுப்புக்கு.

துத்திவேர் பலம் (௩)திராட்சி பலம் (௧௦) நல்ல ஜெலத்தில் கியாழமிட்டு சாப்பிட்டு வரவும்.

மலச்சிக்கலுக்கு.

துத்தியிலை சிறுபயறுவெங்காயம் சமமாய்ச் சேர்த்துச் சமைத்துசாப்பிடகுணமாகும்

மலம் உதைய.

சரக்கொன்னைபூ, புளி, சர்க்கரை, உப்பு, மிளகாய், கூட்டி துவையல் செய்து சாப்பிட மலம் உதயமாகும்.

வயறு கடுப்பிற்கு.

ஆலம் விழுதை எருமைத் தயிரிலரைத்து எலுமிச்சம் பழரசம் ஒரு பலங்கூட்டி பிசைந்து சாப்பிடவும்.

வாய்வேக்காட்டுக்கு.

மருதனி யிலையை கியாழம் வைத்திருந்துக் கொப்பளிக்க நீங்கும்.

இதுவுமது.

அவுத்திக்கீரைகொழுந்தை பரித்து வாய்கொண்ட மட்டுங் காலைவேளையில் மென்று தின்ன மூன்றுநாளில் தீரும்.

இதுவுமது.

மணத்தக்காளி யிலையை சிறுபயர் போட்டு சமைத்துச் சாப்பிட நீங்கும்.

இதுவுமது.

விளாயிலை, செம்பருத்தியிலை, வில்வயிலை, துத்தியிலை, கீழாநெல்லியிலை, வெந்தியம், வெங்காயம் இவைகளை வகைக்கு ஒவ்வொரு பிடியெடுத்து உரலில் இடித்து அரைப்படிஜெலத்தில் கியாழ

மிட்டு கால்படியாக பிரக்கி 3-வேளை கொப்பளிக்கவும்.

கைகால் குடைச்சலுக்கு.

பூமிசர்க்கரைக்கிழங்கை நல்ல ஜலத்திலரைத்து பூசிவரவும்.

இதுவுமது

மருதணி பூவை நல்லெண்ணை யில்காய்ச்சி பூசியும்வரலாம்.

இதுவுமது

நல்லெண்ணெய் எருக்கன்பால் புளியிலைரசம் நொச்சிரசம் வெள்ளாட்டுப்பால் வகைக்குசேர் (௨) அபினி தோலா (௨) இவைகளை ஒன்றுக்கி காய்ச்சிவடித்து (௩) நாள் தடவதீரும்.

வெட்டு காயத்தின் உதிர பெருக்கு நிற்க

மாசிக்காய்களை சுட்டு அதின்சாம்பல்களை தளமாய் வைத்தழுத்த உதிரப் பெருக்கு நிற்கும்.

வெட்டு காயம் அடிகள் ரிணங்களுக்கு

பேன்கொட்டை(க)ரசகற்பூரம் பலம் (௨) ஏலரிசிபுலம் (வ)இவைகளைவாங்கி தேங்காயெண்ணெயி லரைத்துகலக்கி வெய்யலில் வைத்து யெடுத்து தடவி சீலைபோடவும் ஈ யெரும்பு மொய்க்காது வாசனையாக யிருக்கும்.

சொரிசிரங்கு.

சுத்தி செய்த கெந்தகம் பலம் வீசம் ரசம்வீசம் நீரடிமுத்து வீசம் பலம், இம்மூன்றும் ஊமத்தங்காயைக் கீறி உள்ளே வைத்து (சு) வரட்டியில் புடம்வைத் தெடுத்து அந்தகாயுடன் எருமைவெண்ணெய்வைத்தரைத்து காலையில் பழயது சாப்பிட்ட பிறகு தேகத்தில் பூசிக்கொண்டு (௨) மணிக்கு பிறுப்பை புண்ணுக்குசுட்டு அறைத்து குளிக்கவும் ஒருநாளையில் தீரும்

சகலபடைகளுக்கும்.

ரோஜனம்பலம்(கஉ)குழாகெந்தகம் பலம்(௨)வெண்காரம் பலம் (ஞ) சிறுகற்கண்டு பலம் அரிக்கால், இவைகளை வெள்ளாட்டுப்பாலிலரைத்து பில்லை தட்டி வைத்துக்கொள்ளவும் எவ்விதபடைகளுக்கும் நல்ல ஜலத்தில் இழைத்துத் தடவ உதிரும் பிறகு எண்ணெய் சாப்பிட்டால்தான் உள் வியாதிகள் அரும்.

இரப்பு இருமலுக்கு

இஞ்சிச்சார் ஈரவெங்காயச்சார் யெலுமிச்சம் பழச்சார் இவை மூன்றும் சமனாகச்சேர்த்து மூன்றுநாட் கொடுக்கத் தீரும் இச்சாபத்தியம்.

கோழையிருமலுக்கு

கோழையிருமலுடன் கபங் கட்டியிருந்தால் (ரு) பலந்தேனைகாய்ச்சி சுடுகையில்தானே மிளகுதூள் தோலா (க) பொரித்தவெண்காரம் தோலா(க) இதுகளை கலக்கி வேளைக்கு(க) தோலாவீதங் கொடுக்கதீரும்

### புகை இருமலுக்கு.

சுக்கு திப்பிலி மிளகு மூன்றும் சமயிடையா யெடுத்து மைபோலரைத்து மெல்லிய சிலையில் வஸ்திரகாயஞ்செய்து அந்த யிடைக்கி வெள்ளை சற்கரையில் இரண்டாந்தர மாகிய பூரா சர்க்கரைச்சேர்த்து புட்டியில் வைத்துக்கொண்டு வேண்டியபோது திருகடிப் பிரமாணமெடுத்து பசுநெய் யில் குழைத்து சாப்பிட மூன்று வேளையில் தீரும்.

### இதுவுமது

திப்பிலியை அரைத்து வஸ்திரகாயஞ் செய்து தேனில் குழைத்துச் சாப்பிட புகை யிருமல் தீரும்.

### மார்கபத்திற்கு.

நரிவெங்காயம் காலேவீசம் விராகனிடை. சுக்குத்தூள் (க) விராகனிடை சப்பு (க) விராகனிடை சமனுபகம் அரைபே அரிக்கால்விராகனிடைஇதை கற்கண்கிபாகில் சேர்த்தரைத்து (உ) குன்றியிடை மாத்திரை செய்து (ங) மாத்திரை வரையில் கொடுக்கலாம்.

### இருமலுக்கு வாயில் அடக்கமருந்து

அதிமதுரம், பொரித்த வெண்காரம், வெள்ளை மிளகு வகைக்கி தொலாம் (க) கல்வத்தில் இட்டு கத்தாழைச் சோர் விட்டரைத்து மிளகுப் பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுணர்த்தி வாயில் (உ) மாத்திரை அடக்கி உமிழ்நீர் முழுங்கவும்.

### இரைப்பு வியாதிக்கு.

ஊமத்தன்வேர் நிழலிலுலர்த்தி புகை பிடிக்க மார் பின்னுரையை யறுக்கும்.

### இரத்தங்கட்டிய வீக்கத்திற்கு.

வேப்பிலையையரைத்து சட்டியில் களிரிக்கட்டவும்

### சிறுவர்வயிற்றுப்பூச்சிக்கு

பப்பாய்க்காய்ப்பால் விராகனிடை (க) முதல் (ரு) விராகனிடை வரையில் வென்னீர் அல்லது பசும்பாலில்கொடுத்து (ரு) மணிநேரம்பொருந்து ஆமணக்கெண்ணெய் ஒரு கரண்டி கொடுக்கவும்.

### குழந்தைகள்வயிற்றுபூச்சிவிழ

புரசம் விரையை அரைத்து பால், நெய், சற்கரை சேர்த்து லேகியமாய்க் களிரி கழற்சிக் காய்வீதம் கொடுக்கலாம்.

### பெரியவர்களுக்கு வயிற்றுப்பூச்சி விழ.

நெல்லில் வேகித் தெடுத்த தேங்காயுடன் ஏலக்கா அரிசி பலம்-க, தோல் நீக்கிய புரசம் விரை பலம்-க, இரண்டுங் கூட்டி அரைத்து கழற்சிக் காய்ப் பிரமாணம் யெடுத்து சற்க்கரையில்வைத்து சாப்பிட கிருமிகள்விழும்.

### இதுவுமது வயிற்றுகிருமிவிழ.

வாளப் பருப்பு, சாரைப் பருப்பு, கஸ்தூரி மஞ்சள்,

பாதம் பருப்பு வகைக்கு ஒரு பலம் கூட்டி அரைத்து துணியில் முடிந்து ஜலத்தின்மீது தொலாந்திரம்கட்டியெரித்து அதில் வரும் எண்ணெயைப் பிழிந்து (க) துளி அல்லது (உ) துளிகள் கொஞ்சம் சற்கரையில்விட்டுகொடுக்கபேதியுடன் நாக்கு பூச்சிகள்விழும்.

{ புண்களில் அல்லது ரிணங்களி லிருக்கும் கிருமிகள் வெளிப்பட }

அசரை என்னும் மீனை அரைத்துக் கட்டினால் கிருமிகள் விழும், அல்லது மூங்கில் குருத்தை யரைத்து கட்டினாலும் விழும், அல்லது கற்பூரத்தை யெருக்கன்பாலால் அரைத்து தடவி குதிரை லத்தையை புகைகாட்டினால் கிருமிகள் விழும் அல்லது நண்டுவளைகளிலுள்ள களிமண்ணை பூசிவைத்தாலும் கிருமிகள் ரிணத்தை விட்டு வெளியாய் விழும்பிறகு வேப்பம்பட்டை கியாழத்தால் கழுவவும்.

{ காக்கை வலிக்கும் விக்கலுக்கும். }

கற்பூரம்குன்றி (க) பெருங்காயம் குன்றி (உ) சாராயம் துளி (சு) வேலன் கோந்துயிளகில் அரைத்து (௲) மாத்திரைசெய்து நாளைக்கொரு தினம் (௩) மாத்திரை கொடுக்கவும்.

வாய்வுயிடுப்பு வலிக்கு கற்பூரத்தை சாராயத்தில் அரைத்து தேய்க்கவும்.

கீல்வாய்விற்கு

கற்பூரம் விராகனிடை (ச) சாராயம் துளி (௰௫) எள்ளெண்ணெய் பலம் (உ௫) இதில் அரைத்து தடவவும்.

தாகமடங்க.

சுட்ட ரொட்டி ஜலத்தில் இட்டு அடுப்புக்கரியின் தூள் கொஞ்சம் போட்டு காச்சி கொடுக்கவும்,

புதிய மூலநோய்க்கு.

கஞ்சாயிலை ஒருபிடி மஞ்சள்தூள் விராகனிடை (உ) எள்ளெண்ணெய் விராகனிடை (உ) இவைகளைக் கூட்டியரைத்து தடவவும்.

{ சாதம் ஏற்கவும். தேக வலிவிற்கும். }

நில வேம்பு விராகனிடை (ச) கிச்சிலிதோல் விராகனிடை (க) தனியாவிராகனிடை (௫) சாராயம் விராகனிடை (௩உ) (௰௩) பலம் வெந்நீர் கூட்டி இரண்டு நாழிசென்று வடிக்கட்டி வேளைக்கி (அ) விராகனிடையாக இரண்டு வேளை சாப்பிடவும்.

பேதிக்கி.

சந்திரமல்லி வேர் யென்னும்பேதிக் கிழங்கு (க) விராகனிடை திராட்சிஉப்பு (உ) விராகனிடை கூட்டி (க) விராகனிடை கொடுக்கவும்.

### இதுவுமது

அதிமதுரம் விராகனிடை (௲உ) திராட்சி உப்பு விராகனிடை (அ) கியாழம் வைத்து கொடுக்க பேதியாம் தாக மடங்கும்

### இதுவுமது

கிலாவிரை விராகனிடை (ச) தனியா விராகனிடை (க) கியாழம் வடித்து திராட்சி உப்பு விராகனிடை (௨) கூட்டி கொடுக்கவும்.

### விரைவீக்கத்திற்கு கணு நோய்களுக்கு

நொச்சிலை வேசவைத்துக் கட்ட குணப்படும்

### காதுநோய் அல்லது மந்தத்திற்கு.

வெள்ளைப்பூண்டை பஞ்சு போல்பிடித்து சீலையில் கட்டி தீபத்தில்காட்டி அந்த தயிலத்தை ௲-ச-துளிகள் பிழிபவும்.

### கிராணிக்கு.

எலுமிச்சம் பழத்தை நாலு பிளவாய்ப்பிளந்து அரைவிராகனிடை அபினியை வைத்து நூலால் கட்டி சாணி குகையில் வைத்து புடம் போடவும் வெந்தபிறகெடுத்து (ச) நாளைக்கி நாலுபிளவு சாப்பிடவும்.

### இரத்தகிராணிக்கு

முள்ளிலவம்பிசினியை தயிரிலரைத்து 3-நாள் காலையில் சாப்பிட்டுவர நிவர்த்தியாம்.

### பசிதீபனமுண்டாக.

ஓமம் பலம் (க) குரோசானி ஓமம் பலம் (க) நாகடுகு பலம் (க) தூள்செய்து ௬௦-பலம் பனவெல்லத்திற் பிசைந்து புன்கங்கொட்டைப் பிரமாணம் பொசிக்கவும்.

### (பல்லில் ரத்தம் விழுதலுக்கு.)

கடுக்காய் சுக்கு காசிக் கட்டிஇந்துப்பு இதுகளை சமனாய் பொடிபண்ணி பல்லில்தேய்க்க ரத்தம் நிற்கும்.

### இதுவுமது

பல்நோய் பல்லசைவு இதற்கு ஒரு கலசத்தில் உப்பிட்டு அதுநிறைய பெருக்கம்பால் தளும்பவிட்டு மேல்கவசம் மூடி மண்சீலைசெய்து பெட்டு வரட்டியில் புடம் வைத்தெடுத்து பொடித்து வலியெடுக்கும் பல்லில் தேய்க்க மூன்று வேளையில் நிற்கும்.

### பல்வலிவிற்கு சாதாரண பொடி.

பொன்னுங்கொட்டைஉப்பு சமனாய்தூக்கி பொன் வரலாய் வருத்து பொடித்துவைத்துக்கொண்டு நிதம் பல்துலக்கிவர பல்ஆடாது பல்நோய் வராது பல்லில் பீருகட்டாது புழுசேராது ஆயுசு மட்டும் பல் விழாது.

### பல்நோய்க்கு

கோப்பளிக்க கியாழம்

வேப்பம் பட்டை வேலம் பட்டை ஆவாரம்பட்டை கடு

க்காய் காசுக்கட்டி களிப்பாக்கு இதுகள் வகைக்கி (வ)பலம் கொண்டுவந்து யிடித்து (கற)படி தண்ணியில் கலக்கி உழக்கு கியாழமாக யிரக்கி வாயில்வார்த்து கொப்பளிக்க தந்தநோய்தீரும்.

## பல்நோய்க்குதேய்க்க மருந்து.

சுக்கு கடுக்காய் நாயுருவி வேர்ப்பட்டை இதுகள் சமன் கூட்டிவருத்து பொடிசெய்து பல்தேய்த்துவர பல் நோய் பல்அசைவுதீரும் பல்லுறுதி யுண்டாகும்.

## இதுவுமது.

இந்துப்பு சுக்கு இவை ரெண்டும் பொடிசெய்து பல்தேய்த்துவர பல்நோய்தீரும்.

## மாதவிடாயுண்டாக.

மாவிலிங்கம்பட்டை உள்ளிமிளகு இவை சமனகஅரைத்தவிழுது கொட்டைப் பாக்களவு மூண்றுநாள் கொடுக்க மாதவிடாய்வரும்.

## இதுவுமது.

ரசகற்பூரம் விராக னிடைக்) யேழுநாள் முலைப்பாலில் ஊரவைத்து எடுத்து ஒருபிடி வேப்பங் கொழுந்து வைத்து அரைத்து யிஅ.உண்டையாய் செய்து இரண்டுவேளையும்(கூ) நாள் சாப்பிட மாதவிடாய் வரும் கோழிக்கரி ஆட்டுக்கரி உப்புக்கண்டம் ஆகும், புளி தள்ளவும் வென்னீர் பரிமாரவும்.

## தோளாதபெண்களுக்கு.

கொட்டிக்கிழங்கு மேலேயிருக்கும் மயிரெல்லாம் போக்கிநெகிழ அரைத்துசுண்ணம்புகூட மத்தித்து சாயங்காலம் தொப்புளில் தடவவும்.

---

# முதற்காண்டம்.

## முற்றுப்பெற்றது.



---

இனியிருக்கும் கண்டாவிழ்தமான உத்தமமுறைகளை இரண்டாங்காண்டத்தில் வெளியிட்டிருக்கிறோம்.

உ

தேவிசகாயம்.

---

உட்கொண்ட ஆகாரங்கள்

# சீரணகால நாழிகை.

| | |
|---|---|
| பால்கூடிய அன்னம்-தேன்-பச்சரிசி-நல்ல வெல்லம் மா-பொரியுண்டை-மினகோதனம்-பால்கலந்தாவது இடை யிடை அடுத்தாவது புசிக்கில், | ௨௰-நாழிகை |
| நீர் அன்னம் | ௰௮-நாழிகை |
| தயிர் அன்னம் வெண்ணெய்கூடிய அன்னம் சூரணம் தைலம் லேகியம் கிருதம் | ௰௨-நாழிகை |
| கத்தரிக்காய் முதலிய காய்கறிகள் | ௮-நாழிகை |
| அருந்தும்பதமாய் ஆரியஜெலம் | ௯-நாழிகை |
| முக்கால்கூறு சுண்டியஜலம் கிபாழம் | ௭௨-நாழிகை |
| விருட்சம் செடி கொடி இவற்றிலுண்டாகும் பூ தளிர்-இதுகூடிய துவயல், உயர்ந்த பழவர்க்கங்கள் கருணை பிளகருணை சேனைக்கருணை முதலிய கிழங்குதினுசுகள் வித்துக்கள் கனிகள் பருப்புவகை | ௭௨-நாழிகை |
| அருசுவை பதார்த்தங்களெல்லாம் | ௭-நாழிகை |
| கனிகளால் பிழியப்பட்டரசம் கஞ்சிவகை சற்கரை-பாணகம்-வருத்தமாவைகரைத்தருந்தல் | ௭-நாழிகை |
| அரைத்தமருந்துகள் ஜெயநீர் காய்ந்தநீர் | ௬-நாழிகை |
| கழுநீர் காடிநீர் குளுநீர் யிளநீர் சாராயம் | ௫-நாழிகை |
| தயிரன்னம்-மோரன்னம்புசித்து தண்ணீர்குடித்த | ௪-நாழிகை |
| பஸ்பங்கள் | ௧௫-நாழிகை |

அகஸ்தியமுனிவர் கூறிய

ஆயுள்வேதவா ரென்றறிக.

---

௨

தேவிசகாயம்.

---

## அளவை அல்லது

# இடைகளின் விவரம் கூறியது.

---

| | | |
|---|---|---|
| ௫⅓ | -குன்றியிடைகொண்டது | ௧-பணவிடை |
| ௯ | பணவிடைகொண்டது | ௧-விராகனிடை |
| ௧¼ | விராகனிடைகொண்டது | ௧-களஞ்சி |
| ௰ | விராகனிடைகொண்டது | ௧-பலம், |
| ௧ | ரூபாயிடைகொண்டது | ௧-தோலா |
| ௮ | பலம்கொண்டது | ௧-சேர் |
| ௰௫ | பலம்கொண்டது ௧ பவுன், அல்லது | ௧-ராத்தல் |
| ௨௪ | பலம்கொண்டது | ௧-பக்காசேர் |
| ௪௰ | குண்டுமணிகொண்டது | ௧-களஞ்சி |
| | கிரையின் என்பது | ½-குன்றி |
| | ஸ்குரூபல் என்பது | ௰-குன்றி |
| | டிராம்பென்பது | ௫௨-குன்றி |
| | அவுன்சு என்பது | ௮-விராகனிடை |
| | திருகடி என்பது | ௫-விராகனிடை |
| | பயின்டு என்பது | ௱௯௰-விராகனிடை |
| | காலன் என்பது | ௱௨௮-பலம் |

---

உ

வயித்தியரை வேண்டாமல் தாங்களே செய்துக்
கொள்ளத்தகுந்த கோஷாயிசுவாமிகள்.

# அனுபோகவயித்திய

## பிரம்மரகசியம்.

## புத்தக விளம்பரம்.



வயித்தியரை வேண்டாமல் தாங்களே செய்துக்கொள்ளத்தகுந்தமுன்னூறுமுறைகள் அடங்கிய இந்த (அனுபோக வயித்திய பிரம்ம ரகசியமென்னும்) புத்தகம், 1, 2, 3, 4, 5, 6 7, 8, காண்டங்களாகப் பிரித்து அச்சிட்டு முடிந்திருக்கிறது. இதில் சுமார் (2500) முறைகளுக்குக் குறையாமல் அடங்கி யிருப்பதன்னியில் ஒவ் வொருமருந்துகளின் பாகமும் இடைக் குறிப்பும், புடமிட்டமும் அரைப்புகணக்கும், அளவின் நிதானமும், செய்பாகமும், உண்பாகமும், பத்திய விதியும், பரிகாரநெரியும் கூரக்கா சிகிச்சை முறைகள் மருந்துகளின் சுத்தி முறைகள் யாவும் உயர்ந்த தாளில் அச்சிட்டு புல்கலிகோ பயிண்டுசெய்து விக்கிறயஞ் செய்து வரப்பட்டுவருகிறது. எட்டுகாண்டங்களும் ஒரேகட்டடமாக கீழ்கண்ட விலாசதாருக்கு எழுதிபெற்றுக் கொள்ளலாம்.

| | | | |
|---|---|---|---|
| முதல்காண்டம் 1-க்கு விலை அணா | 0 | 8 | 0 |
| ஷை 8-காண்டமும் ஒரேகட்டடம் | 4 | 0 | 0 |

எமது விலாசம்:

☞ பூ. சு. குப்புசாமி முதலியார் & சன்ஸ்,
ஸ்ரீ சுந்தரவிலாசம் பிரஸ்,
வேப்பேரி போஸ்ட் மதராஸ்.

உ
தேவி சகாயம்.
—o—

# ANUBOGAVYTHIA
## BRAMARAHASIAM

# அனுபோகவயித்திய
## பிரம்மரகசியம்.

இரண்டாம்பாகம்.

7

இஃது
ஜெகந்நாதஸ்தலம்.

## கோஷாயி சுவாமிகள்

அனுக்கிரகத்தின்படி
சிறுமணலூர்.

## முனுசாமி முதலியாரால்

எழுதி முடிவுபெற்று,


பூவிருந்தவல்லி.
சுந்தர முதலியார் குமாரர்
பூ. சு. குப்புசாமி முதலியார்
அண்டு சன்ஸ் அவர்களது
ஸ்ரீ சுந்தர விலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.
சென்னை-புரசை.
—o—
1934.






91

உ

தேவிசகாயம்.

# ரிஜிஸ்தர் அறிவிப்பு.

அடங்காப் பிரதாபம் பொருந்திய (அனுபோகவயித்திய பிரம்மரகசியமென்னும்) புத்தகமானது ஸ்ரீமான் ஜே. கோஷாயி சுவாமிகளது, கிருபையால் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, காண்டங்களாகப் பிரித்து அச்சிடுவித்தவராகிய ஸ்ரீசுந்தர விலாச அச்சுக்கூடத் தலைவர், பூ. சு. குப்புசாமி முதலியார் & சன்ஸ், அனுமதியின்றி யாவரும் எவ்விதத்தும் அச்சிடா வண்ணம் கனம்பொருந்திய கெவர்மெண்ட்டு சட்டப்படி (Registered Copy Right) ரிஜிஸ்தர் காபிரயிட் செய்யப் பட்டிருக்கிறது.

# நூலிநுட்பிரிவு.

# விளம்பரம்.

## தெய்வலோகவாசியாகிய

# ஊர்வசி இரசவாதசிட்கா.

இப்பெயர்பூண்ட இக்கிரந்தமானது இதுவரையில் வெளிப்படாத நூதனகிரந்தம் இது தெய்வலோகவாசியாகிய ஊர்வசி என்பவளால் எழுதியதாகச் சொல்லப்படுகின்றது இதில் பஞ்சபூததினுசுகளின் விவரம், வாதச்சரக்குகள் 209, அஷ்டலோக மாரணத்தினுசுகள், ஔஷதம்முடிக்குங்காலம், ஔஷதம்முடிக்க இவைவேண்டுமென்பது, கட்டுதினுசுகளின் பரிட்சை, பஞ்சபூதசரக்குகள் இடைகள் மீறினால் ஔஷதம் கெட்டுவிடுமென்பது ஒவ்வொரு சித்தரும் கூறிய பஞ்சபூத உப்புகளின் விவரங்கள், நாதவிந்து சரக்குகள், உப்பு, புளிசரக்குகள், சரக்குகளின் சத்துருமித்துரு வகைகள், இரசவாதம் இன்னதென்பது, காரசாரம் இன்னதென்பது, முப்புவென்பது இன்னதெனல், தாம்பிரத்தை சுத்திசெய்புமுறைகள், தாம்பிரத்தை சீக்கிரம் உருகச்செய்யுமுறைகள், வெடியுப்புச்செயநீர், அண்டச்செயநீர், கிளிஞ்சல் ஜெயநீர், காகச்செயநீர் முதலிய அனேகஜெயநீர்முறைகள், இரசவாத பொன்வெள்ளி செய்யு முறைகள், பாஷாணக்கட்டிகள் பரிக்ஷைகள், கடுங்காரச்செயநீர், நல்லபொன்னின்லக்ஷணம், தாளகக்கட்டு, நீலவர்ணத்தைலம், பூரக்கட்டு, வீரக்கட்டு, லிங்கக்கட்டு, நாகக்கட்டு, துருசுக்கட்டு தாளகமெழுகு, லிங்கமெழுகு முதலிய அனேக முறைகள், குறைந்தமாற்றுள்ள பொன்னை அதிகமாற்றேற்றும் அப்ஜாமுறைகள், அடித்தால் வெட்டையால் நொருங்கும் லோகங்களை நைப்பாக்கும் எண்ணைமுறைகள், எரிப்புதிட்டம், புடதிட்டம், குகைதிட்டம், அஞ்சு சுன்னக்குகை, இரசவாதிகள் அறியவேண்டிய முக்கியமான விஷயங்கள் முதலிய அளவிறந்த விஷயங்கள் அனேகமாய் அடங்கி யிருக்கின்றது. இம்முறைகளைச்செய்து அனுபவிப்பவர்களுக்கே அவற்றின் சூக்ஷ்மும் அபூர்வச்செயலும் பெருத்தநன்மைகளும் விளங்குமேயன்றி மற்றவர்களுக்குப் புலப்படாது.

இதன் விலை அணா 4.

எமதுவிலாசம்.

பூ. சு. குப்புசாமி முதலியார். & சன்ஸ்.
ஸ்ரீசுந்தரவிலாசம் பிரஸ்.
வேப்பேரி போஸ்ட், மதராஸ்.

உ

வேலுமயிலுந் துணை.

# அவுஷதங்களின் அட்டவணை.

## அவுஷதங்களின் அட்டவணை.

முற்றுப்பெற்றது.



இனி மூன்றாம்பாகத்தில் வியாதிகட்கு
நேர்த்தியான
கியாழவகைகள் சொல்லப்படும்.

---





உ

வேலுமயிலுந்துணை.

# ஆயுள்வேத அரிச்சுவடி

என்னும்

# அநுபோகவயித்திய

## பிரம்மரகசியம்.

# இரண்டாம்பாகம்.

### வணக்கச் செய்யுள்.

அத்தியை முத்திக்காண அருட்பெருஞ் சோதிதன்னை
சித்தியை யாகக்கொண்ட சிவகிரி மூலாதாரப்
பத்தியை பரமஞானம் பாலிக்கு மெங்கோன்றனை
நத்தியே யிரண்டாம்பாகம் நவிலுவேன் படியுளோர்க்கே.

### இதுவுமது

காலமொரு மூன்றினையுங் கடந்தஞானக்
கடவுளர்தன் னடிபணிந்து கருத்துளோர்க்கு
ஞாலமதில் அநுபோக வயித்தியத்தை
நாடுமிரண் டாம்பாகம் நவிலுதற்குப்
பாலமூர்த மீந்தருளும் சத்திவாலைப்
பராபரியா ளிருகமலம் பணிந்துவாழ்த்திச்
சீலமுள முனிவர்நவ நாதர்சித்தர்
செய்யதிருச் சீர்பாதஞ் சென்னிசேர்ப்பாம்.

# பாயிரம்.

சென்னிமிசை நாதாக்கள் பாதம்சேர்த்து
செப்புமிரண் டாங்காண்ட செப்பிதன்னில்
உன்னிதமாங் குளிகைவகை பரணியோடு
உயிர்கொடுக்கும் சஞ்சீவிக் குழம்பின்மார்க்கம்
தன்னிபஞ்சேர் சிந்தூர மெழுகுபற்பம்
தாதுவிர்த்தி பாம்பரணி தன்னேடொக்க
பின்னமிலா ஞானங்கள் பெருமைதன்னை
பேசவினி நாவுண்டோ பூமியோர்க்கே. (க)

பூமிமிசை பிரவிதரித் திரன்தனக்கு
புதைநிதியங் கிடைத்தாற்போற் பொதுவதாக
நேமித்த வனுபோக மிருகாண்டத்தை
நேரறிந்து செய்தவரே நிதியோராவர்
காமியொடு தலைவணங்காச் சாமியானோர்
கற்றகவிச் சொல்லிநர குற்றமாய்வர்
வாமிசிவ காமியருள் வேண்டும்பேர்கள்
வையமிசை யெத்தொழிலும் வழிகாண்பாரே. (உ)

வழிபட்டுப் பெரியோரை வணங்கல்வேண்டும்
வருள்சுரந்த நாதாக்கட் கிணங்கல்வேண்டும்
தொழிற்பட்டு யெவ்வழியும் தொடரல்வேண்டும்
தொல்லுலகில் சிரியோர்போற் சுருங்கல்வேண்டும்
செழித்தவளஞ் சிறுமணவூர் முனிசாமிச்சொல்
செந்தமிழி னனுபோக வயித்தியந்தான்
கழித்தமுறை பானுலும் அரிவின்மிக்கோர்
கைக்கொள்வார் ஆனந்த மெய்க்கொள்வாரே. (ந)

உ

தேவிசகாயம்.

முதலாவது

# மாத்திரை வகைபாணி.

அல்லது குளிகையெனக்கொள்க.

## தசாவதாரபேதி.

| இவைபச்சையாககூட்டவும் | | | இவை வருத்துக்கூட்டவும். | | |
|---|---|---|---|---|---|
| தாளகம் | விராகனிடை | -௧ | பெருங்காயம் | விராகனிடை | -௧ |
| மனோசிலை | ,, | ௧ | கடுகுரோணி | ,, | ௧ |
| இரசம் | ,, | ௧ | திப்பிலி | ,, | ௧ |
| வெண்காரம் | ,, | ௧ | கருஞ்சீரகம் | ,, | ௧ |
| இந்துப்பு | ,, | ௧ | வாளம் | ,, | ௯ |

இவை-௰-தினுசில் (௯) ம் வகைக்கு விராகனிடையாக நிறுத்தெடுத்துக்கொண்டு முதற்கலத்தில் காட்டிய செம்பரைப்போல் முதலாவது தாளகத்தை கல்வத்திலிட்டரைத்து பிறகு மனோசிலை, ரசம், வெண்காரம், இந்துப்பு, இப்படி ஐந்துங்கலக்க வரைத்துக்கொண்டு இரண்டாங்காலத்திலரைந்த கற்கவகை (௪) தினுசை இளம்வறுப்பாக வருத்து சேர்த்தரைத்து வாளத்தைக் குற்றமின்றி சுத்திசெய்து (௧) விராகனிடை நிருத்தெடுத்து மற்றசரக்குடன் ஒக்கப்போட்டு இரண்டு ஜாமம் அரைக்கவேண்டியது மோரும் சாதமும் திருப்தியாகச் சாப்பிட்டு அரைக்கவும் ஜாமகணக்கு சரியாய் முடிந்தவுடன் மாட்டுக்கொம்புச் சிமிளியில் வைத்துக்கொள்ளவும் குன்றிப்பிரமாணம் யெடுத்து பனைவெல்லம் அல்லது சற்கரையில் வைத்து சாப்பிடலாம் பேதி யதிகமானால் வசம்பு சுட்டு கியாழம்கொள்ளவும் இரைச்சி சூப்பு கத்திரி முருங்கை அவரை இதுகளின் பிஞ்சு மிளகுநீர் கூட்டலாம் மாலையில் மிளகு யிளம்வருப்பிட்டு சுக்கு தட்டிப்போட்டு கியாழம் சாப்பிடவும்.

## மலஜெலங்கட்டினல் நவாச்சாரபேதி.

நவாச்சாரம் பலம் (க) கல்வத்திலிட்டு கொடிக்கள்ளிப் பால்விட்டு விளக்கெண்ணெய் (௩) அல்லது (ரு) துளிவிட்டு ஒருஜாமம் அரைத்து மாட்டுக்கொம்பு சிமிளியில் வைத்துக் கொள்ளவும் (அனுபானம்) குண்டுமணிப் பிரமாணம்பெடுத்து பழபுவெல்லம் அல்லது கூழு இதுகளில்வைத்து சாப்பிடவும் பேதி பதிகமானல் எலுமிச்சம்பழச்சார் அல்லது புளித்தமோர் சாதம் சாப்பிடவும் (தீரும் வியாதியாவன) மலக்கட்டு, ஜெலக்கட்டு, பெறுவயர், வாய்வுகட்டி, மகோதரம், நீராம்பல், இவை தீரும் இச்சாபத்தியம்.

---

## பேதிக்கு காசுக்கட்டி மாத்திரை.

காசுக்கட்டி விராகனிடை-ய௨, சுத்திசெய்த வாளம் விராகனிடை-சு, தேன்விட்டு ஒரு ஜாமம் அறைத்துக் குண்டு மணிப் பிரமாணம் மாத்திரைசெய்து சீசாவில் வைத்துக் கொள்ளவும் (அனுபானம்) ஒருமாத்திரையைப் பொடித்து வாயில்போட்டு கொஞ்சம் ஜெலம்குடிக்கவும் பேதியாம் வயிற்றுவலி வாந்தி கடினமான பேதிகண்டால் எலுமிச்சம் பழச் சார்குடிக்கவும் நிற்கும் அல்லது குளிர்ந்தஜெலத்தில் குளித்துவிட்டு மோர்சாதம் சாப்பிட நிற்கும் மாலையில் மிளகுபொழம் சாப்பிடவும்.

---

## பேதிக்கு ஜெலமாத்திரை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஜாதிலிங்கம் | விராகனிடை- | க | மிளகு | விராகனிடை- | க |
| இரசபற்பம் | ,, | க | வெண்காரம் | ,, | க |
| சுக்கு | ,, | க | சிற்றாமணக்குபருப்பு | ,, | க |
| திப்பிலி | ,, | க | சுத்திசெய்தவாளம் | ,, | க |

இவைகளைக் கல்வத்திலிட்டு குளிர்ந்த ஜெலம்விட்டு ஒருஜாமம் அரைத்து குண்டுமணிப்பிரமாணம் மாத்திரை

செய்து சீசாவில் வைத்துக்கொள்ளவும் (அனுபானம்) ஒரு மாத்திரையெடுத்து கொஞ்சம் வாழைப்பழத்திற்குள் வைத்து சாப்பிட்டு உடனே கொஞ்சம் குளிர்ந்தஜெலம்குடிக்க பேதியாகும் பேதி யதிகமானல் சுடுதண்ணீர்குடிக்க பேதி கட்டும் வென்னீரில் குளித்து மோர்சாதம் சாப்பிடவும் மாலையில் மிளகுகியாழம் சாப்பிடவும்.

---

## கிருமிகள் விழ.

## சவுக்கியபேதி.

சித்தாமணக்கெண்ணெயும் பசும்பாலும் சமயிடையாய் சேர்த்து நன்ருய்க்கலந்து ஒரு சிட்டிக்கை கற்கண்டு பொடி போட்டு சாப்பிட சவுக்கியமாகும் இளைப்பு ஆயாசமில்லாமல் பேதியாகும் நாக்குபூச்சியென்னும் கிருமிகள் கட்டுகட்டாய் வெளிப்படும் இரைச்சி சூப்பு மிளகுநீர் இவையாகும் கத்திரி அவரை முருங்கை இதுகளின் பிஞ்சு சேர்த்துக் கொள்ளலாம்-மாலையில் சுக்கு மிளகு கியாழம் சாப்பிடவும்.

---

## குழந்தைகள் ஊதுமாந்தத்திற்கு

## பேதி மாத்திரை.

நெல்லிகெந்தகம் விராகனிடை-வ, இரசம் விராகனிடை-வ, வெண்காரம் விராகனிடை-வ, சுக்கு விராகனிடை-வ, சுத்தி செய்தவாளம் விராகனிடை-க, குளிர்ந்த தண்ணீர்விட்டரைத்து பாசிப்பயர் பிரமாணம் மாத்திரைசெய்து ஒரு மாத்திரை தண்ணீரி லுரைத்துக்கொடுக்கவும் ஊதுமாந்தம் தீரும் பேதியாம் பொருமல் வாதம் யிவையெல்லாம் தீரும்.

---

## வாலைபேதிக் குளிகை.

மிளகு விராகனிடை-ரு, வாளம் விராகனிடை-ரு, சுக்கு ஓமம், ரோகணி, ஆமையோடு, கோஷ்டம் வகைக்கிவிராகனிடை-க, பழச்சார்விட் டறைத்து மிளகு பிரமாணம் மாத்திரைசெய்து வைத்துக்கொள்ளவும் ஒரு மாத்திரையை முலைப்பாலில் யிழைத்து குழந்தைகளுக்குக் கொடுக்க பேதி

பாகும் சன்னிசுரம் சீதசுரம் தீரும் பேதி பதிகமானல் வென்னீர்சாதம் கொடுக்கவும்.

---

### சுரங்களுக்கு பூரக் குளிகை.

ரசகற்பூரம், ரசசெந்தூரம், லவுங்கம், சுக்கு, திப்பிலி, மிளகு வகைக்கி விராகனிடை-க, இஞ்சிச்சார்விட் டரைத்து ஏலரிசி பளவு மாத்திரைசெய்து சீசாவில் வைத்துக்கொள்ளவும் இஞ்சிசுரசம், தேன், முலைப்பால், இதுகளில் ஒரு மாத்திரை யிழைத்துக்கொடுக்கவும் எந்தசுரமும் தீரும் சிறு பிள்ளைகளுக்கும் ஆகும் கடும்சுரம் அல்லது அசாத்திய சுரத்திற்கு கடும்பத்தியம். மெதுவான சுரங்களுக்கு இச்சாபத்தியம்.

---

### கோரோஜனக் குளிகை.

| | |
|---|---|
| கோரோஜனம் | அப்ரேகம் |
| குங்குமப்பூ | ஏலம் |
| கற்பூரம் | கோஷ்டம் |
| ரசசெந்தூரம் | கிராம்பு |
| பச்சைகற்பூரம் | அக்கிராகாரம் |

இவை (ய) திறுசுகளும் வகைக்கி விராகனிடை (க) வீதம் நிருத்தெடுத்து சந்தனத்தாள் யொழம்விட்டு (ச) ஜாமமறைத்து லவுங்கப்பூ கியாழம்விட்டு (உ) ஜாமம் அறைத்து செண்பகப்பூ கியாழம்விட்டு (உ) ஜாமம் அறைத்து குண்டு மணியளவு மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி செப்புடப்பியில் வைத்துக்கொண்டு முலைப்பாலில் ஒருமாத்திரை உரைத்து கொடுக்கவும் தொண்டைகட்டு, சிலேட்டுமம், ஜன்னி, நீர்தோஷம், சிலேட்டுமசுரம், வாதசுரம் இவைதீரும் பத்தியம் நோயின் திடமறிந்து வைக்கவும்.

---

### சுரங்கள் ஜன்னிக்கு வைரவானந்தக் குளிகை.

| | |
|---|---|
| சுக்கு | இரசம் |
| திப்பிலி | காவி |
| மிளகு | நெல்லிகெந்தகம் |
| வெண்காரம் | ஜாதிலிங்கம் |

இவைகளை கிரமப்படி சுத்திசெய்து வகைக்கி ஒருவிராகனிடையாக நிறுத்து எலுமிச்சம்பழச்சார்விட் டறைத்து உளுந்துப்பிரமாணம் மாத்திரைசெய்து சீசாவில் வைத்துக் கொள்ளவும் (அனுபானம்) இஞ்சிசுரசம், தேன், முலைப்பால் பஞ்சமூலகியாழம் இவைகளி லெதிலேனும் ஒருமாத்திரை யிழைத்துக் கொடுக்கவும் நோய்க்குத் தக்கவாறு யோசித்து இரண்டுவேளை கொடுத்தாலும் கொடுக்கலாம் ஜன்னி, சுரம், சிலேற்பனம் தீரும் கைப்பு புளிப்பு மாங்கிஷம் நீக்கவும்.

---

## வைரவ சஞ்சீவிக்குளிகை.

வாளம் விராகனிடை-அ, சுக்கு, திப்பிலி, மிளகு, வெண் காரம், நாபி, ரசம், கெந்தி வகைக்கி ஒரு விராகனிடையாக நிறுத்தெடுத்து கரிச்சாலைச் சார்விட்டு எட்டுஜாமம் அறைத்து மிளகுபிரமாணம் மாத்திரைசெய்து சீசாவில் அடக்கம் செய்யவும் (அனுபானம்) இஞ்சிரசத்தில் ஒருமாத்திரை யிழைத்துக்கொடுக்கலாம் அல்லது திரிகடுகு லவுங்கம் தாளிசம் இவைகளை வருத்துப்பொடித்து திருகடிபொடியில் ஒரு மாத்திரை பொடித்துவைத்துக் கொடுக்கலாம் பித்தசுரங் களும் ஜன்னியும் போம் வாதசுரத்திற்கு முலைப்பாலில் ஒரு மாத்திரை யிழைத்து துளி தேன்விட்டுக் கொடுக்கவும் சீதளத்திற்கு சன்ருஷ்டக் கியாழத்திற் கொடுக்கவும்.

அஜீரணம் மந்தத்திற்கு ஓமம் பாலில் கொடுக்கலாம் மாசிப்பத்திரி கியாழத்தில் கொடுக்க மாரல்சுரம் தீரும் இச் சாபத்தியம்.

---

## சுகாநந்த சஞ்சீவி மாத்திரை.

இரசம், அரிதாரம், கெந்தகம், நாபி, துத்தம், மனோசிலை, வெண்காரம், கோஷ்டம், வகைக்கி விராகனிடை (க) நிறுத்தெடுத்து கிரமப்படி சுத்திசெய்து பழச்சார்விட்டு (எ) நாளறைத்து மிளகளவு மாத்திரைசெய்து நிழலில் உலர்த்தி சீசாவில் வைத்துக்கொள்ளவும் (அனுபானம்) தேன், இஞ்சி, முலைப்பால், பன்னீர், குளிர்ந்தநீர் துளசிச்சார், லவுங்கக்

கியாழம், இதுகளில் யெதிலேனும் கொடுக்கலாம் சர்வசுரத்திற்குமாகும் பத்தியம் அரிந்துவைக்கவும்.

---

## ஆனந்த சஞ்சீவிக்குளிகை.

| | | |
|---|---|---|
| இரசம் | அரிதாரம் | கெந்தகம் |
| நாபி | வெண்காரம் | தாணிக்கா |
| சுக்கு | வருத்தமிளகு | திப்பிலி |

இவைகள் வகைக்கி ஒருவிராகநிடையாக நிருத்துசுத்தி செய்தவாளம் விராகநிடை-ரு, இவையாவும் கல்வத்திலிட்டு ஒருநாளைக்கி ஒருஜாமமாக ஏழுநாளரைத்து பயராளவுமாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி சீசாவில் வைத்துக்கொள்ளவும் (அநுபானம்) மூலவாய்வுக்கு ஜாதிக்காய் கியாழம் சிறுநீரில் கொடுக்கவும், சூலைக்கி முருங்கப்பட்டை சாற்றில் கொடுக்கவும் வலிகுன்மத்திற்கு நொச்சிச்சாற்றில்கொடுக்கவும், குளிருக்கு தாணிக்காய்ச்சாற்றில் கொடுக்கவும், மலக்கட்டுக்கு விளக்கெண்ணெயில் கொடுக்கவும், பாம்புகடிக்கு எலுமிச்சம்பழச்சாற்றில் கொடுக்கவும், பத்தியம் நோய்க்குத் தக்கவாறு பார்த்துவைக்கவும்.

---

## சுரசுரத்திற்கும்
## அஞ்சனக்குளிகை.

| | | | |
|---|---|---|---|
| இரசம் | நாபி | அரிதாரம் | வெண்காரம் |
| கெந்தி | திரிகடுகு | திரிபலை | வெள்ளுள்ளி |

இவைகள் வகைக்கிவிராகநிடை-க, இவைகட்கு சரியிடை வாளம் யாவும் கிரமப்படி சுத்திசெய்து கல்வத்திலிட்டு கரும்புச்சாரிட்டு ஒருநாளைக்கி இரண்டுஜாமம்விழுக்காடு மூன்றுநாளைக்கி அரைத்துக் குன்றிப்பிரமாணம் மாத்திரைசெய்து சீசாவில்வைக்கவும் (அநுபானம்) நெய்,தேன், திரிகடுகு கியாழம் இதுகளில் ஒருமாத்திரை கொடுக்கவும் பத்தியம் தேகதிடமும் சுரங்களின் உதட்டியும் பார்த்து வைக்கவும்.

---

## சுரங்கட்கு அபினிகுளிகை.

அபினி விராகனிடை (சு) சுக்கு விராகனிடை (எ) திப்பிலி விராகனிடை (அ) சீரகம் விராகனிடை (கூ) மிளகு விராகனிடை (ய) இவைகளை விஷ்ணுகாந்தி சார்விட்டு (ச) ஜாமம் அரைத்து குன்றியளவு மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி சீசாவில் வைத்துக்கொள்ளவும் (அனுபானம்) விஷ்ணுகாந்தி, சீரகம், வெத்திலைக்காம்பு கியாழம்வைத்து அதில் ஒரு மாத்திரை யிழைத்துக்கொடுக்கவும் இப்படி காலைமாலை இரு வேளையும் (ந) நாள் கொடுக்க கழிச்சல், தாபசுரம் தீரும். சிறுவர்களுக்கும் ஆகும் புளி தள்ளவேண்டியது (ந) நாட் சென்றால் வேகம் மெத்தவுண்டாகும் முன்சொல்லிய கியாழம்செய்து மிளகு தூள்போட்டுக் காய்ச்சி மாலையில் ஒரு வேளையாக (ந) நாள் சாப்பிடவும் (எ) வது நாள் சுட்டபுளி கூட்டவும்.

---

## திசைமுகக் குளிகை.

பச்சைகற்பூரம், லவுங்கப்பட்டை, ஜாதிக்காய் வகைக்கி விராகனிடை (உ) இதற்குச் சரியிடை வாளம் குமரிச்சார் விட்டு அரைக்கவும் உளுந்துப் பிரமாணம் மாத்திரைசெய்து நிழலில் உலர்த்தி சீசாவில்வைக்கவும் (அனுபானம்) சக்கரையில் (க) மாத்திரைகொடுக்க பேதியாய் சுரம் நிற்கும் இச்சா பத்தியம்.

---

## வாலைசஞ்சீவிக் குளிகை.

திரிகடுகு, லிங்கம், வெண்காரம், ஓமம், கிராம்பு சமயிடை பழச்சாற்றாலாட்டி, உளுந்தளவு மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி சீசாவில் வைத்துக்கொள்ளவும் ஜன்னிசுரத்திற்கு துளசி நாய்துளசி சாற்றிலிடவும், முலைப்பாலிலுங் கொடுக்கலாம், தோஷசுரத்திற்கு வெத்திலையில் ஒரு மாத்திரைவைத்து மென்று தின்னவும். பத்தியம் சுரத்திற்கு தக்கினபடி வைக்கவும்.

---

## குழந்தைகள் விடாக்கழிச்சலுக்கு கட்டுவாதி மாத்திரை.

ஜாதிக்காய், ஜாதிபத்திரி, அதிவிடையம், அபினி வகைக்கு விராகனிடை (௨0) பாக நிறுத்தெடுத்து நல்லெண்ணெயில் தோய்த்து (௨) ஜாமம் அறைத்து பணவிடை யுருண்டை செய்து முலைப்பாலில் கொடுக்கவும் ஒருநாளைக்கு காலை மாலை உச்சி மூன்றுதடவையும் கொடுக்க பேதிநிற்கும்.

---

## மாந்தக்கழிச்சலுக்கு மாத்திரை.

ஜாதிலிங்கம் விராகனிடை (௪) திப்பிலி விராகனிடை (௧) ஆவின்பால்விட்டு ஒருஜாமம் அறைத்து பயறளவு மாத்திரை செய்து நிழலில் வைத்துக்கொள்ளவும் (அநுபானம்) கரசணங்கண்ணி, மிளகு, நாயுருவிவேர், பிரண்டைவேர், வசம்பு (௫) திநுசும் சாம்பலாக்கி கருஞ்சீரகம் வெடிக்கவிட்டு கொஞ்சியிலையை சிவக்கவறுத்து உழக்கு ஜெலம்விட்டு சுக்கு தட்டிப்போட்டு ஆழாக்கு கியாழமாகக் காய்ச்சியிறக்கி ஒரு பாலடைகியாழத்திற்கு ஒரு மாத்திரை யிழைத்துக்கொடுக்கவும் மாந்தக்கழிச்சல் தீரும் இச்சாபத்தியம்.

---

## சுரஹரமாத்திரை.

| | |
|---|---|
| கோரோஜனம் | கோரைக்கிழங்கு |
| பச்சைகற்பூரம் | சித்திரமூலம் |
| அதிமதுரம் | நன்னாரிவேர் |
| ஏலம் | அக்கிற்கட்டை |
| லவுங்கம் | தேவதாரம் |
| செண்பகப்பூ | தாளிசப்பத்திரி |
| கோஷ்டம் | கிச்சிலிக்கிழங்கு |
| விலாமிச்சு | கடுக்காய் |
| கருடப்பச்சை | நெல்லிக்காய் |
| கல்நார் | தான்றிக்காய் |

இந்த (௨0) திநுசுகளும் வகைக்கு விராகனிடை (௧) நிறுத்து பெடுத்து இடித்து வஸ்திரகாயம்செய்து கல்வத்திலிட்டு செவ்விளநீர்விட்டு (௪) ஜாமம் அறைத்து மிளகு பிரமாணம்

மாத்திரைசெய்து நிழலில் உலர்த்தி சீசாவில் வைத்துக் கொள்ளவும் (அனுபானம்) சீரகக்கியாழத்தில் காலை ஒரு மாத்திரை மாலை ஒரு மாத்திரையாக இருவேளையும் மூன்று நாள்கொள்ள பித்தசுரந் தீரும் இப்படியே தேனில் மூன்று நாள்கொள்ள வாதசுரந் தீரும். இஞ்சி சுரசத்தில் கொள்ள சேத்துமசுரந் தீரும் * பஞ்ச தீபாக்கினி சூரணத்திற் கொள்ள தொந்தசுரங்கள் தீரும் இச்சாபத்தியம்.

* பஞ்ச தீபாக்கினிசூரணம் பின்வரும் சூரணவகை பரணியில் பார்த்துக்கொள்ளவும்.

---

## சுரகேசரி குளிகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| செஞ்சந்தனம் | விராகனிடை | ௨ | நன்னாரி | விராகனிடை | ௧ |
| கோரோஜனம் | ,, | ௨௬ | தாளிசப்பத்திரி | ,, | ௧ |
| ஏலரிசி | ,, | ௧ | தேவதாரம் | ,, | ௧ |
| லவுங்கம் | ,, | ௧ | மாசிக்காய் | ,, | ௧ |
| அதிமதுரம் | ,, | ௧ | ருத்திராட்சம் | ,, | ௧ |
| பேரீச்சி | ,, | ௧ | முந்திரிக்கை | ,, | ௧ |
| இலுப்பை | ,, | ௧ | ரோகணி | ,, | ௧ |

இவைகளில் இடிக்கவேண்டியதுகளை இடித்து சீலையில் வடிக்கட்டி மெல்லிய தூளாய்ச்செய்து யாவும் கல்வத்தி லிட்டு பன்னீரினால்(௧)ஜாமமறைத்து குங்குமப்பூ(௧)விராக னிடை சேர்த்து இளநீர்விட்டு (௨) ஜாமமறைத்து குண்டு மணிப் பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி சீசா வில் வைத்துக்கொள்ளவும் (அனுபானம்) இஞ்சிசுரசம் கருந்துளசி கியாழம் தேன் இதுகளில் காலை (௧) மாலை (௧) இருவேளையும் கொடுக்க தாபசுரம், உஷ்ணசுரம், அதிசார சுரம், வரட்சிசுரம், பழையகாச்சல் தீரும், அதாவது முறைக் காச்சலும் தீரும். முலைப்பாலில் இருவேளையும் (௨) மாத் திரை கொடுக்க தோஷசுரந்தீரும். நீராகாரத்தில் கொடுக்க உஷ்ணகாந்தல் சுரம் தீரும். பத்தியம் புளியாகாது அறை வுப்பு கூட்டவும்.

---

## ஊழிமணி.

| | | |
|---|---|---|
| பளிங்கு சாம்பிராணி | விராகனிடை-கூ | |
| பெருங்காயம் | ,, | அ |
| வெள்ளெருக்கன்நரம்பு | ,, | ௩-௦ |
| மிளகு | ,, | ௩-௦ |
| கரியுப்பு | ,, | ௩-௦ |
| விரைகாம்புபோக்கிய கஞ்சா | ,, | உ-௦ |
| பூரம் | ,, | க |
| லிங்கம் | ,, | க |

இவை கல்வத்திலிட்டு எட்டிக் கியாழத்தினல் (ட) ஜாமம் அறைத்து முழுகடலைபிரமாணம் மாத்திரைசெய்து சீசாவில் வைத்துக்கொள்ளவும் (அனுபானம்) வென்னீரில் அல்லது சாராயத்தில் ஒருமாத்திரை யிழைத்துக்கொடுக்கவும் ஒருஜாமத்திற்கு ஒருமாத்திரையாகக் கொடுத்துவரவும் இடையில் ஆகாரம்வேண்டில் பச்சரிசிகஞ்சி மிதமாய்க் கொடுக்கவும்.

---

## இராஜபூபதி மாத்திரை.

| | |
|---|---|
| உலர்ந்தலிங்கம் | மனோசிலை |
| நெல்லிகெந்தகம் | சுக்கு |
| வெண்காரம் | திப்பிலி |
| வாலைரசம் | மிளகு |
| நாபி | ஏலரிசி |

இவைகள் வகைக்கு விராகனிடை-க, வீதமாய் இஞ்சிச் சாற்றில் (உ) ஜாமம் அறைத்து மிளகளவு மாத்திரைசெய்து வைக்கவும் (அனுபானம்) முலைப்பால் தேன் திரிகடுகு சூரணம் இஞ்சிசுரசம் இதுகளில் ஒரு மாத்திரை கொடுக்க சகல சுரமும் தோஷமும் தீரும் கடும்பத்தியமிருக்கவும்.

## இராஜசவுக்கியமாத்திரை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஜாதிக்காய் | விராகனிடை-க | | வால்மிளகு | விராகனிடை-க | |
| ஜாபத்திரி | ,, | க | கிராம்பு | ,, | ௩ |
| சிச்சிலிக்கிழங்கு | ,, | க | குங்குமப்பூ | ,, | ௦ |
| ஏலம் | ,, | க | பச்சைகற்பூரம் | ,, | ௦ |
| கோஷ்டம் | ,, | க | கஸ்தூரி | ,, | ௦ |
| சந்தனம் | ,, | க | | | |

இவைகளை இளநீர்விட்டு ஒருஜாமம் அரைத்து குண்டுமணிப் பிரமாணம் மாத்திரைசெய்து நித்தியம் இருவேளையும் வெத்திலையில் ஒருமாத்திரைவைத்து தின்றுவரவும் சன்னிசீதளம் அணுகவொட்டாது கண்டத்திற்குமேற்பட்ட வியாதிகள் யாதொன்றும்வராது கண்கள் பிரகாசம்கொடுக்கும் சகலவாய்வும் கண்டிக்கும் பத்தியம்கிடையாது போஜனம் செய்தபிறகு இம்மாத்திரையை சாப்பிடவேண்டியது.

---

## பிள்ளைகட்கு ஜாதிலிங்க மாத்திரை.

லிங்கம் (உ) பலம் முலைப்பால்விட்டு மூனுஜாமம் அரைத்து சிறுபயறுபிரமாணம் மாத்திரைசெய்து நிழலில் உலர்த்தி சீசாவில் அடக்கம்செய்யவும் (அனுபானம்) ஒரு மாத்திரையை முலைப்பாலில் யிழைத்துக்கொடுக்க ஜன்னி சீதள சுரம் தீரும்.

ஆடாதோடைசாற்றிலிட மந்தசுரம்தீரும்.
நொச்சிச்சாற்றிலிட வாதசுரம்தீரும்.
சேத்துமசுரத்திற்கு குப்பைமேனி சிறுநீரிலிடவும்.
மலஜெலம்அடைத்தால் கடுக்காய்கியாழத்திலிடவும்.
பத்தியம் உப்பு புளி கூடாது.

---

## பாலசஞ்சீவி மாத்திரை.

| | | |
|---|---|---|
| இரசம் | விராகனிடை-க | |
| கெந்தி | ,, | க |
| வாளம் | ,, | க |
| அரிசிதிப்பிலி | ,, | க |

இவை சுத்தஜெலம்விட்டு ஒருஜாமமரைத்து சிறுபயறு பிரமாணம் மாத்திரைசெய்து நிழலிலுலர்த்தி சீசாவி லடக்கம் செய்யவும் (அனுபானம்) முலைப்பால், நொச்சி, துளசி, இஞ்சி சுரசம் இதுகளி லெதிலேனும் ஒருமாத்திரையிட உப்புமாந்தம் முதலாக எண்வகை மாந்தமும்தீரும். சுட்ட புளியும் வருத்தவுப்பும் கூட்டவேண்டியது.

---

இதுவும் பிள்ளைகட்கு

## சுராங்குஷ பச்சைகற்பூர மாத்திரை.

| | | |
|---|---|---|
| பச்சைகற்பூரம் | விராகநிடை-உ | |
| லவுங்கப்பட்டை | ,, | உ |
| ஜாதிக்காய் | ,, | உ |
| வாளம் | ,, | சு |

கற்றாழையினுள்ளிற்கும்சோற்றை (எ) திரம் அலம்பி விட்டு பிறகு சீலையில் முடித்துப்பிழிந்து அச்சாற்றினால் ஷை மருந்தை ஒருஜாமம் அறைத்து உளுந்தளவு மாத்திரை செய்து சிசாவிலடக்கவும் திரிகடி சற்கரையில் ஒரு மாத்திரை பொடித்துவைத்து குழந்தைகட்குக் கொடுக்க (கஉ) நாழிகையில் நாலைந்துவிசை பேதியாய் சுரம் விட்டுவிடும் இச்சாபத்தியமிருக்கவும்.

## நவமூலக்குளிகை.

| | | |
|---|---|---|
| பூரம் | விராகநிடை-க | |
| தாளகம் | ,, | க |
| மனோசிலை | ,, | க |
| பொரிகாரம் | ,, | க |
| கல்நார் | ,, | க |

இவைகளை கிரமப்படி சுத்திசெய்து கல்வத்திலிட்டு கொடிக்கள்ளிப்பால்விட்டு (உ) ஜாமம் அரைக்கவும் அப்படி அறைக்கையில் முதலாவது தாளகத்தை நெகழ வறைத்து அதன்மேல் கல்னார்போட்டறைத்து அதன்மேல் மனோசிலை பொரிகாரம் பூரம்போட்டு ஒருஜாமம் குறையாமல் அறைத்து குகையில்வைத்து மேலோடுமூடி சீலைமண் ஒன்று செய்து குக்கிடபுடம்போட்டெடுத்து திரும்பவும் கல்வத்திலிட்டு ஆவின்பால் துளி துளியாய்விட்டு ஒருஜாமம் அறைத்து பழச்சாற்றில் ஒருஜாமம் அறைத்து குமரிச்சாற்றில் ஒருஜாம மாட்டி துராயிலைச்சாற்றி லொருஜாமமாட்டி

தூதுளங்காயளவு மாத்திரைசெய்யவும் காலையில் ஒரு மாத்திரையாக நாற்பதுநாள் கொள்ள நவமூலமும் தீரும் இந்த மாத்திரையை (ரு) வயது பிள்ளைகள்முதல் (ா) வயது மட்டிலும் சாப்பிடலாம் வியாதியைத் தடையின்றி கேழ்க்கும் இச்சாபத்தியம்.

---

இதுவும் பிள்ளைகட்கு

## அற்புத கற்பூரமாத்திரை.

| | | |
|---|---|---|
| பச்சைகற்பூரம் | விராகநிடை | உ൦ |
| கெந்தி | ,, | க |
| இந்துப்பு | ,, | க |
| ஜாதிக்காய் | ,, | க൦ |
| ஜாபத்திரி | ,, | க |

இவைகளை எலுமிச்சம் பழச்சார்விட்டு ஒருஜாமம் அறைத்து உளுந்தளவு குளிகைசெய்து சீசாவில் வைக்கவும் இஞ்சியை அறைத்து கெச்சக்காயளவு உருண்டையில் ஒரு மாத்திரை வைத்துக்கொடுக்கவும், அல்லது சக்கரையில் ஒருமாத்திரை கொடுக்கவும் எந்தசுரமுந் தீரும் இச்சாபத்தியம்.

---

## மாந்தக்குளிகை.

| | |
|---|---|
| பூரம் | பலம்-൦ |
| லவுங்கம் | ,, வ |
| ஏலம் | ,, வ |
| வசம்பு | ,, வ |
| சீரகம் | ,, வ |
| மாசிக்காய் | ,, வ |
| அதிவிடையம் | ,, வ |

பூரத்துக்கிசைந்த சுத்திசெய்து மற்றதை யிடித்து வஸ்திரகாயஞ்செய்து யாவும் ஒன்றுபட கல்வத்திலிட்டு விஷ்ணுகாந்திச்சார்விட் டறைத்து கொத்தமல்லிப்பிரமாணம் மாத்

திரைசெய்து நிழலிலுலர்த்தி சீசாவில் வைக்கவும் (அனுபானம்) வேலைவேர், சுக்கு, வசம்பு, வெந்தயம், பாலை, ஓமம், இதுகள் சமன்கொண்டு இடித்து பொழுமிட்டு ஒரு பாலடை பொழுத்தில் ஒருமாத்திரை யிழைத்துக்கொடுக்க சகலமாந்தமும் தோஷமும் தீரும் இச்சாபத்தியம்.

---

மகாவாத

## மூசாம்பரக்குளிகை.

| | | | |
|---|---|---|---|
| மஞ்சள் நிறமுள்ள மூசாம்பரம் | ரூபாயி-அ | மிளகு | ரூபாயி-வ |
| ஜடாமாஞ்சி | ,, வ | லவுங்கம் | ,, வ |
| அசாருன் | ,, வ | பெருலவங்கப்பட்டை | ,, வ |
| ரூமஸ்தகி | ,, வ | கஸ்தூரி | விராகனிடை-வ |
| குங்குமப்பூ | ,, வ | தேன் | பலம் சு |

முதலாவது தேனை அடுப்பேற்றி காய்ச்சி அழுக்கு நீங்கச்செய்து ஷை மருந்துகளை தனித்தனி யிடித்து வஸ்திரகாயம்செய்து தேனிலிட்டு யிரக்கயாவும் ஒன்றுபட ஊக்கமாக ரேகித்து குன்றியளவு உருண்டைசெய்து பத்திரப் படுத்தவும், ௩-௪-குன்றி உள்ளுக்குக் கொடுத்துவர வலி, காக்கை வலி, வாய்கோணல், பின்னிழுப்பு, பாரிசவாய்வு, முருக்கல், சூதகவாய்வு, சீதளம், ஜன்னி, இவைதீரும். வாதம் ஜன்னிகளுக்கிசைந்த பத்தியம் வைக்கவும்.

---

## கபாடமாத்திரை.

ஜாதிக்காய், ஜாபத்திரி, காயம், சீரகம், அதிவிடையம், கிராம்பு, அபினி, கெஞ்சா, களச்சிவித்து, வெந்தியம், குராசானிஓமம், இவை வகைக்கி (௨௦) விராகனிடை யெடுத்து கெஞ்சாவின் சாற்றாலாட்டி இலந்தம்விரைப் பிரமாணம் மாத்திரைசெய்து எருமைத்தயிரில் ஒரு மாத்திரையாக இருவேளையும் கொடுக்க (௨) நாள் (௩) நாள் கொடுக்கவும், வாழைப்பூச்சாத்திலும் கொடுக்கலாம் ஜெலக்கிராணி, வாய்வுகிராணி, மூலக்கிராணி, அதிசாரம் இதுகள் தீரும். காரம் நீக்கி சாதம் கொடுக்கவும் புளிகூட்டலாம்.

## வெள்ளை மாத்திரை

| | |
|---|---|
| ரசகற்பூரம் | விராகனிடை-ரு |
| ரசச்செந்தூரம் | ,, ரு |
| கெந்தகம் | ,, க |

இம்மூன்றும் கல்வத்திலிட்டு சங்கங்குப்பிச் சாற்றினால் ஒருஜாமம் அரைத்து பணவிடைப் பிரமாணம் குளிகை செய்து சுக்குத்தூள் ஒருசிட்டிக்கையில் ஒருமாத்திரை வைத்து காலையில் கொடுக்கவும் (ங) நாள் கொடுக்க தீராத வெள்ளை மேகப்பிடிப்பு தீரும் இச்சாபத்தியம்.

## மேகவாய்வுக்கு மாத்திரை.

கருநாபியை (ங) நாள் பசுங்கோமியத்தில் ஊரவைத்தெடுத்து மேல்தோல்நீக்கி உலர்த்தி தூள்செய்து விராகனிடை (உ) யெடுத்துக்கொண்டு அத்துடன்,

| | | | |
|---|---|---|---|
| கோரோஜனை | விராகனிடை-க | கெந்தகம் | விராகனிடை-¾ |
| சூதம் | ,, வ | தம்பராஷ்டகம் | ,, ¾ |
| பூரம் | ,, வ | அக்ராகாரம் | ,, ¾ |
| ரசச்செந்தூரம் [வேர் | ,, வ | வெண்காரம் | ,, வீசம் |
| வெள்ளைகாக்கணம் | ,, வ | லவுங்கம் | ,, வீசம் |
| லிங்கம் | ,, வ | திப்பிலி | ,, அரிக்கால் |
| ஈயசெந்தூரம் | அரிக்கால் | திப்பிலிமூலம் | ,, அரிக்கால் |
| சுக்கு | அரிக்கால் | | |

இவைகளைக் கருப்புவெத்திலைச்சார்விட்டரைத்து பயறு பிரமாணம் மாத்திரைசெய்து சீசாவில்வைத்துக்கொள்ளவும் வாய்வு, வாய்க்கிட்டல், இடுப்புவலி, இவைகட்கு வெத்திலை ரசத்தில் ஒரு மாத்திரையாக இருவேளையும் தரலாம் திமிர் வீக்கம் இவைகளுக்கு இஞ்சிரசத்திலிடவும், ஆள்தேக திடப்படி (ங) நாள் (சு) வேளை கொடுக்கவும் ஏழாவதுநாள் முத்

தெண்ணையுடன் மஞ்சள் ஓமம் வெத்திலைக்காம்பு அன்ன நீரில் பழகிய காடிஜெலமும் கொஞ்சம் விட்டுக்காய்ச்சி ஸ்நானம் செய்துவைக்கவும்.

## மாத்திரைவகைபரணி.

முற்றுப்பெற்றது.



## இனிமூன்றும்பாகத்தில்

கியாழவகை சொல்லப்படும்.

---

இன்னம் அநேகமாயுள்ள மாத்திரை வகைகளையும் பாஷாணம் முதலாயுள்ள சரக்குவகை சுத்திகளையும் முதற் பாகத்தில் அச்சிட்டு விற்பனைசெய்து வருவதால் இந்த இரண்டாம்பாகத்தில் அவுழ்தங்களின் சரக்கு சுத்திகள் யாவும் முதற்பாகத்தில் விளங்கும்.

---

உ

வேலுமயிலுந்துணை.

இரண்டாவது

# குழம்புவகைபரணி.

## கௌசிகர்குழம்பு.

| | | |
|---|---|---|
| மனோசிலை | விராகனிடை- | க |
| தாளகம் | ,, | க |
| நாபி | ,, | க |
| இந்துப்பு | ,, | க |
| வெண்கரரம் | ,, | க |
| ரசம் | ,, | க |
| கடுக்காய் | ,, | க |
| காயம் | ,, | க |
| திப்பிலி | ,, | க |
| கடுகுரோணி | ,, | க |
| சீரகம் | ,, | க |

இவைகளை ஷை விராகனிடையா யெடுத்து இதற்குச் சரியிடை வாளம்சேர்த்து இவையாவும்கொண்ட யிடைக்கு சரியிடை சேலத்து பழைய பனவெல்லம் சேர்த்து தேங்கா யோடுசுட்டகரி விராகனிடை-ந, பொரித்த வெண்காரம் விராகனிடை-ந, இவை யாவும் கல்வத்திலிட்டு பழச்சார் விட்டு (ச) ஜாமம் அறைத்து தேங்காய்ப்பால்விட்டு (க) ஜாமம் அறைத்து மாட்டுக்கொம்பு டப்பியில் வைத்துக் கொள்ளவும் பட்டாணிப் பிரமாணம் எடுத்து பனவெல்லம் வாழைப்பழம் சக்கரையிதுகளில் கொடுக்கவும் பேதியாகும் வாதபித்த சிலேத்ம தொந்தரைகள்யாவும் நீங்கும் பேதிபதி கமானால் மோர்சாதம் சாப்பிடவும் மாலையில் மிளகுகியாழம் சாப்பிடவும் தலைவலி நீரேற்றம் கழுத்துவலி ஜன்னி இது கட்குத் தகுந்த அனுபானங்களில் கையாடவும்.

## அகஸ்தியர்

## லிங்கக்குழம்பு.

| | |
|---|---|
| லிங்கம் | விராகனிடை-ச |
| பூரம் | ,, உ |
| வெண்காரம் | ,, ௬ |
| வாளம் | ,, ௰உ |
| சித்தாமணக்குப்பருப்பு | ,, ச |

இவைகளை கிரமப்படி சுத்திசெய்தபின் நிறுத்தெடுத்து கல்வத்திலிட்டு (ச) ஜாமம் அரைக்க மெழுகாகும் அதை யெடுத்து மாட்டுக்கொம்பு சிமிளில் வைத்துக்கொள்ளவும்.

வயிற்றுவலிக்கு—பிரண்டையை கொண்டுவந்திடித்து ஒரு பிடியெடுத்து (அரைக்காற்படி) ஜெலத்திலிட்டு சிவக்கக்காய்ச்சி யிறக்கிவடித்த கியாழத்தில் ஒருபணயிடை குழம்புகூட்டி உள்ளுக்குக் கொடுக்க நீங்கும் இச்சாபத்தியம்.

அண்டவாதசூலைக்கு—கற்கடகம், சிங்கி, கழற்சிக்கொடிக் காய், வெள்ளுள்ளி, சுக்கு, முருங்கைத்துளிர், சக்கரை இவை சமவிடை யெடுத்தரைத்து கெச்சக்காய்ப் பிரமாணம் உருட்டி அதினடுவில் ஷ குழம்பு பணவிடைவைத்துக்கொடுக்கவும் நீங்கும், சுட்டபுளி வருத்தவுப்பு கூட்டவும்.

சூலைமுடக்குக்கு—சித்திரமூலவேரின் பட்டை ஒருபிடியெடுத்து பஞ்சுபோல்நசுக்கி கியாழமிட்டு காலை ஒரு வேளையாக பணவிடைகுழம்பு சேர்த்துக் கொடுக்கவும் தீரும் கடும்பத்தியம் (௩-ௗ-எ) நாள் வியாதியின் திடமறிந்து மீபவும்.

வாதசுரத்திற்கு கோச்சிலைச்சார்—ஒருகரண்டியளவுக்கு பணவிடைகுழம்பு மத்தித்துக் கொடுக்கவும் இச்சாபத்தியம்.

கிரந்திநோய் (ய) க்கும்—நத்தைச்சூரி கொடிவேலி குப்பை
" மேனி இதுகளின்சாறு சமயிடை ஒன்ருய்க்
" கலந்து அதற்குச்சரியிடை முத்தெண்ணை
" சேர்த்து மெழுகுபதமாய்க்காய்ச்சி இரக்கி
" காலை ஒருவேளையாக உச்சிக்கரண்டியெண்ணை
" யில் பணவிடைக்குழம்பு மத்தித்துக் கொடுக்
" கவும் இப்படி (௩) அல்லது (௫) நாள் சாப்பி
" டவும் கடும்பத்தியமிருந்தாலே நலமாம் இவை
" ஒவ்வொன்றிற்கும் மருந்து கொண்ட அளவு
" போல் மருபத்தியங் கார்க்கவும்.

---

சுரத்திற்கு—ஏலம் அதிமதுரம் கொத்தமல்லி அரத்தை
" கோஷ்டம் சமயிடையெடுத்திடித்து கியாழம்
" வைத்திருந்து அந்தக் கியாழத்தில் பணவிடை
" குழம்பு இழைத்துக் கொடுக்கவும் தீரும் இச்
" சாபத்தியம் கடும்சுரமாகில் தகுந்த பத்தி
" பதார்த்தம் சேர்க்கவும் (௩) நாள் கொடுக்க
" வும்.

---

வலிகுன்மத்திற்கு—நிலவகை ஒருபிடி கால்படி ஜெலத்தி
" லிட்டு (வீசம்படியாக) சுருங்கக் காய்ச்சி பண
" விடை குழம்பு மத்தித்துக் கொடுக்கவும் (௩)
" நாள் இச்சாபத்தியம்.

---

திமிர்வாதபிடிப்புக்கு—உத்தாமணியின் சாற்றில் பணவிடை
" குழம்பு சேர்த்துக் கொடுக்கவும் (௩-௫) நாள்
" கொடுக்கவும் கடும்பத்திய மிருக்கவும்.

---

காமாலைக்கு—செங்கடுக்காய் பூவரசம்பட்டை சமயிடை
" தூக்கி யிடித்து கியாழமிட்டு பணவிடை குழ
" ம்பு சேர்த்துக் கொடுக்கவும் கடும்பத்தியம்
" (௩-௫-எ) நாள் கொடுக்கவும்.

---

கடிவிஷங்களுக்கு—சிறுசின்னியிலைச்சார் துட்டிடையெடுத்
" து இதில் பணவிடை குழம்பு கலந்து கொடுக்
" கவும் படர்தாமரையும் தீரும் சுட்டபுளி வருத்
" தவுப்பு கூட்டவும் (௫) நாள்.

---

பிள்ளையுண்டாக—பெண்கள் இரகசிய ஸ்நானம் செய்கிற
" மூன்றுநாளும் விஷ்ணுகாந்திச்சார் துட்டிடை
" யெடுத்து அதில் (உ) பணவிடை யிழைத்துக்
" கொடுக்கவும் கருக்குழியின் சதையடைப்பு
" கிருமிமுதலிய அறுவகைக் குற்றமும்நீங்கி கரு
" தரிக்கும்.

---

பேதிக்கு—பனைவெல்லம் கழற்சிக்காயளவு அதினடுவில்
" பணவிடை குழம்புவைத்து மூடி கொடுக்கவும்
" குளிர்ந்தஜெலம் குடித்தால் பேதியதிகமாகும்
" வென்னீர்குடித்தால் பேதிகட்டும் அப்படியும்
" மிஞ்சினல் ஆவின்மோர் கூட்டி போஜனஞ்
" செய்யக் கட்டும் அப்படியும் அதிகமானல்
" வசம்புசுட்டுக் கியாழமிட்டு சாப்பிட பேதி
" னின்றுவிடும் மாலையில் மிளகுகியாழம்.

---

எலிகடிக்கு—எருக்கிலையை அறைத்து கழற்சிக்காய்ப் பிர
" மாணமெடுத்து பணவிடை குழம்புவைத்
" துருட்டிக்கொடுக்க (மஅ) யெலிவிஷமும் நீங்
" கும் கடும்பத்தியம் மருபத்தியம் சுட்டபுளி
" வருத்தவுப்பு.

---

அலர்ஜன்னி—அலர்ஜன்னி ஆனந்தஜன்னிமுதலான துஷ்ட
" விஷங்கட்கு வேப்பெண்ணெயில் குன்றிப்பிர
" மாணம் யிழைத்து கலிக்கமிடவும்.

---

## அகஸ்தியர்
# பெருங்குழம்பு.

| | |
|---|---|
| பெருங்காயம் | கருஞ்சீரகம் |
| கடுகு | ஓமம் |
| திப்பிலி | கடுக்கா |
| கோஷ்டம் | கடுகுருணி |
| சுக்கு | கார்போகரிசி |
| மிளகு | நெல்லி |
| தாணிக்காய் | திராட்சி |
| அக்கிராகாரம் | ஏலம் |

இவைதினுசுகள் (யசு-ம்) வகைக்கி (க) விராகனிடையாக நிருத்தெடுத்து இளம்வருப்பாய் வருத்து சூரணித்து வைத்துக்கொண்டு,

| | |
|---|---|
| பெருநாவி | மனோசிலை |
| நிருவிஷம் | நெல்லிக்காகெந்தி |
| லிங்கம் | இந்துப்பு |
| தகட்டரிதாரம் | வெண்காரம் |
| இரசம் | |

இவைகள் தினுசு (கூ-ம்) வகைக்கி-க, விராகனிடை எடுத்து பச்சையாகவே முன் சூரணத்துடன் சேர்த்து நிருத்து அவ்விடைக்கு சரியிடை சுத்திசெய்தவாளம் சேர்த்துக்கொள்ளவும் தேங்காய் ஓட்டை சுட்டகரி விராகனிடை (அ) பணவெல்லம் விராகனிடை (அ) இவையாவும் கல்வத்திலிட்டு தேங்காய்ப் பால்விட்டு (க) நாள் முழுமையும் அறைக்கவும் உத்தாமணிச் சார்விட்டு ஒருநாள் முழுமையும் அறைக்கவும் மெழுகுபதத்தில் வழித்து மாட்டுக்கொம்பு சிமிளில் வைத்துக்கொள்ள வேண்டியது இதை அறைக்கும்போது விளக்கெண்ணெய் நெய் பசும்வெண்ணை மூன்றும் குழைத்து முகத்திற்குப் பூசிக்கொண்டு கேள்வரகு மாவின் கூழும் மோரும் கரைத்து திருப்தியாக சாப்பிட்டு அறைக்கவும்.

### (இதற்கனுபானம்.)

சுரத்திற்கு—கடுக்காய் சாற்றில் அல்லது கடுக்காய் கியாழத்தில் ஒரு காசுயிடை ஷ குழம்பு யிழைத்துக் கொடுக்கத் தீரும்.

குளிர்சுரத்திற்கு—சக்குநீரில் ஒருகாசுயிடை குழம்பை
,, யிழைத்துக் கொடுக்கவும்

ரேத்தமூலத்திற்கு—வெள்ளாட்டுப் பாலில் ஒருகாசுயிடை
,, குழம்பு கலந்துகொடுக்கவும்.

நீரோமூக்கிற்கு—பாண்டு மகோதரம் நீராம்பல் பெருவயர்
,, இதுகட்கு மிளகுதூளல்லது வெங்காயத்தில்
,, ஒருகாசுயிடை குழம்புவைத்துக் கொடுக்க
,, வும்.

ஜன்னிகளுக்கு—இஞ்சிதேன் முலைப்பாலில் வென்னீரில்
,, இவை யெதிலேனும் ஒருகாசுயிடை குழம்பு
,, மத்தித்துக் கொடுக்கவும் தீரும்.

பெரும்பிளவை—துடைவாழை அரைபாப்பு புண்ணு
,, பெருஞ்சிலந்தி இவைகட்கு உமிழ்நீரில் ஒரு
,, காசுயிடை யிழைத்துக்கொடுக்கவும் அன்
,, னீரா லிழைத்தே சிலந்திமுதலிய ரிணத்தின்
,, மீது தடவலாம்.

முலைகுத்துக்கு—நொச்சிச் சாற்றில் ஒரு காசுயிடை யிழைத்
,, துக் கொடுக்கவும் அந்த சாத்தினு லிழைத்தே
,, மேலுக்கும் பூசவும்.

வாதசூலை இளங்குட்டத்திற்கு—நொச்சியிலை வதக்கிப்பிழிந்த
,, சாற்றில் காசுயிடை கொடுக்கவும்.

வாய்வுகளுக்கு—இஞ்சி அல்லது கொஞ்சிப்பட்டை கியாழத்
,, தில் ஒரு காசுயிடை கொடுக்கவும்.

ஜன்னி (யஅ) க்கும்—வெங்காயச்சார் முசுமுசுக்கைச்சார்
,, நொச்சிசார் இதுகளில் கொடுக்கவும்.

தலைபாரம்—கழுத்திழுப்பு இதுகட்கு யெருக்கிலை அல்லது
„ வேப்பஞ்சார் வேப்பம்யெண்ணையில் யிழைத்து
„ கண்ணில் கலிக்கம்போடவும்.

---

சந்தானமில்லாதவர்க்கு—அரசன் கொழுந்து ஆவின்பால்
„ விட்டறைத்து கெச்சக்காய்ப் பிரமாணம் யெடு
„ த்து அதில்காசுயிடை வைத்துக்கொடுக்கவும்.

---

உதிரவாய்வுக்கு—கருத்த ஆட்டின்பாலில் வில்வப்பட்டை
„ யை நருக்கிப்போட்டுக் காய்ச்சி காசுயிடை
„ மருந்து கலந்து கொடுக்கவும்.

---

உப்பிசத்திற்கு—கொண்ணைக்கொழுந்து கடுக்கா யெண்ணை
„ முலைப்பால் இதுகளில் காசுயிடை கொடுக்கவும்.

---

இருமலுக்கு—இஞ்சி கொஞ்சிப்பட்டை இதுகளில் காசு
„ யிடை கொடுக்கவும்.

---

ஐயாயிரம்விஷக்கடிகளுக்கும்—கருப்பு வெத்திலைச்சார்வேம்
„ பெண்ணெய் வெந்நீர் இதுகளில் பயரளவு
„ வைத்து கொடுக்கவும் அன்றியும் கடிவாயிலும்
„ தடவவும் மற்றுமுள்ள அனுபானங்க ளறிந்து
„ கொடுக்கவும் இதற்குப்பத்தியம் வியாதிகளின்
„ குணமறிந்து அந்தவியாதிக்குத்தக்க பதார்த்தம்
„ பத்தியமிடவும்.

---

## அகஸ்தியர் மகாகுழம்பு

## விருத்தம்.

பருவதம் தன்னில்வாழும் பரமனாரருளினாலே
பெருமையா யுலகில்வாழும் புண்ணியஜெனங்களுக்கு
உருபல வியாதிவந்தால் உண்மையாய் தீரவென்று
பிரபல முனிவர்தானும் பேசிய மருந்துகேளே. 1

பேசியமருந்துகேளாய் பெருங்காயம்கடுகிந்துப்பு
வீசியரசம்பொற்காரம் விஷமனோசிலையுங்கூட்டி
ஆசிலாத்திப்பிலியும் அதட்டியதாரத்தோடு
மாசிலாக்கருஞ்சீரகம் வகைக்குகழஞ்சுவாங்கே. 2

வாங்கியமருந்துக்கொக்க வாளமும்வருத்துப்பாதி
தாங்கியபச்சைப்பாதி சமன்முளைத்தோடுபோக்கி
தீங்கிலாமருந்துபத்தும் சேரவேயரைக்கக்காந்தும்
ஒங்கியமோரும்சாதம் உண்டுபின்னரைத்துக்கூட்டே. 3

கூட்டியமருந்தின்பேரு அகஸ்தியர்குழம்பதாகும்
யீட்டியசுரமேசுக்காம் இரும்பலேகடுக்காய்சாறு
வாட்டியகுளிர்சுரங்கள் வகைசுக்குமிளகுதூளாம்
பாட்டியரெத்தமூலம் நெய்யினில்மேனைதபாலே. 4

பாலினிலொழியும்பாண்டு மகோதரம்பெருவயறு
மேலும்நீராமைகூகை மிளகுதூள்வெள்வெங்காயம்
சாலவேசன்னிக்கெல்லாம் தேனிஞ்சிசாற்றிலாகும்
ஏலவேசுகஜன்னிக்கு வேப்பெண்ணெயிலிடுகண்ணுக்கே. 5

இடுகண்ணில்கடுகிற்பாதி யிருந்துகற்றாழஞ்சோறு
வடிதயிர்சந்தனங்கள் வைத்துநீக்கட்டமாறும்
படுபருபிளவைவாழை பற்கரையாப்புபுண்கள்
வடுபெருஞ்சிலந்தியாகில் உமிழ்நீரில்குழைத்துப்பூசே. 6

பூசிடுமூலக்குத்துக்கும் புண்ணிற்குமிதுவேயாகும்
சூசிகவலிகுன்மங்கள் தோன்றிடில்நொச்சிச்சாற்றில்
காசங்கள்திரிகடுகு தேனிலின்கலந்துதின்ன
நாசமாம்வாதசூலை நருசுக்குநொச்சிபாறே. 7

பாராய்கபாலவலிமுதலாம் பசாசுபரக்கும்திரிபுகையால்
நேரியெடுக்கும்நீர்சொரிப்புநீர்சலஅடைப்புதாழைவிழுதில்
தீரும்தீராக்கபாலகிரந்தி தீருங்குப்பிச்சாற்றிலிட
தீராய்கொடுக்கபலவிஷமும் தீருந்திரிபிடியே. 8

பிடிக்குந்திரிக்கு முன்னரைக்கில் பிரட்டிசீலையை யுலர வைத்து, யிடிக்கும்வலிக்கும் தனுர்வாதம் யிளைத்தேசாடும் புகைகாட்ட, குடிக்கும்கியாழம் கழற்சியிலைகொடியநொச்சி மாவிலிங்கம், யிடிக்கும்ஜன்னி பதினெட்டும் அநுபானஞ் செய்நூல் விதியே. 9

விதிபால் வந்தமருந்தெல்லாம்வேறேதேடவேண்டாங் காண், பதியாம்வியாதிநாலாயிரம் பகருநற்சதநாற்பத்தெட்டும், துதியாயிணங்கும்குரிப்பரிந்து தூபவகைபநுபானஞ் செயில், துடியாம்தீருமெனவென்று சொன்னார்முனிவர் துகையாக. 10

சொன்னார்மடவார்தங்கட்கு சுதனும்கெற்பம்வரும்படி கேள், முன்னேஅரசங்கொழுந்ததனை மிகஆவின்பால்விட்டரைத்து,முன்னார்குளம்பில்பணவிடைதான் மூட்டிமூன்று நாட்கொடுக்க, பொன்னும்புதல்வருண்டாகும் புலியோர் குறுதிகண்டீரே. 11

கண்டீர்நாவில்பட்டைதனை கருத்தவாட்டுப்பால்தனிலே, கொண்டசீரகம்பொடிகூட்டி குளம்பில்பணவிடைதானுண்டால், பண்டேசூதகத்தில்வரும் உயர்ந்தவாய்வுடன் தீரும், வண்டார்குழல்சேர்மடமானேமலைசேர் முனிவன் வருத்ததுவே. 12

வருத்தபிரமன்விதியாலே வருஞ்சூசிகமாம்வாயுவுடன்
திறக்ஷிமிகுந்தவலிதீரும் தின்னேசொன்னார்விரகுடனே
பருத்தநொச்சிச்சாறுதனில் பாங்காம்சாரணைமிளகுசுக்கு
தொகுத்தகுளம்பில்பணவிடைதான் சொன்னோம்கேட்டுகொள்
[வீரே.

கொள்ளும்பிரவிச்சுதனுக்கு கொடுக்கமருந்துதனைக் கேளு, உள்ளிமுருங்கைபட்டையுடன் வுயர்ந்தபுங்குபெருக்கிலைவேர், விள்ளவரிதாம்திருகுகள்ளி விரைசேருஞ்சிரசமதிலே, கொள்ளும்குளம்பில்பணவிடைதான் சேர்த்துக்கொடுக்கவல்லீரே. 14

வல்லீர்நெஞ்சுவலிகளுக்கு வகையாம்மருந்துதான்கேளீர்
வெல்லும்லவுங்கப்பத்திரியும் விரைசேர்கிராம்பு அதிமதுரம்
சொல்லும்தாளிசபத்திரியும் சிரந்தஆவின்வெண்ணெயுடன்
அல்லேகுளம்பில்பணவிடைதான் அருந்தத்தீரும்கண்டீரே. 15

அருந்தும்தாளியிலையவரி ஆவின்வெண்ணெயதுவுடனே பொருந்துங்குளம்புரெண்டுபணம் போலசேர்த்துக்கொடுப்பீரால், பொருந்தவினையாம்விரியன்விஷம் பேயுந்தீரும்பெரியோர்காள்,வருந்தாதிதனைநீருண்ணவலிபோம்சொன்னோம் மறவீரே. 16

மறவீர்நாவல்கொழுந்துடனே வாய்த்தமிளகுவிராகன் ரெண்டு,முறையாயருந்தவெற்றிலையில் முன்னங்குளம்புபணவிடைதான், பறையாயெல்லாமொன்றாக பரிந்துகொடுக்கவல்லீரேல், பிரவார்நாகங்கடிவிஷமும் பிணியுந்தீரும்பெரியோரே. 17

திருந்தேனின்விஷந்தனக்கும் செய்யான்குத்து துளசிலையில்
சேருங்குளம்புபணவிடைதான் திரமாய்சேர்த்துக்கொடுத்துவிடு
பேருங்கடிவாய்யுமிழ்நீரில் ஊட்டிப்பூசவிஷம்போங்காண்
மாருங்குயிலேமடமானே வாலைகடிக்கனுப்பானங்கேள். 18

கேளாய்வெல்லம்புகையூரல் கிளியேமிளகுபேய்பீர்க்கில்
நாளைசெய்யும்விரைமூன்று நன்றாய்குப்பைமேனியின்பால்
ஆளவரைத்துவதனுள்ளே அன்பாய்குளம்புபணவிடையும்
வேளைகொடுக்கவல்லீராய் விடுமேவாலைவிஷந்தானே. 19

தானேநஞ்சுவலிதனக்கு சாற்றுமருந்துதனைக்கேளாய்
மானேபழையபுளிவெல்லம் வகையாய்சித்திரமூலியுடன்
தேனேகுழம்புமேனியின்பால் திரமாய்விட்டுசேர்த்தரைத்து
வானோர்குழம்பில்பணவிடைதான் வகையாய்கொடுக்கவலிபோமே

வலியேசெய்யும்நீர்கட்டு மாறமருந்துநீகேளாய், நலியா மிளகுவெண்காரம் நன்றாய்பொரித்துகற்கண்டுடனே, மெலியாய்ரெண்டுவிராகன்பொடி மெய்யாவின்பால்நெய்யதனில், புலியநன்குழம்பு பணவிடைதான் புகழ்ந்தேகொடுக்க பிணி போமே. 21

பிணியாம்விஷபாகத்தோடு பின்னும்வீக்கம்தான்தீர, துணியாம்நொச்சிசாறுடனே சொல்லுந்திரிகடுகு தான்கூட்டி, மணியாங்குழம்பு பணவிடைதான் வகையாய்சேர்த்து கொள்வீரே, கெணியாயெழுந்தவீக்கமெல்லாம் கெடுமே சொன்னேன்கேளாயே. 22

கேளாயிந்தவகையெல்லாம் கிளியேபேதிமிகவுண்டாம் பாராய்மயங்கவசம்புசுட்டு பாங்காய்கியாழம்வைத்ததனில், சூடாய்வெண்ணைபாக்களவு சுருக்காய்போட்டு கொடுப்பீராய், மீளாய்பேதியுள்ளதெல்லாம் மின்னேதீரும் மெய் யிதுவே. 23

மெய்யாய்வசம்புதானரைத்து மிதமாய்கலக்கிதண்ணீரில்
கையாலெடுத்துதானருந்த கரையாய்சிற்குந்தான்பேதி
வையாமோரும்பழச்சாறும்வகையாய் கூட்டிதான்கொடுக்க
பையாபேதிதான்திரும் பதமாய்ச்சேர்த்துகொடுப்பீரே. 24

கொடுக்கவசம்புதான்முருங்கை கூறுமயிலிருகுதிராக்ஷத்தில்
தடுக்காபேந்திகொடுப்பீராம் தானேசிற்குமலக்கழிச்சல்
அடுக்காய்வாந்திமிகக்கண்டால் அரனார்சிரககியாழத்தில்
கடுக்காய்சக்கரைகூட்டியிட நலமாய்வாந்திகண்டீரே. 25

## ஷை செய்புளுக்குவிபரம்.

| | | | |
|---|---|---|---|
| மனோசிலை | விராகனிடை-க | பெருங்காயம் | விராகனிடை-க |
| ரசம் | ,, க | கடுகுருணி | ,, க |
| தாளகம் | ,, க | திப்பிலி | ,, க |
| பொரிகாரம் | ,, க | கருஞ்சீரகம் | ,, க |
| நாவி | ,, க | வாளம் | ,, ௬ |

மேற்கண்ட மனோசிலைமுதலாய் நாபிவரையிலுமுள்ள (௫) வகை மருந்துகளையும் பச்சையாகவே கூட்டவேண்டும் அதாவது சுத்திசெய்யவேண்டுவதில்லை மோரும் சாதமும் திருப்தியாகச்சாப்பிட்டு அறைக்கத் துடங்கவேண்டும், முதலாவது தாளகத்தைக் கல்வத்திலிட்டறைத்து அதன்மேல் மனோசிலையைப் போட்டறைத்து பிறகு மற்ற மூன்றுமிட்டறைக்கவும் பெருங்காயம் முதலாம் வாளமட்டிலுள்ள தினுசுகள் ரு-ல், நான்கை யிளம்வருப்பாகவறுத்து கல்லுரலிலிடித்து வஸ்திரகாயஞ்செய்துக் கூட்டியரைக்கவும், வாளத்தை சாணிப்பாலில் கொதிப்பித்து மேலோடுதேட்டி முளை நீக்கி விளக்கெண்ணை (௩) துளிவிட்டு வதக்கிச்சேர்த்து அறைக்க குழம்பாகும் மாட்டுகொம்பு சிமிளில் வைத்துக் கொண்டு ஷை அனுபானப்படி பிரயோகிக்கவும்.

---

## சண்டமாருதக்குழம்பு.

| | | | |
|---|---|---|---|
| காயம் | விராகனிடை-க | சாரம் | விராகனிடை-க |
| ஓமம் | ,, க | சித்திரமூலம் | ,, க |
| சுக்கு | ,, க | பனைவெல்லம் | ,, ச |
| பூநீர் | ,, க | கஸ்தூரிமஞ்சள் | ,, க |
| காரம் | ,, க | | |

இவைகளைக் கல்வத்திலிட்டறைத்து சுண்டக்காய்வீதம் உருண்டைசெய்து சீசாவில் வைத்துக்கொள்ளவும் (அனுபானம்) பத்தாய் அல்லது பிராந்தியில் ஒருமாத்திரைகரைத்துக் கொடுக்க வாந்திபேதியிவைநிற்கும் ஒருசமயம் தாகம்மீறினும் மருந்து வாந்தியானாலும் பனிக்கட்டியென்னும் அயிஸ் கட்டியை பிராந்தியில் கறைத்துக்கொடுக்கவும் தீரும்.

---

## சுடுகாட்டுமீட்டான்குழம்பு.

| | |
|---|---|
| கெந்தி | துருசு |
| ரசம் | இந்துப்பு |
| லிங்கம் | மகிழம்விரை |
| தாரம் | சுக்கு |
| மனேசிலை | திப்பிலி |
| வெண்காரம் | மிளகு |
| நாபி | காயம் |

இவைகளை சமனிடைகொண்டு பொடித்து கல்வத்திலிட்டு அறைக்கவும் அறைக்கையில் பூவந்திப்பழத்தின் சதை கூட்டி அறைத்து செப்புசிமிளில் வைத்துக்கொள்ளவும் அனுபானம் விஷந்தீண்டிவந்தவர்களுக்கு குன்றியளவெடுத்து வெத்திலையில் தடவிக்கொடுக்க விரியன் முதலிய சர்வ விஷங்களும் தீரும் உடனே தவளையைப்பிளந்து கடிவாயில் வைத்துக்கட்டவும் விஷம் மலத்தால்கழியும் பச்சரிசியும் பயரும் கஞ்சிகாய்ச்சிக் கொடுக்கவும் அல்லது முருங்கையீர்க்குசார் காய்ச்சிக் கொடுக்கவும்.

## வீரக்குழம்பு.

| | | |
|---|---|---|
| வீரம் | விராகனிடை-க | |
| பூரம் | ,, | க |
| லிங்கம் | ,, | க |
| வெண்காரம் | ,, | க |
| சாரம் | ,, | ரு |
| ஏலம் | ,, | அ |
| வாளம் | ,, | ய |

இவைகளைக் கல்வத்திலிட்டு வாளத்தைச் சுத்தித்த பிறகு விளக்கெண்ணெயில் புரட்டி சற்றுவெதுப்பி யெடுத்து சேர்த்தறைக்கவும் வாதம் (அச)க்கும் விரோசனத்திற்கும் சன்னிகளுக்கும் குன்றியிடை வெத்திலையில் அல்லது சக்கரையில் கொடுக்கவும் இச்சாபத்தியம்.

## குழம்புவகைபரணி முற்றிற்று.

---

அனுபோகவயித்திய பிரம்மரகசியம் 5-ம் பாகம், 6-ம் பாகம், 7-ம் பாகங்களில் அநேக அற்புத முறைகள் சொல்லப்பட்டிருக்கிறது கடைசி 8-ம்பாக முழுமையும் சுத்தி வகைகள் சொல்லப்பட்டிருக்கிறது.

உ

தேவிசகாயம்.

மூன்றாவது.

# செந்தூரவகைபாணி.

## காளமேகசெந்தூரம்.

| | | |
|---|---|---|
| இரசம் | விராகநிடை-க | |
| தாளகம் | ,, | ௨ |
| கெந்தி | ,, | க |
| லிங்கம் | ,, | க |

இவை நான்கும் கல்வத்திலிட்டு குமரிச்சாரிட்டு ஒரு ஜாமம், பழச்சார்விட்டு ஒருஜாமம் அரைத்து பில்லைதட்டிக் காயவைத்து அகலில்வைத்து மேலோடுமூடி சீலமண் (௩) செய்து (௫) எருவில் புடம்போட செந்தூரமாம் (அனுபானம்) நெய் தேன் வெண்ணெய் இதுகளில் பணவிடை கொடுக்க தந்திமேகம் மதுமேகம் சுக்கிலமேகம் கண்டமாலை இதுகள் தீரும், வயிற்றுநோயிற்கு சக்கரையில் கொடுக்கவும், இச்சாபத்தியம் புளி தள்ளவேண்டியது நோய்திடமறிந்து (௩)நாள் அல்லது (௫) நாள் கொடுக்கவும்.

---

## அன்னபேதிசெந்தூரம்.

அன்னபேதி (க) பலம்வாங்கி பெரும்பட்டை சாரிட்டரைத்து பில்லைதட்டி காயவைத்து ஒட்டிலிட்டு ஓடுமூடி சீலை மண்செய்து (ச) எருவில் புடம்போட செந்தூரமாம் வாந்திக்கு தேனில் பணவிடைகொடுக்க நீங்கும் பத்தியம் பச்சரிசி கஞ்சி கொடுக்கவும்.

இ து வு ம து.

## அன்னபேதிசெந்தூரம்

அன்னபேதி (உ) பலம் வாங்கி சிறுநீராவது பழச்சாராவதுவிட்டு பிட்டுபோல் ஒளரி அகலில்வைத்து மேலோடுமூடி சீலைமண்செய்து (ய) வீருவில்புடம்போட செந்தூரமாம் அநுபானம் தேன் நெய் பசும்பால் இவைகளில் பணவிடைகொடுக்க பாண்டு காமாலை மகோதிரம் பெருவயிர் வீக்கம் இதுகள் தீரும் இருவேளையும் சாப்பிடவும் இச்சாபத்தியம்.

---

## சண்டமாருதசெந்தூரம்.

| | |
|---|---|
| பூரம் | விராகனிடை-ய |
| லிங்கம் | ,, அ |
| வீரம் | ,, உ |
| கெந்தி | ,, க |
| ரசச்செந்தூரம் | ,, உ |

இவைகளைக் கல்வத்திலிட்டு (க) ஜாமம் அரைத்துசீசாவில் வைத்துக்கொள்ளவும் பனவெல்லத்தில் பணவிடைசெந்தூரம்வைத்து சாப்பிடவும் (ரு-எ) நாள் கொள்ளவும் இச்சாபத்தியம் யரு-ஜன்னிவகையும் பீலி பவுத்திரம் வாதம் (அய) வகையும் தனுர்வாதம் விரைவாதம் முக்கல் கடுக்கல் புண் கிரந்தி, வெடிசூலை, கண்டமாலை, பெரும்பாடு, எவ்வித சுரமும் அறையாப்பு சிலந்தி யாவும்தீரும்.

---

## பஞ்சபாணசெந்தூரம்.

| | |
|---|---|
| சூரத்துகற்பூரம் | கெந்தகம் |
| ஜாதிலிங்கம் | ரசம் |
| மனோசிலை | சங்குபாஷாணம் |
| தாளகம் | |

இவைகள் வகைக்கு ஒருபலம்வாங்கி கல்வத்திலிட்டு மேனிச்சாற்றினல் (ரு) ஜாமம் அரைத்து அப்படியே நிழலிலாரவைத்து மறுநாள் கருப்புவெற்றிலைச்சாற்றால் (ச) ஜாமம்

மறுநாள் செம்பருத்திசாற்ருல் (ச) ஜாமம் வெள்ளருக்குச் சாற்றில் துளசிச்சாற்றில் வேலிப்பருத்திச்சாற்றில் பொடு தலைச்சாற்றில் நாளொன்றுக்கு (ச) ஜாமம் குறையாமல் அறைத்து ஒரு சட்டியில் கருப்புவெத்திலைபரப்பி அறைத்த மருந்தை பில்லைதட்டி அதன்மேல்வைத்து மேல்சட்டிமூடி சீலைமண் (எ) செய்து அடுப்பிலேற்றி ஒரேஜாதிவிராகால் (ச) ஜாமம் எரிக்கவும் அடிசட்டி சிவக்கக்கண்டால் நிலை வாக்கி கமலம்போல் எரிக்கவும் இப்படி ஒருநாழிகை பெரித் தபின் யிரக்கி ஆறினபிறகு யெடுக்க செந்தூரமாம் சீசாவில் வைத்துக்கொண்டு இஞ்சிதேன் இவைகளில் (உ) அரிசியிடை கொடுக்கவும்.

சுரம்-கூச, ஜன்னி-யிரு, குட்டம்-யிஅ, கிரந்தி தலைசாய்ந்த வாய்வு-உகூ, வாதம்-அயி, மேகம்-உக, குன்மம்-அ, கிராணி-கூ முடக்குசூலை, வெடிசூலை, கன்னப்புத்து, யோனிப்புத்து, அண்டப்புத்து, கபாலகுட்டம், கண்டமாலை, குலைநோய், அரி கரப்பான், தேமல், குழிவாழை, தொடைவாழை, அழு கண்ணி, அறையாப்பு, கபாலகுத்தல், கண்ணோய், பவுத்தி ரம், பிளவை, ரிணம், மூலம், காசிரோகம், இடுப்புசூலை, இவையெல்லாந் தீரும் இச்சாபத்தியம் நோயின் திடமறிந்து (ரு-எ) நாள் கொடுக்கவும் மறுபத்தியமும் அப்படியே கார்க் கவும் பிறகு ஸ்நானம் செய்விக்கவும் குருகடாக்ஷம்

---

## லிங்கசெந்தூரம்.

முதல்தரமான லிங்கம் ஒருபலம் நிறுத்தெடுத்து சித் திரமூலவேரின் பட்டையைக்கொண்டுவந்து அறைத்து ஷை லிங்கத்திற்கு கவசங்கட்டி சீலைமண்செய்து பத்து எருவில் புடம்போட்டு ஆறியபின் யெடுக்க செந்தூரமாம் தேனிலா வது இஞ்சி ரசத்திலாவது அரிசியிடை கொடுக்கவும் சகல வாய்வுகளையும் கண்டிக்கும் இச்சாபத்தியம்.

## செந்தூரவகைபரணி.

முற்றுப்பெற்றது.

---

****************************

உ

தேவிசகாயம்.

---

# நான்காவது

# மெழுகுவகைபாணி.

சூதகவாய்விற்கு.

## அண்டமெழுகு.

(௪) கோழிமுட்டையை வுடைத்து ஓடு நீங்கலாக சமூலமும் ஒரு கலயத்திலூற்றி (௰௫) எலுமிச்சம் பழச்சார்விட்டு வீரம் பலம்-வ, பூரம்-பலம்-வ, சாரம் பலம்-வ, படிகாரம் பலம்-வ, இவைகளைப் பொடியாகக் கல்வத்திலிட்டறைத்து ஷை கலயத்தில்போட்டு (௫) நாள் சூரியபுடம்வைத்து சுண்டினபிறகு யெடுத்து அறைத்து வைத்துக்கொள்ளவும் அநுபானம் ஒருவேளைக்கு மிளகுபிரமாணமாக (௩) நாள் இருவேளையும் கொள்ளவும் இச்சாபத்தியம்.

---

## குங்குமப்பூமெழுகு.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| குங்குமப்பூ | விராகநிடை- | ௭ | அக்கிராகாரம் | விராகநிடை- | க |
| கோரோஜனை | ,, | ௭ | பளிங்குசாம்பிராணி | ,, | க |
| ரூமஸ்தகி | ,, | ௫ | சிறுநாகப்பூ | ,, | க |
| ஜாதிக்கா | ,, | உ | பழயவெல்லம் | ,, | க |
| கருஞ்சீரகம் | ,, | உ | | | |

இவை யாவும் கல்வத்திலிட்டு தேன் நிதானமாய் விட்டு மெழுகுபதமாய் அறைத்து கிளாசு அல்லது டப்பியில்வைத்துக்கொள்ளவும் மாலை (௬) மணிக்கு எலந்தங்காய்ப் பிரமாணம் சாப்பிடவும் பசும்பால் உபயோகப்படுத்திவந்தால்மிக நன்று (௰-௰௫) நாள் முறையாக சாப்பிட்டுவரவும் சாப்பிடுகிறவரையில் அறைபுளி கூட்டுவது நலமாகும் ஸ்ரீபோகத்திலும் மிகுந்த சுகத்தைக்கொடுக்கும் நாதம் கெட்டிப்படும்.

## வெற்றை விரவாதமெழுகு.

| | | |
|---|---|---|
| மிளகு | பலம் | க |
| பூரம் | களஞ்சி | க |
| லிங்கம் | விராகனிடை | க |

இவையாவுந் தேன்விட்டு ஒருஜாமம் அறைத்து மெழுகு பதத்தில் யெடுத்து வைத்துக்கொள்ளவும் தூதுளங்காய்ப் பிரமாணம் காலைமாலை யிருவேளையுங் கொடுக்கவும் வாய்வு பதார்த்தங்கள் தள்ளுவதுடன் இச்சாபத்திய மிருக்கவும்.

## தோஷாமிர்தமெழுகு.

| | | |
|---|---|---|
| லிங்கம் | விராகனிடை- | உ0 |
| பூரம் | ,, | உ0 |
| ஓமம் | பலம் | க |

இம்மூன்றும் கல்வத்திலிட்டு முலைப்பால்விட்டு (௩) ஜாமம் அறைத்து பிறகு தேன் அரைபலம் கொண்டுவந்து துளிதுளியாய் விட்டு ஒரு ஜாம மறைத்து கோப்பையில் வைத்துக்கொள்ளவும் குண்டுமணிப்பிறமாணம் யெடுத்து தேனிலாவது இஞ்சி ரசத்திலாவது கொடுக்கவும் ஜன்னிசுர தோஷம் தீரும் இச்சாபத்தியம் மாலையில் மிளகு சுக்கு கியாழம் கொடுக்கவும்.

## வீ ர மெ ழு கு.

வீரம் ஒருபலம்கொண்டுவந்து மெல்லியசீலையில்முடிந்து யெடுபத்தாதயிளநீர் (௪) கொண்டுவந்து உடைத்து பழங்கலையத்தில்வூத்தி அடுப்பேற்றி அதில் மேற்படி வீரத்தை விட்டு தோலாந்திரமாகக்கட்டி யெரிக்கவும் இரண்டுநாழிகை எரிந்தானபிறகு கலையத்தை யெடுத்துவிட்டு தொலாந்திரம் கட்டியிருக்கும் வீர்முட்டையை அடுப்புக்குநேராய் தொங்கவிட்டு அடுப்பின்நெருப்பை நன்றாய்க்கிளரி கனகனப்புக்காட்டவும் அந்தநெருப்பு குளிர்ந்தவுடனே முடியையவிழ்த்து மருந்தை பதனம்பண்ணி வைத்துக்கொள்ளவும் (அனுபானம்) மிளகு

பிரமாணம் யெடுத்து தேன் முலைப்பால் அல்லது இஞ்சிரசத்திலாவது கொடுக்கவும் ஜன்னி சுரதோஷம் யாவுந்தீரும், இச்சாபத்தியம் மாலையில் மிளகு கியாழங் கொடுக்கவும்.

## வேருவித வீரமெழுகு.

வீரம், பூரம், லிங்கம், சுத்திசெய்தவாளம், சுக்கு, திப்பிலி, மிளகு, வகைக்கி ஒரு விராகனிடையெடுத்துக் கல்வத்திலிட்டு தேன்விட்டரைத்து சிமிளில் வைத்துக்கொள்ளவும் (அநுபானம்) பேதிக்கு பட்டாணிப்பிரமாணம் சக்கரையில் அல்லது வாழைப்பழத்தில் கொடுக்கவும் பேதி யதிகமானல் மோர்சாதங்கொடுக்கவும், தேனில் இஞ்சிரசத்தில் மிளகுபிரமாணம் கொடுக்க சகலவாய்வுந்தீரும் வாதத்தைக் கேழ்க்கப்பட்டகியாழங்களிலும் கொடுக்கலாம், அந்தியில் சுக்கு மிளகு கியாழங் கொடுக்கவேண்டியது.

## மெழுகுவகைபரணி.

முற்றுப்பெற்றது



இவ்வளவு தெள்ளியநடையாய் அச்சிட்டு பயிரங்கப்படுத்திய அநுபோகவய்த்தியத்திற்கு சரக்கு சுத்திகள் சொல்லவில்லையெனக் கவலைப்படவேண்டாம் இதற்கு முதற்பாகம் வேறேயிருக்கின்றமையால் சகலமும் அதிற் றெறிந்துக்கொள்ளலாம்.

உ

தேசிகசகாயம்.

# ஐந்தாவது

# பற்பவகைபரணி.

## கற்பூரசிலாசத்து பற்பம்.

சிலாசத்து பலம்-க, பொட்டிலுப்பு பலம்-க, பொரிகாரம் பலம்-உ, இவைகளை சுண்ணும்பு தெளிவுநீரில் அரைத்து (ச) பில்லைசெய்து அடுப்புத்தட்டில் காயவைத்து (ச) நாளானபிறகுபெடுத்து நாலுபில்லைக்கும் வெவ்வேறாக சில்லமண்செய்து உலர்த்தி (கூ௰) வரட்டியில் நாலுபில்லையும் வைத்து புடம்போட பற்பமாம் அதைபெடுத்து சீசாவில் வைத்துக்கொள்ளவும் வெண்ணெயிலாவது சிரகக்கியாழத்திலாவது கொடுக்க நீர் உடையும் குளுத்தியான ப்தார்த்தம் சேர்க்கவும் இச்சாபத்தியம்.

## இன்னெருசிலாசத்துவிதபற்பம்.

சிலாசத்து பலம்-க, பொரிகாரம் பலம்-க, இவைகளைப் பொரித்துக்கொண்டு பழச்சாற்றலாட்டி பில்லைதட்டி காயவைத்து பத்து வரட்டியில் புடமிட்டெடுக்கவும் நீரடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, நீர்க்கடுப்பு, நீர்பெரிப்பு, பிரமேகம், வெட்டை இவைதீரும், வெண்ணெயில் கொடுக்கவும் இச்சாபத்தியம்

## இன்னெருவித
## சிலாசத்துபற்பம்.

சிலாசத்து பலம் (க) க்கு நாயுருவிக்கொழுந் தரைத்துக் கவசம்செய்து சுண்ணும்புசில்லைசெய்து (உ௰) வரட்டியில்

புடம் போட பற்பமாகும் சூடுதணியும் யித்துடன் கல்னார் பற்பமும் கலந்துக்கொடுக்கவும்.

## கல்ஞர்பற்பம்.

கல்ஞர் பலம்-க, மேனிச்சார்விட்டரைத்து பில்லை தட்டிக் காயவைத்து மூஞு சீலைசெய்து அகலில்வைத்து மேல் அகல்மூடி சீலைசெய்து (௩௪) வரட்டியில் புடமிட பற்பமாகும்.

## சிங்கிபற்பம்.

சிங்கியென்னும் கலைமான்கொம்பைக் கீத்துகீத்தா புடைத்து வாழைமரத்தடியின் பெருங்கட்டையில் சொருகி வைத்து (௬) நாள் சென்றெடுத்து தத்தியிலையை யிடித்து கனக்கக்கவசமிட்டு (௫) சீலைசெய்து (௫) வரட்டியில் புடம் போட பற்பமாகும்.

## சீனகாரபற்பம்,

சீனகாரமென்னும் படிகாரம் பலம் (க) வசலை யிலையில் ஐந்துயிலை யெண்ணிவைத்துஅரைத்து பில்லைதட்டிக்காய வைத்து ரு சீலைசெய்து (௩௰) வரட்டியில் புடமிட பற்பமாம்

இங்ஙனங்கூறிய (௪) வித

## பற்பஉபயோகவிதி.

கல்ஞர், சிலாசத்து, சிங்கு, படிகாரம், நாலுவிதபற்பமும் சரியிடையாய்க்கலந்து சீசாவில் வைத்துக்கொண்டு வெண்ணையில் ஒரு விராகநிடைவைத்து சாப்பிடவும் இப்படி (௫-௭-ம்) நாள்கொள்ள மேகம் உஷ்ணம் காங்கை தீரும் வெள்ளைக்கு கற்கண்டுப்பொடி (௩) சிட்டிக்கையில் (௨) விராகநிடைவைத்து சாப்பிடவும் புளி புகை போகம் தள்ளவும் இச்சாபத்தியம்.

## தாளகபற்பம்.

ஒருபலம் தாளகத்தைப் பொடியாயிடித்து ஒரு கலயத்திலிட்டு எருக்கன்பால் தளரவிட்டு ஒருநாள் சூரியபுடம்

வைத்தெடுத்து மேலோடுமூடி சீலைமண் செய்து (உ௰) வரட்டியில் புடம்போடவும் பற்பமாகும் தேனில் அரிசியிடை கொடுக்க காச்சல் இருமல்தீரும், அயப்பொடியும் இப்படியே செய்துக்கொள்ளவும்.

---

## பவளபற்பம்.

கெட்டிப்பவளம் 1-பலம்வாங்கி மூசையில்போட்டு அதன் மேல் வெள்ளைபாஷாணம் அரைபலம் பொடித்து பவளத்தின்மேல்போட்டு செப்புத்தகடு தட்டி மேல்வாய்மூடி சீலை மண் (ரு) செய்து (௰ரு) வரட்டியில் புடம்போடவும் ஆறின பிறகெடுத்து வெள்ளெருக்கன் பால்விட்டரைத்து பில்லை தட்டிக் காயவைத்து ஒட்டிலிட்டு மேலோடுமூடி சீலைமண் செய்து (௰) வரட்டியில் புடம்போட்டெடுத்து கல்வத்தில் பொடித்து வைத்துக்கொண்டு ஸ்ரீகள் பிரசவித்தபோது காணுகிற அசாத்தியமான ஜன்னிக்கு அரிசியிடை தேனில் கொடுக்கவும் நீங்கும் இதுசர்வ ஜன்னிக்குமாகும் இச்சாபத்தியம்

## சிங்கி பற்பம்.

கலைமான் கொம்பைப்பிளந்து மேனியிலையை யரைத்து மேலுக்குத் தளமாய்அப்பி முழுப்புடத்திலிட்டுவாங்கி பிறகு ஆவின்பால்விட்டரைத்து பில்லைதட்டிக் காயவைத்து ஒட்டிலிட்டு மேலோடுமூடி திரும்பவும் முழுப்புடம்போட்டு வாங்க பவளம்போல வெண்மையாய் யிருக்கும் ஆவின்நெய்யில் இரண்டு பணவிடைகொள்ள மேகம் உஷ்ணம் காந்தல் நீர் சொரிப்பு நீங்கும் இச்சாபத்தியம்

## லிங்க பற்பம்.

லிங்கம் (க) பலமெடுத்து கடலுப்புஆழாக்குகொண்டு வந்து கருந்துளசிசார்விட்டரைத்துஅதை லிங்கத்திற்கு கவசம் செய்து சீலைசுத்தி காயவைத்து (௰) வரட்டியில் புடம்போட்

டெடுக்கவும் பற்பமாம் ஜன்னிதோஷங்களுக்கும் குளிர்சுரங் களுக்கும் கொடுக்கவும் (அனுபானம்) இஞ்சிசுரசம் தேன் சற்கரை யிதுகளாகும்.

## வெள்ளீயபற்பம்.

வெள்ளீயம் ஒரு பலங் கொண்டுவந்து இலைபோல்தகடு தட்டி நூலைப்போல் சன்னப்பொடிகளாகக் கத்தரித்து வைத்துக்கொண்டு புதியசடைக்கஞ்சா ஒருபலங் கொண்டு வந்து நெகிழ அறைத்து ஒரு வட்டமான ஓட்டுபில்லையில் பாதிவைத்து அதன்மேல் கத்தரித்தபொடிகளைப் பரப்பி மேலே அறைத்த பில்லையைவைத்து மேலோடுமூடிசீலைமண் (௫) செய்து (௫0) வரட்டியில் புடமிட்டெடுக்கவும் பற்பமா கும்மேகங்களுக்கு வெண்ணெய் நெய்யில் பிரயோகப் படுத் தலாம் இச்சாபத்தியம்.

பற்பவகைபரணி முற்றுப்பெற்றது.

## சுகபேதி என்னும் ஆபீஸ் மாத்திரைகள்.

தாங்கள் இரவில் போஜனஞ் செய்துவிட்டு படுக்கும் போது 3-அல்லது 4-மாத்திரைகள் யெடுத்து முழுமாத்திரை களாக வாயில்போட்டு விழுங்கிவிட்டு கொஞ்சம் வெந்நீர் சாப்பிடவேண்டியது. வாய் கசக்காது நெஞ்சு கரகரப்பிருக் காது. வாய் குமட்டாது, வாந்தி வராது, வயிற்றுவலி, எடுக் காது, வழக்கம்போல் சாதாரணமாய் நித்திரை செய்யலாம் விடியற்காலை ஐந்துமணி சுமாருக்கு தானு யெழுந்திருக்கச் செய்து நாலைந்துவிசை பேதியாகும். காலையில்காப்பி, ஆப் பம், ரொட்டி, கறி, சூப்புசாதம், மிளகு நீர்சாதம், தாம்பூல மும் தின்னலாம், இரவிலெத்தனை மாத்திரைதின்றார்களோ அத்தனைவிசைதான்பேதியாகும், காலையில் வழக்கம்போல் உத்தியோகம் அல்லது எவ்விதவேலைகட்கும் தடையில்லா மல் போகலாம். மேற்சொன்னபடி இரவில் சாப்பிட பிரிய மில்லாதவர்கள் காலையில் சோம்பு அதிமதுரம் கியாழம் வைத்து அதில் 2-3 மாத்திரை வீதஞ்சாப்பிட்டால் வெகு சவுக்கியமாய்ப் பேதியாகும். குழந்தைகள் முதல் யாவரும் பயமில்லாமல் சாப்பிடலாம். 2-டஜன் மாத்திரைக ளடங்கிய ஒருபுட்டியின் விலை அணு 4.

எமது விலாசம்: பூ. சு. குப்புசாமி முதலியார் அண்டு சன்ஸ்,
வேப்பேரி போஸ்டு, மதராஸ்.

உ

தேவிசகாயம்.



# ஆறாவது

# சூரணவகைபாணி.

## கழிச்சலுக்கு

## கபாட சூரணம்.

தயிரில் வூறப்போட்டு உலர்த்திய சுண்டக்காய்வற்றல் கருவேப்பிலை ஓமம்பழகிய மாங்காய்பருப்பு அடைதட்டி புலர்ந்த நெல்லிக்காயூருகாய் மாதளம்பழத்தோல் வெந்தியம் இவை வகைக்கி கால்பலம், ஜாதிக்காய் ஒன்று, எட்டு திறுசுகளும் கல்லுரலிலிட்டு யிடித்து வஸ்திரகாயம்செய்து வைத்துக்கொண்டு வடிகட்டி நீர்போக்கிய எருமைத்தயிர் அறையாழாக்கில் ஷை சூரணம் கால்பலம்போட்டு சாப்பிடவும் இப்படி யிருவேளையும் மூன்றுநாள்சாப்பிட வயிரிரைச்சல் அதிசாரம் மூலக்கிராணி கழிச்சல் பவனவாயெரிச்சல் இவை தீரும் காரம் மட்டாகக்கூட்டி போஜனஞ்செய்யவும் கழிச்சலுக்குத் தகுந்த பிரயோகமென்றறிய.

---

குன்மம் (அ) க்கும்.

## உப்புசூரணம்.

உப்பு படி-க, பெருமைமோர்படி-க, வரி குமட்டிச்சார் படி-க, இந்துப்பு, வெடியுப்பு, சவுட்டுப்பு, வளையலுப்பு, வகைக்குப் பலம் அரிக்சால் இவையாவும் ஒன்றாகப்போட்டு அடுப்பிலேற்றி பெரித்துக்கொண்டிருப்பதுடன் பூவரசங்குச்சியினால்கிளரவும்சற்கரைப்போலாகும்சமயத்தில்யிரக்கி வைத்துக்கொள்ளவும் ஒரு விராகனிடைஉப்புவாயில்போட்டுக்கொண்டு நீராகாரம்சாப்பிடவும் வாய்வு, சோகை, காமாலை, எரிவு கவிசை கிரிகிச்சினம்கெண்டை இவைதீரும் இச்சா

பத்தியம் குன்மமாருக்கும் ஓர்வித தகுந்த பிரயோக மிது வாகும்.

## இஞ்சிசூரணம்.

மேல்பரணிசீவிய இஞ்சி பத்துபலம் நிறுத்தெடுத்து பில்லை பில்லையா யருத்தெடுத்து நெய்யில் வருத்து பொடி செய்து வைத்துக்கொண்டு சுக்கு, திப்பிலி, மிளகு, ஏலம், கிராம்பு, ஓமம், சீரகம், வாலுழுவை, ஜாதிக்கா, திப்பிலி மூலம், அதிமதுரம், குராசானிஓமம், அமுக்குரா, கசகசா, லவுங்கப்பத்திரி, கொத்தமல்லி, பேரீச்சு, முந்திரிக்கை, வகைக்குக் கால்பலம் இளம்வருப்பாக வருத்து சூரணம் செய்து சீனிபலம் பத்து-பொடித்து யாவும் ஒன்றாய்க்கலந்து வைத்துக்கொண்டு வேளைக்கி கால்பலம் வீதமாக காலை மாலை இருவேளையும் சாப்பிட்டுவர உஷ்ணம் பித்தவாய்வு தீரும் பசிதீபனம் உண்டாம் அன்றாட மலம் பரிசுத்தமாய் கழியும்.

## கருங்கோழிசூரணம்.

முத்தின கருப்புச்சாவல் கொண்டுவந்து மயிர்களைப் போக்கி கால்தலை அருத்தெரிந்துவிட்டு முதுகைக்கீரி வயற்றிலுள்ள குடல்முதலான அசுத்தங்களை நீக்கி வைத்துக் கொண்டு,

| | |
|---|---|
| இந்துப்பு | கருஞ்சீரகம் |
| கல்லுப்பு | வெள்ளுள்ளி |
| வளையலுப்பு | சீரகம் |
| சவுட்டுப்பு | வாய்விளங்கம் |
| கரியுப்பு | ஜாதிக்காய் |
| கிராம்பு | லவுங்கப்பத்திரி |
| சிறுநாகப்பூ | ஏலம் |
| பெருங்காயம் | தாளிசப்பத்திரி |
| சுக்கு | ஓமம் |
| மிளகு | நவாச்சாரம் |
| திப்பிலி | சத்திசாரம் |

இவைகள் வகைக்கி (கலவ) விராகனிடை வாங்கி இடித்து வஸ்திரகாயஞ்செய்து கல்வத்திலிட்டு பிரண்டைச்சார், சித்

திரைமூலச்சார், வேலிப்பருத்திச்சார், பேய்தும்மட்டிச்சார் நால்வகைச்சாற்றிலும் (௪) நாழிகை அறைத்து குக்குடத்தில் வயற்றிலடைத்து நூலினல் தைத்துவிடவும் பெருஞ் சட்டியாக இரண்டு கொண்டுவந்து இரண்டிற்கும் உட்புரத்தில் ஷை சாற்றை தளமாய்ப்பூசி ஒருசட்டியில் குக்குடத்தை வைத்து கரிச்சாலைச்சாறு (௪) படி, மேனிச்சாறு (௪) படி, பசுங்கோமியம் (௪) படி, ஆக (௰உ) படியும் ஊத்தி மேல்சட்டி மூடி வாய்தெரியாமல் மண்சீலைசெய்து ஒருஜாதி விரகால் யெரிக்கவும் சாரெல்லாம் வற்றுமளவும் யெரித்து யிரக்கிக் கொண்டு எலும்பெல்லாம் போக்கி மற்றயாவற்றும் சூரணமாகவறைத்து சீசாவில்வைத்துக்கொள்ளவும் வேளைவொன்றுக்கு திருகடிப்பிரமாணம் யிருவேளையும் சாப்பிடவும் வியாதிக்கிசைந்தவாறு (௰-உ௰-௪௰) நாள் சாப்பிடவும் அஷ்டகுன்மம், சோகை, மகோதரம், பாண்டு, நீர்க்கோவை, வெப்பு, காச்சலினல்வரும் கெண்டைக்கட்டி, வாய்வு, வாதம் இவைகள் தீரும், மீன் மரக்கரிகள் ஆகாது தயிர், மோர், நெய், வெள்ளாட்டுக்கரி வத்தல். இதுகள் ஆகும்.

---

## வெள்ளாட்டு ஒதப்பைசூரணம்.

வெள்ளாட்டு ஒதப்பையென்பது ஆட்டினது தீனிக் குடலென்பர் அதைக்கொண்டுவந்து ஜலத்தினல் அலம்பி சுத்திசெய்து பிழிந்து காயவைத்து யிடித்து சூரணமாக்கி (உ) பலம் நிருத்தெடுத்துக்கொண்டு,

| | |
|---|---|
| * குங்குமப்பூ | சித்தரத்தை |
| * கோரோஜனம் | கருஞ்சீரகம் |
| * கற்கண்டு | கோஷ்டம் |
| * மனோசிலை | நெற்பொரி |
| சீரகம் | ஆடாதோடைவேர் |
| கிராம்பு | திப்பிலிமூலம் |

இவைகள்வகைக்கு (௧௰) விராகனிடையாக வாங்கி * இந்த அடையாளம்வைத்தநாலுதினுசும் நீங்க மற்றதை இளம்வறுப்பாகவறுத்து யாவும் ஒன்றிட்டு யிடித்து சூரணம் செய்து

முன்செய்த சூரணத்துடன் கலந்து வெள்ளாட்டுப்பாலில் பிசரி உலர்த்திவைத்துக்கொள்ளவும், பசும்நெய்யில் திரி கடிப்பிரமாணம்வைத்து சாப்பிடவும் இப்படி இருவேளை அறைமண்டலம் கொள்ளவும்.

சேத்துமம் தொண்ணூற்றியாறு, காசம் எண்பது, யீளை, இருமல், வாதம், பித்தம், பித்தவாய்வு, வரட்சி, உப்பிசம், வாந்தி, யிறைப்பு, சகலமுந்தீரும் வெள்ளாட்டுக்சரி வத்தல் நெய்பால் ஆகும் தயிர், மோர், புளிப்பு, கைப்பு, புகை, போகம், லாகிரி, ஆகாது.

---

## ஸ்ரீ தந்த சூரணம்.

| | | |
|---|---|---|
| அன்னபேதி | விராகநிடை-ரு | |
| அண்டவாளப்பொடி | ,, | அ |
| படிகாரம் | ,, | ரு |
| மாசிக்காய் | ,, | ரு |
| துருசு | ,, | ரு |
| வெள்ளைக்காசுகட்டி | ,, | ரு |
| குராசானி ஓமம் | ,, | ரு |
| வசம்பு | ,, | ரு |
| கொட்டைப்பாக்கு | ,, | ச |
| ரசபற்பம் | ,, | ரு |
| வேப்பம்வேர்பட்டை | ,, | ச |
| அமுக்குராவேர் | ,, | ரு |

இவைகளைக் கல்லுரலிலிட்டு யிடித்து தூள்செய்து வஸ்திரகாயம்மிட்டு டப்பியில்வைத்துக்கொள்ளவும்இரவில்போஜனம் செய்வதற்கு முன்னர் இந்த சூரணத்தில் ஒரு சிட்டிக்கை யெடுத்து பல்தேய்த்து வென்னீரினால் வாய்நன்றாகக் கொப்பளித்து சுத்திசெய்துக்கொண்ட பிறகு அன்னம் பொசித்தூங்கவும் இப்படி சதாகாலம் இரவில் துலக்கிவருவதினால் பெண்களுக்கு பற்களிருகுவதுமன்றி மாதவிடாயென்னும் ரகசியஸ்தானம் குறுகலாகும் அதனால் தேககாந்தியும் முகவசீகரமும் பெண்களுக்கு வலிவுமுண்டாகும் இப்படி புருஷருக்கன்று.

நாபிரெணத்திற்கு

## குங்கிலியச்சூரணம்.

வெள்ளைகுங்கிலியம் ஒருபலம்கொண்டுவந்து (கு) மிள நீர் உடைத்து சட்டியில் ஊற்றி குங்கிலியக் கட்டியை அதில் போட்டு அடுப்பேற்றி நீர் சுண்டுகிறவரையில் எரித்துபிறகு குங்கிலியத்தை கல்வத்திலிட்டுப் பொடித்து சூரணமாக்கி புட்டியில் வைத்துக்கொள்ளவும் இரண்டு அரிசியிடை சூரணத்தை வெண்ணெய் அல்லது நெய்யில்குழைத்துக் கொடுக்கவும் நாபிரெணம் உலர்ந்து சூடுதணியும்.

---

## திரிகடுகுசூரணம்.

சுக்கு, திப்பிலி, மிளகு, சரியிடை தூக்கி உலர்த்தி யிடித்து வஸ்திரகாயஞ்செய்து சீசாவில் வைத்துக்கொண்டு வேண்டியபோது காலணாயிடை சூரணத்தை பனைவெல்லம் கூட்டி பிசைந்து சாப்பிடவும் (அ-ம-மரு) நாள் கொள்ள வாய்வுகள் மாந்தக்கழிச்சல் முதலிய வியாதிகள் தீரும் மற்ற மேகாதிபற்பங்களுக்கும் இது அனுபானமென்றறிக.

சூ ர ண வ கை ப ர ணி
முற்றிற்று.

---

******************************

உ

வேலுமயிலுந்துணை

ஏழாவது

# எண்ணெய் வகைபுராணி.

பிள்ளைகள் கணத்திற்கும்

## பெரியவர்கள் மேகத்திற்கும் எண்ணெய்.

| | | |
|---|---|---|
| அவுரிச்சார் | படி | வ |
| குப்பைமேனிச்சார் | ,, | வ |
| சித்தாமணக்கெண்ணெய் | ,, | வ |

இம்மூன்றும் ஒன்றாய்க்கலந்து அடுப்பேற்றி கருப்பு வெத்திலைச்சார் (உ) ரூபாயிடைவிட்டு ஒருநாழிகையெரித்து வசம்புயிடித்து வஸ்திரகாயம் செய்து சித்தாமணக்கெண்ணை விட்டரைத்த விழுது (உ) ரூபாயிடை அத்துடன் போட்டு கலக்கி மெழுகுபதமாகுமட்டும் காய்ச்சி வடித்து பத்திரப் படுத்திவைத்துக்கொண்டு நாள்வொன்றுக்கு கரண்டிவீதம் (ரு) அல்லது (எ) நாள் கொடுக்கவும் இச்சாபத்தியம் வயற்றிலுள்ள கசடெல்லாம்போகும்.

---

ஸ்ரீபோக மேகத்தால்வந்த

## வெள்ளைக்கு எண்ணெய்.

| | | |
|---|---|---|
| பரங்கிச்செக்கை | பலம் | ௩ |
| பீச்செங்கன்வேர் | ,, | உ |
| பூமிசக்கரைக்கிழங்கு | ,, | க |
| நரிமிரட்டிவேர் | ,, | க |
| மிளகரணைவேர் | ,, | க |

| | | |
|---|---|---|
| சக்கு | பலம் | க |
| தானிக்காய் | ,, | க |
| கருஞ்சீரகம் | ,, | க |
| முதல்தரம் சந்தனம் | ,, | க |
| ஆடுதின்னாப்பாளை | ,, | உ |
| மாவிலிங்கம்பட்டை | ,, | உ |

இவைகளை யுலர்த்தி யிடித்து வஸ்திரகாயம் செய்து (ய) பலம் சித்தாமணக்கெண்ணெயில் கலந்து அடுப்பேற்றி மெழுகுபதமாய்க் காய்ச்சி யிறக்கும்போது பூரம் (உஉ) விராகனிடையெடுத்து ஷை எண்ணெயிட்டரைத்து கலக்கி வைத்துக்கொண்டு வேளைக்கு கரண்டிவீதம் (ரு) அல்லது (ரு-எ) நாள் சாப்பிடவும். கொள்ளு, எள்ளு, பூசினி, அவுத்தி, மீன், கருவாடு, லாகிரி, புகை, போகம் இவையாகாது மறுபத்தியமும் இவ்வாறிருந்து ஓமம்தேய்த்துத் தலை முழுகவும்.

---

## கொறுக்குவெள்ளைக்கு எண்ணெய்.

| | | |
|---|---|---|
| பூரம் | விராகனிடை- | க |
| ஓமம் | ,, | க |
| ஏலம் | ,, | க |
| லவுங்கம் | ,, | அ |

இவை நான்கும் செம்பருத்திச்சார்விட்டு (ச) ஜாம மறைத்து (ரு) பலம் விளக்கெண்ணெயில் கலக்கி ஒருநாள் சூரியபுடம்வைத்து மறுநாள் முதல் காலையில் கரண்டிவீதம் (ரு) அல்லது (எ) நாள் சாப்பிடவும் இச்சாபத்தியம் மறுபத்தியம் அவ்வாறே யிருக்கவும் தீரும்.

---

## பொக்குமேகத்திற்கு எண்ணெய்.

அகத்திச்சார், வெங்காயச்சார், மணத்தக்காளிச் சார் வகைக்குபலம்-உ, உத்தாமணிச்சார் உழக்கு, விளக்கெண்ணெய்படி (உ) இவை யாவும் ஒன்றாய்க்கலந்து பூரம் (உஉ) விராக

நிடையெடுத்து ஷெயெண்ணெய்விட்டு அரைத்து அத்துடன் கலேக்கி சூரியபுடம் மூன்றுநாள் வைத்தெடுத்து காலையில் கரண்டிவீதம் (ரு-எ) நாள் சாப்பிடவும் கடும்பத்தியமிருக்கவும் மாலையில் திருகடுகுகியாழும் கொடுக்கவும்.

---

## கைகால்பிடிப்புக்கு யெண்ணெய்.

| | | |
|---|---|---|
| விளக்கெண்ணெய் | பலம் | ம |
| சுத்திசெய்தவாளம் | விராகநிடை | ச |
| ஏலம் | ,, | உ |
| சுக்கு | ,, | உ |
| பூரம் | ,, | உ |
| புங்கம்பால் | பலம் | க |

இம்மருந்துகள் நாலுவகையும் கல்வத்திலிட்டு விளக்கெண்ணெய்விட்டறைத்து ஷெயெண்ணெயில்கலேக்கி மூன்று நாள் சூரியபுடம் வைத்தெடுத்து காலையில் கரண்டிவீதம் (ரு-எ)நாள் சாப்பிடவும் சுட்டபுளி வருத்தவும்புகூட்டவும்.

---

## விரைவாதயெண்ணெய்.

| | | |
|---|---|---|
| சித்தாமணக்கெண்ணெய் | படி | ௨ |
| குப்பைமேனிச்சார் | ,, | அரிக்கால் |
| முடக்கொத்தான்சார் | ,, | அரிக்கால் |
| வெள்ளேக்காக்காட்டான்சார் | ,, | அரிக்கால் |
| கெச்சக்காய்வேர் | பலம் | ௨ |
| வெள்ளைப்பூண்டு | ,, | வ |
| கருஞ்சீரகம் | ,, | வ |
| வசம்பு | ,, | வ |

கடை-சரக்குயாவும்பிடித்துபெண்ணெய்விட்டறைத்து ஷெயெண்ணெயுடன்கலேக்கி அடுப்பேற்றி மெழுகுபதமாய்க் காய்ச்சிவடித்து (ரு) அல்லது (எ)நாள் சாப்பிடவும் வாய்வு பண்டங்கள் ஆகாது இச்சாபத்தியமிருக்கவும்.

## குளித்தியெண்ணெய்.

மணத்தக்காளிரசம் படி-வ, கத்தாழைமடல்சோறு பலம்-ரு, பறங்கிச்செக்கை பலம் மூணுவீசம், கண்ணுல முருக்கன் பட்டைரசம் ஆழாக்கு, வெள்ளை வெங்காயரசம் பலம்-உ௦, சித்தாமணக்கெண்ணெய்படி-வ, பேயம்வாழைப் பழம்-ட, வெந்தியம்விராகனிடை-க, பனவெட்டு விராக னிடை-உ௦, கற்கண்டு விராகனிடை-உ௦, இவையாவும் ஒன் றாய்க்கலந்து அடுப்பேற்றி யிளம்பதமாய்க்காய்ச்சி யிறக்கி காலையில் கரண்டிவீதம் 7-நாள்சாப்பிடவும் இச்சாபத்தியம்.

---

## சகலரெணத்திற்கும் யெண்ணெய்.

| | | |
|---|---|---|
| கொடிக்கள்ளிச்சார் | படி-அரிக்கால் | |
| சித்திரமூலவேர் | பலம் | க |
| எருக்கன்வேர் | ,, | க |
| கொடிக்கள்ளிவேர் | ,, | க |
| அமுக்கனுங்கிழங்கு | ,, | க |
| ரசம் | களஞ்சி | க |
| ரசச்செந்தூரம் | ,, | க |
| கெந்தகம் | ,, | க |

வேறுவகையாவும் யிடித்து சூரணித்து மற்றசரக்குயா வும் கல்வத்தில் இடித்த விளக்கெண்ணெய்வார்த்து (உ)ஜா மம் அறைத்து ஒருபடி விளக்கெண்ணெயில் போட்டுக் கலக்கி ஷை கள்ளிச்சாறும்விட்டு மெழுகுபதமாய்க் காய்ச்சி வடித்து காலையில் உச்சிக்கரண்டிவீதம் (ரு) அல்லது (எ) நாள்சாப்பிடவும் இச்சாபத்தியம் அறைபுளி அறைகாரம் சேர்க்கவும் சுட்டபுளி வறுத்தஉப்புசேர்ப்பதே உத்தமம்.

---

## வெள்ளெண்ணெய்.

| | | | |
|---|---|---|---|
| சுக்கு | விராகனிடை-உ௦ | வாளம் | விராகனிடை-உ |
| ஏலரிசி | ,, உ௦ | பூரம் | ,, உ |

இவைகளை கல்வத்திலிட்டு விளக்கெண்ணெய் விட்டு இரண்டுஜாமம் அறைத்து (ம) பலம் விளக்கெண்ணெயில் கலக்கி ஒருநாள் சூரியபுடம்வைத் தெடுத்துக்கொள்ளவும் குழந்தைகள் கால்சிரங்கு தலைச்சிரங்கு மாந்தம் கணம்பொருமல் வாய்வுகள் யாவும் தீரும் காலையில் கரண்டிவீதம் (ந) நாள் (எ) நாள்கொடுக்கவும் இச்சாபத்தியம்.

---

ஒட்டுப்புண் கண்டமாலை மேகவாய்வு பக்கசூலை இதுகட்கு.

## இரசகற்பூர யெண்ணெய்.

| | |
|---|---|
| பூரம் | விராகநிடை-கவ |
| லவுங்கம் | ,, க |
| மிளகு | ,, க |
| பரங்கிச்செக்கை | ,, க |

இவைகளை உலர்த்தி யிடித்துகல்வத்திலிட்டு பரித்தியிலைச்சார்விட்டு ஒருஜாமம் அறைத்து (ம) பலம் விளக்கெண்ணெயில்கலைக்கி அத்துடன் பரித்தியிலைச்சாறும் அரையாழாக்கு விட்டு நன்றாய்க்கலைக்கி ஒருநாள் சூரியபுடம்வைத்தெடுத்துக்கொண்டு காலையில் உச்சிக்கரண்டி வீதம் (ரு)நாள் அல்லது (எ) நாள் சாப்பிடவும் கடும்பத்தியமிருக்கவும்.

---

## மாந்த யெண்ணெய்.

| | |
|---|---|
| சுக்கு | கோஷ்டம் |
| திப்பிலி | ஜாதிக்காய் |
| மிளகு | லவுங்கம் |
| ஓமம் | ஜாபத்திரி |
| சீரகம் | அரத்தை |
| கருஞ்சீரகம் | சித்தரத்தை |
| அக்கிராகாரம் | சம்புங்கிமொக்கு |
| குரோசாணியோமம் | சுருள்பட்டை |
| அதிமதுரம் | காட்டுசீரகம் |

இவைகள் வகைக்கு விராகநிடை-க, கடுகுரோகணி பலம்-உ, மயிர் மாணிக்கம் வேரின் பட்டை பலம்-உ, இவை

கள் யாவும் வெய்யலில் உலர்த்தி யிடித்து வஸ்திரகாயஞ் செய்து முக்காற்படி விளக்கெண்ணெயில்போட்டுக் கலக்கி வைத்துக்கொண்டு பூரம்விராகனிடை-ரு, விளக்கெண்ணெய் விட்டு ஒருஜாமம் அரைத்து ஷை எண்ணெயில் நன்றாய்க் கலக்கி சூரியபுடம் ஒருநாள் வைத்தெடுத்து காலையில் உச்சிகரண்டி வீதம் (ரு-எ-டி) நாள் சாப்பிடவும் மாந்தம், உட்காச்சல், கணம், மேகத்தால்வந்த வியாதிகள், வாய்ரிணம், அட்சரம், அஜீர்ணம், இவைகள் தீரும், மீன், கருவாடு, மாமிசம், யிரைச்சிபாகாது இச்சாபத்தியம்.

---

## அச்சரத்திற்கு யெண்ணெய்.

| | |
|---|---|
| வசம்பு | புளிக்கருணைகிழங்கு |
| வெங்காயம் | வெள்ளருகு |
| கருஞ்சீரகம் | நஞ்சறுப்பான்வேறு |
| பெருங்கிழங்கு | கடுகுரோகணி |
| நிலப்பனங்கிழங்கு | தும்பராஷ்டம் |
| காட்டுக்கருணைக்கிழங்கு | |

இவைகள் வகைக்கி பலம்-க, ஆத்து தும்மட்டிக்காய்-உ, சவுரிக்கிழங்குபலம்-ச, இந்த திலுசுக்கள் யாவும் பஞ்சுபோலிடித்து ஒருபடி விளக்கெண்ணெயில்போட்டுக்காய்ச்சி வடித்து வைத்துக்கொண்டு உச்சிக்கரண்டி யளவு வார்க்கவும் (ச-ரு) விசைபேதியாகும் அதிகமாய்பேதியானல் ஓமம் கொண்டுவந்து வென்னீரில் அரைத்து அந்தபால் பிழிந்து க-அல்லது-உ, பாலடைவார்க்கவும் எண்ணெய் (ரு) நாள் கொடுக்கவும் சுட்டபுளி வருத்தவுப்புகூட்டவும் சிறுபிள்ளையானல் தாய்பத்தியம் இருக்கவேண்டியது.

---

## கரப்பானுக்கு யெண்ணெய்.

| | |
|---|---|
| வசம்பு | முளகருணை |
| கருஞ்சீரகம் | சங்கங்குப்பியிலை |
| கார்போகரிசி | செங்கத்தாரியிலை |
| நீரடிமுத்து | கடுகுரோகணி |
| வெங்காயம் | செப்புறுப்பட்டை |
| சங்கம்பட்டை | |

இவை வகைக்கி பலம் (க) எண்ணெய்படி (க) இந்த மருந்தெல்லாம் பஞ்சுபோலிடித்து எண்ணெயில்போட்டு கடுகு திரளக்காய்ச்சி வடித்து சிறுகரண்டிவீதம் (ந-ரு) நாள் கொடுக்கவும் அடியிலுள்ள கடுகைபெடுத்து கெந்தகம் சேர்த்தரைத்து கரப்பான் ரிணத்தின்பேரில் பூசவும்.

## எண்ணெய்வகைபரணி.

முற்றுப்பெற்றது.

---

உ

தேவிசகாயம்.

எட்டாவது

# தைலவகைபரணி.

## அண்டத்தைலம்.

கோழிமுட்டை (௰) கொண்டுவந்து அவித்து மஞ்சள் கருவையெடுத்து எண்ணெய்பழகிய சட்டியில்போட்டு அடுப்பில் வைத்து எரித்தால் தைலமிறங்கும் எரிக்கும்போது கிளறிக்கொண்டிருக்க வேண்டியது அத்தைலத்தை ஒரு கோப்பையில் யிருத்துக்கொண்டு பிறகு இரண்டுபலம் பூண்டுகொண்டுவந்து மேற்றோல் உரித்து கல்வத்தில்போட்டு அறைத்து கொஞ்சம் உமிபோட்டுப் பிசரி பிழிந்தால் தைலம்யிறங்கும் கஸ்தூரிவிராகனிடை (வ) குங்குமப்பூ விராகனிடை (௨) கோரோஜனை விராகனிடை (௨) இம்மூன்றும் பூண்டு தைலத்தில் குழைத்து மேற்படி அண்டத்தைலம் ஒன்றாய்க்கலந்து குலுக்கி சீசாவில் வைத்துக்கொண்டு பெரிய துட்டிடை நாக்கில் தடவவும் சகலதோஷமும் தீரும் நாவரட்சி வாய்வு முதலானதும் தீரும் இப்படி (௩-௫) அல்லது (௭) நாள் கொடுக்கவும் கடும்பத்தியம்.

---

## தலைவலிக்கிதைலம்.

| | | |
|---|---|---|
| இஞ்சிச்சாறு | படி | அரிக்கால் |
| கருஞ்செம்பைச்சாறு | ,, | ,, |
| கஸ்தூரிமஞ்சள் | பலம் | ௧ |
| மிளகு | ,, | ௰ |

இரண்டுவகையும் பிடித்து சூரணித்து (௨/௪) படி நல்லெண்ணெயில்போட்டு இருவகைச்சாறும் ஊத்தி அடுப்பேற்றி

கடுகுபதத்தில் காய்ச்சியிரக்கி (௪) நாள் வட்டமாக (௪) ஸ்நானம்செய்யவும் தீரும்.

---

கண்சாலேசுரத்திற்கு

## சந்தனாதித்தைலம்.

| | | |
|---|---|---|
| சந்தன அத்தர் | பலம் | வ |
| கஸ்தூரி | ,, | அரிக்கால் |
| ஓமப்பூ | ,, | ,, |
| வலாரிவேர் | ,, | ,, |
| அவுரிவேர் | ,, | ,, |
| மாவிலிங்கம்வேர் | ,, | ,, |
| பொன்னாங்கண்ணிவேர் | ,, | ,, |
| ஒரெலைத்தாமரைவேர் | ,, | ,, |
| செப்புநெரிஞ்சிவேர் | ,, | ,, |
| அமுக்கனாங்கிழங்கு | ,, | ,, |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | ,, |

இவைகளில் கஸ்தூரியும் அத்தரும்தவிர மற்றதினுசுகளை வெய்யலில் உலர்த்தி யிடித்து சூரணம்செய்து அறைப்படி நல்லெண்ணெயில் போட்டு கடுகுபதமாய்க் காய்ச்சி வடித்து (௪) நாள் வட்டமாக நாலுஸ்நானம் செய்யவும் கண்சாலேசுரம் உடனே நீங்கிப்போகும்.

---

## கழுத்திசுவுக்குத்தைலம்.

ஒரு பேய்த்துமட்டிக்காயை சிறு பில்லைகளாக அறுத்து ௫-பலம் நல்லெண்ணெயில் போட்டு துட்டிடை கிச்சிலிக்கிழங்கு துட்டிடை கஸ்தூரி மஞ்சள் ஒருவிராகனிடை கஸ்தூரி இவைகளைப் பொடித்து எண்ணெயில்போட்டு காய்ச்சி தலைமுழுகிவரவும் கழுத்திசுப்பு நீங்கும்.

---

சர்வரிணத்திற்கும்

## இங்கித்தைலம்.

முதார்சிங்கி — படிகாரம்
கெந்தகம் — நீலம்
சூதகம் — பறங்கிச்செக்கை
நாவி — துத்தம்
வசம்பு — கடுக்கா

இவைகளை வகைக்கி பலம் (வ) யெடுத்து யிடித்து தூள் செய்துவைத்துக்கொண்டு புங்கம்பால் ஒதியம்பால்வகைக்கி ஆழாக்கு தேங்காயைத்திரிகி உழக்கு பால்பிழிந்து அந்தப் பாலைக்காச்சி நெய்யெடுத்து அந்தநெய்யில் சரக்குத்தூளை சேர்த்து ஷை இருவகைப்பாலும் விட்டு வெங்காயச்சார் ஆழாக்கு விட்டு கடுகு திரளக்காய்ச்சி இரக்கி வைத்துக் கொண்டு அரையாப்பு ரிணம் ஆராதபுண், புரைரிணம், குழிப்புண், இரத்தக்கசிவு, ரிணம், ஆரியாரி சினக்கும் ஆனை ரிணம், சிங்கிரிணம், இதுகளுக்கெல்லாம் பூசவும் ஆரிவிடும்.

தைலவகைபாணி

முற்றுப்பெற்றது.



இவ்வளவு வெள்ளியநடையாய் அச்சிட்டு பயிரங்கப் படுத்திய அனுபோகவயித்தியத்திற்கு சரக்கு சுத்திகள் சொல்லவில்லையெனக் கவலைப்பட வேண்டாம் இதற்கு முதற்பாகத்தில் சகலமும் அதிற் தெரிந்துக்கொள்ளலாம்

153

உ

தேவிசகாயம்.

ஒ ன் ப தா வ து

# லேகியவகைபரணி.

## பித்த யெரிவிற்கு லேகியம்.

| | |
|---|---|
| சுக்கு | சக்கரை |
| திப்பிலி | பறங்கிச்செக்கை |
| மிளகு | அமுக்கனுங்கிழங்கு |
| லவுங்கம் | நிலப்பனங்கிழங்கு |
| ஏலம் | தண்ணிவிட்டான்கிழங்கு |
| ஜாதிக்கா | விழலரிசி |
| ஜாபத்திரி | எலிமிச்சம்விரை |
| தாளிசப்பத்திரி | நெல்லிக்காய் |
| லவுங்கப்பட்டை | கடுக்காய் |
| சீமைஅத்திப்பழம் | தாணிக்காய் |
| பேதாளும் | விளாம்பழம் |
| சாலாம்பிசினி | திராக்ஷிப்பழம் |
| சீரகம் | முந்திரிப்பழம் |
| கொத்தமல்லி | பேரீச்சம்பழம் |
| சோம்பு | |

இவைகள் தினுசுக்குபலம் (க) இஞ்சிரசம் பலம் (௰) பழரசம் பலம் (௰) புளித்தமாதளம் ரசம் பலம் (௰) இளநீர் பலம் (௰) நாட்டுச்சர்க்கரை (௱) வீசைதேன் பலம் (௰) நெய் பலம் (௰) பசும்பால் ஒருபடி மேற்கூறிய தினுசுகளில் பழ வர்க்கம் தவிர மற்றவையாவும் இளம்வருப்பாகவறுத்து யிடித்து சூரணித்து வஸ்திரகாயஞ்செய்துக்கொண்டு, பழம் பால், நெய், ரசங்களின் வகையாவும் ஒன்றாய்க்கலந்து அடுப் பேற்றி சர்க்கரையைக்கொட்டி பாகுபதமாய்வரப்பார்த்து முன்வஸ்திரகாயஞ் செய்ததூளைக் கொஞ்சங் கொஞ்சமாய் போட்டுக் கிளரிக்கொண்டு வருக ஷை தூள் முழுமையும்

பூர்த்தியானபிறகு கைவிடாமல் சற்றுநேரங்கிண்டி அடிபிடிக்காமுன்னம் ஜாக்கிரதையாகப் பார்த்து இறக்கி வைத்துக்கொண்டு தேன்விட்டு கிளறி கோப்பையில் வழித்து வைத்துக்கொண்டு வேளைக்கி கெச்சக்காய்ப் பிரமாணம் காலைமாலை யிருவேளையும் ஒருமண்டலம் சாப்பிடவும் இச்சாபத்தியம். புகை, சுருட்டு, கள்ளு, சாராயம், பெண்போகம், அன்னியபதார்த்தம், நல்லெண்ணெய், கடுகு, இதுகளாகாது, பித்தயெரிவு, குலையெரிவு, பித்தவாய்வு, மேகவாய்வு, மேககாங்கம் இவை தீரும்.

---

## உஷ்ணத்திற்கு லேகியம்.

சுக்கு பலம்-௨, அரிசித்திப்பிலி பலம்-௧, திப்பிலியை ஒரு குடுவையில்போட்டு கொஞ்சம் உமியைப்போட்டு அது முழுகும்படி ஜெலம்விட்டு வேகவைத்து யிரக்கி திப்பிலியை எடுத்துக்கொண்டு சுக்கும் கூடச்சேர்த்து கல்வத்தில்இட்டு நெகிழ அறைத்து பில்லைதட்டி எண்ணெய்வூரிய சட்டி அடுப்பில்வைத்து (௨௨) பலம்நெய்விட்டு அதில் பில்லைவைத்து (௨) நாழிகை பொரிக்கவும், பிறகுயெடுத்து கல்வத்தில்வைத்து அறைத்து பில்லைதட்டி மறுபடியும் நெய்யில்வேகவைக்கவும், இப்படி ஐந்துவிசை அறைத்து வேகவைத்தெடுக்க யிளகியிருக்கும் லேகியமாகப் பிசைந்து வைத்துக்கொண்டு சுண்டக்காய்ப்பிரமாணம் அந்திசந்திசாப்பிடவும் இச்சாபத்தியம், கடுகுநல்லெண்ணெய் கூடாது உஷ்ணந்தீரும் தேகம் தணியும்.

---

## கரிச்சாலை லேகியம்.

சிமை கரசலாங்கண்ணிச்சார் படி (௨) நெரிஞ்சிச்சார் படி (௨) சிறுகீரைச்சார் படி (௧) கீழாநெல்லிச்சார் படி (௧) இந்த சாறுகள்யாவும் பழையபாண்டத்திலூத்தி வைத்துக்கொண்டு நாகப்பட்டை, கருங்காலிப்பட்டை, அத்திப்பட்டை தென்னபாளையுள்ளிருக்கும் அரிசி, மஞ்சள், இவைகள் வகைக்குபலம்(௨௦)யெடுத்துயிடித்து யெட்டுபடி ஜெலத்தில் போட்டு (௨)படி கியாழமாகக் காய்ச்சி வடிகட்டிக்கொண்டு முன்சாறுவகையிருக்கும் பாண்டத்தில் ஊற்றிக்கலந்து வை

த்துக்கொண்டு மிளகு, மிளகருணை, சித்தாமுட்டிவேர், பேரு முட்டிவேர், எலுமிச்சம்வேர், ஆகவகைக்கு பலம் (ஙு) இவை களை கல்லுரலில் இட்டு பஞ்சுபோல் இடித்து எட்டுபடி ஜலத் தில்போட்டு அரைப்படி கியாழமாக இறக்கிவடித்து முன் பாண்டத்திலிருக்கும் மருந்துடன் ஊத்தி அடுப்பிலேத்தி கொதிக்கவைக்கவும் உடனே பனவெல்லம் பலம் (அ) நெல்ல வெல்லம் (அ) பசும்பால் படி (ச) இந்தபாலில் இரண்டுவகை வெல்லமும் போட்டு கரைத்து முன் அடுப்பின்பேரில் இருக் கும் பாண்டத்தில் ஊத்தி கமலாக்கினியாக எரித்து கொதிக் கச்செய்யவும் எலுமிச்சங் கட்டையால் கிளரவேண்டியது அப்படி கிளரிக்கொண்டிருக்கையில் தானே,

| | |
|---|---|
| சீரகம் | கடுக்காய்ப்பூ |
| சுக்கு | கோஷ்டம் |
| ஏலம் | அக்கிராகாரம் |
| கிராம்பு | அதிமதுரம் |
| ஜாதிக்காய் | தாளிசப்பத்திரி |
| ஜாபத்திரி | மிளகு |
| ஓமம் | திப்பிலி |
| குரோசானியோமம் | திருபலாதி |
| கிறுகைப்பூ | |

ஆக வகைக்கி பலம் (க) இவைகளை கல்லுரலிலிட்டு யிடித்து சூரணித்து வஸ்திரகாயம்செய்து பசும் நெய்வீசை (ұ) தேன்வீசை (ұ) ஷை சூரணத்துடன் * மண்டூர செந் தூரம் ஒருபலம் சேர்த்துக்கொண்டு நெய்யைமுன்பாக மருந் தில் வூத்தி கிளரிக்கொண்டிருக்கும்போதே சூரணத்தை சிறு கத் தூவிக்கொண்டுவரவும் அப்படி சூரணம் பூர்த்தியான பிறகு (வ) மணிநேரம் கைவிடாமல் கிளரி யிரக்கி வைத்துக் கொண்டு உடனே தேன்விட்டு விரைநீக்கிய திராட்சப்பழம் (ரு) பலம் போட்டுக்கிண்டி கோப்பையில் வழித்து வைத்துக் கொள்ளவும் காலை மாலையுமாக வேளைக்கி புன்னைக்காயளவு ஒரு மண்டலம் சாப்பிடவும்.

* இந்த அனுபோக்வயித்தியம் முதற்காண்டம் (ஙக) வது பக்கத்தில் சொல்லியிருக்கும் கனமண்டூர செந்தூரம் சேர்த்துக்கொள்ளவும்.

{இந்த கரிசாலை லேகியத்தால் தீரும்
வியாதிகட்கு உறுதிமொழி}

## விருத்தம்.

ஆச்சப்பா பாண்டுவகை யெல்லாம்போகும்
அப்பனே பித்தவெட்டை கைகாலேரச்சல்
காச்சப்பா காந்தலுடன் எரிவுபோகும்
கனமான வாந்தியொடு மயக்கம் தூக்கம்
ஓச்சப்பா விக்கமொடு நீர்சுரப்பு
உத்தமனே கிராணியெல்லா மொழிந்துபோகும்
நீச்சப்பா வறேசயங்க ளெல்லாம்போகும்
நிசமாகத் தாபானை நிகழ்த்துவாயே.

## மேகம் உக-க்கும் லேகியம்.

| | |
|---|---|
| செகப்புநாயுருவிவேர் | உப்பிலாங்கொடிவேர் |
| செகப்புநெருஞ்சிவேர் | அவுரிவேர் |
| கையாந்தகரைவேர் | முடக்கொத்தான்வேர் |
| மாவிலிங்கம்வேர் | புங்கன்வேர் |
| மிளகருணைவேர் | கருவூமத்தன்வேர் |
| சிவன்வேம்புவேர் | வெட்டிவேர் |
| காட்டுக்கருணைவேர் | ஆடுதின்னாப்பாளைவேர் |
| நீர்முள்ளிவேர் | சிறுகட்டுக்கொடிவேர் |
| வில்வவேர் | ஆவாரம்பட்டை |
| துத்திவேர் | வலாரிவேர் |
| வெள்ளெருக்கம்வேர் | பூமிசக்கரைக்கிழங்கு |
| சீதேவிசெங்கழனிவேர் | மருதம்பட்டை |
| நிலமந்தம்வேர் | பூவரசம்பட்டை |
| வெள்ளைவிஷ்ணுகாந்திவேர் | செங்கத்தாரிப்பட்டை |
| ஆனைநெருஞ்சிவேர் | பாவட்டையிலை |
| பொன்னாங்கண்ணிவேர் | புனிக்கருணைக்கிழங்கு |

இவைகள் பாவும் வகைக்கு(௧)பலம் கொண்டுவந்து உலர்த்தி இடித்து வத்திரகாயஞ் செய்து அரைவீசை நெய்யை அடுப்பிலேற்றி உருகினவுடன் சர்க்கரை (௰) பலம் போட்டு பாகுபதமாய் தூவிக்கொண்டே கிளரவேண்டியது நெய்

போதாவிட்டால் முன்பாகக்காய்ச்சி யெடுகட்டிய பசும் பால் போதுமானமட்டும் நிதானமாய் விட்டுக்கொண்டு கிளரவும் இரக்கும்போது மலைத்தேன் (ரு) பலம் விரையில் லாத பழைய திராட்சப்பழம் பலம் (ரு) பொடியாகக் கத் தரித்த பாதம்பருப்பு பலம் (ரு) போட்டுக்கிண்டி வைத்துக் கொள்ளவும் கைப்புதோன்றுமல் தின்பதற்கு இனிப்பாக வும் வியாதியை கண்டிக்கும் தன்மையுள்ள நல்ல லேகிய மென்றறியவும் காலை மாலையாக இருவேளையும் புன்னைக்காய் வீதம் (உய) நாள் சாப்பிடவும் மீன், கருவாடு, இறைச்சி, லாகிரி, ஸ்திரீபோகம், புகை சுருட்டு, இவை கூடாது. மேகம் உக-ம் தீரும் கருமேகத்தையும் கண்டிக்கும் இச்சா பத்தியம்.

---

## கைகால் பிடிப்புக்கு லேகியம்.

| | |
|---|---|
| மாவிலிங்கம்பட்டை | செப்புநெருஞ்சிவேர் |
| சிறுகாஞ்சொரி | முடக்கத்தான்வேர் |
| அமுக்கனுங்கிழங்கு | தாழம் இதழ்சாறு |
| கண்டங்கத்திரி | பேரண்டைவேர் |
| பரங்கிப்பட்டை | பூனைவணங்கிவேர் |
| நீரடிமுத்து | மிளகரணைவேர் |
| ஒரிலைத்தாமரைவேர் | |

வகைக்கி பலம் (க) கோரோஜனம் விராகனிடை அரிக் கால் கஸ்தூரி விராகனிடை அரிக்கால் ஓமப்பூ விராகனிடை அரிக்கால் இவைகளைச் சூரணித்து சமயிடை சர்க்கரை கலந்து அந்திசந்தி திருகடி பிரமாணம் தின்னலாம் அல்லது (க) வீசை விளக்கெண்ணெயில் போட்டுக்காய்ச்சியும் சாப் பிடலாம் அல்லது (யரு) பலம் நெய் அடுப்பிலிட்டு சூரணத் தைக் கொட்டி மண்டிவருகையில் நெய் போதாவிட்டால் தேன் போதுமான மட்டும் விட்டு கிளரியிரக்கி வைத்துக் கொண்டு கெச்சக்காய்ப் பிரமாணம் இருபதுநாள் சாப்பிட வும் இச்சாபத்தியம்.

லேகியவகைபூரணி

முற்றுப்பெற்றது.

உ

தேவிசகாயம்.

பத்தாவது

# கியாழவகைபாணி.

வட்டத்திருப்பி, ஆமையோடு, மிளகு, நிலவேம்பு, காவட்டம்பில்லு, காடிகாரம், காசலாக்கண்ணி, இவைகளை சாம்பலாக வருத்துக்கொண்டு, சூரியகாந்தி, விஷ்ணுகாந்தி, நிலத்துளசி இம்மூன்றும் பொன்வருப்பாய் வருத்து மேற்படி சாம்பலுடன் போட்டுக்கொண்டு, கருஞ்சீரகம், ஓமம், வெடிக்கவிட்டு சுக்கு, சன்ரூஷ்டகம், சிந்தில்தண்டு, கடுக்காய்த்தோல் களிப்பாக்கு, கடுகுரோகணி, கத்தாழைசருகு இவைகளை நருக்கிப்போட்டு படி ஜலம்விட்டு கால்படியாக இரக்கி அந்தியிலும் காலையிலும் வேளைக்கி ஆழாக்குவீதம் இரண்டுநாள் கொடுக்க நிவர்த்தியாகும்.

## பித்தவாய்விற்கு கியாழம்.

வட்டத்திருப்பி, நிலவேம்பு, மிளகு, மயிலிர்கு, பட்டுத்துணி, வசம்பு, இவைகளை சாம்பல் அல்லது பஸ்பமாக வருத்துக்கொண்டு கருஞ்சீரகத்தை வெடிக்கவிட்டு சுக்கு மஞ்சள் கொஞ்சம் போட்டு முக்கால்படி தண்ணீர்விட்டு ஆழாக்கு கியாழமாகயிரக்கி இருவேளை சாப்பிடவும் தீரும்.

## பித்தவாய்விற்கு வேறுவித கியாழம்.

கோஷ்டம், கொத்தமல்லி, பறங்கிச்செக்கை, வில்வவேர், சுக்கு, சீரகம், நெல்லுப்பொரி இவை பேழும் சமவிடை போட்டு அரைபடி தண்ணீர்விட்டு ஆழாக்கு கியாழமாக இரக்கி இருவேளையும் பாகித்து சாப்பிடவும் இப்படி மூன்றுநாள் கொள்ளத் தீரும்.

## இதுவுமது.

நன்னாரிவேர், அதிமதுரம், சிந்தில்தண்டு, சந்தனத்தூள் சோம்பு, இதுகளையிடித்து கியாழம் வைத்து இருவேளையும் மூன்றுநாள் சாப்பிட சகலசுரமும் தால்பிடிப்பும் தீரும்.

## சாதாரண பித்தத்திற்கு கியாழம்.

| | | |
|---|---|---|
| வசம்பு | பலம் | வ |
| லவுங்கப்பட்டை | ,, | வ |
| வெள்ளைப்பூண்டு | ,, | வ |

இம்மூன்றும் ஒன்றிரண்டாய் உடைத்து வருத்து ஆழாக்கு ஜலம்விட்டு அரைபாழாக்கு கியாழயாக யிரக்கி தேன்விட்டு (௩) வேளை கொடுக்கவும்.

## பித்தவாயுவினால் கண்ட வயிற்றுவலிக்கு கியாழம்.

| | | |
|---|---|---|
| வெட்பாலரிசி | பலம் | ச |
| சீரகம் | ,, | ச |
| செகப்புநெருஞ்சிவேர் | ,, | உ |

இம்மூன்று மருந்தும் சேர்த்துயிடித்து மூன்றுநாளைக் கிரண்டுவேளையும் கியாழம் வைத்துசாப்பிட வயிற்றுநோய் தீரும்.

## சிறுபிள்ளைகட்கு அபானத்தில் இரத்தங்கண்டால் கியாழம்.

வில்வயிலை, துத்தியிலை, செம்பருத்தியிலை, வெள்ளை வெங்காயம், சீரகம், இவைகள் சமமாய்ப்போட்டு யிடித்து கியாழம் வைத்து காலையில் மாத்திரம் கொடுக்க மூன்று வேளையில் சவுக்கியமாகும் வாய்ரெணம் கண்டவர்களுக்கு இந்தக் கியாழத்தை இருவேளையாக மூன்றுநாள் கொடுக்க நாபியின்ரெணம் தணிந்து வாய்புண்ணு ஆறிவிடும்.

## குளிர்காச்சலில்கண்ட நாவரட்சிக்கியாழம்.

வட்டத்திருப்பி, வசம்பு, நிலவேம்பு, நிலப்பூச்சி, மிளகு, இவை (௫) திணுசும் சட்டியில்போட்டு நீசகக்கருக்கி கருஞ்சீரகம், ஓமம் பொரியவிட்டு அரைப்படி தண்ணீர்விட்டு ஆழாக்கு கியாழமாக யிறக்கி இருவேளை கொடுக்கத்தீரும்.

## ஷை காச்சலுக்கு வேறுவித கியாழம்.

ருத்திரசடையை பிட்டிட்டுப்பிழிந்து அந்தரசத்தில் மிளகு, லவுங்கம், தூளாக்கிப் போட்டுக் கொடுத்தால் சுரம் விட்டுப்போகும்.

## வாத சுரத்திற்குக் கியாழம்.

வட்டத்திருப்பிவேர் — விஷ்ணுகாந்தி
மரமஞ்சள் — மூக்குரட்டைவேர்
பேருமுட்டிவேர் — நொச்சியிலை
சுக்கு — கஞ்சாங்கோரை
மிளகு — துளசி
திப்பிலி — நார்த்தம்வேர்
கடுக்கா — நார்த்தம்யிலை
தானிக்கா — சிறுதேக்கு
வெள்ளைப்பூண்டு

இவை வகைக்கி ஒருபலம் இடித்து தூணிநீரில்போட்டு நாலுக்கொன்றாய் கியாழம் வடித்துக்கொடுக்கவும் பத்தியமாக யிருக்கவும்.

---

## ஊஷ்ண வாய்விற்குக் கியாழம்.

(உ) பலம் சிவதைவேர்கொண்டுவந்து பஞ்சுபோல் இடித்து ஒருபடி ஜலம்விட்டு ஆழாக்குகியாழமாகக் காய்ச்சி வடித்து இருவேளை கொடுக்க நிவர்த்தியாகும்.

---

## பல்வலிக்கி கிழாழம்.

நீலிமருந்து செடியென்னும் அவுரிச்செடி சமூலம் கொண்டு வந்து நாலுக்கொன்றாய் கியாழம் வடித்து வாய் கொப்பளிக்க பல்வலிதீரும் (ச-ஞ) வேளை செய்யவும்.

இயாழவகைபாணி

முற்றிற்று.

******************************



# பதினோராவது

# வீரியவிர்த்திவகைபரணி.

## மதனகாமேசுரக் குளிகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| வாலைரசம் | களஞ்சி | ௫ | பூனைக்காஞ்சிவித்து | பலம் | ௨ |
| லிங்கம் | ,, | க | பூமிசக்கரைக்கிழங்கு | ,, | ௨ |
| முருங்கைவித்து | பலம் | ௨ | நிலப்பனங்கிழங்கு | ,, | ௨ |
| ஜாதிக்காய் | ,, | ௨ | சமுத்திராசோதிவிரை | ,, | ௨ |
| முத்து | ,, | ௨ | ஜாதிபத்திரி | ,, | ௨ |
| கிரும்பு | ,, | ௨ | சாரப்பருப்பு | ,, | ௨ |
| அபினி | ,, | ௨ | வெண்காரம் | ,, | ௨ |
| கஞ்சா | ,, | ௨ | | | |

இவைகள் யாவும் பொடிசெய்து முத்தினதேங்காய்க்குள் அடைத்து மூடி சாணிபொதிந்து காயவைத்து சிரட்டை கருகும்படி புடம்போட்டெடுத்து சிரட்டை நீக்கி அப்படியே கல்வத்திலிட்டரைத்து பிங்கானில்வைத்துக்கொண்டு கெச்சக்காய்ப்பிரமாணம் யெடுத்து சக்கரையிற் பொதிந்து சாப்பிடவும், (௫) நாள் (எ) நாளுண்டானபிறகு போகிக்கவும் வீரியம் கெட்டிப்படும் கலிதமாகாது இதற்குமாற்று எலுமிச்சம்பழம். நித்தியம் மாலையில் இந்தக் குளிகை தின்றபிறகு யிரவில் புளிசேர்க்காமல் பால் ஊற்றிக்கொண்டு போசனம்செய்யவும்.

## ஸ்தம்பனக் குளிகை.

குங்குமப்பூ, அபின், ஆவில்விரை, வகைக்கு ரூபாயிடை க, ஜாதிக்காய் விராகனிடை-க, இவைகளைக் கல்வத்திலிட்டு தேன் சிறுகவிட்டு மெழுகுபோலரைத்துக் கடலையளவு குளிகைசெய்து மாலையில் ௬-மணிக்கு சாப்பிடவும், படுக்கையில் வெத்திலைதின்று போகிக்கவும் வீரியமதிகரிக்கும்.

## தாதுபுஷ்டிக்கு அதிசயக்குளிகை.

மிளகு, எள்ளு, கெஞ்சா, சரியிடையெடுத்து வெந்ததும் வேகாததுமாய் வறுத்து கல்வத்திலிட்டு தேன்விட்டு மயனம் போலரைத்து காட்டுயிலந்தங்காய்ப் பிரமாணம் குளிகைசெய்து மாலையில் படுக்கைக்கு நாலுமணிநேரம் முன்னதாய் ஒரு குளிகைதின்று உடனே ஆழாக்குப்பால் சாப்பிட வேண்டியது புளிப்பும் தண்ணீரும்கூடாது இஷ்டம்போல் போகிக்கலாம்.

---

## வீரியக்கட்டுக்கு அடைக்கலாங்குருவி.

அடைக்கலாங்குருவி (ரு) கொண்டுவந்து வயிற்றைக் கிரி பிச்சிமுதலான அசுத்தமெல்லாம் எடுத்துவிட்டு துவரைப்பிரமாணம் அபினி, சாலாம்பிசினி, தாலம்கான், கருவாப்பட்டை, ஜாதிக்கா, சபேத்துமுசலி, சிலாமுசிலி, வகைக்கி விராகனிடை-க, இப்படி ஐந்துகுருவிக்கும் வயிற்றில் போட்டுதைத்து ஒரு குருவிக்கு துலாம்நெய்யாக (ரு) துலாம் நெய்விட்டு பொன்னிறமாகவருத்து கல்வத்திலிட்டு எலும்பு நீக்கிகொஞ்சங்கொஞ்சமாய் தேன்விட்டு மைபோலரைத்து காலை மாலை சுண்டக்காய்விதம் சாப்பிடவும் காலையில் காரசாதத்துடன் போசனம் செய்யலாம் மாலையில் பால்சாதம் சாப்பிட வேண்டியது.

---

## தாதுபுஷ்டிக்கு பேரீச்சம்பழம்.

நீர்முள்ளிவிரை (உஜ) விராகனிடை, அபினி விராகனிடை (வ) இவை பேரீச்சம்பழத்திற்கு உள்ளேவைத்து சாப்பிடவும், இப்படி காலைமாலை (ஒ) நாள் (எ) நாள் சாப்பிடவும்.

---

## தாதுபெருக்க வெங்காய உபயோகம்.

வெள்ளைவெங்காயம் அரிந்துநெய்யில்வருத்து சாப்பிடவும், இப்படி வேளைக்கி ஒரு வெங்காயமாக இருவேளையும் இருபதுநாள் கொள்ளவும்.

## ஆண்குறிபெருக்க.

ஆண்காக்கைபித்து கொண்டுவந்து கல்வத்தி லறைத்து(ரு)நாள் தண்டில் தடவிக்கொண்டுவர பெருத்தும் நீண்டும் இருக்கும்.

## தாதுபுஷ்டிக்கு லேகியம்.

| | |
|---|---|
| திப்பிலி | இருவேலி |
| சித்தரத்தை | முதல்தரசந்தனம் |
| அமுக்கனுங்கிழங்கு | கருஞ்சீரகம் |
| ஏலரிசி | கிராம்பு |
| கோஷ்டம் | மாசிக்காய் |
| சடாமாஞ்சி | மிளகு |
| அதிமதுரம் | ஜாதிக்காய் |
| தானிக்காய் | ஜாபத்திரி |
| கடுக்காய் | வால்மிளகு |
| ஏலக்காய் | நற்சீரகம் |
| அக்கிராகாரம் | |

இதுகள் வகைக்கி களஞ்சி(கவ)சுத்திசெய்தகெஞ்சாத்தாள் பலம் (நி) அமுக்கனுங்கிழங்கு பலம் அறை வெள்ளைக் கற்கண்டு பலம் அரை, கடைசரக்குகள் யாவுமிடித்து வஸ்திரகாயம்செய்து வெங்கலபாத்திரம் அடுப்பிலேற்றி தேன் சேர்-வ, நெய் சேர்-வ, ஷை பாண்டத்திலூற்றி சீனிசக்கரை வெல்லம் வகைக்கி கால்சேர்போட்டு பாகுபோல் கிளரி பிறகு கெஞ்சாத்தூளைப்போட்டுக் கிளரி அதின்பிறகு மற்ற சூரணத்தை கொஞ்சங்கொஞ்சமாய்த் தூவிக்கிளரி வழித்து கோப்பையில் வைத்துக்கொண்டு வேளைக்கு பாக்களவாக இருவேளையும் (ம) நாள் அல்லது (உம) நாள் சாப்பிடவும் இச்சாபத்தியம் பசி அதிகரிக்கும் வாதக்கட்டு, வாய்வு, மேகம், உடம்பு மெலிவு, உட்புண்ணு, வாந்தி, மயக்கம், இவையெல்லாம் தீர்ந்து தாதுபுஷ்டியுண்டாகும் இந்தலேகியம் சாப்பிடும்போது தேகத்தில் சிரங்குஉண்டாகும் அதற்குபயந்து நிறுத்தவேண்டாம் விடாமல் சாப்பிட்டுக்கொண்டேவந்தால் வியாதியெல்லாம் போய்விடும் விந்து அதிகரிக்கும் இரத்தம் உபிரியாகும் தேகபுஷ்டியாம்.

## தாதுபுஷ்டிக்கு சூரணம்.

நிலப்பனங்கிழங்கு வேண்டியமட்டும் கொண்டுவந்து மேற்றோல் சீவி கிழங்குகளை யிடித்து வஸ்திரகாயம்செய்து சமயிடை வெள்ளைசருக்கரைசேர்த்து நித்தியம் திரிகடிப் பிரமாணம்சாப்பிட்டுவர சொரி,சிரங்கு,வராது தாதுபுஷ்டி யதிகரிக்கும் விந்துவூறும்.

## தாதுவிர்த்திக்கு குடிநீர்.

இரும்பை சிவக்கக்காய்ச்சி ஜெலத்தில்தோய்த்து இப் படி மூன்றுதிரம்தோய்த்து வடிக்கட்டி வைத்துக்கொண்டு அந்த ஜெலத்தை ஒருமண்டலம் தாகத்திற்கு வேண்டுபோ தெல்லாம் போஜனம் செய்யும்போதெல்லாம் அதேஜெலத் தை உபயோகப்படுத்திவந்தால் தாதுபுஷ்டி புண்டாகும் அன்றியும் குடலிலுள்ள மாசுகளை அருக்கும் சீதளத்தைப் பிரிக்கும் அஜீர்ணபேதி, அதிசாரபேதி, கிராணி, இவைகளை நீக்கும் மூலஉதிரத்தைநிருத்தும் இந்தத் தண்ணீர் மொத்த மாயில்லாவிட்டாலும் அப்போதைக் கப்போது செய்துக் கொள்ளலாம்.

## தாதுபுஷ்டிக்கு ஜாதிக்கா.

ஜாதிக்காயை துளைசெய்து பணவிடை அபினியை உள் ளேவைத்து பேரீச்சம்பழத்தை விரைபோக்கி ஜாதிக்காய்க் குகவசஞ்செய்து உளுந்துமாவுஅரைத்து அதற்குமேல் கவ சஞ்செய்து மூன்றெருவில் புடமிட்டு உளுந்துமாவின்கவசம் வெந்தபிறகுபெடுத்து மாவின்கவசத்தை நீக்கி கல்வத்திலிட் டு தேன்விட்டரைத்து கடலைப்பிரமாணம் உண்டைசெய்து மாலையில் சாப்பிடவும் உடனே ஆழாக்குப்பாலில் சக்கரைப் போட்டுக் காய்ச்சி சாப்பிடவும்(ய)கர்ன் கொள்ளவும் தாது விர்த்தியாக்கும் முகம் தேஜசுகொடுக்கும்.

## இன்பமருந்து.

பொன்னம்பர் அல்லதுவெள்ளியம்பர், ஒருநெல்லிடை எடுத்து நீர் தாரையில்சொருகிவைக்க இன்பம்அதிகரிக்கும்

ஸ்ரீபுருஷாள் யிருவருக்கும் அதிகயின்பத்தைக் கொடுக்கும் ஷை அம்பரில் (ரு) குண்டுமணியிடை மூன்றுநாள் சாப்பிட்டால் குன்மமுதலிய வயற்றுவலிகள் தீரும்.

## தாதுபுஷ்டிக்கி.

நீர்முள்ளிவிரை, சாலாம்பிசினி, கருவாப்பட்டை சமமாக வெடுத்திடித்து வஸ்திரகாயம்செய்துவைத்துக்கொண்டு கொடியாட்டின்பால் ஆழாக்கில் அறைபலந்தூள்போட்டு காய்ச்சி குடித்துவர கட்டுப்படாத வீரியபுஷ்டியுண்டாகும்.

## தாதுபுஷ்டிக்கி குக்குடக்கருவு.

வெங்காயவிரை கால்பலம்எடுத்து கோழிமுட்டையின் வெள்ளைக்கருவில் கலக்கி குடித்துவர வீரியம் அதிகரிக்கும் ஷை விரையை தேனில்கலந்து குடித்தாலும் தாதுபுஷ்டியுண்டாகும்.

## தாதுபுஷ்டிக்கி முள்ளாங்கி உபயோகம்.

செம்முள்ளாங்கிவிரை அறைபலம் ஆழாக்கு எருமைப் பாலில்போட்டு காய்ச்சிகுடித்துவர தாதுவிர்த்தியாம்,விந்து அதிகரிக்கும்.

## தாதுபுஷ்டிக்கி.

பேரரத்தை பொடிசெய்து உ௦-விராகனிடைபொடியை ஆழாக்கு பசும்பாலில் கறைத்து குடித்துவர தாதுவிர்த்தியாகும் நாற்பதுநாள் கொள்ளவும்.

விரியவிர்த்திவகைபரணி

முற்றுப்பெற்றது.

உ

வேலுமயிலுந்துணை.

---

பனிரெண்டாவது

# கண்டாவிழ்தபரணி.

## நோய்வராதிருக்க.

அதிமதுரச்சூரணம் சோம்புச்சூரணம்—வெள்ளைச் சர்க்கரை
,, வகைக்கு ஒரு விராகனிடை, சித்திரமூலச்சூரணம்
,, அரை விராகனிடை, யாவும் ஒன்றாய்க்கலந்து இர
,, ண்டுபாகமாக்கி காலையில் ஒருபங்கு மாலையில்
,, ஒருபங்கு சாப்பிடவேண்டியது இதேபிரகாரம்
,, சித்திரைமாதம் முதல்தேதிமுதல் ஆடிமாதம்
,, கடைசிவரையில் சாப்பிட்டு அப்பியாசப்படுத்
,, தினவர்களுக்கு யாதொருநோயும் வராது கண்
,, தெளிவுண்டாகும் தீராத தலைவலி ஒரு தலைவலி
,, சுரம் நீங்கும் பரிக்ஷைபாருங்கள் இதைச் சாப்
,, பிடுகிறவர்கள் வாரத்திற் கொருநாள் கருவிலிப்
,, பிஞ்சும் ரோஜாப்பூவும் சமயிடைபோட்டிடித்து
,, பனம் கற்கண்டு போட்டு சாப்பிசெய்து சாப்
,, பிட்டு வரவேண்டியது.

---

நாக்குப்பூச்சியென்னும் பூநாக வுபையோகம்—நாக்குப்பூச்சி
,, யை யெள்ளெண்ணெயில் காய்ச்சி குடிக்க நான்
,, பட்ட யிருமலை நிவர்த்திசெய்யும் இரணங்களில்
,, தடவ ஆரிப்போகும்.

---

கண்ணோய்க்கு—சிறுபடா அல்லது நீலாஞ்சனம் கஸ்தூரி
,, முத்து இவைசமமாய் சேர்த்து களிக்கம்போல்
,, தீட்ட கண்ணோய்கள் அனைத்தும் தீரும்.

---

சுகபேதிக்குளிகை—சுத்திசெய்த வாளத்துடன் ரோஜாப்பூ
,, உலர்ந்த நெல்லிக்காயின் மேற்றோல் சமயிடை
,, சேர்த்து பழச்சார்விட்டு (௫) நாள் அறைத்து
,, கடலைப் பிரமாணம் மாத்திரைசெய்து பெருஞ்
,, சீரகக்கியாழத்தில் கொடுக்க வருத்தமில்லாமல்
,, சுகுணமாக பேதியாகும்.

---

கட்டிகளுக்கு—உடையாதகட்டிகளுக்கு நிலமருந்தை அறை
,, த்துப்பூச வுடையும் இடைவிடாது (௪-நு) வே
,, ளைப் பூசவும்.

---

பருக்களுக்கு—துத்தியிலையையறைத்து பருக்களின்மேல்தட
,, வவும் அல்லது ஷை யிலையை அறைத்து காடி
,, வார்த்து ளரிக்கட்டினூம் கரையும்.

---

பருக்கள்உடைய—திராட்சப்பழம் ஆட்டுக்கொழுப்பு சம
,, மாக சேர்த்தரைத்து பருக்கள்மேல்தடவ வுடை
,, யும்.

---

கட்டிகள்உடைய—சவுக்காரத்தையும்புறாவின்மலமும் சேர்
,, த்து அறைத்து பருக்கள் கட்டிகள்மேல் தடவ
,, உடையும்.

---

வெண்குட்டசாந்தி—வெள்ளைப்பூண்டை நவாச்சாரத்துடன்
,, அறைத்து வெண் குட்டத்தின்மேல் தடவிவர
,, வெண்மைமாரும்.

---

சிரங்கிற்கு—நீரடிமுத்தின் பருப்பை தயிரில் ஊரவைத்து
,, எலுமிச்சம்பழச்சார் அல்லது காடிவார்த்து
,, அறைத்து உடம்பில் பூசிக்கொண்டு உலர்ந்த
,, பிறகு சாணந்தேய்த்து குளிக்க சொரி, சிரங்கு,
,, முதலியதும் தீரும்.

---

இரணங்களுக்குநாயுருவி—நாயுருவி சமூலங் கொண்டுவந்து
,, யிடித்து சார்பிழிந்து மீயவெள்ளையைக் கலந்து
,, ரெணங்களின்மேல் தடவிவர புண்கள் ரினங்கள்
,, ஆரிவிடும்.

தெய்வமோதிரம்—சூரியன் சந்திரன், சுக்கிரன், மூவரும், ஒரே
,, ராசியில் சேர்ந்திருக்கும்போது பொன் வெள்ளி
,, சமமாய்ச்சேர்த்து மோதிரம்செய்து அதில் பவ
,, ழம் பொதிந்ததாகச் செய்து வலது கைவிரலில்
,, அணிந்தவர் யாவராலும் பூசிக்கப்படுவாரென்
,, றும் சகலவித பொல்லாங்கினின்றும் நீங்குவா
,, ரென்றும் பரிட்சையுள்ள அநேக யூனானி பண்டி
,, தர்களும் சிலநூல்களும் சொல்லியிருக்கின்றதை
,, யிங்ஙனம் சுருக்கமாய் யெழுதினோம்.

பயம்நீங்க—(எ) அல்லது (கூ) பவழத்தை குழந்தைக ளிடுப்
,, பிற்கட்ட நித்திரையில் மருண்டு அழுவதைநீங்கி
,, பரிபூரண நித்திரைசெய்யுமென்பது யூனானி ஆயு
,, ள்வேதம் சொல்லுகின்றது.

தொண்டைவலிக்கு—கோழிமுட்டை வெள்ளைக் கருவுடன்
,, நவாச்சாரம்சேர்த்து குழைத்துப்பூச தொண்
,, டைவலி யல்லது நோய்தீரும்.

நவாச்சாரஉபயோகம்—நவாச்சாரத்தை தேனில் உரைத்துப்
,, பூச மயிர் உதிர்வதை நிறுத்தும்.

இரண்டாவதுயோகம்—நவாச்சாரத்தை முலைப்பாலில்உரை
,, த்து கண்களில்பூச கண்மாசுகளை பருக்கும்.

மூன்றாவதுயோகம்—விடுமுதலிய மனுஷான் சஞ்சாரம்செய்
,, யுமிடங்களில் விஷப்பூச்சிகள் இருக்க அல்லது

,, வந்து நழைபவாகிலும்கண்டால் அந்தயிடத்
,, தில் கட்டைநெருப்பில் நவாச்சாரத்தைப்
,, போட்டு புகைகொடுத்தால் பயிரங்கப்படும்
,, ஒருவித மூர்ச்சையாயும் கிடக்கும்.

---

பல்வலிக்கி—நன்னாரிவேர் கியாழத்தில் காடி கொஞ்சம்
,, விட்டு வாய்கொப்பளிக்குவர பல்வலி சுவஸ்
,, தப்படும்.

---

கீல்வாதசாந்தி—நன்னாரிவேர் சூரணத்தோடு சமபாகம்
,, வெள்ளைசருக்கரை சேர்த்து வேளைக்கி ஒரு
,, விராகனிடைபாக இருவேளையும் ஏழுநாள்சாப்
,, பிட கீல்வாதம் ரொம்பவும் சவுக்கியப்படும்
,, பறங்கிச்செக்கைக்கு உள்ள குணமெல்லாம்
,, நன்னாரிவேர்க்கும் உண்டென்று அறிவீருக.

---

ஷர்பத்து—ஒருபலம் நன்னாரிவேருக்கு நாலுபலம் தண்
,, ணீர்விட்டு நாலில் ஒன்றாய்க்காச்சி யிருத்து
,, அதற்கு சமபாகம் சர்க்கரைசேர்த்து ஷர்
,, பத்து போல்காய்ச்சி குடிக்க பழமையான
,, யிருமல் மூச்சடைப்பு பாரிசவாய்வு சாந்தி
,, யாம்.

---

ஆராதபுண்ணுக்கு—ஒரு நத்தையைப் பிடித்துவந்து கம்பி
,, யில் கோர்த்து விளக்கில் காட்ட தைலம்பிறங்
,, கும் அதை பிங்கானில் பிடித்துக்கொண்டு
,, அறைத்து ஆராதமேகப்புண்கள் பருக்களின்
,, மேல் பூச சீக்கிரத்திலாரும்.

---

படைகளுக்கு—நத்தையைச்சுட்ட சாம்பலை தேனில்கலந்து
,, படைகளின் ஓரத்தில்வரும் புண்ணின்மேல்
,, பூச சொஸ்தமாகும்.

வாந்திக்கு—மரக்காளன் காயின்சதை இரண்டுவிராகனிடை
,, யெடுத்து யிராத்திரிக்கு வென்னீரிலூரவைத்
,, து காலையில் தெளிவாகவிருத்து சாப்பிடவாந்
,, தியாகும் பித்தநீர் வெளிப்படும்.

நீர்உடைய—வெள்ளைச்சார் வேளையின்சார் (கூ) விராகனிடை
,, பசும்பால் (யஉ) ரூபாயிடை கலந்துகுடிக்க
,, கட்டுப்பட்ட நீரை உடனே உடைக்கும்.

காயகற்பமூலிகை—முத்தின வெள்ளைச்சாரு வேளைவேரில்
,, முதல்நாள் குண்டுமணிப்பிரமாணம் சாப்பிட
,, வும் இரண்டாநாள் (உ) குண்டுமணி இப்படி
,, பேநாளுக்குநாள் ஒவ்வொன் றதிகப்படுத்தி
,, நாற்பதாவதுநாள் நாற்பது குண்டுமணிப்பிர
,, மாணம் சாப்பிடவும் (சக) நாள்துடங்கி ஒவ்
,, வொரு குண்டுமணி குறைத்துக்கொண்டே
,, நாற்பதாவதுநாள் ஒருகுண்டுமணியில் நிறுத்
,, தவும் இப்படிசெய்தவர் களுக்கு ஒருவிதத்தி
,, லும் தீராத வாதரோகங்கள் சுரங்கள் நெரிக்
,, காச்சல் பிணிசங்களும் தீரும் இது கிடையா
,, விட்டால் காட்டு சாறுவேளையும் உபயோகப்
,, படுத்தலாம்.

காதுவலிக்குசாம்பிராணி—சாம்பிராணியைப் பொடித்து
,, எள்ளெண்ணெயில்போட்டுக் காய்ச்சி காதில்
,, நாலைந்து துளிவிட (ரு) வேளையில் காதுவலி
,, நீங்கும்.

முள்வெளிப்பட—ஆற்றுநண்டு அல்லது வயல்நண்டு பிடித்து
,, யிடித்து முள்ளைத்தயிடத்தில் வைத்துக்கட்ட
,, முள் வெளிப்படும்.

முலைசிலந்திக்கு—ஷை ஆற்றுநண்டை பிடித்திடித்து அல்ல
,, து அரைத்து முலையின்மேல் வைத்துக்கட்ட
,, முலைசிலந்தி ரிணம் ஆறும்.

171



குதிக்கால்அல்லது ஆசனவேடிப்புக்கு—ஷை ஆத்து நண்டை
,, யிடித்து பில்லைதட்டி சுட்டசாம்பலைகுதிக்கால்
,, ஆசன வெடிப்பின்மேல் தேனுடன் கலந்து
,, பூச ஆறும்.

---

பேரும்பாட்டுக்கு—இரும்பைச் சிவக்கக்காய்ச்சி பசும்மோ
,, ரில் தோய்த்து அந்த மோரை சாதத்திற்கு
,, வேண்டியபோதெல்லாம் தாகத்திற்கு குடித்
,, துவர பெரும்பாடு சகலகழிச்சல் பேதியும்
,, கட்டும் சூட்டுஉடம்பிற்கு ஆகாது இரைச்சி
,, நெய் சேர்துக்கொள்ளவும்.

---

படைகட்கு—நண்டுகல்லை அரைத்து படைகளின்மேல் பூச
,, நமைச்சல் சொரி விலகும் ஷை கல்லையரைத்து
,, பொன்வெள்ளி சாமான்களை விளிக்க அதிக
,, சோதியுண்டாம்.

---

மூலரேத்தம்நீங்க—ஒருபிடி துத்தியிலையை சுத்த ஜெலத்தில்
,, போட்டு ஒருயிராத்திரி ஊரவைத்துகாலையில்
,, பிசைந்து யிருத்துக்கொண்டு அத்துடன் சம
,, பாகம் பசும்பால்விட்டு குலிக்கி சாப்பிடவும்
,, இப்படி (௩) நாள் (௫) நாள் அல்லது (௭) நாள்
,, சாப்பிடவும் கடைசிநாளில் சர்க்கரை சேர்த்
,, து சாப்பிடவும் மூலவுதிரம் நீங்கிவிடும்.

---

மேகதிமிர்வியாதிக்கு—துத்திச்செடியின்கிளை அல்லது காம்
,, புகளை கத்தையாகக்கட்டிக்கொண்டு வேண்டி
,, யமட்டும் பசும்பால் அடுப்பேற்றி தீயெரித்து
,, துத்திக் காம்புகளால், துழாவிக்கொண்டே
,, யிருந்தால் சுண்டிவரும் அதன்பிறகுயிரக்கி
,, ஒருயிராத்திரிமுழுதும் அசையாமலாரவைத்
,, துக் காலையில் பார்க்க உளர்ந்து சக்கரை
,, போலாகும் அதில் நாளுக்கொருபங்கு எலரி
,, சிபொடித்து சேர்த்து வைத்துக்கொண்டு

,, அந்திசந்தியாக திருகடி பிரமாணம் நாற்பது
,, நாள் சாப்பிட்டுவர திமிர்சோம்பல் மேக
,, ஊரல்மேகவியாதிகள் யாவும் நீங்கும் இச்சா
,, பத்தியமிருக்கவும்.

---

ரிணங்கள்ஆர—துரிசியை பொடித்து தேங்காபெண்ணெ
,, யில் விட்டு கல்வத்திலிட்டு அரைத்து ரிணங்
,, களில் தடவிவர ஆரிப்போகும் பேன்கொட்
,, டை ஏலரிசியும் கொஞ்சம் சேர்க்கலாம்.

---

நீரொழுக்கிற்கு—திவிதாட்சிப்பழத்துடன் மிளகு சமமாய்
,, சேர்த்தரைத்து சாப்பிட கல்லடைப்பு நீரொ
,, ழுக்கு நீங்கும்.

---

வாய்வேக்காட்டிற்கு—அதிகாலையில் திருநீற்றுபச்சிலையை
,, வாய்கொண்டமட்டும் மென்று தின்ன நீங்கும்
,, ஐந்துநாள் தின்ன நீங்கும்.

---

சயித்தியத்திற்கு—அரிசிதிப்பிலியைப் பொடிசெய்து பச்சை
,, வெத்திலைச்சாறும் தேனும் சமமாய்சேர்த்து
,, குழந்தைகளுக்குக் கொடுக்க சயித்தியம்கோ
,, ழை சுரம் முதலியதும் தீரும்.

---

சாதாரணயிருமலுக்கு—ஆனைதிப்பிலியை பொடிசெய்து தே
,, னில் குழைத்துசாப்பிட யிருமல் யீளையைப்
,, போக்கும் அஜீர்ணத்தை மாற்றும் வயற்று
,, உப்பிஷத்தை நீக்கும்.

---

வாய்வேக்காட்டிற்கு—தாணிக்காயைச் சுட்டுசூரணம் செய்
,, து சமனிடை சர்க்கரைசேர்த்து நிதம் ஒரு
,, கிராகனிடையாக வென்னீரில் சாப்பிட்டுவர
,, வாயிலதிகநீர் ஒழுக்கல் கட்டுப்படும் கண்கள்
,, குளிரும்.

---

பல்வலிக்கு—தாளிசபத்திரியை பொடிசெய்து பல்லில்
,, தேய்க்க வலிதீரும் யீருபலப்படும்.

ஷர்பத்—தாழம்பூவின்வேர் கியாழமிட்டு அதில் சக்
,, கரைச்சேர்த்துஷர்பத்துபோல் காய்ச்சிசாப்
,, பிட்டுவந்தால் சொரிசிரங்கு தினவு படைகள்
,, மாறும் தேகவலிவுதீரும்.

சொரிசிரங்கிற்கு—அரைபடி நல்லெண்ணெயில் செந்தாழைப்
,, பூவின் யிதழ்களைப்போட்டு பூமிபுடமாக யிரு
,, பதுநாள் புதைத்துவைத்து பிறகெடுத்து தே
,, கத்திற் பூசிவர மேகரிணங்கள் சொரிசிரங்கு
,, தினவுபடைகள் தீரும் தேகசுத்தியாம் அவய
,, வங்களுக்கு வலிவுதரும்.

அம்மைகாணுதிருக்க—மேற்கூறியபடி பூமிப்புடம் வைத்
,, தெடுத்த தாழம்பூ எண்ணெயை அம்மைக்
,, காணுத பிள்ளைகட்கு மாதம்-க-க்கு-ந-அல்
,, லது-ரு-நாள் வீதமாக அந்தந்தமாதம் முத
,, லில் கொடுத்துக்கொண்டுவரில் ஒருவித அம்
,, மையுங் காணுது அப்படி அம்மைவந்தாலும்
,, ச-ரு கொப்பளத்திற்கு அதிகமாய் காண
,, மாட்டாது.

ரிணங்களாற—ரிணங்கள் அல்லது புண்ணுகளை சீக்காய்
,, தேய்த்து கழுகிவிட்டு தாழம்பூசுட்ட சாம்ப
,, லைப் போட்டு அப்பிக்கொண்டுவந்தால் ஆறி
,, விடும்.

பெண்கட்கு வெள்ளைகண்டால்—மணத்தக்காளி தக்காளி
,, இரண்டும் சமமாய் இலையுங் காயுமாகப் பறித்
,, துவந்து கியாழமிட்டு உள்ளுக்குச் சாப்பிட்டு
,, ஒண்ணுக்கு போகும்போதெல்லாம் யோனி
,, யிற்படும் படியாக தாராளமாய் இந்தக்கியா
,, ழத்தால் அலம்பிக்கொண்டுவர நீங்கும் உள்
,, ளுக்கு யிருவேளையும் சாப்பிடவேண்டியது.

தக்காளிகியாழம்—தக்காளியல்லது வணத்தகாளியை யிலை
,, யுங்காயுமாகப் பறித்து கியாழமிட்டு வாய்
,, கொப்பளித்துவர பல்லுநோய் உண்ணுக்கு

,, வளர்ச்சி தொண்டைநோய் ஈரல்வீக்கம் இவை
,, தீரும்.

---

சோம்புசூரணம்—சோம்பு யென்னும் பெருஞ் சீரகத்தையிடி
,, த்து சூரணஞ்செய்து அதற்கு சமன் சற்கரை
,, சேர்த்துக்கலந்து புட்டியில் வைத்துக்கொண்
,, டு சித்திரைமாதம் முதல் தேதி முதல் நிதம் (உ)
,, விராகனிடையாக ஆனிமீ கடைசிவரையில்
,, சாப்பிட்டு வருவோருக்கு அந்த வருடம் முழு
,, மையும் யாதொரு வியாதியு முண்டாகாது.

---

பேன்சாக—படிகாரத்தைப் பொடித்து மைபோல்வஸ்
,, திரகாயஞ்செய்து தண்ணியில் கரைத்து தலை
,, யில் தேய்த்து ஒருஜாமம்சென்று ஸ்நானஞ்
,, செய்ய பேன் யீர் முதலானதுஞ் சாகும்.

---

பல்நோய்க்கு—படிகாரமும் கொட்டைப்பாக்கும் சமமாய்க்
,, கொண்டுவந்திடித்து வஸ்திரகாயஞ் செய்து
,, பல்லில் தேய்த்துவர பல்வலி தீரும்.

---

தீராதவெள்ளைக்கு—படிகாரத்தை பொரித்து பொடித்து
,, அதற்கு சமன் கற்கண்டும் உலர்ந்த நெல்லிக்
,, காயின் மேற்றோலும் பொடித்து வஸ்திரகாய
,, ஞ்செய்து கலந்து வைத்துக்கொண்டு வேளைக்
,, கு யிரண்டு விராகனிடையாக நாளொன்றிற்கு
,, மூன்றுவேளையும் பசுவின்மோரில் கரைத்து
,, சாப்பிடவும் இப்படி (எ) நாட்கொள்ள தீராத
,, வெள்ளை நீர்கடுப்பு இவைதீரும் இச்சாபத்தி
,, யம் ஒருசமயம் இரும்பல் காணுமாகில் பசும்
,, பால் கறந்தவுடன் நுரைபோடு சாப்பிடவும்.

---

மயிர்கருக்க—சூரத்து நிலாவிரையை பச்சையாகக்கொண்டு
,, வந்து அத்துடன் மறுதோன்றியிலை சமனாகச்
,, சேர்த்து பூசிவர மயிர்கறுத்துவரும்.

திவுசிரங்கிற்கு—சூரத்து நிலாவிரை பொழுத்தில் காடி சேர்த்து உடம்பில் தேய்த்து (உ)மணிநேரம் சென்று குளித்துவர சொரி சிரங்கு திவு படை முதலியதும் நீங்கும்.

பிரசவவேதனைக்கு—ஐவ்வாது அரைவிராகனிடையுங் குங் குமப்பூ கால்விராகனிடையுஞ்சேவல் சூப்பில் கலந்துக்கொடுக்க பிள்ளையுதிக்காமல் உபத் திரவப் படுகிறவர்கட்கு உடனே பிண்டம் வெளிப்படும்.

கருந்தேமலுக்கு—மறுதோன்றியிலையுடன் சவுக்காரம் சேர் த்து அரைத்துப் பூசிவர கருந்தேமல் படை கள் நரம்பிழுப்பு கால்நோய் இதுகள் தீரும்.

பிள்ளைகள்தலைசிரங்கிற்கு—சவுக்காரத்தை ரோஜாப்பூ எண் ணெயில் குழைத்து பிள்ளைகள் தலையில் பூசி வர சிரங்குகள் ஆறும்.

வயிற்றில் மரித்தபிண்டம் வெளிப்பட—சரக்கொன்றை கா யின் மேலோட்டை பொடிசெய்து அத்துடன் குங்குமப்பூவும் சற்கரையுஞ்சேர்த்து பன்னீர் விட்டரைத்து உருண்டைசெய்து பிள்ளையுதிக் காமல்வருத்தப்படுகிறவர்க்கும் அல்லதுவயிற் றில் தானே மரித்தவர்களுக்குங் கொடுக்க உடனே வெளிப்படும்.

கெற்பமில்லாதவர்க்கு—சதகுப்பை கருஞ்சீரகம் மரமஞ்சள் இவைகள் சமனாகச்சேர்த்து சூரணஞ்செய்து அதற்குச் சரிபாகம் புட்டிவெல்லஞ் சேர்த்து பிசைந்து கொட்டைப் பாக்குப் பிரமாணம் காலைமாலை யிரண்டுவேளையும் சாப்பிட்டுவரில் உதிரச்சிக்கலையறுக்கும் கருப்பக்குழியை சுத் திப்படுத்தி கரு தங்கும்படிச்செய்யும் சூட்டு டம்பிற்கு புளிப்புமாதுளம்பழம் சாப்பிட்டுக் கொண்டுவரில் மிகவும் நலம்.

சூட்டினால்வந்த தலைவலிக்கு—கொத்தமல்லி விரையையும்
" சந்தனமும்அறைத்துப்பூச தலைவலிநீங்கும்.

---

பல்நோய்க்குஅற்புதமருந்து—சித்திர மூலத்தை யரைத்து
" வலது உள்ளங்காலில்தடவ யிடதுபக்கம் பல்
" வலிதீரும் இடதுஉள்ளங்காலில்தடவ வலதுப
" க்கம் பல்வலிதீரும் இதைபடைகளின் மேல்
" தடவ மாறிப்போகும் இதை கோழிமுட்டை
" மேல்தடவி ஒருநாள் வைக்க மேல்தோல் சிவ
" ந்த நிறமாய்விடும்.

---

வெளுத்தமயிர்கருக்க—கொட்டைக்கரந்தை செடியானதுபூ
" எடுப்பதற்கு முன் சமூலமும் பிடிங்கிவந்து
" இதற்குச் சமயிடை கையாந்த கரைசமூலம்
" சேர்த்து நிழலிலுலர்த்திச் சூரணம் செய்து
" தேன் அல்லது நெய்யிற்கலந்து ஒரு மண்ட
" லம் சாப்பிட்டு வர வெளுத்தமயிர்கருத்துப்
" போகும் சிவகரந்தைக்கு இதிலுமதிக குண
" முண்டு பென்பார்கள்.

---

ஒருதலைவலிக்கி—குங்குமப்பூ அபினி விளாம்பிசினி பழைவெ
" ல்லம் இதுகள் வகைக்கி விராகனிடை-க,
" நிருத்தெடுத்து கல்வத்திலிட்டறைத்து காகி
" தத்திற்றடவ கன்னப்பொரியாகிய உயர்ந்து
" வலியெடுக்கும் நரம்பின்மேல் ஒட்டிவர இரண்
" டொருவேளையில் தீரும்.

இரண்டாம்பாகம்

முற்றிற்று.

இனி மூன்றும்பாகம்.

உ

தேவிசகாயம்.

—o—

# ANUBOGAVYTHIA

## BRAMAH RAHASIAM.

# அனுபோகவயித்திய

## பிரம்மரகசியம்.

மூன்றாம்பாகம்.



இஃது

ஜெகந்நாதஸ்தலம்.

## கோஷாயி சுவாமிகள்

அனுக்கிரகத்தின்படி

சிறுமணவூர்

முனுசாமி முதலியாரால்

எழுதிமுடிவுபெற்று,



பூவிருந்தவல்லி.

சுந்தர முதலியார் குமாரர்

பூ. சு. குப்புசாமி முதலியார்

அண்டு சன்ஸ் அவர்களது

ஸ்ரீ சுந்தர விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை-புரசை.

—o—

1935.





அனுபவமானது! பத்தியமில்லாத கைகண்டமருந்து!!
பிரசித்திபடைந்தது!!!

# அயக்காந்த திராவகம்

## அநேக நற்சாக்ஷி பத்திரங்கள் பெற்றது.

# அயக்காந்த திராவகத்தின் குணம்

1. முக்கிய ஸ்தானத்தில் வாய்வு மீறி நாதமுடைந்தவர்கள், 2. மேகவாய்வினால் பலயீனப்பட்டவர்கள், 3. ஆண்மை சக்தியில்லாதவர்கள், 4. மண்டைக்கொதிப்பினால் தலைமயிர் உதிர்ந்தவர்கள், 5. சுரரோகத்தினால் இரத்தம் கெட்டு உடம்புவெளுத்தவர்கள், 6. மேக ரோகத்தினால் இரத்த ஓட்டம் கெட்டு உடம்பில் சக்தியில்லாதவர்கள், 7. பித்த வெட்டையினால் உதிரம் கெட்டு பலயீனப்பட்டவர்கள், 8. பித்தச்சூட்டினால் கை கால் உடம்பு எரிச்சலுடையவர்கள், 9. பித்த உபிரியினால் நாக்கு ருசியறியாமல் அரோசகமுடையவர்கள், 10. உஷ்ணவாய்வினால் பசியில்லாமலும் வயிறு மந்தமுடையவர்கள், 11. பித்தகாமாலையினால் முகமும் கண்களும் வெளுத்தவர்கள், 12. மஞ்சள் காமாலையினால் உதிரம்போல கண் சிவந்தவர்கள், 13. நாபியில் சூடுண்டாகி இந்திரியம்நீத்தவர்கள், 14. மஞ்சள் காமாலையினால்மாலையில் கண் தெரியாதவர்கள், 15. கைகால்களில் செம்மேகம் போலவே தேமல் படையுள்ளவர்கள், 16. கருமாசியைப்போல் அழுக்குத்தேமல் சொரி சிரங்குடையவர்கள். இத்யாதி குணபேதமான எல்லா வியாதிக்கும் இந்த அயக்காந்த திராவகத்தை ஆக்ஷேபனையில்லாமல் சாப்பிட்டு குணமடையலாம் இளைத்தவன் இரும்பைத் தின்னவேண்டும்” என்ற பழமொழியை சாதாரண பாமர ஜனங்களும் சொல்லுவார்கள். இரும்பின் சத்தைப்பற்றி வைத்தியர்கள் சிலாகித்துச் சொல்லவேண்டிய அவசியமில்லை. மேற்படி திராவகத்தை 48-நாளைக்கு விடாமல் சாப்பிட்டு வருவார்களாகில் மேற்சொல்லிய எல்லா துர்க்குண வியாதிகளையும் நிவர்த்திசெய்து சுத்த உதிரமுண்டாகும் சகல நரம்புகளும் பலப்படும்.

48-நாள் மருந்து சீஷா 1-க்கு விலை ரூ. 2
24-நாள் மருந்து சீஷா 1-க்கு விலை ரூ. 1

எமது விலாசம்:—

பூ. சு. குப்புசாமி முதலியார் & சன்ஸ்
ஸ்ரீ சுந்தரவிலாசம் பிரஸ்,
வேப்பேரி போஸ்ட் மதராஸ்.

உ

தேவிசகாயம்.

# அவுஷதங்களின் அட்டவணை.

## அவுஷதங்களின் அட்டவணை

முற்றிற்று.

உ

தேவிசகாயம்.

## சிவகிரி அங்கமுத்துசுவாமி நாயகர்
அனுபவமாயிருந்த

# தீர்மான நாடி.

கனமாகவேமூன் றுநாடியுந்தானெழுந்திடில்ஜன்னியாம் [ம்
தானசைந்துகுதித்து அம்புபோல்தானடந்திடில்ஜன்னியா
ஊனமாமையம் ரெண்டுவாதம் தொன் றுஓடிடில்ஜன்னியாம்
உற்றவாதத்தை ஐயத்தோடுற வோடியாடிடில் ஜன்னியாம்
மீனபம்பரம் நீரில்வண்டுபோல் மீரிசுற்றிடில் ஜன்னியாம்
மிக்கவேதெரித்தோடிடில்பித்தமிக்கஒளித்திடில்ஜன்னியாம்
போனமாய்கை மாதர் தம்மை புணர்த்திசெய்வது போலவே
பித்தவாதத்தை யையத்தோடுற பேசியாடிடில் மரணமே.

---

## தினவெண்பா.

உத்தமத்திலுத்தமாம் உதையகதிர்வெள்ளி
மத்திபமாம்திங்கள்புதன் வன்குருவே—சத்துருவாம்
செவ்வையாய்சனிமரணம் செப்பினோமித்தினத்தில்
நல்வாய்மருந்துண்ண கால்.

---

## வினையரியும் விருத்தம்.

தந்தவெற்றிலைப்பாக்கை பெண்ணிமூன்றிற்பெருக்கியாரில்
முந்தவேகழித்துமீந்த தொன்றுக்குலாபம்ரெண்டில்
வந்திடும்ஆனிமூன்றில் வருஞ்சுபம்நாலில்துக்கம்
ஐந்துஜீவனமுண்டாகும் ஆறுக்குமரணந்தானே.

---

உ

தேவிசகாயம்.

# நூன்முகம்.

இதைக் கண்ணோக்கும், ஆசிரியரே, இவ்வுலகின்கண் பேரின்பத்தைப் பெறவும், சிற்றின்பத்தை யனுபவிக்கவும், மனிதனல்லது மற்றப் பிராணிகளுக்கு மிகவும் கஷ்டமாயிருக்கிறது ஏனெனில், நன்மை தீமையென்கிற கிருத்தியங்களைப்பகுத்தறிந்து நடக்கவும், கஷ்ட, சுக, துக்க, சந்தோஷங்களைத் தனது செய்கைவாறு அனுபவிக்கவும், வருங்காலம் நிகழ்காலம்,சென்றகாலம்,என்னும்முக்காலங்களின் உணர்வை உணரவும் ஏதுவான ஆன்மா என்னு அறிவு மானிட தேகத்தில் நிலைகொண்டிருக்கிறது. மற்ற ஐந்து வர்க்கத்திற்கும் பகுத்தறியும் அறிவு இல்லாமையால் மனிதன் சகலஜந்து ஜாலங்களுக்கு மேலானவன் எனப்படுகிறான் ஆகையால் தான்மற்றச் சராசரப்பொருள்கள் இவனது உபயோகார்த்தமாக உண்டாக்கப்பட்டிருக்கிறதென்று எண்ணப்படுகிறது. மனிதனுக்குவேண்டிய நன்மைகளை சிருஷ்டித்த கடவுளை எவ்வாறு தொழுவதோ தெரியவில்லை.

மனிததேகம் தாயினது குக்ஷியிலிருந்து "பிரசூதிகா வாயுவினால்" தலைகீழாய் பூமியின்மேல் தள்ளப்பட்டதுமுதல் (மரணம் அதாவது தேகமாறல்) வரைக்கும் கஷ்டம், சுகம் துக்கம், சந்தோஷம், என்னுமவைகளை பிரத்தியேகமாயும் கலந்தும் அனுபவித்தே வருகிறது, அனுபவிப்பது ஆன்மாவா அல்லது தேகமா? என்று கேள்வி கேட்கும் பட்சத்தில் நூலாசிரியர் அவரவர்களுக்கு தோன்றும் வாறு தங்கள் கிரந்தங்களில் புகட்டியிருக்கிறார்கள். அவைகளை யெடுத்துக் கூறின் இச்சிறிய நூல் விஸ்தாரமாய்முடியும். ஆன்மா வென்ற பதத்திற்குப் பொருள், சுருதி ஆத்துமகேத்ரு ஸஸ்தூல சூக்ஷ்மகாரண சரீரேப்யோ வியதிரிகதஃ பஞ்சகோசாகீத, அவஸ்காதிரிய ஸாக்ஷிஸ்ஸன் எதிஷ்டதிஸா ஆத்துமா" ஆன்

மாத்திரம் வேரேயெடுத்து வைத்துக்கொண்டு, மற்றச் சரக்குகளையெல்லாம் பொன்னிரமாய் வருத்துக்கொண்டு சகலத்தையும்சேர்த்து இடித்து வஸ்திரகாயஞ்செய்து பாலுஞ்சர்க்கரையும் பாகுப்போல் பக்குவஞ்செய்துகொண்டு இந்தச்சூரணத்தை அதில்போட்டு நெய்யையும்வார்த்து அத்தோடு ஒரு சேர்தேனையும்விட்டு லேகியம்பக்குவமாய்ச் செய்துக்கொண்டு வேளைக்கு கொட்டைப்பாக்களவு நாளொன்றிற்கு இரண்டுவேளை அரைமண்டலஞ் சாப்பிட அந்தர்கதசுரம், இருமல், அக்கினிமந்தம், முதலியவைகள் நீங்கும் இச்சாபத்தியம்.

சுரங்களுக்கு

## வாய்விளங்காதிசூரணம்.

| | |
|---|---|
| வாய்விளங்கம் | பெருங்காயம் |
| சுக்கு | இந்துப்பு |
| சித்தரத்தை | கண்டுபாரங்கி |
| திப்பிலி | |

இந்ததினுசுகளை சமயெடையாயெடுத்து சூரணித்து அதில் கால்பாகம் நவாச்சாரம் பொடிசெய்து சேர்த்து வேளையொன்றிற்கு இரண்டு விராகனிடை தேனிற்கலந்து நாள் ஒன்றிற்கு இரண்டுவேளை சாப்பிட சுரங்கள், இருமல், இரைப்பு, அரோசிகம் அக்கினிமந்தம் அனுகூலமாகும்.

---

## சகலசுரங்களுக்குபிப்லாதிரசாயனம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திப்பிலி | பலம் - | ௰சு | திப்பிலிமூலம் | பலம் - | உ |
| சர்க்கரை | ,, | அ | சவ்வியம் | ,, | உ |
| வாய்விளங்கம் | ,, | ச | கொடிவேலி | ,, | ச |
| கண்டுபாரங்கி | ,, | ச | சுக்கு | ,, | உ |
| மிளகு | ,, | ச | லோகசிந்தூரம் | ,, | உ |
| சீரகம் | ,, | ச | கையாந்தகரைசூரணம் | | உ |
| லவங்கப்பட்டை | ,, | ச | லவங்கப்பத்திரி | ,, | க |
| ஏலம் | ,, | க | கடுக்காய் | ,, | க |
| தானிக்காய் | ,, | க | நெல்லிமுள்ளி | ,, | க |
| ஜாதிக்காய் | ,, | ၀ | தேன் | ,, | அ |

இம்மருந்துகளை யெல்லாம் இடித்து சூரணித்து வஸ்திர காயஞ்செய்து சர்க்கரையும் தேனுஞ் சேர்த்து அரைத்து ஒரு பாத்திரத்தில் யெடுத்து வைத்துக்கொண்டு வேளை யொன்றுக்கு பெரியகழற்ச்சிக்காய்ப் பிரமாணம் நாளொன்றுக்கு இரண்டுவேளைவிகிதம் ஒருமண்டலம் சாப்பிட்டால் சகலசுரங்கள், பஞ்சகாசம், இருத்துரோகம், பாண்டுரோகம் வாயு, அக்கினி மந்தம்முதலிய வியாதிகள் சூரியனைக்கண்ட இருள்போல்பறந்தோடும்.

### சுரபாண்டுரோகங்களுக்கு தாளிச்சாதிவடகம்

| | |
|---|---|
| தாளிசப்பத்திரி | ஏலம் |
| மிளகு | சிறுநாகப்பூ |
| சவ்வியம் | இலவங்கப்பட்டை |
| கிரும்பு | விலாமிச்சைவேர் |

| | |
|---|---|
| இந்ததினுசுகள் வகைக்குப் | பலம்-கஉ |
| திப்பிலிமூலம் | பலம் - உ |
| திப்பிலி | ,, உ |
| சுக்கு | ,, ௩ |

இவைகளை யெல்லாம் இடித்து சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து சேலம் சர்க்கரை இரண்டுசேர், அச்சூரணத்தோடு சேர்த்து அரைசேர்பாலை அதின்பேரில் தெளித்து நன்றாய் கிளறி ஒருகுண்டுசட்டியில் இரண்டுபடி பசுவின்பாலையும் இரண்டுபடி ஜலத்தையும் ஊற்றி அந்த குண்டுசட்டியின் வாயை ஒருசவுக்கத்தால்மூடி அதின்மீது கிளறினச் சூரணத்தைவைத்து ஆவி வெளியே போகாதபடி அதின் பேரில் ஒருசட்டியை கவிழ்த்து அடுப்பின்பேரில்வைத்து பால் சுண்டுகிறவரையிலும் யெரித்து பிறகு அதில்வெந்து இருக்கிற சூரணத்தை ஒருசுத்தமான பலகையின்மீது கொட்டி ஒருசேர் பசுவின் நெய்யைவிட்டு ஆறுமலிருக்கும் பொழுதே கொட்டைப்பாக் களவாக பில்லை பில்லையாய் தட்டி ஒருபீங்கானில் வைத்துக்கொள்ள வேண்டியது வேளை ஒன்றுக்கு ஒருபில்லையாக நாள் ஒன்றுக்கு இரண்டுவேளை சாப்பிட்டுவந்தால் சுரத்தினால் உண்டாகும் ரோகங்கள், வாதரோகங்கள், சிலேத்துமம், வரட்சி, கிராணி, பாண்டு ரோகங்கள், மார்புவலி, வாயுவினாலுண்டாகும் மூலரோகங்கள், குன்மம், கபம், பிரமேகம், இரைப்பு, இருமல், நெஞ்சுவரட்சி, நெஞ்சுவலி முதலியவைகள் கூடியசிக்கிரத்தில் சொஸ்தமாகும்.

## அஜீர்ணசுரத்திற்கு

## ஹரித்ராவடகம்.

மஞ்சள், வேப்பிலை, திப்பிலி, மிளகு, மரமஞ்சள், வாய் விளங்கம், கோரைக்கிழங்கு, சுக்கு இந்த எட்டையும் சம வெடையாய்சேர்த்து வெள்ளாட்டுமூத்திரத்தில் ஒருநாள் ஊரவைத்து மறுநாளெடுத்தரைத்து குன்றியெடை மாத்தி ரைசெய்து நிழலில்உலர்த்தி வைத்துக்கொள்ளவும். அசீரண சுரத்திற்கு வெந்நீரில் ஒருமாத்திரையைக்கொடுக்கவும்.அதி சாரம் கிராணிகளுக்கு மூன்றுநாள் மோரிலும், சர்ப்ப விஷங்களுக்கு எட்டுமாத்திரையை உள்ளுக்குக்கொடுத்து ஒருமாத்திரையை அதின்மீது அரைத்து தடவவும், கண் ணில் சிவப்பு நீர் வொழுதல் திமிர் புழுவெட்டு கண்மயிர் உதிரல் இவைகளுக்கு கோமூத்திரத்தில் அல்லது தண்ணீ ரில் உரைத்து கண்ணிற்போடவும், திரிதோஷ விஷசுரத்திற் கு வெல்லத்திலும்,இரத்த அதிசாரத்திற்கு ஏலம் இலவங்கப் பத்திரி இவைகளை வறுத்துபொடிசெய்து அதோடு சேர்த் துக்கொடுக்கவும், பாண்டுக்கு கோமூத்திரத்திலும், தேள் கடிக்கு எருக்கம்பாலில் ஒருமாத்திரை அரைத்து தடவ சொஸ்தமாகும்.

---

## சுரங்களுக்கு அரக்குதைலம்.

ஒருவீசை அரக்குவாங்கி அதில்(௪) வீசை ஜலம்விட்டு நாலில் ஒருபாகமிருக்கும்படிக்குச் சுண்டக்காய்ச்சி வடி கட்டி அதற்குச் சமமாய் நல்லெண்ணெய்வார்த்து அவை களுக்கு நான்குபாகங்கள் அதிகமாய் தயிரின் தேட்டை ஜலத்தைச்சேர்த்து ஒருபெரிய சாலில்வார்த்து அமுக்கிறுகி ழங்கு மரமஞ்சள் தேவதாரிசக்கை காட்டுமிளகு கோஷ் டம் கோரைக்கிழங்கு சந்தனத்தூள் பெருங்கும்பைக்கி ழங்கு கடுகுரோகணி தும்பராஷ்டகம் சதாபிலே அதிமது ரம் இவைகளை வகைக்கு ஒருரூபாஎடை சூரணித்து ஷை தை லத்தில்போட்டுகாய்ச்சி தைலபக்குவத்தில் இறக்கிக்கொள் ளவேண்டியது இதைதேய்த்துக்கொண்டு குளித்தால் சகல சுரங்கள், உள்மாந்தம், மூர்ச்சை, அபஸ்மாரம், பூதாவேசங்

கள் முதலியவைகளை விலக்கிவிடும், இது கர்ப்பிணிஸ்திரீகளுக்கு மிகவும் நன்மையைச்செய்யும்.

விஷசுரங்களுக்கு

## சஹதேவிகிருதம்.

| | | | |
|---|---|---|---|
| சஹதேவியிலைரசம் | படி க | கடுகுரோகணி | பலம் ச |
| பசுநெய்யி | ,, க | பால் | படி க |

இவைகளை ஒன்றாய்க்கலந்து பாகம்செய்து மிளகு பதமாய்காய்ச்சி வடித்துக்கொண்டு உச்சிக்கரண்டிவீதம் உட்கொண்டால் விஷச்சுரங்கள், சீதசுரங்கள் முதலிய வியாதிகளைவிலக்கிவிடும் தேகத்திற்கு வலிவுகொடுக்கும்.

விஷசுரங்களுக்கு

## க்ஷிரஷட்பலகிருதம்.

சுக்கு
திப்பிலி
திப்பிலிமூலம்
மிளகு
செவியம்
சித்திரமூலம்
இந்துப்பு

இவைகள் வகையொன்றிற்கு (உ) பலம்யெடுத்து எல்லாதினுசு யெடைக்குச் சமமாய் பசுவின்பால்விட்டு, பசுவின் நெய் பலம் (யசு) இவைகளை ஒன்றாய்ச்சேர்த்து காய்ச்சிமிளகுபதத்தில் இரக்கிக்கொள்ளவேண்டியது ஒரு கரண்டிவிகிதம் உட்கொண்டால் சகல விஷசுரங்கள் குன்மம் இவைகள் போம்.

மூன்றாங்காண்டம்.

முற்றிற்று.



---

இன்னும் அனேக அற்புதமான அவிழ்தமுறைகள் நான்காம் பாகத்தில் வெளியிட்டு இருக்கிரோம்.

இனி நான்காவது காண்டம்.

உ

தேவிசகாயம்.

—o—

# ANUBOGAVYTHIA

## BRAMAH RAHASIAM.

# அனுபோகவயித்திய

## பிரம்மரகசியம்.

நான்காம்பாகம்.



இஃது

ஜெகந்நாதஸ்தலம்.

## கோஷாயி சுவாமிகள்

அனுக்கிரகத்தின்படி

சிறுமணவூர்

## முனுசாமி முதலியாரால்

எழுதிமுடிவுபெற்று,




பூவிருந்தவல்லி.

சுந்தர முதலியார் குமாரர்

பூ. சு. குப்புசாமி முதலியார்

அண்டு சன்ஸ் அவர்களது

ஸ்ரீ சுந்தர விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை-புரசை.



1935.






267

உ

தேவிசகாயம்.

# முகவுரை.

இந்த அனுபோக வயித்திய பிரம்மரகசியமென்னும் நூலானது வெளிவந்த காரணமும், இதனுள் அடங்கிய விஷயங்களுக்கும், இங்ஙனம் முகவுரையெனப்பெயர்வகித்து சுருக்கமாக எழுதி முடிக்கப்பட்டிருக்கிறது.

ஜெகந்நாதஸ்தலம் ஸ்ரீமான் கோஷாயிசுவாமிகளால் நெடு வருடங்களாக காசி முதலான திவ்வியக்ஷேத்திர யாத்திரை வாசிகளுக்கு தருமத்திற்கு உபயோகித்துவந்த சத்தியமான உத்தம முறைகள் யாவையும், தமது சிஷ்யவர்க்கத்துள் சிரேஷ்டராகிய சிறுமணவை நல்லண்ண பரிதேசி யாரவர்களுக்கு அனுக்கிரகித்தவண்ணமும் மிதுவரையிலாக தன் முயற்சிகொண்டனு போகித்துவந்த கைமுறைகளையும் இவரது மருமகப்பிள்ளை ம-ா-ா-ஸ்ரீ, சிறுமணவூர் முனுசாமி முதலியாரவர்களால் இன்னும் சிலவற்றை சேர்த்து சுமார் முன்னூறு முறைகளடங்கக்கோர்வையிட்டெழுதி முடித்து அனுபோக வயித்திய பிரம்மரகசியமென்னும் பேர் அமைந்திருந்த இந்நூலுக்கு போதுமான பொருளைச் செலவிட்டு அச்சிடுவித்தவராகிய ம-ா-ா-ஸ்ரீ, பூ. சு. குப்புசாமி முதலியார் அண்டு சன்ஸ், அனுமதியின்றி இந்நூலை பிறர் எவ்விதத்தும் அச்சிடாதபடிக்கு (கெவர்மெண்ட் சட்டப்படி) Registered Copy Right. செய்திருக்கின்றது.

{ அனுபோக வயித்திய பிரம்மரகசியம்
8-காண்டங்களும் தயாராகியிருக்கின்றது. }

| | |
|---|---|
| முதற்காண்டம் 1-க்கு விலை அணா | 0 8 0 |
| ஷை 8-காண்டமும் ஒரே கட்டடம் ரூபா | 4 0 0 |
| V. P. போஸ்ட் சார்ஜ் அணா | 0 14 0 |

எமது விலாசம்:—

**பூ. சு. குப்புசாமிமுதலியார் & சன்ஸ்**
ஸ்ரீ சுந்தரவிலாசம் பிரஸ்,
வேப்பேரி போஸ்ட், மதராஸ்.

# நூலிருட்பிரிவு.

உ

தேவிசகாயம்.

# அவுஷதங்களின் அட்டவணை.

—(*)—

271

அவுஷதங்களின் அட்டவணை.
முற்றுப்பெற்றது.

உ

தேவிசகாயம்.

# அனுபோக வயித்திய பிரம்மரகசியம்.

## நான்காவது காண்டம்.

முதலாவது

## வியாதிகளின் காலபரணி.

### விநாயகர் துதி.

வெண்பா.

ஓதவினைபகலு மோங்குபுகழ்பெருகும்
காதற்பொருளனைத்துங் கைகூடும்—சீதப்
பனிக்கோட்டுமால்வரைமேல் பாரதப்போர்தீட்டும்
தனிக்கோட்டு வாரணத்தின் றாள்.

## நூன் முகம்.

{ 27-நட்சத்திரங்களில் இன்னநட்சத்திரத்தில் சுரம் கண்டால் இத்தனைநாளில் தீருமென்றறிக. }

பரிமருந்துநாளில் தோன்றுங்காச்சல்
பார்த்தரிகயிராறு நாளிற்றீரும்
விதிகதிரோன் பிரந்தநாள் தொடர்ந்தகாச்சல்
மீளாதுபனிரெண்டு நாளில்மெய்யா

எரிபிரந்தகார்த்திகைக்கு விடுமெட்டாநாள்
இலக்கமறமீறிநின்றால் யிருபத்தோன்றில்
பரவுவெப்புவிட்டகலும் நவ்விநாளில்
பற்றுசுரம்விட்டகலுந் தொட்டநாளே. (1)

தொட்டரியரோகணியிற் பற்றிவந்த
சுரங்களதுபத்தானுட் டோகைநல்லாய்
கெட்டதிருவாதிரையில் சுரங்கள்கொல்லும்
கேட்கவொண்ணுபொல்லாத கிளேசனாளாம்
மட்டுநறும்புனர்பூச மீரெட்டானால்
வந்தசுரம்பூரமிரண் டாறுநாளில்
திட்டமுறவிட்டுவிடும் சொன்னேன்சொன்னேன்
திராதாயிலிய மீரைந்திற்சாவே. (2)

ஈரைந்தில்ஆயிலியங் கொல்லாதாகில்
இருபத்திநாலானாள் சாந்தமாகும்
நேரைந்துமகத்துசுர மீரார்நாளில்
நிக்கிரகம்செய்யாமல் நிற்குமாகிற்
றூர்துஞ்சமூவைந்தா னில்வெப்பு
தாண்றணிபுமென் றுநூலோர் தானேசொன்னார்
சிரஞ்சாப்பூரத்திற் பிறந்தவெப்பு
செலுத்துபத்துவிருபத்தி ரெண்டிற்றீரும். (3)

உத்திரத்தில்பற்றுசுரம் பத்தானில்
உருக்கிவிடும்மேல்நின்று லுரைக்கக்கேளு
இத்தரையிலிருபத்து ரெண்டாநாளி
லிடருபடக்கொன் றுவிடு மின்னங்கேளே
அந்தசுரம்எட்டானாள் விட்டுப்போகும்
அடுத்தசித்திரைபதுதா னதுவுமெட்டே.
பத்திவிடுமேல்நின்று லுரைக்கக்கேளு
பரிந்துவிடும்பயிற்றிரண்டு நாளில்மீளும். (4)

கேளுரைக்கசோதிசுரம் நாலாநாளிற்
கிலேசமறாதேயிருந்தாற் பதினாலாநாள்

மீளாமல்மேல்நின்றால் பயிற்றுநான்கு
மிக்கநாள்தனிலகலும் விவாகவெப்பு
தோளாசைபடுமிருமத் தொன்றிற்கொல்லும்
தொடராளுடமெட்டாளுள் தொடங்கிமீண்டால்
மீளாதுபனிரெண்டா நாளிற்றீரும்
முன்கோட்டையீராரில் முடிகித்தீரும். (5)

முடுக்கவருமூலவெப்பு பத்தாளுளில்
மூண்டுபின்புந்தணியாமல் மீரிநின்றால்
கடுகவெப்புநாலைந்து நாளிற்றீரும்
காணறியபூராட மொன்பதாளுட்
படுகளமாய்கொன்றுவிடு முத்திருடம்
பாதகஞ்சேரெட்டாளுள் பதினாலாநாள்
குடிகெடுத்தேவதைத்துவிடுந் திருவோணத்தில்
கொண்டவெப்புநாலெட்டில் குணமாந்தானே. (6)

குணமாகும்அவிட்டமீ ரைந்துநாளில்
கொள்சதையமாறுநாள் குணமாம்வெப்பு
அணுகாமல்மேனின்றால் பனிரெண்டாநாள்
அச்சமிகும்ஆயிழையே யறையக்கேளாய்
பிணியுருக்கும்பொல்லாத பூரட்டாதி
பிலத்தனுளொன்பதனில் பிடித்துக்கொல்லும்
தணிவுநின்றவுத்திரட் டாதிநாளில்
றரித்தவெப்புபன்னிரெண்டிற் சாந்தமாமே. (7)

---

வேறு.

# ரேவதிநாள்சுரம்.

சாந்தமாம்பதினாலாநாள் றணிந்திடாதிருந்ததாகில்
சேர்ந்தநாளெட்டில்வைப்பு தீர்ந்திடுந்திண்ணமாக
சூழ்ந்தநாளிருபத்தேழும் துகளறத்தெரிந்துகொண்டு
போந்தவாரறிந்துமிக்கப் புகழ்பெரமருந்செய்யே.

---

## புடம்வைத்தபுண்கள் அல்லது
## கட்டிகளை அறுக்க
# ஆகாத்திதிகள் அறிக
## அகஸ்தியர் வாக்கியம்.



சீர்பெரும்பிரதமை சேரும்பெருவிரல்
நேர்பெருயுள்ளங் காலதுதுதிகை
திருதிகைமுழங்கால் சேர்ந்திடுமென்க
சவுத்திப்பெருந்துடை தாவிபசப்தமி
குப்பத்திடத்தே குடியிருந்திடுமாம்
அய்யமேசஷ்டி யமர்ந்திடும்நாபி
சப்தமிமுலையில் தானிருந்திடுமே
பொத்திடும்அஷ்டமி போதிணும்கரத்தில்
மெத்திடுநவமி மேவியகழுத்தில்
அதரந்தசமியி லாகுமவ்விடத்தே
ஏகாதசியில் யிருந்திடும்நாவில்
துவாதசியில் துயின்றிடுநெற்றி
திரயோதசியில் சேர்ந்திடும்புருவம்
சதுர்த்தசிபிடரி தானிருந்திடுமே
உதித்திடும்பூரணம் உச்சியிலுறையும்
செப்பியவமிர்தம் நிலைநின்றதனால்
சத்திரம்பண்ணில் தானெழும்நோய்கள்
கொப்பளித்திடினும் குத்துப்பிடினும்
தப்பிலாஅரவம் தான்கடித்திடினும்
அட்டைகடிக்கினும் அடிதடிச்சிலந்தியும்
வபத்தில்பினியெனும் மரணமதாகுமே
காசினிதனிலே கைவிஷதாரி
திதிகளைபரிந்து செய்திடப்பலிக்கும்
மலைதிகழ்முனிவர் மகிழ்ந்துரைத்தனரே.



## தன்மந்திரிபகவான் அருளிய

# பணக்கட்டளை.

---

கேளப்பாதோஷத்துக் கிரஞ்சுபத்து
கெணிதமாய்சுரத்துக் கிரைஞ்சுபத்து
வாளப்பாபாக்ஷயமுதலாய் நீரிழிவுகாசம்
வரிசையாய்மூணுபத்தி பணமேகேளு
நாளப்பாமருந்திட்டு முக்கால்வாங்கு
நலமில்லாப்பிளவைபவுத் திரமாங்குட்டம்
சூளப்பாயிரஞ்சு பொன்னேவாங்கு
துடியானதாதுநஷ்ட மீரஞ்சுவாங்கே. (1)

வாங்குவாய்மேகமென்றே சூலைக்கெல்லாம்
வரிசையாயஞ்சுபணங் கூட்டிவாங்கு
நீங்கிடவே பணமிருபத் தஞ்சுகேளு
நிலையில்லாசத்திகுன்மம் வயற்றுக்கெல்லாம்
தாங்கிட்டமகோதரமும் ரெத்தபித்தம்
தந்தத்தில்புத்துமுதல் கெற்பரோகம்
பாங்குபெறபதினைந்து பொற்பணங்கேள்
பழுதுசொன்னாலவுழ்தப்பை கட்டிப்போடே. (2)

போடப்பாயிந்தமுறை நீபொருளேதந்தால்
போய்மருந்துஅவிழ்தத்தை கொடுத்துந்தீரு
கோடப்பாகோடியென்றே ரோகமெல்லாம்
குறிப்பாகபாடுதற்கு வென்னாலாகா
தேடப்பாகிடைக்காது வயித்தியத்திற்கு
சிறப்பளித்தமட்டுமடா ரோகந்தீரும்
நாடப்பாநிதியாசை பிரியாதார்க்கும்
நானல்தருமமில்லை நவின்றிட்டேனே. (3)

---

## சீடற்கறிவு.

பாரடா நூலீய்ந்தோர் மனநோய்ச்செய்தால்
பரிவானவல்வினைகள் வந்துசூழும்
வாரடா பொருளீய்ந்து நூலைப்பாரு
வளமானபொருளுனக்கு யில்லாவிட்டால்
காரடா பணிவிடைகள் செய்துக்கேளு
கனமான அவர்கையால் கொடுக்கவாங்கு
நாரடா பதைப்பாய்நீ திருடினுக்கால்
நலமானசாபங்கள் வருகும்பாரே. (4)

---

## நூலின்பயன்.

எட்டிலுள்ள நூல்களெல்லாம் செவிக்கேயின்பம்
இன்பரசவஸ்துவெல்லாம் நாவுக்கின்பம்
ஊட்டுகின்றபொசிப்பெல்லா முடலுக்கின்பம்
உறங்குகின்றசூட்சமெல்லாம் உயிருக்கின்பம்
நாட்டிலுள்ள அலங்கிருதம் கண்ணுக்கின்பம்
நன்மலரின்பரிமளங்கள் நாசிக்கின்பம்
ஆட்டுவிக்குஞ்சித்தருட பொருளைக்காட்டி
அரிவிக்குங்குருமுருகா பரிந்துகொள்ளே. (5)

## காலபரணி
## முற்றிற்று.

---

இனிவியாதிகளின்
வரலாற்றுப்பரணி
கூறப்படும்.

உ

தேவிசகாயம்.

# இரண்டாவது
## வியாதிகளின்
# வரலாற்றுப்பரணி.

**நேத்திரரோகம்**—மாதர்களை யுற்றுப்பார்த்து மோகித்தல் துயில்நீங்கும் பெண்களின்மேல் பயில்விழி நாட்டல் மாதர்குளிக்கும் நீர்க்கரையினின்று நீங்காதிருத்தல், உயிர்வதை செய்தலைக் கண்ணுற்றும் விலக்காதிருத்தல், பசுக்களின் பால்கரக்கையில் விழிநோக்கி பிரமித்தல் இத்தகைபோன்ற யின்னும் பலவிதகுற்றங்களால் கண்ணோய்கள் (96) விதங்களாய்ச் சம்பவிக்குமென்றறிக.

**ஆனந்தவாய்வு**—உயிர்ப்பிராணிகளைக் கட்டியும் தூக்கி ஊஞ்சலாடவிட்டும், அறுத்தல், பசுவையடித்தல், பலஜீவராசியில் வயற்றைக்கிறி குடல் வெளிவரக்காணல் இவைகளால் வாதரோகம் (84)ல் ஆநந்தவாய் வென்னும் ரோகம் சம்பவிக்குமென்றறிக.

**வாய்வுகள்**—சிசுக்களை திடுக்கிடவடித்தல், உதைத்தல், ஜீவஜெந்துக்களை காலால்மிதித்தும் கையால் முரித்தல், வருமையுற்ற முதியோர்களுக்குக் காலினால் யேவலிடுதல், இவைகளால் வாதசம்மந்த வியாதிகள் அணுகுமென்றறிக.

**பித்தவியாதிகள்**—கடன்வாங்கிக் கொடாமையாலும், பெரியோரை மனம்நோகப் பேசி யேசவதாலும், தாகபானம் உதவாததாலும், பித்தட்சயம் பித்தகாசம் மந்தாரகாசம் ரத்த

காசம் சுவாசகாச பிவைகள் உண்டாகும், அன்றியும் பெலிகடியாலும், மூலத்தில் அனல் அதிகரித்து மூளையில் நீர்கசிந்து நெஞ்சில் சுவாசம்சுவரி கபத்தை உரையச் செய்துவிடும் மென்றறிக.

குன்மவியாதிகள்—பிறர் பசியினால் வருந்துவதைக் கண்ணுற்றும் அன்னமிடாமல் உண்டதாலும், ஒருவரிடும் உண்டியைத் தடுத்தலாலும், வயர் யெரியக் கெடுதலாலும், அபாண்டமான குற்றங்களைச் சுமத்தி வயரெரியக்காண்டலாலும், குடும்பத்தைக் கலைத்தலாலும், குன்மம் பெரியகுன்மம் குலைகுன்மம் தொண்டைகட்டிகள் இவை உண்டாகும் அன்றியும் நெல் உமி கல் இவையுண்பதால் வயற்றில் சோறைசேர்ந்து குடலில் மாசு பற்றியும் உண்டாவதுண்டு. இவ்வித குற்றங்களால் உண்டாகும் (7) வித குன்மங்களையும் அவுழ்தங்களால் நீக்க சாத்தியப்படும்.

பித்தபயித்தியம்—பெரியோரை நிந்தைசெய்தல், தேவஸ்தலங்களை பழித்தல், தூஷணைசெய்தல், ஸ்திரீகள் கெற்பநோயில் விந்துவிடல், சிசுவை மரித்தல், கன்றுக்குப் பால்விடாமல் கரத்தல், இளம்பயிரை பழித்தல், பிஞ்சுகளைப் பரித்தல், இவைகளால் பித்தம் மயக்க வியாதி பித்தபயித்தியம் பித்தவாய்வுசேஷ்டைகள் உண்டாகுமென்றறிக.

பாண்டுரோகம்—தாய்தந்தையர் மனம்நோகவும் பேசல், அவர்க்கு பயமுறவும் தண்டிக்க முயலுதல், மனிதரை வம்புசெய்தல், ஆங்காரத்தால் அசந்தை யிடும்பு யிபற்றல் பொய்பேசல், இவைகளால் பாண்டு மகோதரம் பெருவயர் இவை வந்தணுகு மென்றறிக, அன்றியும் ஜீவருக்கு நஞ்சிடுதலாலும் க்ஷயரோகம் சம்பவிக்குமென்றறிக.

பிளவைகண்டமாலை—குருதூஷணஞ்செய்தல், வழியில் முள் அடைத்தல், மரங்களை காரணமின்றி பூவுதிரவும்

கிளைபொடியவும் அடித்தல், கல்லெரிதல், பச்சைக்கொடி பூசைகட்குபன்ற பூஞ்செடி யிவைகளை நிஷ்காரணமாய் வெட்டல், கிள்ளல், இரண்டாய் பிளந்தெரிதல், இவைகளால் பிளவை கண்டமாலையுண்டாகும், அன்றியும் தன்பார்வைக்கெட்டா விடங்களில் கட்டிகள் புரைவிழும் ரிணங்கள் கரப்பான் வண்டுகடி குழிப்புண்கள் உண்டாம் யென்றறிக.

---

**குடைச்சல்கள்**—ஜீவஜெந்துக்களின் கைகால்களை முறித்தெரிதல், ஊர்வன பரவை பட்சி காகம் நாகம் இவைகளை காரணமின்றி வலிவிற் கொன்ற தோஷத்தால் கைகால்களில் குத்தல் குடைதல் கரணைகளிற்பிடிப்பு முடக்கு வீக்கம் இவைகள் அணுகுமென்றறிக.

---

**குட்டங்கள்**—ஸ்ரீகள் விசேஷசம்பந்தத்தா லுண்டான மேகம் கிரந்தி இவைகளால் (௬) விதகுட்டமும், மண்ணுளியன் முதலிய சர்ப்பக்கடி வண்டு எலி பூச்சி யிவைகளின் கடியாலுண்டாவது (௮) விதகுட்டமும், ஜீவவதை மாதா பிதாக்கள் மனநோக்காட்டாலும், தெய்வவுருக்களை யழித்தலாலும், பெரியோரை பங்கப்படுத்தி மனம்குன்றச் செய்வதாலும் (௪) விதகுட்டம் ஆக (௰௮) குட்டங்களின் காரணமென்றறிக.

---

**சுரரோகம்**—நீரிலுள்ள ஜெந்துக்களை ரவியில்போடல், நெருப்பிலிட்டு சுடுதல், தலைசயருத்தல், தண்ணீர்கொடாதல், சூரியனை நினையாததோஷம், இவற்றால் சுரரோகம் வந்தணுகும், அன்றியும் சுரத்தில் மூன்றுவிதமுண்டு அஸ்தியைப்பற்றிய சுரமானது தாகம்மிகுத்து தேகம்வெளுத்துகுளிர்ச்சியடுத்து ஒவ்வொருவேளையில் சுரம் மிகுதியாய்க்காணும் உதிரத்தைப் பற்றிய சுரமானது அதிக

மாய்க் காய்ந்து யிளைப்பு வேர்வை மூர்ச்சை சித்தப் பிரமை உடல்கோரும் தாகிக்கும் மாமிஷத்தைப் பற்றிய சுரமானது சமானகாச்சலும் அதிக சுவாசமும் மூர்ச்சையும் மயிர்கூச்சம் ஆபாசம் நோக்காடு நமைச்சல் இவைதரும்.

---

கண்டமாலை—மேகநீரானது நரம்புவழியாய் சென்று உதிரங்கெட்டு கட்டிபோல் திரண்டு ரணமாகி கண்டத்தைச்சுற்றி யரித்து தடித்து வெடித்து புரையோடும்.

---

மகோதரம்—அக்னியதிகரித்து நீருண்டாகிதிரேகம்கனத்து வயற்றில் வாய்வும் ஜலமும்சேர்ந்து பெருகச் செய்யும் மிராக்கால் நெஞ்சுவரண்டு தாகிக்கும்.

---

பெறுவயறு—ஞானிகளை நிந்தித்து பழித்து யிகழ்தலாலும், ஜீவஜெந்தை வதைத்தலாலும் நேரிடும் அன்றியும் தேகம்வெளுத்து வற்றி கருவிகள் மந்தித்து வயறுபெருக்கும்மலந்தியும்அன்னஞ்செல்லாது

---

நீரம்பல்—தேகம்வெளுத்துவற்றி மார்பின்கீழ்வயறும் காலும் வீங்கி தாகித்து புளிப்புமீது உண்டாக்கும்.

---

பிரநீர்க்கோவை—தேகத்தில்அக்கினிமீறி நீர்கோர்த்து கண்டவர் பயப்படும்படி பெரும் பூதம்போல் வீக்கம் உண்டாக்கும்.

---

நீராமை—ஆமைபோல் வயற்றில் கட்டியுண்டாகும் குடல் முருக்கி அக்கினிசுவாலையா யன்னத்துவேஷமாகும்.

---

பீலிகை—வயற்றில் ஈரலைப்பற்றி குழவிபோல் திரண்டு குருக்கேயிருந்து பிரளும் மேலேரும் உடல்வற்றும்.

---

பீனிசம்—மூலத்தில் கனல் அதிகப்பட்டு சிரசில் நீர் தங்கி நாசிவழியாய் உதிரமாயும் சீழாயும் ஜெலமாயும் வெளிவரும் இது (அ) வகைப்படும்.

---

வாதபீனிசம்—நாசி வரளும் நீர்வடிந்து சளி நாற்றமில்லாமல் வரும்.

---

பித்தபீனிசம்—நாசிவழியாய் மஞ்சள்நிறமாய் சளிவடியும் புலால்நாற்றம்வீசும்.

---

சிலேத்துமபீனிசம்—நாசியை மாரிமாரியடைத்து முத்துபோல் நீர்வடிந்துநாறும் துணுக்காகசளிவிழும் நாசியில் ஊசிபோல்குத்தும் கண்ணில் பீளைசாறும்.

---

நீர்பீனிசம்—நாசியில்நீர்வடியும் மழைகாலத்தில் பிடரியும் முகமும் வூறலுண்டாகும் அடிக்கடி தும்மல் வரும் தலை கழுத்து வலிக்கும்.

---

சீழ்பீனிசம்—கபாலத்தி லதிக வெப்பங்கொண்டு கபால முதல் நாசிவரையில் புண்ணாகிசீழ்வடியும் தலை வலிக்கும்.

---

உதிரபீனிசம்—கபாலத்தில் வட்டவட்டமாய் புண்ணாகி நாசி வழியாய் உதிரம்வரும் தலைவலிக்கும்.

---

சிராய்பீனிசம்—நாசியில்சுருள்ளிகூடுபோல்சீழ்திரண்டுவரும் மணம்தெரியாது விடாமல் தலைவலிக்கும்.

---

நவமூலம்—உள்மூலமென்பது அபானத்தில் சதைவளர்ந்திருக்கும், பிரமூலம் பனைவாயில் கத்திபோலிருக்கும் இரத்தமூலம் முளைவெளிவந்து இரத்தம் வடியும், சீழ்மூலம் அடிவயறு நொந்து மலத்துடன் சீழ்வரும், மூலபாண்டு சரீரம்வூதி வயற்

றில் மலங்கட்டும், மூளை மூலம் வெளிதள்ளி மல மிரங்கும், வாதபித்த சிலேத்தும மூலமானது மேற்கண்டவைகள் ஒன்றோடொன்று மிசிரமாகும்.

---

காமாலை—உதிரங்கெட்டு தசைவெளுத்து ஈரல்கருகி தசைகளில் கிருமிகள்பட்டு மாமிசத்தைத்தின்று மஞ்சள்நீர்கொள்வதன்றி பலவியாதிகளை யுற்பவஞ் செய்யுமென்றறிக.

---

சோகை—சோகையானது பாண்டுரோகத்தி லிருந்து நீர்கெட்டுசோகைரோகம் வந்தெய்துமென்றறிக.

---

அதிசாரம்—வயிறுபொருமி சரீரம்வாடும் மலம் கருமையாகவும் நுரையுடனும் காணும் இதற்கு வாத அதிசாரம் பென்றுபெயர்.

---

பித்தஅதிசாரம்—மலம் பசுமையோடும் சிதரத்தம் விழும் அபானத்தில் கடுக்கும் இவை பித்தாதிசாரம்.

---

சிலேட்மேஅதிசாரம்—மலம் வெண்மையாகவும் சீதம் நுரையாகவும் காணும்.

---

சுரஅதிசாரம்—சுரங்காயும் வயிறுகழியும் சிதமும் இரத்தமும் விழும்.

---

அசாத்தியஅதிசாரம்—மலம் லூன்போல துணுக்கை துணுக்கையாய்விழும் தேன்போலும் கரிபோலும் காணும்.

வியாதிகளின் வரலாற்றுப் பரணி

முற்றுப்பெற்றது.

---

285

உ

தேவிசகாயம்.

# மூன்றாவது

# இங்கிலீஷ் வகைபாணி.

{ இங்கிலீஷின் அவுதங்கள் அளவிறந்த தாகயிருப்பினும் சகலரும் இலேசில் கைபாளத் தக்கவை மாத்திரங் கூறப்படும். }

## அஜீரணத்திற்கு.

(பெப்பிரமண்டாயில்) (2) துளிமுதல் (5) துளிவரையில் நல்லஜெலத்திலாகிலும் சர்க்கரையிலாகிலும் கொடுக்கவும் இப்படி (3) மணிக் கொருமுறையாக இரண்டு மூன்று வேளை கொடுக்க பசிதீபனமுண்டாகும்.

## கீல்வாய்வு வீக்கம் பிடிப்பு இதுகட்கு.

(லிடிக்சு) (ஓரியண்டல்பாம்) என்னும் அவிழ்தத்தைக் கொண்டுவந்து கீல்நோய் குத்தல் குடைதல் வீக்கம் உள்ள விடங்களில் முன்னதாகவே ஆத்துமணலைக்கொண்டுவந்து வருத்து மெல்லியசீலையில்முடிந்து ஒத்தடம் கொடுத்து ஷை யிடங்களில் நன்றாய்சூடு உண்டானபிறகு மேற்கூறிய லிடிக்சு ஓரியண்டல் பாம்பென்னும்அவுழ்தத்தில் கொஞ்சம்தொட்டு அந்தப்பாகங்களில் தேய்க்கச்செய்யவும் தடவிய யிடங்களில் அந்தத்தயிலம் தோற்றப்படாமல் உள்ளுக்கே கிரகிக்கும்படி மிக்க வலிவுடைத்தாய் தேய்க்கவேண்டும். இப்படி காலை மாலை இருவேளையும் தேய்த்துவரில் சவுக்கியமாகும்.

## வாதம் இடுப்புவலி பக்கசூலை பாரிசவாய்வு திமிர்வாதம் இதுகட்கு.

மேற்கூறியபடி ஆத்துமணலை மிக்கச்சூடு கொள்ளும்படி வருத்து துணியில்முடிந்து நோவுள்ளபாகங்களில் நன்றாய்ச் சூடேறும்ப ஒத்தடம்போட்டு பிறகு(ஸிடில்சு ஒரியண்டல்பாம்) என்னும் தயிலத்தைத் தேய்க்கவும் காலுமணி நேரத்திற்கு ஒருமுறையாக ஒருநாளைக்கு மூன்றுவிசை உபயோகப்படுத்தவும் ஆக்ஷேபனையின்றி சவுக்கியப்படும்.

---

## தொண்டைநோய் இருமல் மார்சீதளம் இவைகட்கு.

மேற்கூறிய (ஸிடில்சுஒரியண்டல்பாம்) என்னும் தயிலத்தை மார்பிலும் தொண்டையிலும் முதுகிலும் கழுத்திலும் கீழ்மட்டும் நன்றாய்த்தேய்த்து உடனே மார்பிலும் கழுத்திலும் பிளானல்முதலிய உயர்ந்தகம்பளிப்பட்டைகளினால் சுற்றிவைக்கவேண்டியது இப்படி இரவும்பகலும் கூடிய இரண்டுநாள் உபயோகப்படுத்திவரில் சவுக்கியத்தையுண்டு பண்ணும்.

---

## சுவாசக்குழாய் தாபனம் இரப்பு முதலியவைகட்கு.

பத்துநிமிஷம் அல்லது கால்மணிநேரம் வரையிலும் ஷை தயிலத்தை மார்பிலும் முதுகிலும் நன்றாய்த்தேய்த்து அவைகளைக் கம்பிளியினால்சுற்றி சூடுண்டாகும்படி செய்வித்துவரில் சுகதுக்கனுகூலமாகும் சீதளநோய் உள்ளவர்கள் ஷை தயிலபுட்டியை கார்க்குத்திரந்துமுகருவார்களானால் அனுகூலத்துக்கிடமுண்டாகும் ஒருகோப்பையில் கொதிக்கக்காய்ந்த தண்ணீரில் ஒரு டீக்கரண்டி தயிலத்தைவிட்டு அதிலுண்டாகும் ஆவியை மூக்கின்வழியாய் உட்கொள்ளவேண்டியது.

---

### தலைவலி ஒருதலைவலி யுள்ளவர்கட்கு.

கன்னப்பொரியிலும் நெற்றியிலும் கழுத்தின் பின்புரத்திலும் காதின்பின்புரத்திலும் மெதுவாயும் நன்றாயும் தேய்க்கவேண்டியது நோய் முகத்தில் யிருக்குமானல் கன்னத்தில் நன்றாய் தேய்க்கவேண்டியது.

### ஈளையினால் சகிக்கிற குழந்தைகட்கு.

முதலாவது வாந்திபுண்டுபண்ணும்படியாய் கொஞ்சம் படிகாரஜெலம் அல்லது பச்சைவெங்காயமும் கொடுக்கவும் பிறகு தயிலத்தை கழுத்துமுழுவதும் மார்புமுழுவதும் நன்ருய் உபயோகித்து குழந்தையை கம்பளியினல் சுற்றிவைக்கவும்

### பல்லு நோய்க்கு.

(சிடில்சு ஒரியண்டல்பாம்) யென்னும் தயிலத்தைக் கொஞ்சம் பஞ்சியினல்தொட்டு பல்லுநோ யுள்ளயிடத்தில் அல்லது அதற்கருகில் வைக்கவும்.

### வயற்றுப்பிடிப்பு வயற்றுவலி.

வயற்றுவலி அல்லது வயற்றுப் பிடிப்புள்ளவர்கள் உடனே அந்தபாகத்தின்மீது ஷை தயிலத்தில் கொஞ்சம் தொட்டு தேய்க்கவும் ஒருமணிநேரத்திற் கொருகால் உபயோகப்படுத்தினல் அப்பொழுதே குணப்படும்.

### இசிவு அல்லது ஜன்னிக்கு.

மார்புகழுத்துசுற்றிலும் முதுகு அல்லது கழுத்துப்பின்புரத்தின் கீழ்பாகத்திலும் நன்ருய்த்தேய்த்து கம்பளியால் சுற்றி சூடுண்டாக்கிவைக்கில் குணத்திற்கிடமுண்டாம்.

### தேள் குளவி பூரான்கடிக்கு.

ஷை விஷசெந்துக்கள் கொட்டுதல் அல்லது கடித்தயிடத்தில் இந்த தயிலத்தை நன்ருய்த்தேய்த்துவிட்டுபின்பு அதேயிடத்தில் இந்த தயிலம் கொஞ்சம் யிருக்கும்படி வைக்கவேண்டியது.

## பித்தத்திற்கு.

(சல்பர் காஷ்டிக்டிலிபுடம் டிஞ்சர் காடனம் டிஞ்சர் ஜிஞ்சி பரீஸ்சுகர்) கொஞ்சம் தண்ணீரில் கொடுக்கவும் அல்லது சோடா கல்ம்பாதுள் பில்மத் ரேவல்சினி நூளாக்கி (15) குன்றியிடை கொடுக்கவும்.

---

## நீர் ஒழுக்கிற்கு.

(எகஷ்டிறுக்ட் பெல்டோனு) கால்கிரைபன், ஒப்பியம் கால்கிரைபன், கொயினன் கால்கிரைபன், இவைகூட்டி மாத்திரைசெய்துவேளைக்குஒன்று அல்லது இரண்டு கொடுக்கவும்.

---

## வயற்றுக்கிருமிகட்கு.

(சாண்டனின்) பெரியவர்க்கு (5) கிரைபன் எடுத்து கொஞ்சம் சக்கரையில்கலந்து கொடுக்கவும். சிறுவர்களுக்கு ஒரு கிரைபன்முதல் தேகதிடப்படி (4) கிரைபன் வரையில் சக்கரையில்கலந்துக் கொடுக்கவும்.

---

## ஒருதலைநோய்க்கு.

காஜிபுட்டாயில், கிலம்காயில், வோலிபம் காசு இவைகளில் பெறுவாகிலும் தடவலாம் உடனுக்குடன் சற்று சவுக்கியத்தை புண்டாக்கும்.

---

## சீதளம் ஜலுப்புக்கு.

ஷை ஆயில்களில் பெதுவாகினும் கழுத்தைச் சுற்றியும் பிடரியிலும் கொஞ்சம் தடவித்தேய்த்து நாசியில் கொஞ்சம் முகரவும் குணப்படும்.

---

## வாய்வுகளுக்கு.

வாய்வு, குத்தல், குடைதல், பிடிப்பு இப்பேர்கொத்த வியாதிகள் உள்ளபாகங்களின்மீது வருத்தமணலைமூட்டைக் கட்டி ஒத்தடங்கொடுத்து நன்றுய் சூடேறினபிறகு மேற்கூறியபடி ஆயில்களிலெதுவானும்கொஞ்சகொஞ்சமாய்விட்டு

நன்றாய்த்தேய்க்கவும் தயிலங்கள் மேல்புரம் தோற்றுமல்உள்ளுக்குகிரகிக்கும்படி அழுத்தமாய் தேய்க்கவும் இப்படிகாலே மாலேயாக இரண்டொருநாள் உபயோகப் படுத்திவரில் சவுக்கியமுண்டு.

## இதுவும் வாய்வுகட்கு.

பட்டாஸ் நயின்டர்ஸ், பொட்டாஸ்அபோட்டம்யிவைகளே நல்லதண்ணீரிலாகிலும் பிராந்தியிலாகிலும் அரை அல்லது முக்கால்டிராம்உள்ள அளவில் ஷை அவுழ்தம் கொஞ்சம் கலந்து கொடுக்கவும்.

## வெள்ளேக்கு.

கொப்பாப்பியா (10) துளிமுதல் (30) துளிவரையில் சற்கரையில் கலந்து கொடுக்கவும் இப்படி காலே மாலே (3) நாள் சாப்பிடத்தீரும்.

## இதுவும்வெள்ளேக்கு.

மூங்கில்உப்பு, மாசிக்காய், வால்மிளகு, மூன்றும் சமனிடைகொண்டுயிடித்து வஸ்திரகாயஞ்செய்து (கொப்பாப்பியா) விட்டுப் பிசைந்து லேகியம்போல் வைத்துக்கொண்டு கழற்சிக்காயளவு யிருவேளேயும் சாப்பிடவும் இச்சாபத்தியம்.

## சூதகவ[illegible]புவுக்கு.

(பில்ஆலோஸ் யெயிட்[illegible]கிரையின் புசித்தவுடனே நல்லஜெலம் நாலுமுழுங்கு [illegible]டபும் இப்படி இரண்டொருநாள்செய்ய அல்லது சவுக்கியப்ப[illegible]வும் உபயோகிக்கவும்.

## கொருக்கிற்கு.

காஸ்டிக் டெஞ்சபுளு, அயிண்டுமெண்டு இவை கூட்டி நன்றாய்ரேகித்து ரிணத்தின்மீது தடவிவரவும்.

## கண்ணோய்க்கு.

ஜிங்சல்பாஸ், காலணுவெடை ஒருடமிளர் ஜெலத்தில் விட்டு கிளாசில் வைத்துக்கொண்டு துணியில்தொட்டு நேத்திரத்தில் துளிதுளியாக தீட்டிவரவும்.

---

## இதுவும் கண்ணோய்க்கு.

ஒருடமிளர் ஜெலத்தில் அரைபலம்(சுகர்லட்)போட்டு கலக்கி மெல்லிய சீலையால்தொட்டு கண்களில் படும்படி தீட்டிவரவும் சவுக்கியமாம்.

---

## சுரங்களுக்கு.

கொயினன், ஜின்கொயினன், (உ-ற) குன்றி தேனிலாகிலும் கெந்தகதிராவகத்திலாகிலும் கொடுக்கவும்.

---

## முறைகாய்ச்சலுக்கு.

பவுலர்ஸ் ஸொலீஷன், திராவகம், பித்தகியாழத்தில் (2) துளிமுதல் (5) துளிவரையில் தேகதிடங்கண்டு கொடுக்கவும்.

---

## இருமலுக்கு.

டிஞ்சர்கேம்பர் திராவகம் (10) துளிமுதல் (30) துளிவரையில் நல்லஜெலத்தில் கொடுக்கவும், இப்படி இருவேளையும் கொடுக்கவேண்டியது திரேகத்தின் பலமறிந்து துளிகளை குறைத்தும் உயர்த்தியும் உபயோகிக்கவும்.

---

## இதுவும் இருமலுக்கு.

டிஞ்சர்சில்லிடிஞ்சர் அய்பாசாமி இந்த திராவகங்களையும் (10) துளிமுதல் (30) துளிவரையில் கொஞ்சம் ஜெலத்தில் கலந்துகொடுக்கலாம் இருமல் சுவஸ்தப்படுமளவும் உபயோகிக்கவும் சீதளபதார்த்தங்களை அனுசரிக்கக்கூடாது.

---

## வயற்று வலிகட்கு.

டிஞ்சர்ஒப்பியம் (5) துளிமுதல் (15) துளிவரையில்தேக திடமறிந்து ஒருடிராம் நல்லஜெலத்தில் கலந்துக் கொடுக்கவும் இப்படி யிருவேளையும்.

## இதுவுமது.

டிஞ்சர் அசப்பட்டிடா (10) துளிமுதல் (30) துளிவரையில் ஒருடிராம் நல்லதண்ணீரிற்கலந்து கொடுக்கவும்.

## இதுவுமது.

சோடா (25) குன்றியிடை எடுத்து கொஞ்சம் சக்கரையில்கலந்து கொடுக்கலாம்.

## விரைநோய்க்கு.

டிஞ்சர் அயிடியன் நோயுள்ளபாகத்தில்தடவி போஸ் தக்காய்கியாழம் காப்பிடம் கொடுக்கவும்.

## குடைச்சல்களுக்கு.

லெனிமண்டம் பெல்டோண, கேம்பர் குளோர்ட்பாரம், லைகர் அமோனியா, லெனிமண்டம் ஒப்பியம், இவைகளை சமபாகமாகக் கலந்துக்கொண்டு குடைச்சல் உண்டாகிய பாகத்தின்மீது கொஞ்சங்கொஞ்சமாய்த் தடவி சூடுண்டாகத் தேய்க்கவும் ஒருநாளைக்கு இருமுறையாக சுவஸ்தப்படுமளவும் உபயோகிக்கவும்.

## பக்கயிழுப்புக்கு.

எம்பிளாஷ்டகம்பெல்டோண யிழுப்புள்ள பாகத்தில் நன்ருய்த்தேய்த்து திரும்பவும் தடவிவைக்கவும்.

## அதிசாரபேதிக்கு.

சில்பேட் ஆப்காப்பர்-ௗ, கிரையனும் ஒப்பியம்-உகிரையனும் கலந்து கொடுக்கவும் துவர்ப்புள்ள குழம்பு துவையல் அனுசரிக்கவும்.

## நீர்துவார அடைப்பு அல்லது.
## எரிவுக்கு.



வால்மிளகுவிராகனிடை-கஉ, நன்றாய்ப்பொடித்துவஸ்திரகாயம்செய்து நிறுத்தெடுத்து(10)பலம்ஜெலத்தில்கரைத்து ஒருதினத்திற்கு நாலுதிரம் பாவித்துக்கொடுக்கவும்.

---

## அஜீரணபேதிக்கு.

காசுக்கட்டி விராகனிடை-உ௦, லவுங்கப்பட்டை விராகனிடை-௦, ஆறுபலம் தண்ணியை அடுப்பிலேற்றி முக்காலே அரிக்கால்பலம் கற்கண்டைப் பொடித்துப்போட்டு பாகு செய்துக்கொண்டு மேற்படி இரண்டுசரக்கும் தூள்செய்து அந்தபாகில் போட்டு லேகியம்போல் கிளரி வைத்துக்கொண்டு ஒருவேளைக்கு காலே அரிக்கால்முதல் முக்கால் பலம் வரையில் கொடுக்கலாம்.

---

## மாரில் கபமில்லாத வரட்டிருமலுக்கு.

நரிவெங்காயம் விராகனிடை-காலேவீசம், சுக்குத்தூள் (க) விராகனிடை, கபநாயகம்-அரையே அரிக்கால் விராகனிடை, சோம்பு குன்றியிடை, இவைகளை ஒருவிராகனிடை கற்கண்டுபாகில் சேர்த்தரைத்து இரண்டுகுன்றியிடை மாத்திரைசெய்து 5-மாத்திரைவரையில் கொடுக்கலாம்.

## இங்கிலீஷ்வகைபாணி
### முற்றுப்பெற்றது.



இன்னம் அநேக அற்புதமான அமிழ்தமுறைகள் ஐந்தாம்பாகத்தில் வெளியிடப்படும்.

உ

தேவிசகாயம்.

---

நான்காவது

மகான்களால் கையாண்டுவந்த

# பெருமருந்துபாணி.

## இராமபாண இடிமருந்து.

இடிமருந்து * அரிதாரங் காந்தம்வெள்ளு
வெட்டிவிதை செங்கொட்டை சித்ரமூலம்
வடிமருந்து * ரசங்கெந்தி மஞ்சள்ஓமம்
மாசிக்காய் ஜாதிக்காய் வசம்பீருள்ளி
குடிமருந்து * கொள்ளுக்காய் துருசுதுத்தம்
கோழிமுட்டை இந்துப்பு கோட்டங்கார்கோல்
அடிமருந்து * தக்கோல மக்கிராகாரம்
அமைத்திடித்து கலசமிட்டு அறையக்கேளே. (1)

அறையக்கேள் யோனிதன்னி லிங்கந்தன்னில்
அண்டத்தில் புடைகரப்பான் புரையின்புண்கள்
விரையக்கேள் மூக்கெரித்தல் கரப்பான்சூலை
வெடிப்புத்துக் குலைப்புத்து யீரல்புத்து
விறையக்கேள் வெண்குட்டம் குரைநோய்குட்டம்
விழித்திருப்பன் விணைத்தண்டின் விஷநீர்ப்புத்து
முறையக்கேள் முடியாத முடக்குசூலை
மூட்டோடே வியாதியெல்லாம் போமுண்பீரே. (2)

உண்பீரேல்பத்தியந்தா னிதற்கோயில்லை
உயிரான யிடிமருந்து ராமபாணம்
உண்பீரேல்சிறுசுண்டை பளவிலேதான்
உற்றதொருமோருஞ்சோ றுண்டுமுன்னே

---

* இடிமருந்தென்பது-வெடியுப்பு.
* வடிமருந்தென்பது-சாராயம்.
* குடிமருந்தென்பது-கெஞ்சா.
* அடிமருந்தென்பது-சவுக்காரம்.

உண்பிரேல்அடுத்தடுத்து மூழ்கிமூழ்கி
உள்ளபடிமண்டலமே செல்லுமட்டும்
உண்பிரேல்தேகமது பொன்போலாகும்
உள்ளபடிபூவையரைப் புணர்ந்திடாதே. (3)

புருடருக்கும்பூவையர்க்கும் சொல்லுவன்கேள்
புணர்ச்சிதள்ளியிருக்கட்டும் மூன்றுமாதம்
இருடருக்கும்பிணியேது ராமபாணம்
எந்தெந்தநோய்வரினும் யெமன்வந்தாலும்
திருடருக்குபலிக்குமது ராமபாணம்
சித்துவிளையாடுமடா சிவன்மேலாணை
குருடருக்கும்செப்முறையாய் ஜெயமேயாகும்
கோதண்டராமர் பாணந்தானே. (4)

---

## ஸ்ரீமகான் சொக்கலிங்கப் பரதேசி யவர்கள் கையாண்டுவந்த

# சரமாரித்தைலம்.

| | |
|---|---|
| அழுஞ்சிவிதை | புன்னைவிதை |
| கடுக்காய்விதை | புங்கம்விதை |
| தாணிக்காய்விதை | கார்கோலரிசி |

இந்த ஆறுவித்துகளையும் சமபாகமாய் நிறுத்தெடுத்து ஒருபாண்டத்தில்போட்டு சிறுவர்களின் சிறுநீர்விட்டு(உ௰) நாள்ஊறியபிறகு(உக)வதுநாள் யெடுத்து நிழலில்உலர்த்தி யெடுத்து அத்துடன் மிளகுநாழிபோட்டு கலந்துக்கொண்டு (௫) தமருள்ளபாண்டத்தில் சரக்குகளைப்போட்டு வாய்ப் பாட்டுக்கு பானைகவிழ்த்து சீலைமண்செய்து உலர்ந்தபிறகு அடியிலுள்ள தமருக்குநேராய் சிறுபாண்டம் பொருந்தச் செய்து பூமியில் அடிபாண்டம் தெரியாமல்புதைத்து சரக் குள்ளபாண்டம்துவக்கி வரட்டியடிக்கி குழித்தயிலம்யிறக்க வேண்டும்.

நடுபாண்டத்திலிருந்தே வரட்டிபடுக்க வேண்டியதான போதிலும் மூன்று பாண்டங்களும் பூமிக்குள் இருக்கும்படி பெரும்பள்ளமாக வெட்டி சுற்றளவுக்கும் பாண்டத்திற்குப் பொருத்தமாக வரட்டிகள் அடுக்கி குருத்தியானத்துடன் அக்கினியிடவேண்டியது அவ்வாறு சுசிகரத்துடன் பிறர் சஞ்சரிக்காத மறைவிடமான யிடத்தில் வைக்கவேண்டிய குழிப்புடத்தின் அருகில் தயிலம் யிரங்குமளவும் நிர்வாணி பூசை செய்யவேண்டியது.

{ ஓம் கிலியும் சௌவும் ஐயும் றீயும்
வறீயும் கிறீயும் ஆம் ஊம் }

என குழியின்நிதானம்அறிந்து தயிலம்இரங்குமளவும் இந்த ஒன்பதுவாக்கியமும் புருவநிதானத்துடன் ஓதியிருந்து பிறகு தயிலத்தை சீசாவில்யிருத்து வைத்துக்கொள்ளவும்.

---

## இந்த தயிலத்தினால்
## தீரும் வியாதிகள்.

வைத்திருந்ததயிலத்தை கொஞ்சந்தொட்டு
மயிர்நுனியில்தடவிவிடக் கருத்துபோகும்
எய்த்திருந்தவெடிசூலை கண்டமாலை
எண்ணூறுசொரிசிரங்கு கரப்பானெல்லாம்
உய்த்திருந்துகெட்டோடும் தயிலந்தன்னை
ஒடிகுறவுநோய்களுக்கு பூசிப்பாறு
மொய்த்திருந்தநோய்களெல்லா மோடிப்போகும்
முழித்திருந்துதயிலத்தை மூழ்குவாயே. (1)

மூழ்கையிலேவிஷநீரு முடிசிரங்கு
மூர்க்கமுள்ளதலைவெட்டி மேகந்தீரும்
மாய்கையிலேபுழுவெட்டி ரோகந்தீரும்
மகிமையிலேமயிரதுவுங் கருத்துபோகும்
மூழ்கையிலேயசாத்தியநோய் நடுக்கல்தீரும்
முடிசிரங்குகுருத்தடிப்பு வினையுந்தீரும்

ஆழ்கையிலேபாம்பரணை கடியுந்தீரும்
அரணைகடிச்சிலந்திகடி * வாளம்போமே. (2)

போனமென்றகுழிவாழை மூட்டுவாழை
புடைத்தெழுந்ததுடைவாழை முதுகுவாழை
ஆமையடிஊமையடி சிலந்திவாழை
அப்பனேசொல்லுகிறே னன்புராய்த்தானே
வேமென்றகண்ணோசி யிடுப்புசிட்டை
இருபுடரிநுனிநாசி சிலந்திபுத்து
தாணுச்சிமிளவையிமை கண்மேல்வாதம்
சரிநேத்திரபிளவையிதில் தணியும்பாறே. (3)

தணிவானபெண்குறிமேல் கரப்பான்கட்டு
தடர்சிலந்திபடர்சிலந்தி யல்குல்புத்து
பிணியானபவுத்திரமும் முளைமூலந்தான்
பின்கரப்பான்முன்கரப்பான் அண்டபுத்து
துணிவாதவுந்திப்புண் துடையில்புத்து
துடிசூலையிடிசூலை மேகசூலை
கெணியாதஅலைகடிமேல் யிலைமேற்புண்கள்
கீழ்க்குநாக்குமேல்நாக்கு புத்துப்போமே. (4)

புத்துபோம்பிருபிளவை நகத்தின்சூலை
புரைவிழுந்தபடுஞ்சிரங்கு கிருத்தும்பாரு
அத்துப்போம்நாக்குண்ணி மூக்குண்டபுண்ணு
அகலாதநோய்களெல்லா மகன்றுபோகும்
வெத்துப்போம்மூளையான நோய்களெல்லாம்
விழிமுழிங்கியிமைமுழிங்கி வெகுநாள்புண்கள்
செத்துப்போம்யித்தனைக்கும் பூசும்போது
தீர்ந்துப்போம்யின்னமுண்டு சொல்லக்கேளே. (5)

சொல்லக்கேள்கல்லரவம் விரியன்பாம்பு
சூறெலிகள்குருட்டெலிகட் புடையன்மூக்கன்

* வாளம் என்பது - வாளவிரியன் ஓர் பாம்பு.

வெல்லக்கேள்தேளோடு கட்டுவாக்காலி
விஷமுள்ளுதைத்தாலும் பூசுபூசு
இல்லக்கேள்ஒழிந்துவிடும் விஷங்களெல்லாம்
இத்தயிலம்வெகுசுருக்கு மெத்தநன்று
சொல்லக்கேள்விஷங்களோடு நோய்கள்பாவும்
கொல்லவென்றேயித்தயிலம் கூறினேனே. (6)
கூறினேன்புகையிலையும் புளியுந்தள்ளு
கூரியபச்சைமீன் தள்ளுதள்ளு
மீரிபேதின்னுதே அசனத்தைத்தான்
மிழுங்காதேயுரங்காதே மிகச்சொல்லாதே
ஏரினேன்பென்றவரை யிகழ்ந்திடாதே
பேசாதேவையாதே திட்டாதேநீ
ஆரியேபதமாக உண்டால்மைந்தா
அமுர்தமதுதன்னிலேயாய் நிலைக்கும்பாரே. (7)

குருதுணைவுண்டாகவும்.

சகலமேகராஜாங்க

## ரசகெந்திமெழுகு.

| | |
|---|---|
| இரசம் | வாலுழுவை |
| கெந்தி | சோம்பு |
| ரசகற்பூரம் | ஏலம் |
| அரிதாரம் | ஜாதிக்காய் |
| காந்தம் | மிளகு |
| துருசு | சீரகம் |
| துத்தம் | கார்கோலரிசி |
| முதார்சிங்கு | மாசிக்காய் |
| சுக்கு | தேவதாரம் |
| ஓமம் | வாய்விளங்கம் |
| மஞ்சள் | வசம்பு |
| திப்பிலி | லவுங்கம் |

| | |
|---|---|
| அரத்தை | பரிங்கிசெக்கை |
| கோஷ்டம் | செங்கொட்டை |
| கருஞ்சீரகம் | கடுக்காய்தோல் |
| காட்டுசீரகம் | சிறுதேக்கு |
| முக்திரிக்கை | தாளிசம் |
| பிரம்மிமூலம் | பெட்டிவிரை |
| நீர்பூண்டு | தேற்றான்வித்து |
| கொள்ளு | எள்ளு |
| தேங்காய் | அமுக்குராவேர் |
| சின்னிவேர் | சித்திரமூலம் |
| சங்கம்வேர் | கொப்பரைதேங்காய் |
| | கொல்லங்கோவை |

இவைகளை வகைக்கு ஒரு விராகனிடையாக நிறுத்தெடுத்து கல்லுரலில்யிட்டு யிடித்து வஸ்திரகாயம்செய்து அத்துடன் இரண்டுகோழிமுட்டைகளை உடைத்துஊற்றி பிறகு நிறுத்தெடுத்து அதுயிருக்கும் யிடைக்கு சரியிடை பழைய பனைவெல்லஞ்சேர்த்து கல்லுரலில்போட்டு பூணில்லாத மர உலக்கையால் மைபோல் குத்திஎடுக்கவும்.

## இதனால் தீரும்வியாதிகள்.

குத்தப்பாயிதுநேரே பனைவெல்லந்தான்
குணமாகநால்ஜாமம் யிடித்துத்தீரும்
பெத்தப்பாவழித்தெடுத்து சிமிழில்வைத்து
பேதமில்லைசுண்டக்காய் வீதங்கொள்ள
முத்தப்பாமோருஞ்சோ றுண்டுமுன்னே
முசியாமல்மருந்துண்ணு மண்டலந்தான்
சித்தப்பாமுழுகுநாள் மருந்துண்ணுதே
சிறப்பாகபத்தியந்தா னில்லைபாரே. (1)

தானென்றவெடிசூலை மேகசூலை
தயவானயிடிசூலை புடைக்குஞ்சூலை
வானென்றதுடிவாத சூலையோடு
வளமானகால்குடைச்சல் கரணைதீரும்

மானென்றதும்புவிப் புருதிமாலை
மதியாதகுட்டமொடு விஷநீர்தீரும்
கோனென்றகுறைநோயும் சிரங்குதீரும்
குணமானபுழுவெட்டு தடிப்பும்போமே. (2)

மோமேநீயோனிதன்னில் லிங்கந்தன்னில்
பொலிவானஆமையடி சிலந்திமேகம்
தாமேநீசெங்கிரந்தி கருங்கிரந்தி
தயவானஅரிகிரந்தி பொரிகிரந்தி
வாமேநீபருங்கிரந்தி யிடிகிரந்தி
வள்மாகயிடிவிழுந்த புரைமேற்புண்கண்
ஆமேநீஅரைக்கடியுக் தண்டிற்புண்ணு.
அடைவானகுள்ளிமா தேவியாமே. (3)

ஆமேநீதுடைவாழை மூட்டுவாழை
அடைவானகுழிவாழை முதுகுவாழை
சேமேநீபுழுகுவாழை விலாவில்வாழை
செய்லானதமர்காயாச் சிலந்தியோடு
ஓமேநீகுரிப்புற்று யோனிப்புற்று
ஒளிவானயிடிப்புற்று கன்னப்புற்று
தாமேநீபல்சிலந்திக் கன்னத்தோசை
சதைவளருங்கண்ணோசை போகும்பாரே. (4)

பாரடாபிளவையொடு பிளவைப்பூச்சி
பண்டானராஜனென்ற பிளவையோடு
கூரடாநேத்திரமேல் பிளவையோடு
கொடிதானதுடிசிலந்தி புடைசிலந்தி
தேரடாபவுத்திரங்கள் மூளைமூலங்கள்
நெடியபதமெட்டுசக் கரத்தினோடு
வீரடாயிவையெல்லாந் தீருந்தீரும்
விதமாகபோகருட செயலால்தானே. (5)

## சகலவிஷங்கள் பேய்பில்லி சூனியம் இவைகட்கு

# விஷமுஷ்டித்தைலம்.



ஏரழிஞ்சி
எட்டி
சங்கு
வன்னி
புங்கு
செண்பகப்பூ
இண்டன்
கொத்தான்
நாயுருவி
பூனைகாஞ்சோரி
புரசை
கிளுவை
புனல்பிண்டு
அமுக்கரா
பூவரசு
குமரி
கொன்றை
கழற்கொடி
பெருமரப்பூண்டு
சங்கங்குப்பி
கடம்பு
சிறுசின்னி
வெள்ளருகு
ஆவிப்பட்டை
மருக்காரை
குண்டுமணிவேர்
ஆவாரை
சிவன்வேம்பு
முள்ளி
கருங்காலி
வாகை
கருவூமத்தை
விடத்தேறு
குட்டிப்பலா
மீனகருவீண
ஆத்தி
செங்கத்தாரி
அவுரி

இவைகளை சமனிடையாயெடுத்து நிழலில் உலர்த்தி ஒன்றிரண்டா யிடித்து குழித்தயிலம் யிரக்கி வைத்துக் கொண்டு உடனே,

கழுகு
ஆமை
ஆந்தை
பச்சைஓணன்
தேவாங்கு
பச்சைதவளை
பெருவிரியன்
மனிதர்மண்டைபோடு
கழுதைமண்டைபோடு
எருமைக்கொம்பு
குதிரைக்குளம்பு
ஆனைலத்தி
ஒட்டைலத்தி
பன்றிலத்தி
கழுதைலத்தி
வெள்ளாட்டுப்புழுக்கை

இவைகளை சமனிடைகொண்டிடித்து உலர்த்தி குழித் தயிலம் இரக்கிவைத்து இதில் அறைப்படியும் ஷை தயிலத் தில் அறைப்படியும் ஆக ஒருபடி தயிலமும் ஒன்றாய்வார்த்து (மேல்மூடி) சூரியபுடமாகவைத்து எட்டிக்கொட்டையை குழித்தயிலம்வைத்து அறைப்படி யெடுத்து மேல்கலந்து வைத்த தயிலத்துடன் வார்த்து நன்றாய் வாய்புரத்திற்கு கார்க்கடைத்து ரவியில் வைத்துவிட்டு,

கருங்குங்கிலியம் கஸ்தூரிமஞ்சள்
கருஞ்சீரகம் மாசிக்காய்
இரசகற்பூரம் இவ்வைந்தும் வகைக்குப்பலம்-க

பரங்கிப்பட்டை பிரப்பங்கிழங்கு இவ்விரண்டும் வகைக் குப்பலம்(உ) வலம்புரிக்காய் கடுக்காய் வகைக்குப் பலம்(க) ஒதியம்பட்டைச்சாறு சித்திரமூலச்சாறு இரண்டும் கலந் துக்கொண்டு இதைவிட்டு ஷை கடைசரக்குகளை அரைத்து முன்யிரக்கி வைத்திருக்கும் குழிதயிலத்துடன் கலந்துவைத் துக்கொண்டு அத்துடன் மயிலெண்ணை அறைப்படி வேப் பெண்ணெய் அறைப்படி கலந்து அடுப்பேற்றி தயிலபதமா யும் குருவனுக்கிரகத்தாலும் கைமுறை செய்முறையோடும் தெரிந்துக்காய்ச்சி யிரக்கிவைத்துக்கொண்டு திரேகத்தின் மீது தடவிவிடத் தீரும் வியாதிகளாவன.

பழமையாகிய கால்முடக்கு, கைமுடக்கு, தீராதசூலை, குட்டம், குரைநோய், புடையன், விரியன், செய்யான், செவ்வெட்டை, மரவட்டை, சகலவித வண்டுகடி, பில்லி சூனிய வேதைவைப்பு, பிசாசு, பூததுடர், வேதாளபார்வை பிரமராட்சதி சந்திப்பு, இவைகள்தீரும். மற்றுநாள் வேது தண்ணீர் விடவும் கைப்பு புளிப்பு தள்ளவும் உப்புசுட்டு கூட்டவும் பாசிப்பயர் முருங்கைப்பிஞ்சு முழுத்துவரை ஆவின்பால் இவையாகும் வியாதியும் தேகமும். முதலாகிய சகலபலமும் தெரிந்து பத்தியம்வைக்கவும்.

பதினென்மர் துணைபுண்டாகவும்.

### சகல வலிப்புகட்கும்

## சோதிரிஷத்தைலம்.

| | |
|---|---|
| அவுரிவேர் | குட்டிகுமிழ்வேர் |
| முன்னைவேர் | குட்டிக்களாவேர் |
| அழிஞ்சிவேர் | பெருகுதம்பைவேர் |
| சிவனார்வேம்பின்வேர் | முருங்கைவேர் |
| சிறுபுள்ளடிவேர் | முளகருணைவேர் |
| சங்கம்வேர் | முக்காவேளைவேர் |
| செங்கத்தாரிவேர் | பாவெட்டைவேர் |
| வாகைவேர் | ஆதொண்டைவேர் |
| புங்கன்வேர் | வெட்பாலைவேர் |
| நொச்சிவேர் | எருக்கன்வேர் |
| பூவரசம்வேர் | கண்டங்கத்திரிவேர் |
| கொடிவேலிவேர் | தூதுளைவேர் |
| சத்திசாரணைவேர் | கூத்தன்குதம்பைவேர் |
| வெட்பாலைவேர் | ஓரிலைதாமரைவேர் |
| உத்தாமணிவேர் | நன்னாரிவேர் |
| ஙலியாலம்வேர் | முருக்கம்வேர் |
| குட்டிவிளாவேர் | |

இந்த வேர்வகைகள் முப்பத்திமூன்றும் வகைக்கு ஒரு விராகனிடையாக நிருத்தெடுத்து நிழலில் உலர்த்தி ஒரு அங்குலம் இரண்டங்குலம் அளவாக நருக்கி பாண்டத்தில் வைத்துக்கொண்டு,

| | |
|---|---|
| நற்பாகல்சார் | புங்கம்பிலைச்சார் |
| நாய்ப்பாகல்சார் | முடக்கத்தான்சார் |
| ஆடாதோடைச்சார் | காட்டுக்குரிஞ்சான்சார் |
| சிறுசின்னிச்சார் | மாவிலிங்கஞ்சார் |
| எருக்கிலைச்சார் | எலுமிச்சம்பழச்சார் |

இந்த சார்வகைகள்பத்தும் வகைக்கு கால்படியாகவெடுத்து வெவ்வேறு பாண்டங்களில்வைத்து ரவியில்வைத்து,

| | |
|---|---|
| கருஞ்சீரகம் | சதகுப்பி |
| கஸ்தூரி | சித்தரத்தை |
| பூதகரப்பான்பட்டை | பேரரத்தை |
| தஞ்சனைகர்சிட்டம் | செண்பகப்பூ |
| பெருங்காயம் | திப்பிலி |
| ஜாதிக்காய் | வாய்விளங்கம் |
| மஞ்சள் | கடுக்காய்த்தோல் |
| மரமஞ்சள் | செவியம் |
| குக்கில் | சிறுதேக்கு |
| அரப்பொடி | கடுகுரோகணி |

இவைகள் வகைக்கு விராகனிடை (௬)

வசம்பு விராகனிடை (௰) உள்ளி விராகனிடை (௰)வலம் புரிக்காய் விராகனிடை (௰௬) இந்த பதினாறு தினுசுகளையும் கல்லுரலில்போட்டு யிடித்து வஸ்திரகாயம்செய்து முதலில் நருக்கிவைத்திருக்கும் காட்டுவேர்கள் யாவும் பாண்டத்தில் போட்டு இரண்டுபடிகியாழம்வைத்து அரைபடி கியாழமாகக் குருகக்காச்சிவடித்து வஸ்திரகாயம் செய்திருக்கும் கடைசரக்கை கல்வத்திலிட்டு இந்தக்கியாழத்தில் அரைக்கவும் கியாழம்மிச்சமானால் ஆரவைத்து அறைத்தபிறகு முன் பிழிந்துவைத்திருக்கும் பத்துவகை சார்களையும் ஒவ்வொன்ருய்விட்டு அரைத்தவுடனே,

| | |
|---|---|
| பசுங்கோமியம் | படி-வ |
| எருமைக்கோமியம் | படி-வ |
| வெள்ளாட்டுக்கோமியம் | படி-வ |
| சிறுபிள்ளைகள்மூத்திரம் | படி-வ |

இந்த நான்குவகை நீரும்விட்டு அரைத்து சாணிப்பதமானபிறகு அத்துடன் விளக்கெண்ணை கால்படி வேப்பெண்ணை கால்படி இவ்விரண்டும் ஊற்றி குழம்புபதமாய்ப் கலந்து அடுப்பிலேற்றும்போது,

| | |
|---|---|
| வவ்வால் | இரண்டு |
| கள்ளிக்காக்காய் | ஒன்று |
| பெருவோணன் | ஒன்று |

| | |
|---|---|
| முயல் | ஒன்று |
| சிற்றேருணன் | மூன்று |
| உடும்பு | ஒன்று |
| நல்லபாம்பின்கண்டம் | ஒன்று |
| பச்சைமயில்இரகு | ஐந்து |

இவைகள் ஒவ்வொன்றையும் அறுத்து உதிரத்தை ஷை எண்ணெய் பாண்டத்தில் பிடித்துக்கொண்டு இறகு தோல் குடல் இவைகளைநீக்கி இரச்சியையும் அத்துடன் போட்டு அடுப்பேற்றி யெரித்து இரக்கிவைத்துவிட்டு மறுநாள் அடுப் பிலேற்றி யெரித்து இரச்சிகள் பாவும்யெடுத்துத் தயிலத் தைமாத்திரம் பிழிந்துக்கொண்டு இரச்சித் துண்டுகளை யெரிந்து விட்டு எண்ணெயை வேறு சிசாவில் வடித்து வைத் துக்கொண்டு ஒரு துளிமுதல் ஒருகாசயிடைவரையில் கொடுக்கவும், தலைமுதல் தேகம்முழுவதும் தேய்த்து துவளை யிலிடவும் தேகவலிவு வியாதிகளின் நோக்கம் இவையு ணர்ந்து உள்ளுக்குக் கொடுப்பதும் சர்வாங்கதுவாளையிடுவ தும் பண்டிதர்களுடைய பக்குவமாம்.

## இதற்கு தீரும் வியாதிகள்.

கோணைவலிப்பு, குமரகண்டவலிப்பு, பிரவலிப்பு, காக் கைவலிப்பு, ஜன்னிவலிப்பு, ரணவலிப்பு, முகவாதவலிப்பு, முகஜன்னிவலிப்பு, முயல்வாதம், பாரிசவாதம், உச்சிவாதம், கணுவாதம், வாதமென்று சொல்லப்பட்ட சகலவாதங்க ளும், வலிப்பென்று சொல்லப்பட்ட சகலவலிப்புகளும், ஜன்னியென்று சொல்லப்பட்ட சகலஜன்னிகளும் தீரும்.

## பத்தியம்.

புகையிலை, புளி, கருவாடு, மீன், இரச்சி, கரப்பான் பண் டம், லாகிரி. பொடி, போகம், இவைநீக்கவும், அன்றியும், நோய்க்கிசைந்தபடி சமயோசித பத்தியம் வைப்பது வயித் தியர் அனுபவமாகும்.

சற்குருதுணையுண்டாகவும்

---

# லகுயிடிவல்லாதி.

| | | |
|---|---|---|
| செங்கொட்டை | பலம் - | ௰ |
| எள்ளு | ,, | ௰ |
| கொப்பரைத்தேங்காய் | ,, | ௨ |
| பரங்கிப்பட்டை | ,, | ௨ |
| அமுக்கனுங்கிழங்கு | ,, | ௨ |
| சித்திரமூலம் | ,, | ௨ |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | ௨ |
| கருஞ்சீரகம் | ,, | ௨ |
| வாலுழுவை | ,, | ௨ |
| குராசாணி | ,, | ௨ |
| வெற்றிலைக்காம்பு | ,, | ௨ |
| கடுக்காய்தோல் | ,, | ௨ |
| திப்பிலி | ,, | ௨ |
| கோஷ்டம் | ,, | ௨ |

முதலில் சொல்லியிருக்கும் செங்கொட்டை பத்து பலத்தையும் ஒவ்வொருகொட்டைகளின் மூக்கைவெட்டி சாணிப்பாலில்போட்டு மேல்மூடி மூன்றுநாள் ஊரவைத்து எடுத்துஜெலத்தில் அலம்பிவிட்டு பிறகு இளநீரினல் அலம்பியெடுத்து கல்லுரலில்போட்டு எள்ளு பத்து பலத்தையும் அம்மியில் வைத்து அரைத்து கொப்பரை தேங்காயையும் அம்மியில் அரைத்து இந்த யிரண்டு முத்தையையும் உரலில் யிருக்கும் செங்கொட்டையுடன் போட்டு கெட்டப்பாறை யினல் மூன்றுநாள் யிடிக்கவும் மைபோல் ஆகுமளவும் யிடிக்கவேண்டியது அப்படி மெழுகுபதமாய் யிடித்தானபிறகு பரிங்கிச்செக்கை முதலாய் கோஷ்டம்வரையில் உள்ள பதிமூன்று தினுசுகளில் வெற்றிலைக்காம்பு தவிர மற்றதுகளை வேரே வுரலில் யிடித்து வஸ்திரகாயம்செய்து முன்பு கல்லுரலி லிருக்கும் மருந்துடன் போட்டு ஒருநாள் யிடித்து வழித்து வைத்துக்கொள்ளவும் வெற்றிலைக்காம்பை எள்ளரைக்

கும்போது கூடப்போட்டு அரைத்துக் கொள்ளவேண்டியது இம்மருந்தை இடிக்கவேண்டிய மனிதன் காலையில் எருமைத் தயிறுசேர்ந்த பழையது வயிறுநிரம்பப் புசித்து யிடிக்கத் துவக்கவேண்டும் யிடிக்கும்போது நிதம் ஒருகொப்பரைத் தேங்காய்த் தின்னவேண்டும்யிடித்துமுடிவானபிறகு விளக் கெண்ணெய் தலைக்குத்தேய்த்து ஸ்நானம் செய்யவேண்டும்.

---

## இதனல் தீரும்வியாதிகள்.

தானென்றவல்லாதி அந்திசந்தி
தபவாகமண்டலந்தான் கொண்டாபானல்
வானென்றகுட்டமொடு கிரந்திருலை
வகையானஅறையாப்பு மேகமெல்லாம்
கோனென்றகுன்மமெட்டு சுக்கிலவாய்வு
குணமில்லாரிணம்புரைகள் கிரந்திதீரும்
ஏனென்றபத்தியந்தா நிச்சாபத்தியம்
இதமானஉப்புமுதல் வருத்துக்கூட்டே. (1)

கூட்டப்பாதயிர்மோரும் நெய்யுமாகும்.
குணமான துவரையுட பருப்புமாகும்
நாட்டப்பாபாசிபென்ற பயருமாகும்;
நலமானநல்லாரைப் பொன்னங்கண்ணி
ஆட்டப்பாமச்சமென்ற தெல்லாந்தள்ளு
அடைவாகமற்றதெல்லா மாகும்பாரு
ஆட்டப்பாவிளக்கெண்ணெ தேய்த்தமுழ்கு
அடைவாகசந்திரம்போல் தேகமாமே. (2)

நாலுநாளைக்கொருதகுதிவிளக்கெண்ணெயில் தலைமுழு கிவரவேண்டியது முழுகும்நாளில் மட்டும்மருந் துண்ணப் படாது,க்ஷவரம்செய்துக்கொள்ளும் தினத்திலும் மருந்துண் ணப்படாது, புகை சுருட்டும் லாகிரிவஸ்துவும் எப்போதும் கூடாது, இந்தமருந்தை புசிக்கும்நாள் துடங்கி மருந்துவிட்ட பிறகு தொண்ணூறுநாள்வரையிலும் ஸ்திரீசம்மந்தம் கூடாது வேளைக்கு ஒருசுண்டக்காயளவு சாப்பிடவேண்டும்.

குருதுணையுண்டாகவும்.

---

## 21-மேகத்திற்கும் சித்திரபல்லாதி.

பால்வுள்ள செங்கொட்டைகளாக (ள) கொட்டைகொண்டுவந்துகுழித்தயிலம்மிரக்கி மூன்றரைபலம்தயிலம் மிருத்துபெடுத்து வைத்துக்கொண்டு என்ரு (கு) பலங் கொண்டுவந்து ஜெலத்தில் வூரவைத்து பிசைந்து மேற்றோல்போக்கி உலர்த்தி கல்லுரலில்போட்டு நன்ருய் யிடித்தபிறகு அத்துடன் நல்லவெல்லம் (கு) பலம்போட்டுயிடித்து பின்பு கெந்திபலம்(உ) சூதம் பலம்(க) இவ்விரண்டும் கல்வத்தில்போட்டு அரைத்து நன்ருய் மடிந்தபிறகு பெடுத்து உரலில் யிருக்கும் மருந்துடன்போட்டு மூன் பெடுத்துவைத்திருக்கும் குழித்தயிலம் (௩௨) பலத்தையும் மருந்துடன் விட்டு ஒருநாள் முழுதும்யிடித்து மெழுகுபோல் ஆனபிறகு பெடுத்து பிங்கான் கோப்பையில் வைத்துக்கொள்ளவும்.

ஒருவேளைக்கு மணிப்புங்கன்விரைப் பிரமாணமாக காலைமாலை இருவேளையும் (௰௧)-நாள் சாப்பிடவும் யாதொரு பத்தியமும் கிடையாது கடுகு நல்லெண்ணை யுரவற்றும் ஆகும் அல்லது இச்சாபத்திய மிருக்கலாம் தயிர் மோர் நெய் ஆட்டிரைச்சி விசேஷமாய்ப் புசிக்கலாம்.

### தீரும்வியாதிகள்.

கண்டமாலை, கொருக்கு, லிங்கப்புற்று, யோனிப்புற்று, ரிணங்கள், கிரந்தி, மேகப்படை, குட்டத்தடிப்பு, ஆசனப்பவுத்திரம், கொடிபவுத்திரம், மூலம், சிழ்மூலம், (உக) விதமேகமும் தீரும். மறுபத்தியம் (௰௧) நாள் ஆன பிறகு நல்லெண்ணெய் தேய்த்து தலைமுழுகலாம், ஒரு சமயம் திரேகம் நமைச்சல் கண்டாலும் ஊதலானுலும் இரண்டு கப்பத் தேங்காயைத் திரிகி பால்பெடுத்து அந்தப்பாலில் (உ) எலுமிச்சம்பழம் பிழிந்து சிரசுமுதல் திரேகமெல்லாம் பூசி நன்ருய்த் தேய்த்துக்கொண்டு வெந்நீரில் குளிக்கவும்.

குருதுணைவுண்டாகவும்.

பெருமருந்துவகைபரணி

முற்றுப்பெற்றது.



உ

தேவிசகாயம்.

# ஐந்தாவது
# மாத்திரை வகைபரணி.

## பாலசஞ்சீவிக்குளிகை.

| | |
|---|---|
| சுக்கு | லிங்கம் |
| திப்பிலி | வெண்காரம் |
| மிளகு | கிராம்பு |
| ஓமம் | வகைக்குவிராகனிடை (க) |

இந்த ஏழுவகையும் யிடித்து வஸ்திரகாயம்செய்து கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச்சார்விட்டு மூன்றுஜாமம் அரைத்து உளுந்தளவு மாத்திரைகள்செய்து நிழலில் உலர்த்தி சீசாவில் வைத்துக்கொள்ளவும்.

குழந்தைகள் சுரத்திற்கு துளசி அல்லது நாய்த்துளசி பிட்டவியல்செய்து பிழிந்தசாற்றில் குழந்தை வயதுக்குத் தக்கினபடி (க) அல்லது (உ) மாத்திரை யிழைத்துக் கொடுக்கவும் தாய் இச்சாபத்தியம் யிருக்கவும், சன்னிசுரமானல் மூலைப்பாலில் கொடுக்கவும், பெரியவர்களுக்கு ஜலதோஷம் தலைபாரம் கண்டால் ஒருமாத்திரை வெற்றிலையில் வைத்து மடித்துத் தின்னவும் ஷை சுரங்களுக்கு அந்திசந்திபாக மூன்றுநாள் கொடுக்கவும்.

## பாலபேதிக்குளிகை.

| | |
|---|---|
| ஜாதிக்காய் | திப்பிலி |
| ஓமம் | கஸ்தூரிமஞ்சள் |
| கிராம்பு | சுட்டவசம்பு |
| கருஞ்சீரகம் | காயம்வகைக்குவிராகனிடை-க, |
| சுக்கு | வெள்ளைக்காக்கணவேர் ,, கூ, |

இவ்வகளை யிடித்து வஸ்திரகாயம் செய்துகல்வத்தி லிட்டு வென்னீர்விட்டு ௫-ஜாமம் அரைத்து மிளகு, கடலை, சிறுசுண்டை இந்த அளவுகளாக உருட்டி நிழலில்உலர்த்தி வைத்துக் கொண்டு குழந்தைகளின்வயதும்திடமும்பார்த்து வென்னீரில் ஒருமாத்திரை யிழைத்துக் கொடுக்கவும் இப்படி ஏழுநாள் கொடுக்க மூன்று நாலுவிசை வயறுபோகும் பால்குடிக்கும் சிறுகுழந்தையாகில் தாயார்பத்தியமிருக்கவும் வென்னீரின்சாதம் உப்பில்லாமசல தின்னவேண்டும் அல்லது சங்கம்யிலையில் சுட்டு பஸ்பமான உப்புசேர்த்து முழுத்துவரையை வருத்து உடைத்து பருப்புதுவையலாகும்.

## தீரும்வியாதிகள்.

சளிபிருமல், சுழிகணம், விச்சுழி, அள்ளு, சன்னிதோஷம், மந்தம், வயறுநோய், பொருமல், இரச்சல், கொருகொருப்பு, சுரம், இவைதீரும்.

## மகாசுராங்கிசக்குளிகை.

| | | | |
|---|---|---|---|
| ரசம் | விராகனிடை-௧ | சுக்கு | விராகனிடை-௪ |
| கெந்தி | ,, ௧ | திப்பிலி | ,, ௪ |
| நாபி | ,, ௧ | மிளகு | ,, ௪ |
| ஊமத்தன்விரை | ,, ௫ | | |

இவைகளைக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச் சார்விட்டு மூன்றுஜாமம் அரைத்து குண்டுமணியளவு மாத்திரை செய்து நிழலில் உலர்த்திக்கொள்ளவும், இந்த மருந்தை தகுந்த அனுபானங்களுடன் பிரயோகித்தால் தினசுரம், இருமுறைசுரம், மும்முறைசுரம், நாலாமுறைசுரம், சகலகாச்சலும் தீரும்.

---

## சூலை குடாரம்.

| | |
|---|---|
| ரசம் | நெல்லிமுள்ளி |
| நாபி | சுக்கு |
| வெண்காரம் | மிளகு |
| கெந்தகம் | திப்பிலி |
| கடுக்காய் | அரிதாரம் |
| தான்றிக்காய் | தாம்பிரபஸ்பம் |
| நேர்வாளம் | வாய்விளங்கம் |

இவை சமன்கொண்டு கையாந்தகரைச்சார்விட்டு (௩) ஜாமம் அரைத்து குன்டுமணியளவு உருட்டி மிளகு பிரமாணத்தில் நிடமிரிந்து ஒன்றிரண்டு உபயோகித்தால் சூலைகள் குன்மங்கள் தீரும்.

## சுரநாதக்குளிகை.

| | | |
|---|---|---|
| அரிதாரம் | பலம் | ௪ |
| துருசு | ,, | ௩ |

இவ்விரண்டும் பாகலிலைச்சாற்றால் மூன்றுநாள் அரைத்து உளுந்தளவு மாத்திரைசெய்து நிழலில் உலர்த்திக் கொண்டு இஞ்சிரசத்தில் ஒருமாத்திரை யிழைத்துக் கொடுக்க சீதசுரம் தீரும் காலைஒரேவேளை உபயோகிக்கவும்

## சீதசுரக்குளிகை.

| | | |
|---|---|---|
| வெள்ளைப்பாஷாணம் | பலம் | ௧ |
| ஜாதிலிங்கம் | ,, | ௨ |

பசும்மோரைத் தெளியவைத்து அதில் கீழ்கிற்கிற வண்டல் பலம்-௩, எடுத்து அந்தமருந்தில்போட்டு ஒருநாள் முழுதும் அரைத்து பச்சைப்பயரளவு மாத்திரைசெய்து நிழலில் உலர்த்திக்கொண்டு மோரில் ஒருமாத்திரை யிழைத்துக்கொடுக்கவும், குளிர்சுரம் சொஸ்தமாகும்.

## வாலசஞ்சீவி.

நாவிதிப்பிலிவெண்காரம் நல்லக்காசெடைமூவைந்து
மேவும்ஜாதிலிங்கமது வீசங்காசெடைபத்தாகும்
தூவுநிம்பழத்தின்சாற்றில் சுகமாயரைத்துஒருஜாமம்
சாவியக்கயற்கண்ணேளே கடலைநிறைபோதுகுன்டைசெய்யே.

## இதுவுமது.

சக்குநீர்தன்னிற்கொள்ள சுகமுடன் வெதுப்புதீரும்
தக்கசிரகக்கிராம்பு தனிலிடதாகந்தீரும்
பக்காலின் விழிதிற்கொள்ள * பண்டையின்சுரங்கடீரும்
மைக்கண்ணுப் குளிகையின்பேர் வாலசஞ்சீவியாமே.

* பண்டை-பழையசுரம்.

## பாலவிரோசனக்குளிகை.

| | | | |
|---|---|---|---|
| திப்பிலி | களஞ்சி-உ | கடுகுரோகணி | களஞ்சி-உ |
| மிளகு | ,, உ | தேசாவரம் | ,, உ |
| சுக்கு | ,, உ | வாய்விளங்கம் | ,, உ |

இவை யாவும் யிடித்து வஸ்திரகாயம் செய்து கல்வத்திலிட்டு சுத்திசெய்தவாளம் களஞ்சி (யஉ0) ஷை மருந்துடன் போட்டு எலுமிச்சம்பழச்சார்விட்டு இரண்டுஜாமம் அரைத்து குண்டுமணிப்பிரமாணம்உருட்டி நிழலில்உலர்த்தி வைத்துக்கொள்ளவும், பிள்ளைகளுக்கு நிலாவிரை பொழுத்திலாவது சுக்குபொழுத்திலாவது (க) அல்லது (உ) மாத்திரை இழைத்துக்கொடுக்கவும் நன்றாய் விரோசனமாகும் மாந்தம் வாய்வு சுரம் இவைதீரும்.

---

## சர்வமாந்தக்குளிகை.

| | | |
|---|---|---|
| வாளம் | விராகனிடை | அ |
| சுக்கு | ,, | எ |
| மிளகு | ,, | சு |
| கெந்தி | ,, | உ |
| வெண்காரம் | ,, | உ |
| ரசம் | ,, | உ |
| கடுகுரோகணி | ,, | உ |

இவைகளை யில்க்கள்ளிச்சார்விட்டு அரைத்து மிளகளவுமாத்திரைசெய்து நிழலில்உலர்த்தி வைத்துக்கொள்ளவும் சுக்குபொழுத்திலிட சுரந்தீரும், வாழைப்பழத்தில் கொடுக்க பேதியாகும், நொச்சி ஆடாதோடை துளசி இது கள் பிட்டிட்டுச்சார்பிழிந்து அந்தச்சாற்றில் ஒருமாத்திரை யிழைத்துக் கொடுக்க சகலமாந்தமும் கண்டிக்கும்.

---

## சஞ்சீவிக்குளிகை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| நாபி | களஞ்சி | க | சுக்கு | களஞ்சி | க |
| கருநாபி | ,, | க | தாணிக்காய் | ,, | க |
| தாரம் | ,, | க | மிளகு | ,, | க |
| இரசம் | ,, | க | திப்பிலி | ,, | க |
| வெண்காரம் | ,, | க | வாளம் | ,, | ரு |

இவைகளைக் கல்வத்திலிட்டு கையாந்தகரைச் சார் விட்டு ஒரு ஜாமம் அரைத்து நிருத்தவும் இப்படி ஒருநாளைக் கோருஜாமமாக ஏழுநாள் அரைத்து குண்டுமணியளவுமாத் திரை செய்து நிழலில்உலர்த்தி வைத்துக்கொள்ளவும். மாந் தம்மாந்தவலிப்பு குன்மம் இதுகட்கு நொச்சிலிசாற்றிலிடத் தீரும், மூலவாய்க்கு ஜாதிக்காய்ப்பொடியில் ஒருமாத்திரை வைத்து முலைப்பால்விட்டு மிழைத்துக்கொடுக்கவும், சூலை வாய்வு சர்வாங்கதவாதம் இவைகட்கு முருங்கப்பட்டைச் சாற்றிலிடவும் பாம்புகடிக்கு பழச்சாற்றிலிடவும் தீரும்.

---

## கபாடமாத்திரை.

ஜாதிக்காய், ஜாபத்திரி, சீரகம், அதிவிடையம், லவுங் கம், அபினி, வன்னிகெருப்பம், வெந்தியம், களச்சிவித்து, குரோசானிஓமம், வகைக்கு விராகனிடை(வ)கெஞ்சா சாறு விட்டு அரைத்து வெந்தியப் பிரமாணம் மாத்திரைசெய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ளவும், தயிரிலாவது தேனிலாவது வாழைப்பூச்சாற்றிலாவது மூன்றுநாள் இரு வேளையும் கொடுக்க ரத்தமூலம், கிராணி, ஜெலக்கிராணி, வாய்வுக்கிராணி, சுழிக்கிராணி, நீர்தாரைக்கிராணி, பாண் டுக்கிராணி, அதிசாரக்கிராணி, யாவும்தீரும்.

## குழந்தைகள் சுரமாத்திரை.

லவுங்கம், சுக்கு, மிளகு, ஓமம், வெண்காரம், லிங்கம், குங்குமப்பூ வகைக்கு விராகனிடை-க, பழச்சாற்றாலரைத்து உளுந்தளவு மாத்திரைசெய்து துளசி, நாய்துளசி, முலைப் பால் இதுகளில் கொடுக்கவும், ஜன்னி சுரதோஷம் இவை கள் தீரும், பெரியவர்கள் இரண்டுமாத்திரையை ஒருவெற் றிலையில்வைத்து மடித்துத்தின்னவும், ஜலுப்பு, சீதளம், தலைபாரம், சுரம், இதுகள்தீரும்.

## சிகப்புமாத்திரை.

| | |
|---|---|
| சுக்கு | அக்கிராகாரம் |
| திப்பிலி | கோஷ்டம் |
| மிளகு | வெண்காரம் |
| லவுங்கம் | லிங்கம் |
| வால்மிளகு | வகைக்கு விராகனிடை (க) |

இவைகளை இஞ்சிச்சார்விட்டு இரண்டுஜாமம் அரைத்து துவரையளவு மாத்திரைசெய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவும் சகலவியாதிகள் சுரம்யாவற்றிற்கும் கொடுக்க லாம்.

## அமுர்தசஞ்சீவிக் குளிகை.

| | |
|---|---|
| கஸ்தூரி | பச்சைகற்பூரம் |
| குங்குமப்பூ | மிளகு |
| கோரோசனம் | சன்னராஷ்டகம் |
| செண்பகப்பூ | பளிங்குசாம்ராணி |

இவைகள் சமநிடைகொண்டு கல்வத்திலிட்டு இஞ்சிச் சாற்றில் ஒருஜாமம் முலைப்பாலில் ஒருஜாமமரைத்து பயறு போலுருட்டி நிலலில் உலர்த்திவைத்துக்கொள்ளவும் வெற் றிலையில் ஒருமாத்திரைவைத்து மடித்துத் தின்ன ஜலதோ ஷம் சுரதோஷம் சன்னி யாவும்தீரும்.

## லட்சுமீ நாராயணக் குளிகை.

கெந்தகம், துருசு, சீனகாரம், அரிதாரம், இவை சம னிடைசேர்த்து சாரணைவேர் கியாழத்தால் (ரு) ஜாம மரைத்து அதேகியாழத்தில் தொளாந்திரமாகக்கட்டி ஒரு ஜாமம் யெரித்து ஆறினபிறகுயெடுத்து அரைத்து குன்றி யளவு மாத்திரை செய்து அனுபானமறிந்துக் கொடுக்க வாதசுரம், பித்தசுரம், சிலேட்டுமசுரம், விஷசுரம், சன்னி பாதசுரம், சகலமும் அனுகூலமாகும்.

## கஸ்தூரிமாத்திரை.

| | |
|---|---|
| கஸ்தூரி | ஜாபத்திரி |
| குங்குமப்பூ | தாளிசப்பத்திரி |
| பச்சைகற்பூரம் | வால்மிளகு |
| செஞ்சந்தணம் | தக்கோலம் |
| ஏலம் | கிராம்பு |

இவைகளை வகைக்கு விராகநிடை-க, எடுத்து இடித்து வஸ்திரகாயம்செய்து செவ்விளநீர்விட்டரைத்து பயறுபிர மாணம் மாத்திரைசெய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொள்ளவும் குழந்தைகள்முதல் உபயோகப்படுத்தலாம்.

## குங்குமப்பூ குளிகை.

| | |
|---|---|
| குங்குமப்பூ | ஓமம் |
| பச்சைகற்பூரம் | அதிவிடையம் |

அக்கிராகாரம் லவுங்கப்பட்டை
மாசட்டிமொக்கு குராசானிஓமம்
ஏலரிசி கருஞ்சீரகம்

இவைகள் வகைக்கு விராகனிடை(க)எடுத்து ஆவாரை வேரின் கியாழத்தாலரைத்து பயரளவு குளிகைசெய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொள்ளவும்.

## சகலரோகத்திற்கும்

# கோடாசூழிக் குளிகை.

சுக்கு நாவி
திப்பிலி நிருவிஷம்
மிளகு இரசம்
கடுக்காய்த்தோல் கெந்தகம்
தானிக்காய் வெண்காரம்
நெல்லிப்பருப்பு நேர்வாளம்

நேர்வாளத்தை மாத்திரம் கிரமப்படி சுத்திசெய்து(௬) விராகனிடை எடுத்துக்கொண்டு மற்ற பதினொருசரக்கும் வகைக்கு ஒருவிராகனிடையாக எடுத்து கரசனாங்கண்ணிச் சாற்றால் ஒருஜாமம் அரைத்து கலுவத்துடன் அப்படியே வைத்துவிட்டு மறுநாள் உதயத்தில் ஷை சாறுவிட்டு ஒரு ஜாமம் அரைக்கவும் இப்படி நிதம் ஒருஜாமமாக ஏழுநாள் அரைத்தபிறகு குன்றிப்பிரமாணம் மாத்திரைசெய்து நிழலில் உலர்த்தி சீசாவில் வைத்துக்கொள்ளவும்.

## இதனால் தீரும்வியாதிகள்.

விளக்கெண்ணெயில்ஒருமாத்திரையிழைத்துக்கொடுக்கபேதியாகும், மோரில்(க)அல்லது(உ)மாத்திரைகொடுக்ககிராணிகள் தீரும், இஞ்சிச்சாற்றில்கொடுக்க செரியாகுணம் தீரும், கரசனாங்கண்ணிச்சாற்றிலிட குளிர்சுரம்தீரும்
ஷை சாற்றிலிட அல்லது கியாழத்திலிட உடம்புநோய்தீரும்
கொச்சிச்சாற்றிலிட சுக்கிலபிரமியந்தீரும்
பழச்சாற்றிலிட உடம்புவீக்கந்தீரும்
ஜாதிக்காயில்கொடுக்க பேதிகட்டும்
பிரண்டைசாற்றில்கொடுக்க போகம்அதிகரிக்கும்
ஆனைவணங்கிச்சாற்றிலிட உடம்புயிளைப்புதீரும்

கோரைக்கிழங்குசாற்றில்(க)மண்டலமிடநாள்பட்டகிராணி
திரும், பாக்கில்கொடுக்க கெர்ப்பமுண்டாகும்
முருங்கப்பட்டைச்சாற்றிலிட வயற்றுசூலைதீரும்
தயிரில்கொடுக்க அஜீரணம்தீரும்
ஊமத்தைச்சாற்றிலிட ஜன்னிபாதம்தீரும்
வெள்ளாட்டுப்பாலிலிட ஜெயரோகந்தீரும்
நெல்லிக்காய்சாற்றிலிட உடம்புபெரிவுதீரும்
வெல்லத்திலிட மலக்கட்டுதீரும்
அன்னக்காடியிலிட பித்தந்தீரும்
பொன்னுங்கண்ணிசாற்றிலிட பிள்ளையுண்டாகும்
புளிப்புமாதளம்பழச்சாற்றிலிட பசியுண்டாகும்
கழுநீரிலிட சகலஉஷ்ணமும்தீரும்
கோமூத்திரத்திலிட பித்தம்உடம்புதிமிரும்தீரும்
முள்ளங்கிசாற்றிலிட மூலந்தீரும்
இலவம்பட்டைசாற்றிலிட விக்கல்தீரும்
எள்ளிலைச்சாற்றிலிட கண்படலம்தீரும்
சிறுநீரிலிட ஐந்துவகைகுன்மம்தீரும்
ஜாதிக்காயிலிட மூலக்கிராணிதீரும்
மிளகுபசும்நெய்யிலரைத்து அதிலிட பாம்புவிஷம்தீரும்
வசம்பில்கொடுக்க வாய்வுதீரும்
சுக்கில்கொடுக்க இரைப்புகடுப்புதீரும்
சீரகப்பொடியும் சக்கரையும்கலந்து அதிற்கொடுக்க சகலசுரமும் உஷ்ணமும்தீரும் குளிர்ச்சிதரும்
அலரியிலையில்நசியமிட வெரிதீரும்
காடியிலிழைத்துப்பூச சந்துவாதம்தீரும்
செண்பகமொக்கில்அரைத்துப்பூச வாதம்தீரும்
பழச்சாற்றிலிட பாம்புவிஷம்தீரும்

இந்தகுளிகையை தினம்மூன்று உருண்டையாக இடைவிடாமல் மூன்றுவருஷகாலம் தின்றுவந்தால் தேகம் வச்சிரகாயமாகுமென்று இந்தமுறைதந்தவர் சொல்லுகிறார். அன்றியும் வயித்தியர்கள் கையாடும்பக்குவத்தினால் எல்லா வியாதிகட்கும் இந்த ஒருவிதமருந்தையே உபயோகிக்கலாமென்றும் தெரிவிக்கிறார்.

## பூரமாத்திரை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| இரசகற்பூரம் | விராகனிடை- | ௰ | மிளகு | விராகனிடை- | உ |
| வெண்காரம் | ,, | உ௦ | திப்பிலி | ,, | உ |
| பச்சைகற்பூரம் | ,, | க | கருஞ்சீரகம் | ,, | க |
| வாய்விளங்கம் | ,, | உ | மோடி | ,, | உ |
| லவுங்கம் | ,, | க | ஏலரிசி | ,, | க |
| சுக்கு | ,, | உ | வாளம் | ,, | ௬ |

இவைகளில் சூரணிப்பதை சூரணித்துக் கொண்டு யாவும் கல்வத்திலிட்டு சுக்குகியாழத்தால் ஒரு ஜாமம் அரைத்து குன்றியளவுமாத்திரைசெய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ளவும் அந்திசந்தி இருவேளையும் பத்து நாளுண்ணவும் இச்சாபத்தியம்.

## மதுரமாத்திரை.

| | |
|---|---|
| அதிமதுரம் | மாதளம்பூ |
| ஜாதிக்காய் | சீரகம் |
| அதிவிடையம் | அக்கிராகாரம் |

இவைகளை சமனிடைகொண்டு பொன்வருப்பாய் வருத்துயிடித்து சூரணித்து புளியாவாரைச் சாற்றுலாட்டி மிளகளவு குளிகைசெய்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு தேனில் சக்கரையில் ஒருமாத்திரை கொடுக்கவும் வெப்புக் கழிச்சல் தீரும் இச்சாபத்தியம்.

## சுரயேலாதிக்குளிகை.

| | |
|---|---|
| ஏலம் | சீரகம் |
| கோஷ்டம் | கருஞ்சீரகம் |
| திப்பிலி | அக்கிராகாரம் |
| மாசிக்காய் | பேய்ப்புடல் |
| மாஞ்சில் | கோரோசனை |

இவைகள் வகைக்கு விராகனிடை-உ௦, யாகவாங்கி பொன்வருப்பாய்வருத்து யிடித்துச் சூரணித்து முலைப்பால் விட்டு இரண்டுஜாமம் அரைத்து கடலைப்பிரமாணம் மாத்திரை செய்துவைத்துக் கொண்டு முலைப்பாலில்தானே யிழைத்துக்கொடுக்க கணக்காச்சல் உட்சுரம் இவைதீரும் இச்சாபத்தியம்.

மாத்திரைவகைபரணி
முற்றுப்பெற்றது.

உ

தேவிசகாயம்.

# ஆறுவது

# எண்ணெய் வகைபரணி.

## சர்வரோகத்திற்கும்

## பொதுயெண்ணெய்.

ஜாதிக்காய்
ஜாபத்திரி
ஏலம்
கோஷ்டம்
அதிவிடையம்
குங்குமப்பூ
அதிமதுரம்
சித்திரமூலம்
சுக்கு
செவியம்
பேரரத்தை
சித்தரத்தை
கடுக்காய்
தாணிக்காய்
மாசிக்காய்
சீரகம்
வால்மிளகு
குராசாணிஓமம்
சதகுப்பி
வசம்பு
ஓமம்

கடைசியில் சூரியஓமம் (ரு) விராகனிடை வசம்பு (சா) விராகனிடை எடுத்துக்கொண்டு மற்ற சரக்குகள் யாவும் வகைக்கு இரண்டுவிராகனிடையாக யெடுத்து உலர்த்தி யிடித்து வஸ்திரகாயம்செய்து வைத்துக்கொண்டு வசம்பைச்சுட்டு சாம்பலாக்கி சேர்க்கவும்.

ஈயத்தண்டு
பழம்பாசியிலை
நுணாயிலை
புங்கன்யிலை
சங்கன்யிலை
கழற்சியிலை
குதிரைவாலி
கண்டங்கத்திரி
செருப்படை
தபசுமுருங்கை
நாவற்கொழுந்து
கொட்டைக்கரந்தை
சிறுபுள்ளடி
துளசி
தும்பை
பொடுதலை
வேளை
வரட்பூலா

| | |
|---|---|
| கோழியாவரை | வெள்ளருகு |
| ஆடாதோடை | பருத்தி |

இவைகளின்சாறு வகைக்கு அரிக்கால் படியாக எடுத்து விளக்கெண்ணெய் படி (உ) இவையாவும் ஒன்றாய்க்கலந்து முலைப்பால் ஆழாக்குவிட்டு திருநீற்றுப் பச்சிலைவேரும் கருவேப்பிலையீர்க்கும் வகைக்கு ஒவ்வொருபிடியெடுத்து ஒன்றிரண்டாய்நருக்கிக் கூடப்போட்டு முன்செய்துவைத்திருக்கும் சூரணத்தையும் கொட்டி நன்றாய்க்கரைத்து ஒருநாள் சூரியபுடம்வைத்து பின்பு அடுப்பேற்றி மெழுகுபதமாய்க் காய்ச்சி வடித்துக்கொண்டு காலையில் உச்சிக்கரண்டி வீதம் கொடுக்கவும் கணம் மாந்தம் சொரிசிரங்கு புண்கள் வாய்வுகள் நீர்மேகம் பிரமேகம்யாவும்தீரும் குழந்தைகள் முதல் பெரியவர்களுக்கும் ஆகும் வியாதியின் திடமும்தேக திடமும் அறிந்து இச்சாபத்தியம் அல்லது கடும்பத்தியமும் வைக்கலாம்.

---

## கதிர் யெண்ணெய்.

| | |
|---|---|
| சிறுபுள்ளடியிலைச்சாறு | பொடுதலைச்சாறு |
| கெச்சக்காய்கொழுந்துச்சாறு | புங்கம்வேர்பட்டைப்பால் |
| அவுரியிலைச்சாறு | கோரோசனம் . |

கோரோசனம் க-விராகனிடை, புங்கம்பால் காலணாயிடை, மற்றசாறுகள் வகைக்குப்பலம்-உ, விளக்கெண்ணை கால்படியில் யாவும்விட்டு ஒருநாள் சூரியபுடம்வைத்து மறுநாள் அடுப்பேற்றி மெழுகுபதமாய் காய்ச்சி வடித்து குழந்தைகளுக்கு துட்டிடை கொடுக்கவும் தாய் பத்தியமிருக்க வேண்டும் மாந்தம்வாய்வு வயருப்பிஷம் இவைதீரும் இச்சாபத்தியம்.

---

## ஷை சூரியபுடஎண்ணெய்.

| | |
|---|---|
| சிறுபுள்ளடியிலை | அவுரியிலை |
| கழற்கொழுந்து | பொடுதலையிலை |

இந்நான்கும் வகைக்கு ஒருபிடியெடுத்து பஞ்சுபோல் கருக்கி ஆழாக்கு நல்லெண்ணெயில் போட்டு(ந)நாள்சூரியபுடம்வைத்து உள்ளுக்கும் கொடுத்து மேலுக்கும் பூசலாம் கணமாந்தம் தீரும், இச்சாபத்தியம்.

## மண்டைக் குடைச்சலுக்கு எண்ணெய்.

| | |
|---|---|
| மணத்தக்காளி | கீழாநெல்லி |
| பொன்னாங்கண்ணி | வில்வயிலை |
| கரசலாங்கண்ணி | தேள்கொடுக்கிலை |

இவைகள் யாவும் சமபாகமாய்கொண்டுவந்துயிடித்து சாறுபிழிந்து அந்த சாற்றுக்கு சமநிடை நல்லெண்ணெய் கூடவிட்டு ஒருநாள் சூரியபுடம் வைத்து மறுநாள் அடுப் பேற்றி கடுகுபதமாய் காய்ச்சிவடித்து (ந) நாளைக்கொரு முறை ஸ்நானம்செய்ய வேண்டியது தலைமுழுகினவுடன் கடுக்கா மிளகுநீர் அதை யாழாக்கு குடிக்கவேண்டியது பிறகு போஜனம்செய்யவும் மாமிசம், மச்சம், இவையாகாது பகலில் நித்திரைசெய்ய வேண்டியது (நி-சா) முழுக்கில் மண் டைக்குடைச்சல் தீரும்.

---

## கெணத் தெண்ணெய்.

| | |
|---|---|
| லவுங்கம் | லவுங்கப்பூ |
| வெந்தயம் | கோஷ்டம் |
| கடுக்காப்பூ | சோம்பு |
| சிரகம் | பூண்டு |
| ஜாபத்திரி | ஜாதிக்காய் |

இவைகள் வகைக்கு (கவ) விராகநிடையாக உலர்த்தி யிடித்து வஸ்திரகாயஞ்செய்து வைத்துக்கொண்டு,

| | |
|---|---|
| கற்றாழை | பொற்றிலைக்கையான் |
| கோவை | பொன்னாங்கண்ணி |
| புளியாரை | சருள்ளி |
| கற்பூரவள்ளி | ஓமவள்ளி |

இவைகளின் சாறு வகைக்குக் கால்படியாக யெடுத்து சித்தாமணக்கெண்ணை ஒருபடி பசும்பால் அரைப்படி இவை கள் யாவும் ஒன்றாய்க்கலந்து ஷை சூரணமும் போட்டு நன் றாய்கலந்து அடுப்பேற்றி மெழுகுபதமாய்காய்ச்சிவடித்துக் கொண்டு ஆரியபிறகு குங்குமப்பூ கோரோஜனம் வகைக்கு விராகநிடை (உ0) எடுத்து ஷை எண்ணெயிற் கலந்துகொண்டு காலையில் அரைபலம் அல்லது கால்பலவீதமாய் (ம) நாள்

கொடுக்கவும் எண்ணெய் கொடுக்கும்போது எண்ணைக்குசம நிடை முலைப்பால்கலந்து அனலில் காட்டிக்கொடுக்கவும்.

---

## பாலசஞ்சீவி யெண்ணெய்.

| | |
|---|---|
| பொன்னாங்கண்ணி | குப்பைமேனி |
| எலிக்காதிலை | அவுரி |
| குரும்பை | பொடுதலை |
| முசுமுசுக்கை | ஆடாதோடை |
| கோவை | வல்லாரை |
| இம்பூரல் | துளசி |
| சிறுகீரை | குதிரைவாலி |
| கோழியாவரை | தூதுவேளை |
| கொன்றை | தகரயிலை |
| விஷ்ணுகாந்தி | கரசணாங்கண்ணி |
| ஒரிதழ்தாமரை | முருங்கையிலை |
| நருவிலியிலை | முருங்கப்பட்டை |
| இண்டு | ஈருள்ளி |

இவைகளை வகைக்கு ஒவ்வொருகொத்துபெடுத்து கல்லுரலில் போட்டு நன்றாய் பஞ்சுபோல் யிடித்து எட்டுபடி ஜலம்வார்த்து அடுப்பிலேற்றி ஒருபடி கியாழமாகக் காய்ச்சி யிரக்கி வடித்துக்கொண்டு முத்தெண்ணெய் ஒருபடி அத்துடன் விட்டு கலந்துவைத்துக்கொண்டு,

| | |
|---|---|
| பற்பாடகம் | சித்திரமூலம் |
| நிம்பப்பட்டை | கண்டுபாரங்கி |
| சுக்கு | ஏலம் |
| செவியம் | சண்பகப்பூ |
| பேரரத்தை | சீரகம் |
| கோஷ்டம் | கிராம்பு |

இவைகள் வகைக்கு(உ) விராகநிடை யெடுத்துயிடித்து வஸ்திரகாயஞ்செய்து எண்ணெயிற்கலந்து கம்பிப்பிசின்ஒரு களஞ்சிகொண்டுவந்து எண்ணெய்விட்டரைத்து அத்துடன்

கலந்துக்கொண்டு அடுப்பேற்றி மெழுகுபதமாய்க்காய்ச்சி வடித்துக்கொண்டு வேளைக்குத்துட்டிடை அல்லது காலணு யிடையாக அந்திசந்தி கொடுத்துவந்தால் அட்சரங்கள் காச்சல் பதினெட்டுகணங்கள் யாவும் தீரும்.

## இரத்தகணத்திற்கெண்ணெய்.

### விருத்தம்.

எண்ணெய்படி கால்குமரிச் சோறுதானும்
பெழில்விளாங்காயளவு கழுவிக்கொண்டு
அன்இண்டுதுமட்டிக்காய் சோறுகூட்டி
அதில்ஈரவெங்காயம்பத் தரிந்துபோட்டு
கண்ணெனவேமெழுகுபத மெரித்துவாங்கி
கணமானதுட்டிடையா மெண்ணெய்தானும்
கண்ணெனவேநாலுநாட் கொருபோதிய
நாடாதுரத்தகணந் தீருந்தானே.

### விபரம்.

எண்ணை கால்படி, விளாங்காயளவு கத்தாழைமடல் சாதம் துமட்டிக்காய்சோறு எலுமிச்சங்காயளவு, ஈரவெங் காயம் பத்து.

---

## சம்பீரத்தெண்ணெய்.

| | | | |
|---|---|---|---|
| பசும்பால் | படி-க | வெந்தயம் | பலம்-க |
| சித்தாமணக்கெண்ணை | ,, க | கோஷ்டம் | விராகனிடை-உ |
| பழச்சார் | ,, க | சிரகம் | பலம்-க |
| சருள்ளிச்சார் | ,, ௨ | கிராம்பு | ,, க |
| கடுக்காய்தோல் | ,, சா | சம்பங்கிமொக்கு | ,, க |
| சன்னலவுங்கப்பட்டை | பலம்க | ஜாதிக்காய் | ,, க |
| அதிமதுரம் | ,, க | ஏலம் | ,, க |

சற்கவகைகள் யாவும்யிடித்து சூரணித்து பழச்சாற் றால் அரைத்து எண்ணெயிற்கலந்து மற்றயாவும் ஒன்று படுத்தி பதமாய்க்காய்ச்சிவடித்து தேகத்திற்கு தக்கபடி (கூ-ரு-எ) நாள் வீதம் கொடுக்கவும் மூலச்சூடு, கணச்சூடு, காந்தல், சொரி சிரங்கு, மேகச்சூடுகளும் தீரும் இச்சா பத்தியம்.

## மேகசூட்டுக்கு எண்ணெய்.

| | | |
|---|---|---|
| சித்தாமணக்கெண்ணெய் | படி | க |
| எலுமிச்சம்பழச்சாறு | ,, | ௨ |
| இலந்தயிலைச்சாறு | ,, | ௨ |
| வெங்காயச்சாறு | ,, | ௨ |
| கருஞ்சீரகம் | பலம் | ௨ |
| கத்தாழைச்சோறு | ,, | ௩ |
| வெந்தயம் | ,, | க |

கத்தாழைச்சாதத்தை ஏழுதரம் நல்ல ஜெலத்தில் போட்டு கழுவிப் பிசைந்தெடுத்து சுத்தியானது பலம் (௩) கருஞ்சீரகத்தைப்பொடித்து வஸ்திரகாயம்செய்தது பலம் (௨) வெந்தியத்தை பசும்பால் விட்டரைத்துக்கொண்டு யாவும் ஒன்றுப்க்கலந்து அடுப்பிலேற்றி கற்றாழைச்சாதம் நன்றுப் சிவக்குமளவும் காச்சி யிரக்கிவைத்துக்கொண்டு உச்சிக் கரண்டி விதம் அந்திசந்தி யிருவேளையும் கொடுக்க கொதிப்பு கணம் (௰அ) கணச்சூடு. அஸ்திசுரம், அஸ்திவெட்டை, மேகச்சூடு, பித்தவெட்டை முதலிய யாவும்தீரும் குழந்தைகள் முதல் பெரியவர்களுக்கும் ஆகும் இச்சாபத்தியம்.

---

## காதுநோய்களுக்கு எண்ணெய்.

| | | |
|---|---|---|
| கோழியாவாரைவேர் | விராகனிடை | க |
| குத்துப்பாலைவேர் | ,, | க |
| ஆடுதின்னாப்பாலைவேர் | ,, | க |
| கற்பூரம் | ,, | க |
| பூண்டு | ,, | க |

இவைகளை நல்லெண்ணெய் விட்டரைத்து (கὸ) பலம் நல்லெண்ணெயில் கலந்து அடுப்பேற்றிக்காய்ச்சி யிரக்கி பஞ்சியில்தொட்டு வேளைக்கு (௩) துளியாக (௪-௫) வேளை காதில் விட்டால் காதுநோய்தீரும், மழையில் நனையக்கூடாது சீதளபண்டம் ஆகாது.

இதுவுமது.

## காதுநோய்க்கு எண்ணெய்.

| | | |
|---|---|---|
| முசுருமுட்டை | விராகனிடை | கὸ |
| பூனகம் | ,, | கὸ |

| | | |
|---|---|---|
| நண்டிரைச்சி | விராகனிடை | கಽ |
| பூண்டு | ,, | கಽ |

பூண்டைமாத்திரம் நசுக்கி (கஅ) பலம் நல்லெண்ணெயில்போட்டு காச்சியிரக்கி பஞ்சியில்தொட்டு (ச-ரு) வேளை காதில்விடவும் சவுக்கியமாகும்.

## கெற்பசூட்டுக்கும் மேககாரகத்திற்கும்

# குளுமை யெண்ணெய்

| | | |
|---|---|---|
| சித்தாமணக்கெண்ணெய் | பலம் | ய |
| கற்கண்டு | ,, | க |
| வெந்தியம் | ,, | க |
| ஏலம் | ,, | க |
| வெள்ளை வெங்காயம் | ,, | ரு |

வெங்காயத்தை சிறுக அரிந்துக்கொண்டு மற்ற சரக்கை அரைத்துக்கொண்டியாவும்எண்ணெயில்கலந்து சூரியபுடம் (ய) நாள்வைத்து வேளைக்கு அரிக்கால்பலம் சாப்பிடவும்.

## சிரங்குக்கும் மேகசூட்டுக்கும் எண்ணெய்.

| | | |
|---|---|---|
| சித்தாமணக்கெண்ணெய் | பலம் | ரு |
| மிளகு | ,, | க |
| பூரம் | விராகனிடை | ௨ |
| முலைப்பால் | ஆழாக்கு | |

பூரமும் மிளகும் முலைப்பால்விட்டரைத்து யாவும் ஒன்றாய்க்கலந்து (ய) நாள் சூரியபுடம்வைத்து வேளைக்குக் கரண்டிவீதம் சாப்பிடவும், இச்சாபத்தியம்.

## ரிணங்களுக்கு தேங்கா யெண்ணெய்.

| | | |
|---|---|---|
| சுத்திசெய்தகெந்தி | பலம் | வ |
| சுத்திசெய்ததாளகம் | ,, | வ |
| குகைநீறு | ,, | வ |
| காட்டுசீரகம் | ,, | வ |
| கொடிக்கள்ளிப்பால் | ,, | வ |

இரண்டுதேங்காய்களைத் திருகிபால் பிழிந்துக்கொண்டு ஷை தினுசுகளை வஸ்திரகாயம் செய்து பாலில் கலந்துக் கொண்டு பதமாய்க்காச்சி யிரக்கி பிரதிதினம் காலையில் காலணாயிடை சாப்பிட்டுவரவும், பத்துநாள் சாப்பிடலாம் இச்சாபத்தியம்.

---

## லிங்கயெண்ணெய்.

| | | |
|---|---|---|
| லிங்கம் | பலம் | ௧ |
| விளக்கெண்ணெய் | ,, | கஉ |

லிங்கத்தை முலைப்பாலில் மூன்றுநாள் ஊரவைத்து யெடுத்துக்கொண்டு கல்வத்தில் இட்டுகொஞ்சம் எண்ணெய் விட்டு ஒண்ணரைஜாமமரைத்து ஷை எண்ணெயில் கலந்து (௩) நாள் சூரியபுடம்வைத்தெடுத்து காலையில் அரைபலம் வீதமாய் (எ) நாள் அல்லது (௰) நாள் சாப்பிடவும் மேகப் படை கரிமேகம் வெள்ளை சுருக்குதீரும் கடும்பத்தியம்.

---

## கடுகெண்ணெய்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| பெருங்காயம் | விராகனிடை | ௩ | வெள்ளுள்ளி | விராகனிடை | ௩ |
| வசம்பு | ,, | ௩ | ஓமம் | ,, | ௩ |
| சுக்கு | ,, | ௩ | சதகுப்பை | ,, | ௩ |
| கார்த்திகைக்கிழங்கு | ,, | ௩ | மாவிலிங்கம்பட்டை | ,, | ௩ |
| சாம்பிராணி | ,, | ௩ | | | |

ஷை சரக்குகளை குப்பைமேனிச்சார்விட்டரைத்து எண்ணெயில்கலக்கி அடுப்பேற்றி கடுகுபதம் வரும்போது இரக்கி வைத்துக்கொள்ளவும்

ஷை எண்ணெயை சிறுகயெடுத்து மேலேதடவினால் ஜன்னிபோகும் சயித்தியந்தீரும் கைகால்குடைச்சல் மேல் வலி காதிரைச்சல் மண்டைகுத்து வலிப்புகள் தீரும் இச்சாபத்தியம்.

எண்ணெய்வகைபரணி

முற்றுப்பெற்றது.



உ

தேவிசகாயம்.

ஏழாவது

# தைலவகைபரணி.

## சங்கம்வேர்தைலம்.

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | படி | ௨ |
| மிளகு | பலம் | ௧ |
| சங்கம்வேர் | தொலாம் | ௨ |

சங்கம்வேரை ஒருதூணி ஆற்றுஜெலத்தில்போட்டுஎட்டுக்கொருபங்காய் கியாழம்வைத்துயிரக்கி மிளகை கல்வத்திலிட்டு ஷை கியாழம் விட்டரைத்து எண்ணெய் கியாழம் யாவும் ஒன்றாய்க்கலந்து மெழுகுபதமாய்க் காச்சி நாலு நாளைக் கொருமுறை முழுகிவர குட்டம் சொறி சிரங்கு கிரந்தி சூலைரோகம் செங்கரப்பான் வண்டுகடி சிலவிஷங்கள் க்ஷயம் குத்திருமல் வாதக்ஷயம் போகும்.

## இருவேலித்தைலம்.

வெட்டிவேர் பலம்-ா, கொண்டுவந்து ஒன்றிரண்டாயிடித்து தூணிநீரில்போட்டு எட்டொன்றாய்க் கியாழம் வடித்து எண்ணெயில்கலந்து மெழுகுபதமாய்க் காச்சி முழுகிவர தேராதஜெடலம் தேரிப்போகும் கிறுகிறுப்பு பித்தமயக்கம் வாய்நீரூறல் தீரும்.

## அருகன்வேர்தைலம்.

கணுவுகள் நீக்கிய அருகன்வேர் பலம்-ா, எடுத்துயிடித்து ஒருபடி ஜெலத்திில்போட்டு எட்டொன்றாய்க் காச்சி முழுகிவர மூலச்சூடு, கபாலச்சூடு, சகலபித்தம், எட்டுவகை குன்மம், அழுகிரந்தி, சூலைவாய்வு, வயற்றுவலி, நெஞ்சில் நோய், நீர்க்கடுப்பு மேல்வரட்சி இவைதீரும்.

## கொட்டைப்பழத்தைலம்.

அவுரிபழம் நூறுபலம் கொண்டுவந்து யிடித்து தாணி நீரில்போட்டு எட்டொன்றாய்க் கியாழம் வைத்துயிருத்து நாழி நல்லெண்ணெயில்கலந்து ஒருபலம் கருஞ்சீரகத்தையும் யிடித்து ஷை கியாழம்விட்டரைத்து அத்துடன் கலந்து மெழுகுபதமாய்க் காச்சியிறக்கி முழுகிவர வாதம் குட்டம் வாதகரப்பான் கண்டவீக்கம் இவைகள் தீரும்.

---

## கரிசாலைத்தயிலம்.

| | | |
|---|---|---|
| கரிச்சாலைச்சாறு | படி | க |
| கற்றாழைச்சோற்றின்சாறு | ,, | க |
| நெல்லிக்காய்ச்சாறு | ,, | க |
| நல்லெண்ணெய் | ,, | க |

இவையாவும் ஒன்றாய்க் கலந்து ஒருபலம் ஜாதிக்காயை ஷை சாற்றாலரைத்துப்போட்டு மெழுகுபதமாய்க் காச்சிவடித்து முழுகிவர தலைநோய், செவிநோய், பித்தம், பீனிசங்கள், உஷ்ணங்கள் யாவும் தீரும்.

---

## இலுப்பைப்பட்டைத்தைலம்.

| | | |
|---|---|---|
| இலுப்பைப்பட்டை | பலம் | ள |
| நல்லெண்ணெய் | படி | ய |
| வேப்பெண்ணெய் | ,, | ரு |
| கம்மாருவெற்றிலைச்சாறு | ,, | க |

இவையாவும் ஒன்றாய்க்கலந்து அடுப்பேற்றி மெழுகுபதமாய்க்காச்சி முழுகிவர கபாலச்சூடு பரந்துபோகும் எண்ணெ கணக்கின்பேரில் பட்டைமுதலியதைக் கணக்கிட்டு பிரித்துக்கொண்டு வேண்டியவரையில் செய்துக்கொள்ளலாம்.

---

## கெற்பத்தைலம்.

கொம்மட்டிப்பழவித்து அந்தயிடைக்கு வானப்பருப்பும் கலந்து குழித்தயிலம் யிறக்கி புட்டியில் வைத்துக் கொண்டு தீட்டுவந்த (ரு) நாள் துடங்கி மஞ்சன்தூளில் களுஞ்சித் தயிலம்விட்டு (ரு) நாள் காலையில்கொடுத்து வெள்ளீர் கொடுக்கவும் பேதியாகும் மருந்து ஒரேவேளைதான்.

## மேகத்தைலம்.

| | | |
|---|---|---|
| சந்தனம் | பலம் | ௰ |
| விலாமிச்சம்வேர் | ,, | ௰ |
| தீவாரம்பட்டை | ,, | ௰ |

இந்தமூன்றுவகையும்யிடித்து பானையில்போட்டுதாணி நீர்விட்டு எட்டொன்றுப்க்காய்ச்சி முழுகிவர மேகம்தீரும் தேகம்யிருக்கும் நமை சொரி திமிர் இவைதீரும்.

## வில்வாதித்தைலம்.

வில்வவேர் பத்துபலம்யெடுத்து யிடித்து பதக்குநீரில் போட்டு எட்டொன்றுப்க்காச்சியிரக்கி அத்துடன் நாழி நல்லெண்ணெய்விட்டு மெழுகுபதமாய்க் காச்சிவடித்து முழுகிவர பித்தம், கபாலவெட்டை, மேகம், இருமல், தழுதணே, செங்கரப்பான், புண்புரை இவைதீரும்.

## வெட்டிவேர்தைலம்.

| | | |
|---|---|---|
| வெட்டிவேர் | பலம் | க |
| அதிமதுரம் | ,, | க |
| நல்லெண்ணெய் | ,, | ௰உ |

வெட்டிவேரையிடித்து பதக்குநீரில்போட்டு எட்டொன்றுப் கியாழம்வடித்து அதிமதுரத்தை அந்தக் கியாழத்தால் அரைத்து எண்ணெயில்போட்டு கியாழத்தையும்விட்டு மெழுகுபதமாய்க்காய்ச்சி வடித்து முழுகிவர பீனிசம், மண்டைகுல், குட்டம், புரநீர்க்கோவை, கண்புரைச்சல், காதுமந்தம், இளைப்பு, கைகால்ஒச்சல், தாதுநஷ்டம், இருமல், தேககாந்தல், யிவைகள் தீரும் நாள்விட்டுநாள் ஒருமண்டலம் முழுகிவர வேண்டியது.

## கொடிவேலித்தைலம்.

| | | |
|---|---|---|
| கொடிவேலிவேர் | பலம் | ௰ |
| நல்லெண்ணெய் | நாழி | க |
| சீரகம் | பலம் | க |

கொடிவேலியை யிடித்து பதக்குநீரில்போட்டு எட்டொன்றாய்க் கியாழம்வைத்திரக்கி வடித்து இந்த கியாழத்தால் சீரகத்தை அரைத்து யாவும் எண்ணெயில்கலந்து மெழுகுபதமாய்க்காச்சி வடித்து முழுகிவர ஆநந்தவாய்வு மற்ற பலவிதவாய்வு சொரிசிரங்கு தினவு கிரந்தி வீக்கம் யாவும் தீரும்.

## சீரகத்தைலம்.

| | | |
|---|---|---|
| சீரகம் | பலம் | ரு |
| கார்ப்போகியரிசி | ,, | க |
| நல்லெண்ணெய் | படி | க |

சீரகத்தை பதக்குநீரில்போட்டு எட்டொன்றாய்க்கியாழம்வடித்து இதேகியாழத்தால் கார்ப்போகியரிசியை அரைத்து யாவும் எண்ணெயில்கலந்து மெழுகுபதமாய்க் காச்சி முழுகிவர எண்வகைசுரம், வாய்வு, வாந்தி, பித்தம், கிறுகிறுப்பு, சோகை, பாண்டு, உஷ்ணரோகம், கெணம், கபாலச்சூடு, கபநீர்க்கட்டு இவைதீரும் கண்கள் குளிர்ச்சியுண்டாகும்.

## கீழ்க்காய்நெல்லித்தைலம்.

கீழ்க்காய்நெல்லி அரைதுலாம் எடுத்து நிழலில் உலர்த்தி ஆத்துஜெலம் தூணிகொண்டுவந்து அதிற்போட்டு எட்டொன்றாக கியாழம் காச்சியிரக்கி (உ) படி நல்லெண்ணெயில் விட்டுக்காச்சி ஒருபலம் சக்கரைபோட்டு மெழுகுபதத்தில் முழுகிவர மேகம் உட்டிணம் கைகாலெரிவு உட்காச்சல் தினவுயாவும் தீரும்.

## சவுரித்தைலம்.

| | | |
|---|---|---|
| சவுரிப்பழம் | | ஒன்று |
| பச்சைநெஞ்சாயிலை | | ஒருபிடி |
| சடாமாஞ்சி | விராகனிடை | உ௦ |
| மிளகு | ,, | உ௦ |
| பளிங்குசாம்பிராணி | ,, | உ௦ |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | உ௦ |
| பச்சியிலை | ,, | உ௦ |
| கிச்சிலிக்கிழங்கு | ,, | உ௦ |
| அமுக்கறாங்கிழங்கு | ,, | உ௦ |
| அதிமதுரம் | ,, | உ௦ |

இவையாவும்பிடித்து வஸ்திரகாயம்செய்து ஒருபடி நல்லெண்ணெயில் போட்டுக்கலந்து மெழுகுபதமாய்க் காய்ச்சி (ச) நாளைக் கொருமுறை முழுகிவர புரயிசிவு, ஒற்றைத் தலைவலி, விடாத்தலைபாரம், ஜன்னி இவையாவும் தீரும்.

## மேருவின்றைதலம்.

எள்ளெண்ணெ.யோர்படியில் தும்பைமலரோர்பிடி
  எரித்துபத மாய்வடித்து
இன்பமுடன்மூன் றுமுறை முழுகுமதின்விபரமும்
  எடுத்துரைக்கக் கேளுமே
கள்ளமரசிரசுமட்டாகவதை தேய்த்துமே
  காச்சியே சிக்காய்தனை
கருத்துடன்வென்னீரில் பச்சைஜெலமின்றியே
  கணக்குடன் மூழ்கியன்று
தல்லிவிடுபுளிமோர் குளிர்ந்தஜெலமின்றியே
  ஸ்நானமது கொள்ளவல்லோர்
தள்ளாதசிரசிடிகள் பீனிசமுநேத்திரநோய்
  தான்பயந் தோடுமிதினில்
வள்ளிதெய்வானையர னர்கிருபைபெத்தபொதி
  மாமலை யகஸ்தியரிதை
வரிசையுடன்மேருவின் றைதலமதைகவிதையாய்
  வருத்துரைத் தனர்பாருமே.

## ஜன்னிக்கு மேற்பூசுந்தைலம்.

| | | |
|---|---|---|
| வேப்பெண்ணெய் | படி | க |
| கலப்பைக்கிழங்குசாறு | ,, | க |
| கருநாபி | விராகனிடை | க |
| வசம்பு | ,, | ௫ |
| வெள்ளைப்பூண்டு | ,, | ௫ |
| காயம் | ,, | க |
| ஓமம் | ,, | ௫ |
| சதகுப்பை | ,, | ௫ |
| ஜாதிக்காய் | ,, | ௰ |

இந்தச்சரக்குகள் யாவும் ஷெ கிழங்குசாற்றால் மை போல் அரைத்து எண்ணெயில்கலந்து அடுப்பேற்றி கடுகு பதமாய்க் காச்சிவடித்து சகலஜன்னிக்கும் மேலுக்கு பூசவும் கைகால்குடைச்சல் வாய்வுபிடிப்பு சகலத்திற்கும் பூசி தேய்க்கலாம் உள்ளுக்குக் கொடுக்கக்கூடாது மஞ்சள் அரைத்துப்பூசி அதற்குமேல் சாணம்போட்டு தேய்த்து நீர்விட்டு கழுவிப்போடவும்.

## தும்பைத் தயிலம்.

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெ | புலம் | ௰ |
| தும்பைப்பூ | பிடி | ௨ |
| கருஞ்செம்பைப்பூ | ,, | க |
| கம்மாருவெற்றிலைக்காம்பு | ,, | ൮ |
| நஞ்சருப்பான்பூண்டு | ,, | ൮ |
| கோழிக்கிழங்கு | விராகநிடை | க |
| கஸ்தூரிமஞ்சள் | ,, | க |
| மிளகு | ,, | க |
| பூண்டு | ,, | க |
| வசம்பு | ,, | க |
| பால்சாம்ராணி | ,, | ௨ |
| சுக்கு | ,, | க |

மேற்கூறிய பூவும் காம்பும் நசுக்கி யெண்ணெயில்போட்டு மற்றசரக்குகள் யாவையும் யிடித்துப் பொடித்து வஸ்தரித்து அத்துடன்போட்டுக்கலந்து அடுப்பேற்றி கடுகுபதமாய்க் காச்சிவடித்து முழுகிவர சுகஜன்னி சுரம் வாய்வு முகவாதசன்னி சுரம் இன்னும் சிலவியாதிகள் தீரும்.

---

## செம்பைத்தயிலம்.

| | | |
|---|---|---|
| கருஞ்செம்பைச்சாறு | படி | ௰ |
| வெள்ளுள்ளி | ,, | ௰ |
| நல்லெண்ணெ | ,, | ൮ |
| பளிங்குசாம்ராணி | விராகநிடை | ௨൮ |
| டிக்காமல்லி | ,, | க൮ |

சாம்ராணியும் டிக்காமல்லியும் இடித்துப் பொடித்து யாவும் ஒன்றாய்க்கலந்து அடுப்பேற்றி தைலபதமாய்க்காய்ச்சி வடித்து ஜன்னிநோய்கள் வாதநோய்களுக்குப் பூசி நன்றாய்த் தேய்க்கவும்.

## அழிஞ்சித்தைலம்.

| | | |
|---|---|---|
| அழிஞ்சிவிரை | பலம் | க |
| புங்கன்விரை | ,, | க |
| கடுக்காய்விரை | ,, | க |
| தாணிக்காய்விரை | ,, | க |
| கார்போகியரிசி | ,, | க |
| எட்டிவிதை | ,, | வ |
| நல்லெண்ணெ | ,, | ௰உ |
| வேப்பெண்ணெ | ,, | உ௦ |

வித்துகள் யாவும்யிடித்துப் பொடித்து வேப்பெண்ணெ விட்டரைத்து நல்லெண்ணெயிற்கலந்து அடுப்பேற்றி கடுகு பதமாய்க்காய்ச்சி வடித்து தலைவலி, கழுத்துவலி, வாய்வு, வீக்கங்கள் சகலத்திற்கும் தேய்த்துவர நீங்கும்.

---

## தீபாக்கினித்தைலம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கெந்தி | பலம் | வ | மனோசிலை | பலம் | வ |
| சூதம் | ,, | வ | பொன்னரிதாரம் | ,, | வ |

ஷை சரக்குகளைக் காடிவிட்டரைத்து சீலையில் தடவி திரிசெய்து வேப்பெண்ணெய்விட்டு கொளுத்தி சுடர்தைலம் வாங்கி வைத்துக்கொண்டு ஒரு விராகனிடை வெற்றிலைச் சாற்றில் ஒருகுண்டுமணிப்பிரமாணம் ஷை தைலத்தை கலந்துக் கொடுக்க வாதம் எண்பதும் தீரும் இச்சாபத்தியம்.

தைலவகைபாணி

முற்றுப்பெற்றது.



உ

தேவிசகாயம்.

எட்டாவது

# கியாழ வகைபரணி.

## சந்தனக்கியாழம்.

| | | |
|---|---|---|
| செஞ்சந்தனத்தூள் | பலம் | உ |
| விலாமிச்சம்வேர் | விராகனிடை | உ |
| வெட்பாலரிசி | ,, | உ |
| கோரைக்கிழங்கு | ,, | உ |
| சுக்கு | ,, | உ |

ஆற்றுஜெலம் இரண்டுபடி கொண்டுவந்து அதில் மேற்சரக்குகள்பாவும் பிடித்துப்போட்டு அடுப்பேற்றி கால்படி கியாழமாக யிறக்கிவடித்துக்கொண்டு ஆறுவேளைபாகபாகித்துக் கொடுக்கவும் கொடுக்கும்போது கொஞ்சம் சக்கரை போட்டுக் கொடுக்கவும் சிரதோஷம், சிரவாய்வு, தலையிலுள்ள பித்தம், சேத்துமவாதம், வாதசுரம், நீர்க்கடுப்பு, மஞ்சளுரும் பித்தம், இவைகள் தீரும். இருமுறை காய்ச்சி (யஉ) நாள் இருவேளையும் கொடுக்கவும்.

## சிறுகாஞ்சொரிக்கியாழம்.

| | | |
|---|---|---|
| சிறுகாஞ்சொரிவேர் | பலம் | உ |
| ஏலக்காய் | ,, | வ |
| சீரகம் | ,, | வ |

இவைகளை பிடித்து இருநாழிநீர்விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சி வடித்து இருவேளையுமாக எட்டுநாள் குடிக்க உட்சுரம், மூலவாய்வு, பித்தம், வாந்தி இவைதீரும்.

## வெட்பாலைக்கியாழம்.

| | | |
|---|---|---|
| வெட்பாலையரிசி | பலம் | க |
| சீரகம் | ,, | வ |
| கொடிவேலிவேர் | விராகனிடை | கo |

இவைகளையிடித்து இருநாழிநீர்விட்டு எட்டொன்றாய்க் காய்ச்சிவடித்து (ரு) நாள் இருபோதும் குடிக்க வாய்வு, பித்தசுரம் தீரும், கொடுக்கும்போது, கொஞ்சம் தேன்விட்டுக் கொடுக்கவும்.

---

## வில்வக்கியாழம்.

| | | |
|---|---|---|
| வில்வவேர் | பலம் | க |
| வில்வப்பழம் | ,, | க |
| நெற்பொரி | ,, | வ |
| சுக்கு | ,, | வ |
| மிளகு | ,, | வ |
| கொடிவேலிவேர் | ,, | வ |

இவைகளை யிடித்து இருநாழி நீர்விட்டு எட்டொன்றாய் வடித்து இருவேளையும் மூன்றுநாள் கொடுக்க வாய்வு, மேகவாய்வு, பித்தவாய்வு யாவும் தீரும்.

## இதுவுமது.

| | | |
|---|---|---|
| வில்வவேர் | பலம் | வ |
| அமுக்கனாக்கிழங்குவேர் | ,, | வ |
| சுக்கு | ,, | வ |

இவைகளை யிடித்து இருநாழி நீர்விட்டு எட்டொன்றாய்க் கியாழம்வடித்து மூன்றுநாள் இருவேளையும் கொடுக்க விக்கல் வாந்தி இவை யாவும் தீரும் பித்தசாந்தியாம்.

---

## கோரைக்கிழங்கு கியாழம்,

| | | |
|---|---|---|
| கோரைக்கிழங்கு | பலம் | க |
| விஷ்ணுகாந்தி | ,, | ௨ |
| பற்பாடகம் | ,, | ௨ |
| மிளகு | ,, | வ |
| மதுரம் | ,, | வ |

இவ்வகளை யிடித்து இருநாழி நீர்விட்டு எட்டொன்றாய் வடித்து (ரு)நாள் இருவேளையும் கொடுக்கவும் க்ஷயம் யீளை யிளைப்பு அதிகசுவாசம் இவை தீரும், கியாழம் கொடுக்கும்போது கொஞ்சம் தேன்கூட்டவும்.

## நெல்லிக்காய்கியாழம்.

| | | |
|---|---|---|
| நெல்லிக்காய் | பலம் | ௧ |
| தாணிக்காய் | ,, | ௧ |
| கடுக்காய் | ,, | ௧ |
| மிளகு | விராகனிடை | ௧௨ |

இவைகளை இருநாழிநீர்விட்டு எட்டொன்றாய்க் கியாழம் வடித்து மூன்றுநாள் குடிக்கும்போது சுக்கு, திப்பிலி, மிளகு, மூன்றும் சரியிடையாய்ப்பொடித்து ஒருசிட்டிக்கை போட்டு கொஞ்சம் தேன்விட்டு குடிக்கவும் மீளை, மிசிவு, மேகச்சூடு, இவைகள் தணியும்.

## இலவம்பட்டைகியாழம்.

இலவம்பட்டை இரண்டு குத்துயெடுத்து பஞ்சுபோல் நருக்கி அரிக்கால்படி கஞ்சித்தண்ணியில் போட்டு நல்ல தண்ணீர் கால்படிவார்த்து இராத்திரி அடுப்பில் போட்டு வைத்து காலையில் பிழிந்து அசடுகள்போக்கி வடிகட்டி கொஞ்சம் சர்க்கரைக்கலந்து சாப்பிடவும் இப்படி (ரு-சு) நாள் சாப்பிட மேகவெள்ளை தீரும் இச்சாபத்தியம்.

## இரத்தபேதிக்குகியாழம்.

| | | |
|---|---|---|
| நாகப்பட்டை | பலம் | உ௰ |
| அத்திப்பட்டை | ,, | உ௰ |
| மாம்பட்டை | ,, | உ௰ |

இவைகளை பஞ்சுபோல்யிடித்து ஒருபடி தண்ணிவைத்துக் கால்படிகியாழமாக யிரக்கி இருவேளை சாப்பிடவும் இப்படி (ரு-சு) நாள்சாப்பிட இரத்தபேதிதீரும்.

## வாதசுரக்கியாழம்.

| | | |
|---|---|---|
| பாவட்டம்வேர் | பலம் | ௧ |
| சித்தாமுட்டிவேர் | ,, | ௧ |
| ஓமம் | ,, | ௧ |
| உத்தாமணிவேர் | ,, | ௧ |

இவைகளை பஞ்சுபோல்பிடித்து ஒருபடிஜெலம்வைத்து கால்படியாக கியாழமாகயிரக்கி வடித்து (ரு-சு) வேளை சாப்பிட வாதசுரம்தீரும் கொஞ்சம் தேன்விட்டு சாப்பிடவும்.

## பித்தசுரக்கியாழம்.

| | | |
|---|---|---|
| பேய்ப்புடல் | பலம் | க |
| கோஷ்டம் | ,, | க |
| கொத்தமல்லி | ,, | க |
| சுக்கு | ,, | க |
| வில்வவேர் | ,, | க |
| பற்பாடகம் | ,, | உ௨ |

இவைகளை பஞ்சுபோல் யிடித்து (க௨) படி ஜெலத்தி லிட்டு எட்டுக்கொன்றாய் கியாழம்வடித்து (ரு-சு) வேளை கொடுக்க சவுக்கியமாகும் கொடுக்கும்போது கொஞ்சம் தேன்விட்டு கொடுக்கவும்.

## சேத்தும சுரக்கியாழம்.

| | | |
|---|---|---|
| இஞ்சி | பலம் | உ௨ |
| பிரண்டை | ,, | க |
| கண்டங்கத்திரிவேர் | ,, | ௨ |
| சித்தரத்தை | ,, | க |
| சுக்கு | ,, | ௨ |
| பூனைக்காலிவேர் | ,, | ௨ |
| பூலாவேர் | ,, | ௨ |
| பொன்முசுட்டை | ,, | ௨ |
| பூண்டு | ,, | ௨ |
| வில்வவேர் | ,, | உ |

இவைகளை பஞ்சுபோல் யிடித்து (க௨) படிஜெலம்விட்டு எட்டொன்றாய்க் கியாழமிட்டுகொடுக்கும்போது கொஞ்சம் தேன்விட்டுக் கொடுக்கவும் (ரு-சு) அல்லது (அ) வேளை கொடுக்க தாகம், வாந்தி, மயக்கம், சுரம் இவைதீரும்.

## மாந்தக்கியாழம்.

வசம்பு காவட்டம்புல்லு இவ்விரண்டும் சமன்கொண்டு சட்டியில்போட்டு சாம்பலாக்கி கருஞ்சீரகம் வெடிக்கவிட்டு

ஆழாக்குதண்ணிவிட்டு காலாழாக்காக பிரக்கிக் கொடுக்கவும் இப்படி (௪-௫) வேளைகொடுக்க மாந்தம் குணப்படும்.

## அதிசாரதாபசுரம்.

| | |
|---|---|
| கொத்தமல்லி | சற்கரை |
| சீரகம் | கோஷ்டம் |
| விலாமிச்சம் | கற்பூரம் |
| வெட்டிவேர் | அதிமதுரம் |
| சந்தனம் | தாமரைக்கிழங்கு |
| கோரைக்கிழங்கு | அத்திப்பட்டை |
| நெல்லிப்பருப்பு | ஆலம்பட்டை |
| மாம்பட்டை | அரசம்பட்டை |

இவை சமன்கொண்டிடித்து ஒருபடி ஜெலம்விட்டு எட்டிலொன்றாய்க் கியாழம்வடித்து இருவேளையும் அஞ்சு நாள் கொடுக்கவும் அதிசாரதாபசுரம் சொஸ்தமாகும்.

## குழந்தைகள் மாந்தத்திற்குகியாழம்

| | |
|---|---|
| துணையிலை | உத்தாமணியிலை |
| நொச்சியிலை | கெச்சக்காய்வேர் |

இவைகள் வகைக்கு ஒருபிடி யெடுத்து நன்றாய் நசுக்கி நாழிநீர்விட்டு அடுப்பேற்றி யெரிக்கும்போது.

| | |
|---|---|
| ஓமம் | திப்பிலி |
| சுக்கு | வசம்பு |
| மிளகு | பொடுதலைக்காய் |

இவைகள் வகைக்கு விராகனிடை ஒன்று யெடுத்து துளிநல்லெண்ணெவிட்டு சிவக்கவருத்து யிடித்துப்பொடித்து மெல்லிய துணியில்கட்டி முடிந்து மேல்படி கியாழத்தில் போட்டுக் காய்ச்சி வடித்து ஒருசங்கு வார்க்கவும் இப்படி (௩-௪) வேளைவார்க்க மாந்தம் தீரும்.

## மாந்தத்திற்கு வேறுகியாழம்

| | |
|---|---|
| ஓமம் | மிளகு |
| உள்ளி | திப்பிலி |
| வாய்விளங்கம் | பெருங்கிழங்கு |

இவைகள் சமன்கொண்டு யிடித்து மெல்லிய துணியில் முட்டைகட்டி நாழிநீரில்போட்டு மூன்றுபொங்கு வரும் படிக் காய்ச்சியிருத்து (உ-ங) வேளைகொடுக்கவும்.

---

## மாந்தத்திற்கு வேறுகியாழம்.

### விருத்தம்.

சுக்குமிளகுதிப்பிலியும் துய்யஓமம்உள்ளியுடன்
ஒக்கநருக்கிச்சீலையினில் உகந்துமுடிந்துநீர்வுழக்காய்
செக்கச்சிவக்கக்காய்ச்சியபின் சீராய்சங்குபுகட்டிடவே
மிக்கமாந்தபிணிதோஷம் விட்டேயோடுங்கண்டாயே.

---

## முறைவாதசுரக் கியாழம்.

| | |
|---|---|
| சண்பகப்பூ | தானிவேர் |
| ஆமணக்குவேர் | செருப்படைவேர் |
| கொத்தமல்லி | கண்டங்கத்திரி |
| சுக்கு | மிளகு |

இவை சமன்கொண்டு பஞ்சுபோல்யிடித்து ஒருபடி தண்ணீர்விட்டு எட்டொன்றாய்க் கியாழம் வடித்து உட்கொள்ளவும்.

---

## தனிவாதசுரக்கியாழம்.

| | |
|---|---|
| நல்லசந்தணம் | கோரைக்கிழங்கு |
| சுக்கு | பற்பாடகம் |

இவை பஞ்சுபோல் யிடித்து ஒருபடி ஜெலம்விட்டு எட்டொன்றாய்க்கியாழம்வடித்து உட்கொள்ள வாதசுரம் தீரும். இப்படி (ங) நாள் ஆறுவேளையாம்.

---

## முறைபித்தசுரக் கியாழம்.

| | |
|---|---|
| கோரைக்கிழங்கு | சீந்திற்கிழங்கு |
| நன்னாரிவேர் | கோஷ்டம் |
| சந்தணம் | சுக்கு |
| தண்ணிவிட்டான்கிழங்குஅதிமதுரம் | |

இவை சமன்கொண்டு பஞ்சுபோல்யிடித்து எட்டொன் ருய்க் கியாழம்வடித்து இருவேளையுமாக மூன்றுநாள் கொடுக்க நிவர்த்தியாகும் தேன்கொஞ்சம் கூட்டிக்கொடுக்கவும்.

---

## முறைபித்தவாதசுரக்கியாழம்.

| | |
|---|---|
| தேன்கொடுக்குவேர் | ஆரைவேர் |
| இலங்கைவேர் | கடுக்காய்த்தோல் |
| சித்தாமுட்டிவேர் | சுக்கு |

இவை சமன்கொண்டிடித்து படிஜெலம்விட்டு எட்டொன்ருய் கியாழம்வடித்து மூன்றுநாள் ஆறுவேளை உட்கொள்ள முறைபித்தவாதசுரம் சவுக்கியமாகும்.

---

## விடாசுரக் கியாழம்.

| | |
|---|---|
| சிறுதேக்கு | ஆரைவேர் |
| சிந்திற்கொடி | கோஷ்டம் |
| நிலவேம்பு | திப்பிலி |
| பற்பாடகம் | சுக்கு |

இவை சமன்கொண்டிடித்து ஒருபடி ஜெலம்விட்டு எட்டொன்ருய்க் கியாழம்வடித்து கொஞ்சம் தேன்விட்டுக் கொடுக்கவும் (ரு-சு) வேளைகொடுக்கவும் அல்லது (ய)வேளை கொடுக்க சவுக்கியமாகும்.

---

## மாந்தம்வீக்கம் விஷவீக்கம்சுரம் நீர்கட்டுக்குக்கியாழம்.

| | |
|---|---|
| பூவரசன்பழுப்பு | வரமுள்ளி |
| சங்கன்வேர்பட்டை | முருங்கையீர்க்கு |
| சிந்திற்கொடி | சார்வேளைவேர் |
| துளசி | மருள்கிழங்கு |
| பிரமியிலை | சிறுகுறிஞ்சான்வேர் |
| தூதுவேளை | கருஞ்சீரகம் |
| சத்திசாரணை | நீர்முள்ளிவேர் |
| சுக்கு | பெருங்கிழங்கு |

இவைகளை வகைக்குக் கால் பலம்எடுத்து கல்லுரலி லிட்டு பஞ்சுபோல் யிடித்து ஒருபடி ஜலம்வைத்து எட் டொன்றாய் கியாழம் வைத்திருந்து வடித்து வேளைக்கு ஒரு பங்குவீதம் காலைமாலையாக மூன்றுநாள் கொடுக்கவும் சகல வீக்கம் சுரம் வயருப்பிஷம் யாவும்தீரும்.

---

## கெணமாந்தம் வாந்தி வயருப்பிசத்திற்கு கியாழம்.

| | |
|---|---|
| வசம்பு | மிளகு |
| கருப்புப்பட்டு | மயிலிரகு |
| வட்டத்திருப்பி | நிலவேம்பு |

இவைகள் வகைக்கு ஒருவிராகனிடை யெடுத்து சட்டி யிலிட்டு சாம்பலாக வருத்துக்கொண்டு மாதுளம்யிலை நில விளாயிலை செம்பருத்தியிலை இவைகள் வகைக்கு ஒருபிடி யெடுத்து ஷை சட்டியில்போட்டு சிவக்க வருத்துக்கொண்டு அத்துடன்,

| | |
|---|---|
| கண்டுபாரங்கி | அக்கிராகாரம் |
| சுக்கு | அதிமதுரம் |
| சன்னராஷ்டகம் | ஏலக்காயரிசி |

இவைகள் வகைக்கு ஒருவிராகனிடை யெடுத்து நருக் கிப்போட்டு அறைப்படி ஜலம்வார்த்து அறையாழாக்கு கியாழமாக வடித்து (அனுபோகவயித்திய முதற்காண்டம்) 74-வது பக்கத்தில் கூறியிருக்கும் மாந்தக்குளிகையில் ஒரு மாத்திரை யிழைத்து ஒருசங்கு கியாழத்தில் கலந்துவார்க் கவும் இப்படி இரண்டு மூன்றுவேளை வார்க்க மேற்கண்ட வியாதி சவுக்கியமாகும்.

---

## மூக்குமாந்தம்

### அள்ளுமாந்தத்திற்கு கியாழம்.

ஒருபிடி நுணாயிலையை சிறுகயறிந்து அடுப்பிலேற்றி அத்துடன் மிளகு ஒருவிராகனிடை கடுகு ஒருவிராகனிடை

போட்டு கருகவருத்து கருஞ்சீரகம் ஓமம் வகைக்கு ஒரு விராகனிடைபோட்டு வெடிக்கவிட்டு சன்னராஷ்டகம் சுக்கு நருக்கிப்போட்டு (௭) படி ஜலம்விட்டு ஆழாக்குகியாழமாக சுண்டக்காய்ச்சி வடித்துக்கொண்டு ஒருசங்கு கியாழத்தில் (அநுபோகவயித்திய முதற்காண்டத்தில்) கூறிய பாலசஞ்சீவிமாத்திரை ஒன்றிழைத்து வார்க்கவும் இப்படி (உ-௩) வேளைவார்க்க தீரும்.

---

## மாந்தத்திற்கு பொதுகியாழம்.

வெற்றிலைக்காம்புபதினொன்று மேவும்வசம்புஅவ்வளவு
பற்றிஉள்ளிதான்யிரண்டு பண்பாந்திப்பிலிதான்ஒன்று
சுற்றிவெதுப்பித்தானரைத்து சுகமாய்பருவந்தக்கபடி
வற்றியவென்னீர்தனிலிடவேமாந்தம்போமென்றருளினரே.

---

## மாந்தத்திற்குவேறுகியாழம்.

விடுமேஓமம்உள்ளியுடன் மீறும்மிளகுதிப்பிலியும்
நடுமேசிலைதனில்முடிந்து நன்றாய்நாழிநீர்தன்னில்
இடுமேஅடுப்பில்எட்டொன்ருய் இதமாய்காச்சிகுடிநீரை
கொடுமேமாந்தம்உள்ளமெலாம்குடிபோமென்றுகூறினரே.

---

## மாந்தத்திற்கு வேறுகியாழம்.

### வெண்பா.

வேளைவேர்சுக்குடனே வெந்தயம்வெள்ளுள்ளி
பாளைசேர்ஓமம் பருவசம்பு—வாள்விழியாய்
ஒன்றகக்காச்சி உடன்குழவிக்கீய
கண்டாலும்மாந்தம்போங் காண்.

---

## சர்வமாந்தக்கியாழம்.

உத்தாமணியிலை பொடுதலை
வேளைவேர் முருங்கப்பட்டை
நொச்சியிலை நுணாயிர்க்கு

இவைகள் சமன்கொண்டு சட்டியிலிட்டு வருத்து அரைப்படி நீர்விட்டு ஓமம், சுக்கு, திப்பிலி, மிளகு, வசம்பு, இவைகள் சமன்கொண்டு பொடித்து சீலையில்முடிந்து ஷை ஜெலத்தில்போட்டு எட்டொன்றாய்க் காச்சிவடித்து முதற் பாகத்திற் கூறிய மாந்தக்குளிகையில் ஒன்றிழைத்து வார்க்கவும் இப்படி (ச-ரு) வேளை வார்க்கவும்.

## மாந்தஉப்பிஷத்திற்கு கியாழம்.

ஒப்பும்ஓமம்காசெடையை உகந்துசட்டிதனில்வருத்து
குப்பைமேனிவேர்ப்பட்டை கூரும்பிரண்டுபலந்தானே
அப்பான்தண்ணீரரைப்படியை அளவாயெட்டுகொன்றாக்கி
வைப்பாய்கொடுக்கவேஉப்பில்மாந்தம்போகும்கண்டாயே.

## ஐந்துவித மாத்தத்திற்கும்.

### ஒரேகியாழம்.

| | |
|---|---|
| வேப்பம்யீர்க்கு | பொடுதலை |
| நொச்சிலியீர்க்கு | ஓமம் |
| நரையீர்க்கு | உள்ளி |
| மாவிலையீர்க்கு | திப்பிலி |
| கொடிவேலியீர்க்கு | வாய்விளங்கம் |
| புளியம்யீர்க்கு | கற்பூரவள்ளி |

இவைகள் சமன்கொண்டு பஞ்சுபோல் நருக்கி நாழிநீர் விட்டு எட்டுக்கொன்றாய்கியாழம்வைத்து வேளைக்கொருசங் காய் (ரு-சா) வேளைவார்க்கவும் ஊதுமாந்தம், போர்மாந்தம், கத்திமாந்தம், கட்டுமாந்தம், செரியாமாந்தம் இவைதீரும்.

## பித்தத்திற்குக்கியாழம்.

| | |
|---|---|
| நெல்லிமுள்ளி | சித்தாமுட்டி |
| வில்வப்பழம் | நெற்பொரி |
| சீரகம் | கொத்தமல்லி |

இவைகளை சமன்கொண்டு யிடித்து அரைப்படி ஜலம் வைத்து எட்டொன்றாய்க் கியாழம்வைத்து (ச-ரு) வேளை கொடுக்க நிவர்த்தியாகும்.

## அஜீரணகிராணிக்குக் கியாழம்.

ஒதியம்பீர்க்கு சுக்கு
கருவேப்பிலைபீர்க்கு சீரகம்
முக்காவேளை அசமதாகம்.

இவைகளை சமன்கொண்டு யிடித்து கால்படி ஜெலம் வைத்து அரிக்கால்படியாக யிரக்கி இருவேளை சாப்பிடவும் இப்படி (ச-ரு) வேளை சாப்பிடத்தீரும்.

## குன்மவயற்றுவலிக்குக்கியாழம்.

பிரண்டை, வேப்பம்பீர்க்கு, புரசவித்து, அசமதாகம், இவை சமன்கொண்டு யிடித்து கால்படி தண்ணிவைத்து அரிக்கால்படியாக யிரக்கி இருவேளைசாப்பிடவும், இப்படி (ச-ரு) வேளைகொள்ளவும்.

## அண்டநோய்க்குக் கியாழம்.

புனல்முருங்கைவேரின்பட்டை
ஆண்கெச்சக்காயின்பருப்பு
கண்டங்கத்திரியிலை

இவைகள் சமன்கொண்டு அரைபடி தண்ணிவைத்து அரிக்கால்படியாகக் கியாழமிட்டிரக்கி இருவேளையும்கொள்ளவும் இப்படி ஆறுவேளைகொள்ள விரைநோய் நரம்பு தடிப்பு இவைதீரும்.

## ஜெலக்கட்டுக்குக் கியாழம்.

ஜெலத்திலிருக்கும் கொடிப்பாசி
கண்டங்கத்திரியிலை
வாழைமரத்தின் அடிக்கிழங்கு

இவைகள் வகைக்குப்பலம்-உ, எடுத்து அரைப்படி ஜெலத்திலிட்டு அரிக்கால்படியாகக் காய்ச்சியிரக்கி வடித்து கொஞ்சம் பொட்டிலுப்புப்போட்டுக் குடிக்கவும் இப்படி (ச-ரு) வேளைகொடுக்க நீர்கட்டு உடையும்.

313



## ஜன்னிதோஷத்திற்கு கியாழம்.

கடுக்காய்தோல் சுக்கு
தான்றிக்காய் வெதுப்படக்கி
கொத்தமல்லி சித்திரமூலம்
நெல்லிப்பருப்பு கடுகுரோகணி
ஏலம் கஞ்சாங்கோரை

இவைகள் வகைக்குப்பலம்(க) எடுத்து பஞ்சுபோல் யிடித்து படிஜெலம்வைத்து கால்படியாக யிரக்கி (நி-சு) வேளைகொடுக்க ஜன்னிதோஷம் தாகம் இவைதீரும்.

## சேத்துமசுரக்கியாழம்.

வேம்பு பற்பாடகம்
கண்டங்கத்திரி நன்னாரிவேர்
ஆலங்கனி காவட்டம்புல்
வில்வம் துளசி
ஆடாதோடை கஞ்சாங்கோரை

இவைகள் ஷை யிடைகொண்டு யிடித்து ஒருபடி ஜலம் வைத்து நாலுக்கொன்றாய் கியாழம்வடித்து (நி-சு) வேளை கொடுக்க சவுக்கியமாகும்.

இதுவுமது.

## சேத்துமசுரக்கியாழம்.

சுக்கு அதிவிடையம்
கடுக்காய் தேவதாரம்
வசம்பு இலவம்பட்டை
முத்தக்காசு மிளகு

இவைகள் வகைக்கு ஒருபலம்கொண்டு ஒருபடிஜெலத் தில்போட்டு நாலுக்கொன்றாய்க் கியாழம்வடித்து (நி-சு) வேளைகொடுக்க சேத்துமசுரம்தீரும்.

## சேத்துமசுரத்தின்கியாழம்.

விருத்தம்.

வெய்யவுளக்கமிருமலுடன் விதனமுருக்கிமேல்வெளுத்து
செய்யமலமும்அடைபட்டு தினவுந்தினமும்சுரமுண்டாய்

பையவாயுமிரத்திற்கும் பசிடிமில்லைபார்க்குங்கால்
ஐயசுரத்தின்குணமென்று றெல்லாம்தெரிந்தபெரியோரே.

## இதற்குக் கியாழம்.

| | |
|---|---|
| மலைதாங்கி | நீர்பூலாவேர் |
| முத்தக்காசு | நாவற்பட்டை |
| அத்திப்பட்டை | மாதளங்கொழுந்து |
| இருவேலியிலை | அதிவிடையம் |
| மாம்பட்டை | கோஷ்டம் |
| காசிக்கட்டி | அதிமதுரம் |
| சீரகம் | வகைக்குப்பலம் (௧) |

இவைகளை யிடித்து ஒருபடி ஜெலத்திலிட்டு நாலுக்கொன்றாய் கியாழம்வடித்து இருவேளையுமாக (௩-௪) நாள் கொள்ள சேத்துமத்தாலெடுத்த சகலவியாதியும் தீரும்.

ஷை சுரத்திற்கு

## வேறு கியாழம்.

நிலவேம்பு அதிவிடையம் கோரைக்கிழங்கு சீந்திற்றண்டு கொடிசைபாலை இவை சமன்கூட்டி இருநாழிநீர்விட்டு நாலுக்கொன்றாய்க்காச்சி (௩) நாள் கொள்ளத்தீரும்.

ஷை சுரத்திற்கு

## வேறு கியாழம்.

கோரைக்கிழங்கு, பெருமரப்பட்டை,வேப்பம்வேர்க்கு, நிலவேம்பு, வில்வபத்திரி, சுக்கு, இவை சமன்கூட்டி முன் மாதிரி காச்சிக்குடிக்க நிவர்த்தியாகும்.

## குளிர்சுரம் முதலிய பலவித சுரத்திற்கும் கியாழம்.

| | |
|---|---|
| கோரைக்கிழங்கு | கடுக்காய்தோல் |
| சீந்தில்தண்டு | குராசானி ஓமம் |
| வில்வம் | சிற்றாமுட்டி |
| கொத்துமல்லி | திப்பிலி |
| பேய்ப்புடல் | வகைக்கு சமனிடை |

இவைகளை யிடித்து இருநாழி நீர் விட்டு அரைத்திட்ட மாய்க்காச்சி காலை மாலையாக (ச-டு) நாள் கொள்ளை சகல சுரமும் விட்டோடும் மலக்கட்டுவிடும் வாதபித்த சேட்டும மாகிய மூவிதசுரமும் தீரும்.

இதுவுமது.

பலசுரக்கியாழம்.

விருத்தம்.

குருவிக்கரும்பு கண்டங்காலி குருந்தமுட்டிவேரினொடு
மருவிக்கொண்டங்கிருநாழி நீர்விட்டெரித்து உழக்காக்கி
வெருவிக்கொண்டு சக்கரையை விட்டுகலக்கிக்குடிப்பிராய்
உருவிக்கொண்டுவாதபித்த உள்ளதெல்லாங் குடிபோமே.

இதுவுமது.

பலசுரக்கியாழம்.

கொத்தமல்லிசுக்குவலை யத்துநிலவேம்புடனே
முத்தமொடு பருங்குமிழு முத்துசிரு தேக்குதாரம்
வித்தகபற்பாகமும் வெத்திருநாழிச்சலத்தில்
பெத்திடமேவாதமொடு பித்தமருமென்றன்றே.

இதுவுமது.

பலசுரக்கியாழம்.

நிலவேம்பு, சித்திரமூலம், தாமரைவளையம் முக்கா வேளைவேர், சீந்திற்றண்டு, விஷ்ணுகாந்தி, பற்பாடகம், இவை சரியிடைகூட்டி இருநாழி நீர்விட்டு பாதியாகக்காச்சிக் குடித்துவர சருவசுரமும்தீரும்,

இதுவுமது.

பலசுரக்கியாழம்.

கொன்றைப்பிசின், சுக்கு, சிறுகாஞ்சொரிவேர், ஆடாதோடையிர்க்கு, பேய்ப்புடல், கொத்தமல்லிவிரை, கோரைக் கிழங்கு இவைகளை இருநாழி நீர்விட்டு நாலுக்கொன்ருய் கியாழம் வடித்து இருவேளையாகக்குடிக்கவும் இப்படி (ச-டு) நாள் குடிக்க சருவசுரமும் தீரும்.

## வாதசுரக் கியாழம்.

நல்லசந்தணம் கோரைக்கிழங்கு
சுக்கு சிறுகாஞ்சொரி

இதுகள் சமன்கொண்டு கியாழம் வைத்து (ரு-சு) வேளை யருந்த வாதசுரம் வாதத்தாலெடுத்த நோக்காடுதீரும்.

## இதுவுமது.

## வாதசுரக் கியாழம்.

ஆமணக்கம்வேர் செருப்படை
கூத்தன் குதம்பைவேர் சுக்கு
தழுதாழைவேர்

இவை சமன்கூட்டி அஷ்டபாகமாகக் கியாழம்வைத்து (சு-எ-அ) வேளையருந்த வாதசுரம் தீரும்.

## இதுவுமது.

## வாதசுரக் கியாழம்.

அத்திவேர் கடுக்காய்தோல்
இலந்தைவேர் சுக்கு
கண்டங்கத்திரிவேர்

இவை சமன்கூட்டி அஷ்டபாகமாகக் கியாழம் வைத்து (சு-எ-அ) வேளை கொடுக்க வாதசுரம் தீரும்.

## இதுவுமது.

## வாதசுரக் கியாழம்.

தழுதாழைவேர், மஞ்சள், சுக்கு, தாணிக்காய், இவை சமன்கூட்டி அஷ்டபாகமாகக் கியாழம்வைத்து (சு-அ) வேளை கொடுக்க வாதசுரம் நிதானப்படும்.

## பயித்தியசுரக்கியாழம்.

நரிபயற்றம்வேர் சித்தாமல்லிவேர்
கோரைக்கிழங்கு பேராமல்லிவேர்
வெட்டிவேர் சீரகம்

இவை சமன்கூட்டி அஷ்டபாகமாகக் கியாழம் வைத்து மாறுகிறவரையில் (எ-அ) நாள் இருவேளையும் கொடுக்கவும்.

## இதுவுமது.

## பயித்தியசுரக்கியாழம்.

| | |
|---|---|
| சீந்திற்கொடி | கோஷ்டம் |
| விலாமிச்சம்வேர் | நல்லசந்தணம் |
| கோரைக்கிழங்கு | சிறுகுரிஞ்சிவேர் |

இவை சமன்கொண்டு அஷ்டபாகமாகக் கியாழம் வடித்து பத்துநாள் யிருவேளையும் கொடுக்கவும்.

## இதுவுமது.

## பயித்தியசுரக்கியாழம்.

| | |
|---|---|
| சிறுதுமட்டிவேர் | ஜடாமாஞ்சி |
| நரிபயற்றம்வேர் | கோரைக்கிழங்கு |
| சீந்திற்கொடி | பேராமல்லிவேர் |
| சுக்கு | அதிமதுரம் |

இவை சமன்கொண்டு அஷ்டபாகமாகக் கிழாயம் வடித்து (ரு-சு) வேளை கொடுக்கவும் தீரும்.

## சிலேத்துமசுரக்கியாழம்.

| | |
|---|---|
| கண்டங்கத்திரிவேர் | செம்முள்ளிவேர் |
| முக்காவேளைவேர் | சுக்கு |
| ஆடாதோடையிர்க்கு | மிளகு |

இதுகள் சமன்கொண்டிடித்து அஷ்டபாகமாகக் கியாழம் இருவேளை (ஙு-ச) நாள்கொள்ள சவுக்கியமாகும்.

## இதுவுமது.

## சிலேத்துமசுரக்கியாழம்.

| | |
|---|---|
| ஆடாதோடையிர்க்கு | வசம்பு |
| செம்முள்ளிவேர் | கண்டங்கத்திரி |
| பிரண்டை | கடுகுரோகணி |

இதுகள் சமன்கொண்டு அஷ்டபாகமாகக் கியாழமாக்கி (ச-ரு) நாள் யிருவேளையும் கொடுக்கவும்.

## கியாழவகைபரணி

## முற்றுப்பெற்றது.



உ

தேவிசகாயம்.

ஒன்பதாவது

# கண்டாவிழ்த வகைபரணி

## பஞ்சபாக்கியச் சூரணம்.

மாங்கொட்டைப்பருப்பு, கருவேப்பிலை, சுண்டக்காய் வற்றல், வெந்தயம், ஓமம், இவ்வைந்தும் சமனிடையெடுத்து வருத்து சூரணம்செய்து மூவிரல் பிரமாணம் தயிரில் கொள்ளவும் தீரும் வியாதிகள் சகலகிராணி, அதிசாரம், வயிற்றிரைச்சல், கழிச்சல், சீதம், இரத்தம் விழுதல், மூலக்கடுப்பு, வயற்றுக்கடுப்பு முதலியவை நீங்கும்.

## மூலவாய்வுக்கு.

வெள்ளுள்ளி பலம் (ரு) உ-படி ஆவின்பாலில் அரைத்து கலக்கிக்காச்சி புறைகுத்திகடைந்துதயிரெடுத்து அந்தத்தயிரை அந்திசந்தி மூன்றுநாள் அன்னத்திலிட்டு சாப்பிடவும்.

## சகல கிராணிகளுக்கு.

திப்பிலி, சுக்கு, மிளகு, ஜாதிக்காய், கிராம்பு, இந்துப்பு, ஏலம், சீரகம், பெருங்காயம், வேலன் பிசின், மாம்பிசின், இலவம்பிசின், முத்தக்காசு, புளியம்விரைதோல், மாதுளந்தோல், அபின், வகைக்கு விராகனிடை ஒன்றுவிதம்யெடுத்து பொடித்து இதற்கு சமனிடை சுத்திசெய்த கஞ்சாதூள் கலந்து வேளை ஒன்றுக்கு ஒரு விராகனிடை விதம்தேனிற்கலந்து கொள்ளவும்.

## மூலமுளை மூலக்கடுப்புக்கு.

மருதம்பட்டை கால்பலம் யெடுத்து கால்படி ஆவின் பாலில் அரைத்து கலக்கி மூன்றுநாள் கொடுக்கவும்.

## மூலமுளைக்கு.

வேப்பமுத்தின்பருப்பு ஒரு எலுமிச்சங்காய்ப் பிரமாணம் அரைத்து சற்றே வெதுப்பி பில்லைதட்டி மூன்றுநாள் கட்டபுழுவிழும் முளைகரையும்.

## சீழ்மூலத்துக்கு.

காரெள்ளு, கடுகு, திப்பிலி, சுக்கு வகைக்குப்பலம் ஒன்று இவைகளை வெதுப்பி சூரணித்து திருகடிபிரமாணம் வென்னீரில் காலைமாலை (ரு) நாள் கொள்ளவும்.

## கண்ணில் சதைவளர்த்திக்கு.

ஈருள்ளியும் குரிஞ்சாவும் ஓர் நிரையாயிடித்து (ஙு) நாள் கண்ணில் பிழியவும்.

## வசூரியில் தாகமெடுத்தால்.

கலைமான்கொம்பை ஊரவைத்து கழுவிப்போட்டு அதை ராவியதூள் பலம்-உ, யெடுத்து சுடுதண்ணீரில் போட்டு ஊரவைத்துக் கொடுக்கவும்.

## வசூரியினால் நேத்திரத்தில் வலிகண்டால்.

சீரகத்தை துணியில் பொட்டளங்கட்டி முலைப்பாலில் ஊரவைத்து கண்ணில் ஒத்தடமிடவும், உ, சுடுசோற்றில் வெண்ணெய்சேர்த்து மத்தித்து துணியில் பொட்டளங் கட்டி நீராகாரத்தண்ணீரில் தோய்த்து ஒத்தடமிடவும்.

## கண்ணில் வசூரிவராதிருக்க.

வசூரி காய்ச்சலடிக்கும்போது ஈருள்ளியை வாயிற் போட்டுமென்று காச்சலடித்தவன் கண்ணில் ஊத்தவும்.

## வசூரியினால் நேரிடும் சூலைகட்கு.

ஒருபழங்கூரை வைக்கோலும், ஒருபிடி வேப்பிலையும் சேர்த்துவித்து (சு) நாள்வரை வேதுவிட்டு ஒத்தடம் போட்டுக்கட்டவும் (உ) வட்டத்துத்தியை சமூலம் வேகவைத்து (யஙு) நாள் வேதுவிட்டு ஒத்தடம் போட்டுக் கட்டவும்.

## ஆராத வசூரி புண்ணுக்கு.

முற்றினதேங்காயைத்திருகி அதில் புளியம் விரையின் மேற்றோலைப் பொடித்துப்போட்டு பிசைந்து பிழிய தயிலம் வரும் அதை புண்ணிற்போடவும்.

## வயற்று கிருமிவிழ.

எலிச்செவியும் முருங்கைவேரும் திரிபலையும் நருக்கிக் கியாழம் செய்து சங்களவு கொடுக்கவும்.

## குழந்தைகளின் ஊதுமாந்தம் பொருமல் வாதத்துக்கு.

இரசம், சுக்கு, வெண்காரம், கெந்தகம், வகைக்கு விராகநிடை ஒன்று, நேர்வாளம் விராகநிடை-௪, இவைகளை சுத்தி செய்து குளிர்ந்த நீர் விட்டரைத்து பாசிபயற்றளவு உண்டை செய்து ஒரு உண்டை தண்ணீரில் கரைத்துக் கொடுக்கவும்.

## குழந்தைகள் சாம்பல் மண் தின்றதற்கு.

கிழ்க்காய்நெல்லிவேர் விராகநிடை ஒன்று கடுக்கா தோல் விராகநிடை இரண்டு மிளகு விராகநிடை மூன்று புளித்தமோரிலரைத்து கலக்கி சங்களவு மூன்று நாள் கொடுக்கவும்.

## வெட்டுகாயத்திற்கு.

வெட்டுப்பட்ட புண்ணில் சுய எள்ளெண்ணையை விட்டு துணிசுற்றி ஒரேகட்டு கட்டிவிடவும் ஜலம்படாமல் பார்த்து வரவும்.

## வங்குகருஞ் சிட்டைக்கு.

இலந்தைக்கொட்டை திப்பிலி வகைக்கு விராகநிடை உ, மஞ்சள் விராகநிடை-௪. வேண்டியமட்டும் தேன்விட்டரைத்து வங்குவந்த விடத்தில் தடவிவரவும்.

## மார்புச்சளி கோழைகட்கு.

பிரண்டையை வெதுப்பிச் சாறுபிழிந்து ஐந்துநாள் சங்களவு இருபொழுதும் கொடுக்கவும்.

## கண்ணோய்க்கு

கற்கண்டைப்பொடித்து துணியில் முடித்து புளிப்பு மாதளஞ்சாற்றில் ஊரவைத்து கண்ணிற்பிழியவும்.

## குழந்தைகளுக்கு உரம் விழுதல்.

வெள்ளைப்பூண்டு, கடுகு, வகைக்குப்பலம்-உ, அரைப் படி நல்லெண்ணெயிற்போட்டுக் காச்சிவடித்து குழந்தை

மேற் பூசி நொச்சியிலை, வேப்பிலை மாவிலை, மூக்கிரட்டை இவைகளைப் போட்டுக்காச்சி வென்னீரில் ஸ்நானம் செய்விக்கவும்.

### பாம்பு கடித்தால்.

கடிவாய்வுக்கு (உஉ) அங்குலத்துக்குமேல் பலமான மெல்லிய கயற்றைப்போட்டு இருக்கிக்கட்டவும், அதற்குமேலிரண்டுகட்டு தனித்தனிகட்டவும், கடிவாயில் கத்தியால் ஆழமாய்க்கீரி இரத்தம்வடியச் செய்யவும், அப்பால் அந்த காயத்தில் (கார்பாலிக் ஆசிட்) -ச-ரு-துளிவிடவும்.

### தேள், நட்டுவக்காலி, தேனீ, குளவி முதலியவை கொட்டியதற்கு.

பொருக்கக்கூடிய சூடுள்ள வென்னீரைவார்த்து அதில் சோங்கை உப்புபோட்டு அந்தவென்னீரை அகல பாத்திரத்தில் வைத்து அதற்குள் ஷை விஷஜெந்துக்கள் கொட்டிய பக்கத்தை சற்றுநேரம் வைத்திருக்கவும் அப்பால் சுயம்பு எள்ளெண்ணெய் தடவவும்.

### குழந்தைகள் கக்கிருமலுக்கு.

குழந்தையின் வயதெத்தனையோ அத்தனை கிரேயினஸ் குயினவை ஒரு அவுன்ஸ் ஜலத்தில் கரைத்து ஒருமணி நேரத்துக்கொருதரம் ஒரு தேக்கரண்டிவீதம் கொடுக்கவும்.

### வேக்குருக்கு.

1. ஒருசீசா சுத்தஜலத்தில் 4-ரூபாயெடை வெண்காரத்தைக்கரைத்து உடம்பில் பூசிவரவும், 2. சந்தனத்தை பன்னீரில் அரைத்து கலக்கி சற்றுநேரம் வைத்திருந்து சல்லாவில் வடித்து அதில் ஒரு அவுன்சுக்கு 10-கிரேயின் வீதம் மயில்துத்தத்தை கரைத்து வேக்குருயிருக்குமிடத்தில் சொற்பஞ் சொற்பமாய்ப் பூசிவரவும்.

### அரணைவிரியன் பாம்புகடிக்கு.

குத்தாயிலையை அரைத்து பசுவின்பாலில் கலக்கிச் சாப்பிடவும்.

### சுருட்டைகடிக்கு.

கண்டவேரை அரைத்து இளவென்னீரில் சாப்பிடவும்.

### தந்தரோகத்திற்கு.

செங்கொட்டை பலம்-ப, கரியுப்பு பலம்-ரு, இவை யிரண்டையும் செப்புப்பாத்திரத்தில் வைத்து புடமிட்டு பல் விளக்கவும்.

### காதில் சீழ்வடிதற்கு.

சத்திசாரணைக்கிழங்கு, கிளாவேர், நெல்லிவேர், கையாந்தகரை, சிகப்புநெருஞ்சில் சமன்தட்டி வேப்பயெண்ணெயில் போட்டுக்காச்சி காதில்விடவும்.

### பாஷாணம் தின்றவர்களுக்கு.

மிளகையரைத்து எருமைவெண்ணெயில் மத்தித்து உள்ளுக்குக்கொடுத்து எருமைத்தயிரில் சந்தணம் அரைத்து உடம்பிற்பூசவும்.

### அரையாப்புக்கு

முடக்கற்றானிலை, சுண்ணாம்பு, வெல்லம், எலுமிச்சம் பழச்சாறுவிட்டு அரைத்துப் பூசவும்.

### எச்சிற்றழும்புக்கு.

எருக்கம்வேர்ப்பட்டை தகரவிரை எலுமிச்சம் பழச்சாறு விட்டு அரைத்துப் பூசவும்.

நான்காங்காண்டம்

முற்றிற்று.



இன்னம் அனேக அற்புதமான அவிழ்தமுறைகள் ஐந்தாம் பாகத்தில் வெளியிடப்படும்.

353

உ
தேவிசகாயம்.
—o—

# ANUBOGAVYTHIA
## BRAMAH RAHASIAM.

# அநுபோகவயித்திய
## பிரம்மரகசியம்.

ஐந்தாம்பாகம்.



இஃது
ஜெகந்நாதஸ்தலம்.
## கோஷாயி சுவாமிகள்
அநுக்கிரகத்தின்படி
சிறுமணவூர்
## முநுசாமி முதலியாரால்
எழுதிமுடிவுபெற்று,



பூவிருந்தவல்லி.
சுந்தர முதலியார் குமாரர்
பூ. சு. குப்புசாமி முதலியார்
அண்டு சன்ஸ் அவர்களது
ஸ்ரீ சுந்தர விலாச அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டது.
சென்னை-புரசை.
—o—
1935.

355

# புஸ்தக விளம்பரம்.

## குடும்ப சுகவாழ்க்கை.

### 50-குடும்ப கதைகள் அடங்கியது.

இந்த புத்தகத்தில் குழந்தை பிறந்தது முதல் பனி ரெண்டுவயது வரையிலும் அதனை வளர்க்கும் வழிகளும் தேக ஆரோக்யங்களும் நந்நடக்கை பயிற்சிகளும் தாய் தந்தையர்களால் நடத்தக்கூடிய உபாயங்கள் சுமார் (50) சிறந்த வழிகளை இதில் அச்சிட்டு இருக்கிறது இதை ஒவ்வொரு ஆண் பெண்பாலர் யாவரும் அவசியம்வாசிக்க வேண்டும் இதில் அடங்கிய சில விஷயங்களை அடியில் குறித்திருப்பதை கவனிக்கவும்.

(1) குழந்தைகளை வளர்க்கு முறை, (2) பாலூட்டும் வகை. (3) உடுப்பும் சிங்காரிப்பும், (4) பயங்காட்டுவதால் வரும் கெடுதி. (5) தேகாப்பியாசம் விளையாட்டும் (6) நல்லொழுக்கத்தில் பழகச் செய்தல். (7) பணத்தினருமையும் பிரயோஜனமும், (8) கடவுளைத்தினம் பிரார்த்திப்பதின் பலன் (9) தாய் தந்தையர்களின் கடமை, இப்பேர்ப்பட்ட விஷயங்களுடன் சில வியக்கத்தக்க நல்ல கதைகளையும் சேர்த்து உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அச்சிட்டிருக்கிறது.

விலை அணா 0 8 0

### மாணக்கர்களுக் கிதோபதேசம் படத்துடன் 54-கதைகள் அடங்கியது

இந்த புஸ்தகம் ஒவ்வொரு பிள்ளைகளும் அவசியம் வாசிக்கவேண்டியது பிள்ளைகள் பிற்காலத்தில் கெடாமல் இருப்பதற்கு தக்கநூல் தாய் தந்தையர் இதை அவசியம் பிள்ளைகளுக்கு தின பாட புஸ்தகமாக வாசிக்கும்படி செய்யவேண்டும் இதில் தேகவண்மை, ஆரோக்யம், நந்நடக்கை வித்தையில் விடா முயற்சி தாய் தகப்பன் குரு முதலானவர்களிடத்தில் பக்தி ஆபத்து காலத்தில் துன்பப்பட்டவர்களுக்கு சிகிச்சை செய்யவேண்டிய முறை இன்னும் அனேக சிறந்த 54-விஷயங்கள் சேர்ந்து நல்ல உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் படத்துடன் அச்சிட்டு இருக்கிறது.

விலை அணா 0 10 0

எமது விலாசம்:—

பூ. சு. குப்புசாமி முதலியார் அண்டு சன்ஸ்,
ஸ்ரீ சுந்தரவிலாசம் பிரஸ்,
வேப்பேரி போஸ்ட் மதராஸ்.

# விளம்பரம்.

## கன்ருவி நாடகம்.

### இப்புத்தகத்தின் பெருமையாவன.

அதிபற்புத அகடவிகட சாமர்த்திய ஜனோபகார விசித்திர வேடிக்கையையும் சன்மார்க்கமும் விளைவிக்கும் நூல்.

மூடர்களை சீர்திருத்தும் ஞானரத்தினம்.
சிறுவர்களை செல்வராக்கும் விவேகசந்திரம்.
பெண்டுகளைபெருமையாக்கும் கல்விக்களஞ்சியம்.
துர்ஜஜனரை விவேகியாக்கும் நீதிபோதகம்.

இதை வாசிப்போர்க்கு ஆசாரியபக்தியும், அரியயுக்தியும், சுயானுக்கிரகசக்தியும், ஞானசித்தியும், விடாத நகைப்பையும் உண்டாக்கும் இதன்பெருமையை ஷைபுத்தகத்தை வாசிப்பவரே சொல்லவேண்டுமேதவிர யாம் எழுதிமுடியாது.

### இப்புத்தகத்தில் அடங்கியுள்ள சிலவிஷயங்கள்.

1. பணம் சம்பாதிக்கும் விஷயம்.
2. டிஸ்கவுண்டு பேரத்தின்கொடுமை.
3. அனேகசாபங்களால் பிள்ளைபிறக்காதென்பது.
4. வாலிபர்களாலேற்படுந் தரிதலைத்தனமும், தாய்தந்தையரா லடித்துவளர்க்காத பிள்ளைகளின் சேஷ்டையும்.
5. கூத்திகளால்வருங் கேடுபாடு.
6. பைகாட்ஸ் பிரதர்களின்நேசம்.
7. குடியினால் வருங்கொடுமை.
8. மந்திரம், தந்திரம், ஜோசியம் முதலியதுகளின் விவரம்.
9. கொக்கோகசாஸ்திரம். இன்னதென்பது.
10. அமுர்தநிலையின்சாயல் பெரியோர்களுக்குவிளங்குமென்பது.
11. ஈடுவகையின்செயல்களும் துன்பங்களும்இன்னுமனேக அளவிறந்த விஷயங்களும் சதாநகைப்பையும் புத்தியையும் உண்டாக்கும். அகடவிகடப்பாட்டுகள், கும்மி, சிந்து, வெண்பா, கலித்துறை, சதகம் முதலியதும். இடைகளில் சிறந்த பழைபமொழிகளும் நிறைந்து கிடைக்கின்றது. இதன் விலை அணா 8.

---

எமது விலாசம்:—

பூ. சு. குப்புசாமி முதலியார் அண்டு சன்ஸ்,
ஸ்ரீ சுந்தரவிலாசம் பிரஸ்,
வேப்பேரி போஸ்ட் மதராஸ்.

உ

தேவிசகாயம்.

# அவுஷதங்களின் அட்டவணை.

—(*)—

361

உ

தேவிசகாயம்.

# அனுபோகவயித்திய பிரம்மரகசியம்.

# ஐந்தாவதுகாண்டம்.

## விநாயகர் துதி.

பூமாது தனைமணர்ந்த புயல்வண்ணப் பெருமாளும் புலவர் போற்று
நாமாது தனைமணந்த நான்முகனும் போர்மாது நயக்கு மெண்டோட்
கோமானுந் தானேயென் றுணர்த்துதற்கே பிரணவருஞ் சரமாய்த் தோன்றி
மாமாவின் முகத்தானை யுயிர்த்தானை நினைத்திறைஞ்சி வழுத்து வாமே.

## நாடிகள் நடக்கும் விவரம்.

இருதயம் விரியவும் சுருங்கவும் நாடிநரம்புகள் விரியவும் சுருங்கவும் செய்யும், இருதயநடைக்கு நாடிநடை ஒத்திருப்பதால் தேகத்திலிருக்கின்ற ரோகங்களை இருதயம் அறிந்து நாடிகளின்வழியாய்த் தெரிவிக்கின்றது.

## நாடியைப் பரிக்ஷிக்கும் இடங்கள்.

1-வது, கை. 2-வது, கண்டம். 3-வது, கன்னிச்சுழி. 4-வது, காலின் பெருவிரல் 5-வது, கணுக்கால். ஆனால் கையைப் பரிக்ஷிப்பதுதான் உத்தமம்.

## நாடிகள் பரிக்ஷிக்கும் விவரம்.

கையின் பெருவிரல் பக்கமாகஓடும் நாடியை மணிக் கட்டுக்கு ஓர் அங்குலம் மேலாக மூன்றுவிரல்களால் அழுத்தியும், தளர்த்தியும், சமமாகவும், மாறி மாறி பரிக்ஷிக்க நாடிநடை அறியலாம். புருஷர்களுக்கு வலதுகையும், ஸ்திரீகளுக்கு இடதுகையும், பரிக்ஷிக்கவேண்டியது, இரண்டு கைகளும் பரிக்ஷிப்பதுமுண்டு.

நோயாளியைப் படுக்கவைத்தாவது உட்காரவைத்தாவது நாடியைப் பரிக்ஷிக்கலாம்.

---

## நாடிபார்க்கும் மாதவகை.

சித்திரை வைகாசிக்கு உதயத்திலும், ஆனி ஆடி ஐப்பசி கார்த்திகைக்கு மத்தியானத்திலும், மார்கழி தை மாசிக்கு அஸ்தமானத்திலும் பங்குனி ஆவணி புரட்டாசிக்கு இராத்திரியிலும், பார்க்க நாடி தெளிவாய் தோற்றும்.

---

## நாடிபார்க்கும் விவரம்.

நாடியைப் பரிக்ஷிப்பதில் முதல்விரற்கீழ் வாதநாடி, நடுவிரற்கீழ் பித்தநாடி, கடைவிரற்கீழ் சிலேத்துமநாடி, யென்றறியவும்.

---

## புருஷருக்கு நாடிநடக்கும்விதம்.

வாதநாடி-குயில்போலும் அன்னம்போலும், கோழிபோலும், மயில்போலும் நடக்கும் பித்தநாடி-ஆமைபோலும், அட்டைபோலும் நடக்கும் சிலேத்மநாடி பாம்புபோலும் தவளைபோலும் நடக்கும்.

---

## பெண்களுக்கு நாடிநடக்கும்விதம்.

வாதநாடி-சர்ப்பம்போல் நடக்கும்
பித்தநாடி-தவளைபோல் நடக்கும்
சிலேத்மநாடி-அன்னம்போல் நடக்கும்.

---

இவைகளை இடித்து 20-மரக்கா ஜலத்தில்போட்டு எரித்து ஒருபடிபாக்கின கஷாயமும் ஒன்றாகச்சேர்த்து அதில் மேல்தோல்நீக்கின (2¼)சேர் இஞ்சியை மைபோலரைத்துக் கரைத்து மறுபடியும் எரித்து ஒருபடியாக வற்றவைத்து அத்துடன் சீனிசேர்-2, கற்கண்டு சேர்-2, சேர்த்து பாகுசெய்து அதில் கடுக்காய் தானிக்காய் நெல்லிவற்றல் ஏலம் கிராம்பு ஜாதிக்காய் வால்மிளகு கோஷ்டம் சீரகம் கருஞ்சீரகம் அக்கிராகாரம் சிவதைவேர் ஓமம் நறுக்குமூலம் சுக்கு மிளகு திப்பிலி அறத்தை ஜாதிப்பத்திரி தாளிசப்பத்திரி அதிவிடையம் வகைக்கு விராகனிடை-10, இவைகளை இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்து, வில்வப்பூ சுத்திசெய்த பறங்கிப் பட்டை வகைக்குப் பலம்-4, பேரீச்சம்பழம் அன்னபேதி பெருங்காயம் திராட்சப்பழம் கூகைநீர் வகைக்குப்பலம்-1, பச்சைகற்பூரம் கோரோசனை குங்குமப்பூ கஸ்தூரி அபினி வகைக்கு விராகனிடை-க, இவைகளின் சூரணத்தையும், தேற்றாவிதை பலம்-1, பசும்பாலில் ஊறவைத்து அரைத்து அதையும், சீந்திற் சர்க்கரை பலம்-8, நெய்சேர்-2, இவைகளையும்போட்டுக் கிண்டி பதத்திலிறக்கி தேன்சேர்-2, விட்டுப் பிசைந்து ஒரு தகரடப்பாவில் வைத்துக்கொண்டு தினம் பாக்குஅளவு சாப்பிட்டுவர மேகம்-20, அஸ்திசுரம், அஸ்திகாங்கை, சிரத்தம்விழுதல், காமாலை-13, வாயு பாண்டு-5, சோகை-9, கிரகணி-11, முதலிய சகல கரோரோகங்கள் குணமாகும்.

---

## தக்ஷிணாமூர்த்திலேகியம்.

ஒருபலம் சேங்கொட்டை நெறுக்கி ஒருபடி பசும் நெய்யில்போட்டுக் காய்ச்சிவடித்து அதில் அமுக்கிறாவேர் சங்கம்வேர் மூக்கரட்டிவேர் கொடிவேலிவேர் இவைகளின் சூரணம் வகைக்குப் பலம்-2, கோதுமைமாவு படி-வ, சீனி பலம்-5, சேர்த்து செவ்வையாய் மிஸ்ரித்து தினம் காலையில் பாக்களவு பத்துநாள் சாப்பிட சூலை (18)ம் குணமாகும் பத்தியம் உப்பில்லாமை.

---

## வச்சிரவல்லிலேகியம்.

சித்தரத்தை தாளிசப்பத்திரி
திப்பிலி அக்கிராகாரம்

இவைகள் வகைக்குப் பலம்-2, கண்டங்கத்திரிவேர் பலம்-8, இவைகளை இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்து (1½) சேர் சீனியை கால்படி பாலில் இட்டுப் பாகுசெய்து அதில் ஷை சூரணத்தைப்போட்டு நெய் தேன் வகைக்குப் படி-வ, விட்டு லேகியமாக்கி பாக்களவு தினம்-2-தடவைச் சாப்பிட்டுவர ஈளை இருமல் சகல கபரோகங்கள் தீரும்.

---

## அருணாசலலேகியம்.

பறங்கிப்பட்டை அமுக்கிறுக்கிழங்கு
சங்கம்வேர் சித்திரமூலம்வேர்ப்பட்டை

இவைகள் வகைக்குப்பலம்-6, ஏலம் சீரகம் சுக்கு மிளகு திப்பிலி வகைக்குப் பலம்-1, இவைகளைச் சூரணித்து 16பலம் சீனியுடன் தேவையான பசும்பாலேச் சேர்த்து பாகுசெய்து அதில் ஷை சூரணத்தையும், தேன் பலம்-5-ம், நெய்பலம்-15-சேர்த்து லேகியமாக்கி தினம் 2-தடவை பாக்குஅளவு சாப்பிட்டுவர மேகவாயு, மேகசூலே, மேகஊறல், மேகத்தடிப்பு, மேககாங்கை முதலிய சகல மேகரோகங்கள் தீரும்.

---

## தாதுபுஷ்டிலேகியம்.

| | | |
|---|---|---|
| நீர்முள்ளிவிதை | பலம் | 4 |
| எள்ளு | ,, | 1 |
| கடலைமாவு | ,, | 2 |
| ஜாதிக்காய் | விராகனிடை | 1 |
| ஜாதிப்பத்திரி | ,, | 1 |
| கிராம்பு | ,, | 1 |
| புரசம்பிசின் | ,, | 3 |
| கிலேக்கடம்பு | ,, | 2 |

இவைகளைச் சூரணித்து ஒரு முற்றின தேங்காயில் செலுத்தி வாயைமூடி 3-விரற்கடை கனத்தில் அதற்கு சாணி யால் கவசஞ்செய்து புடம்போட்டு தேங்காய் வெடித்த வுடனே யெடுத்து அதிலுள்ள மருந்தையும், 5 பலம் வெல்ல மும் சேர்த்து லேகியமாக்கி தினம் 2-தடவை பாக்களவுச் சாப்பிட்டுவர வீரியவிர்த்தியுண்டாகும், இடுப்புவலி தீரும் இதுவெகு நல்லமருந்து.

---

## கந்தகலேகியம்.

சுத்திசெய்த ஒருபலம் கெந்தகத்தை உருக்கி வெள்ளை அம்மான் பச்சைபரிசிச்சாற்றில் வார்த்து எடுத்துச் சூர ணித்து அத்துடன் சமமாக கற்கண்டுப் பொடியைச் சேர் த்து, பிறகு 20-ரஸ்தாளிபழச்சாறு, தேன் சேர்-வ, நெய் சேர்-வ, இவைகளில் சேர்த்து லேகியபதமாக வரும்வரை யில் சூரியபுடம்வைத்து கழற்சிக்காயளவு தினம் 2-தடவைச் சாப்பிட்டுவர மேகவாயு, மேகரணம், மேகஊறல், மேகக் கரப்பான், மேகஇரந்தி முதலிய பயங்கரமான ரோகங்கள் குணமாகும். இச்சாபத்தியம்.

---

## பூர்ணாதிலேகியம்.

| | |
|---|---|
| சுத்தித்தகஞ்சா | சிறுநாகப்பூ |
| லவங்கப்பத்திரி | சீரகம் |
| சிறுலவங்கப்பட்டை | அதிமதுரம் |
| கசகசா | சுக்கு |
| சோம்பு | திப்பிலி |
| ஏலம் | தாளிசப்பத்திரி |
| தும்பராஷ்டகம் | கிராம்பு |

இவைகள் வகைக்குப்பலம்-5, சாதிக்காய் சாதிப்பத் திரி வகைக்குப்பலம்-2½, மிளகுதேன் வகைக்குப் பலம்-10, நெய்பலம் - 20, சர்க்கரை சேர் - 15, எலுமிச்சம் பழம் அல்லது புளிப்பு நாரத்தம்பழரசம் படி-ஐ, சூரணிக்கிற பதார்த்தங்களை இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்துப் பழச்சாற்றில் சர்க்கரைசேர்த்து பாகுசெய்து அதில் ஷை சூரணத்தைப் போட்டுக்கிளறி தேனையும் நெய்யையும் விட்டு

மறுபடியும் கிளறி ஒருவாயகன்ற ஜாடியில்போட்டு மூடி வைத்துக்கொண்டு பெரியவர்களுக்கு பாக்களவும், சிறியவர்களுக்கு குன்றிமணி அளவும் கொடுக்க மாந்தம், அஜீரணம் உஷ்ணபேதி, வயிறிரைச்சல், மந்தம், பசியில்லாமை முதலிய பற்பல ரோகங்கள் குணமாகும்.

குழந்தைகளுக்கு கொடுப்பதரிது.

## பூர்ணசந்திரோதயலேகியம்.

ஒருசேர் மேல்தோல்சீக்கின இஞ்சியைக் கத்தியால் பில்லைகளாக்கி பசும்நெய்யில் பொன்னிறமாய் வறுத்துச் சூரணித்ததுடன் சுக்கு மிளகு திப்பிலி கோஷ்டம் அதிமதுரம் சீரகம் மல்லி ஏலம் சாதிக்காய் சாதிப்பத்திரி வால் மிளகு கிராம்பு வகைக்கு விராகனிடை-5, இவைகளை இளவறுப்பாய் வறுத்து சூரணித்து சேர்த்து வைத்துக்கொண்டு ஒருசேர் சீனிசற்கண்டை பசும்பாலில்போட்டு பாகுசெய்து அதில் மேற்படி சூரணத்தைப்போட்டு தேன் சேர்-வ, நெய் சேர்-1, கிட்டுக்கிண்டி செவ்வையாய் மிஸ்ரித்து பதத்தில் இறக்கி ஒருபீங்கா னல்லது தகரடப்பாவில் போட்டு வைத்துக்கொண்டு தினம் 2-தடவை பாக்களவு சாப்பிட்டுவர உஷ்ணவாயு, அஜீரணம், அக்கினிமந்தம், வயிற்றுவலி, குன்மம்காசம் முதலிய பற்பல பலமானரோகங்கள் குணமாகும்.

---

## கதலிலேகியம்.

100-ரஸ்தாளிப்பழத்துடன் பெரும் உமியைச் சேர்த்துப் பிசைந்து இளநீர் ஜலம்போல் வருவதையெடுத்து அத்துடன் சீரகம் பலம்-1, கசகசா பலம்-1, இவைகளை இளவறுப்பாய் வறுத்துச் சூரணித்துப்பொடியையும் சீனிசேர்-1, சாதிக்காய்தூள் சாதிப்பத்திரிதூள் வகைக்குப் பலம்-½, இவைகளையும் சேர்த்து 15-நாள் சூரியபுடம் போட்டு லேகியபதத்தில் எடுத்து வைத்துக்கொண்டு 5-விராகனிடை வீதம் தினம் 2-தடவைச் சாப்பிட்டுவர உஷ்ணவாயு, பித்தவாயு, அரோசிகம், அன்னத்துவேஷம் குணமாகும்.

## கண்டத்திப்பிலிலேகியம்.

சுக்கு கண்டத்திப்பிலி வகைக்குப்பலம்-1, ஓமம் பலம் 2, இவைகளைச் சூரணித்து 4-பலம் பனைவெல்லத்தை ஜலத்தில்போட்டு பாகுசெய்து அதில்சேர்த்து நெய்பலம்-1,விட்டு லேகியமாக்கி தினம் பாக்களவு 2-தடவை சாப்பிட்டுவர வாயு, அஜீர்ணம், மந்தாக்கினி, மலபந்தம் குணமாகும்.

## இஞ்சிலேகியம்.

இஞ்சி | முள்ளங்கிழங்கு
கண்டங்கத்திரி | எலுமிச்சம்பழம்
நெரிஞ்சி

இவைகளின் சாறு வகைக்குப்படி-½, பசும்பால் படி-½, இவைகளைச்சேர்த்து அத்துடன் 4-பலம் சீனிசர்க்கரைத்து பாகுசெய்து அதில் சுக்கு மிளகு திப்பிலி ஏலம் கிராம்பு சீரகம் வாய்விளங்கம் தாளிசப்பத்திரி வகைக்குவிராகனிடை-5, சூரணித்துப்போட்டு தேன்படி-½, நெய்படி-½, விட்டு லேகியமாக்கி தினம் 2-தடவை பாக்களவு 48-நாள் சாப்பிட்டுவர வாந்தி-5, சூலை-18, வாதம்-80, பித்தம்-40, இசிவு, குன்மம்-8, அரோசிகம், பொருமல், கடுப்பு, மயக்கம், கபாலக்குத்து, பித்தயெரிவு அன்னத்துவேஷம் தீரும் இச்சாபத்தியம்.

## லேகியவகைபரணி

முற்றிற்று.

---

அனுபோகவயித்திய பிரம்மரகசியம் 1, 2, 3, 4, 5, 6, 7, 8, பாகம்வரை அச்சிட்டு விற்பனைசெய்து வருகிறோம். 5-ம் பாகம், 6-ம் பாகம், 7-ம் பாகங்களில் அநேக அற்புத முறைகளும், கடைசி 8-ம் பாகம் முழுமையும் ஒவ்வொரு மருந்துகள் சுத்திசெய்யும் பாகமும் இன்ன யின்ன நோயைக் கண்டிக்குமென்றும் விவரமாக சொல்லப்பட்டிருக்கிறது.

உ

தேவிசகாயம்.

# நாலாவது
# கிருதவகைபாணி.

## மாணிக்கக்கிருதம்.

| | | |
|---|---|---|
| தேங்காய்ப்பால் | படி | 2 |
| பொடுதலைச்சாறு | ,, | 2 |

இவைகளில் 16-படி ஆற்றுஜலத்தை எட்டிலொன்றாகும்படி காய்ச்சி சேர்த்து எரித்து நெய்யைவடித்து ஒரு விராகனிடைவீதம் தினம் காலைமாலை கொடுத்துவர கருநாக்குச்சூலை மேல்வாய்ப்புண் உண்ணாக்கை அரிக்கும் கிரந்தி பல்லீறை அரித்துத்தின்னும் கிரந்தி நாக்குஅரிப்பு, நாக்குப்புண் முதலிய மகா கொடியரோகங்கள் குணமாகும்.

## புளியாரைகிருதம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| புளியாரைச்சாறு | படி | 2 | தயிர் தண்ணீர் | படி | ½ |
| பசும்நெய் | ,, | ½ | வெள்ளாட்டுப்பால் | ,, | ½ |

இவைகளைச்சேர்த்து அதில் சுக்கு மிளகு திப்பிலி வில்வப்பிஞ்சு வாலுழுவைஅரிசி காட்டாத்திப்பூ கோரைக்கிழங்கு சீரகம் அதிவிடையம் இலவம்பிசின் மல்லி நெய்தற்கிழங்கு விலாமிச்சுவேர் சிற்றாமுட்டி ஓமம் இஞ்சி பொன்முசட்டை கண்டத்திப்பிலி மாதுளம்பிஞ்சி வகைக்கு விராகனிடை-2½, ஜலத்தால் அரைத்துக் கரைத்து பெரித்து பதத்தில் இறக்கி தினம் 2-தடவை ஒரு விராகனிடைவீதம் கொடுத்துவர குன்மம்-8, கிராணி-11, வயிற்றுவலி சுரம் தாபம் அரோசிகம் சோகை-9, பிலீகம்-4, லிவர்வியாதி மூலம்-8, ஆமக்கட்டிகள் கிருமிரோகம் முதலிய கடோரரோகங்கள் குணமாகும் பலம்தேஜசு தீபனம் இவைகள் உண்டாகும்.

## கூழ்ப்பாண்டகிருதம்.

| | | |
|---|---|---|
| பெரும்பூசினிக்காய்ச்சாறு | படி | 1 |
| செவ்விளநீர்ஜலம் | ,, | ½ |
| குமரிச்சாறு | ,, | ½ |
| தென்னம்பூச்சாறு | ,, | ½ |
| தாலமுவிழுதுச்சாறு | ,, | ½ |
| பசும்பால் | ,, | 1 |
| நெய் | ,, | 1 |

இவைகளைச்சேர்த்து அதில் குரோசாணிஓமம் மல்லி கற்கடகசிங்கி காட்டாத்திப்பூ சாதிக்காய் சாதிப்பத்திரி மாசிக்காய் கடுக்காய் தானிக்காய் நெல்லிவற்றல் வால்மிளகு சீரகம் ஏலம் வகைக்கு விராகனிடை-1½, பசும்பாலாலரைத்துக் கரைத்து எரித்து வடித்து ஒருபலம் கற்கண்டைப் பொடித்துப்போட்டு வைத்துக்கொண்டு 3-விராகனிடை கிருதத்தில் கொஞ்சம் அப்பிரேகசெந்தூரத்தை வைத்துக் கொடுக்க மேகம்-20, பிரமேகம்-21, காமாலை-13, கிரகணி-11, பித்தம்-40, ஊஷ்ணம் கைகால் எரிவு, நீர்க்குத்து, அல்லிவெட்டை, அஸ்திகாங்கை, எலும்புருக்கி முதலிய பயங்கரமான ரோகங்கள் அதிசீக்கிரத்தில் குணமாகும்.

---

## திரிலோககிருதம்.

| | | |
|---|---|---|
| பெரும்பூசினிக்காய்ச்சாறு | படி | ½ |
| நெல்லிக்காய்ச்சாறு | ,, | ½ |
| குழிமிட்டான்கிழங்குச்சாறு | ,, | ½ |
| கரும்புச்சாறு | ,, | ½ |
| சதாவேரிக்கிழங்குச்சாறு | குருணி | 5 |
| நெய் | படி | 2 |

இவைகளைச் சேர்த்து அதில் இந்துப்பு ஓமம் சிறுதேக்கு கோரைக்கிழங்கு கோஷ்டம் சந்தனம் சுக்கு மிளகு திப்பிலி கடுக்காய் தானிக்காய் நெல்லிவற்றல் வெட்பாலையரிசி மல்லி ஏலம் கிராம்பு லவங்கப்பத்திரி சிறுநாகப்பூ சீரகம்

விலாமிச்சுவேர் கூகைநீர் அதிமதுரம் திராக்ஷ பேரீச்சங் காய் வகைக்கு விராகனிடை-1½, அரைத்துக் கரைத்து பெரித்து வடித்து ஒருகரண்டிவீதம் தினம் 2-தடவை சாப் பிட்டுவர கிரிச்சரம் நீர்க்கடுப்பு எலும்புருக்கிமேகசுரம் கை கால்எரிவு தீரும். தாதுவிருத்தி தேகபுஷ்டி உண்டாகும்.

---

## வல்லாரைகிருதம்.

| | | |
|---|---|---|
| வல்லாரைச்சாறு | படி | 2 |
| பொடுதலைச்சாறு | ,, | 2 |
| பொன்னாங்காணிச்சாறு | ,, | 2 |
| எலுமிச்சம்பழச்சாறு | ,, | 2 |
| ஆவின்பால் | ,, | 4 |
| நெய் | ,, | 4 |

இவைகளைச்சேர்த்து அதில் அதிமதுரம் ஏலம் கிராம்பு வால்மிளகு சாதிக்காய் சாதிப்பத்திரி மாசிக்காய் கடுக் காய்ப்பூ வகைக்கு விராகனிடை-4, ஷை பாலால் அரைத்துக் கரைத்து எரித்துவடித்து அதில் 4-பலம் கற்கண்டுப் பொடி யைச் சேர்த்து தினம் 3-விராகனிடை கிருதத்தில் கொஞ்சம் ரசபஸ்மம் சேர்த்துக்கொடுக்க மேகம்-20, கிரந்தி 9, பிர மியம்-20, குஷ்டம்-18, மேகசூலை சொறி சிரங்கு க்ஷயரோகம் போனிப்புற்று நீர்க்கடுப்பு முதலிய மஹா கொடியரோகங் கள் குணமாகும்.

---

## தூதுளைகிருதம்.

| | | |
|---|---|---|
| தூதுளைசமூலம் | பலம் | 100 |
| கண்டங்கத்திரி | ,, | 50 |
| கறிமுள்ளிவேர் | ,, | 50 |

இவைகளை இடித்து 80-படி ஜலத்தில்போட்டு எரித்து 10-படியாக்கின கஷாயத்தில் பசும் நெய் பால் வகைக்குப் படி-5, இஞ்சிச்சாறு படி-கவ, சேர்த்து அதில் சிறுநாகப்பூ

நன்னாரிவேர் கொடிவேலிவேர் சுக்கு மிளகு திப்பிலி கடுக்காய் தானிக்காய் நெல்லிவற்றல் கோஷ்டம் தாளிசபத்திரி வகைக்கு விராகனிடை-5, செவ்வல்லிக்கொடி சடாமாஞ்சில் சிறுகாஞ்சொரிவேர் ஆடாதோடைவேர் அதிமதுரம் சீரகம் தேற்றுவிதை வகைக்குப் பலம்-கவ, கண்டங்கத்திரிவேர் முசுமுசுக்கைவேர் வகைக்குப் பலம்-உ௨, ஷை பாலாலரைத்துக்கரைத்து எரித்து வடித்து அதில் தேன்படி-௨, கற்கண்டு பலம்-5, சேர்த்து தினம் 2-தடவை 2-விராகனிடைவீதம் கொடுக்க ஈளை இருமல் சுவாசம்-5, காசம்-5, பொருமல் இரைப்பு முதலிய கபரோகங்களெல்லாந் தீரும்.

---

## மாத்துவெள்ளை நவநீதம்.

| | | |
|---|---|---|
| நல்லெண்ணெய் | சேர் | வ |
| கருநொச்சிச்சாறு | ,, | வ |
| பசும்பால் | ,, | வ |
| எலுமிச்சம்பழச்சாறு | ,, | வ |

இவைகளைச்சேர்த்துக் காய்ச்சி வடித்து அதில் மாத்துவெள்ளை பலம்-க௨, கல்நார்பலம்-1, கற்பூரசிலாசத்து பலம் 1 இவைகளைச் சூரணித்துச்சேர்த்து மறுபடியும் பெரித்து ஜலத்தில் ஒரு துளிபோட அது முழுகிப்போகும்பதத்தில் இரக்கி ஒரு சட்டியில் ஜலத்தை வைத்துக்கொண்டு அதில் ஊற்றிக்கசக்கி ஜலத்தை நீக்கவும், இவ்விதமாய் 4,5-தடவை செய்து அத்துடன் எருமைவெண்ணெய் சேர்-௨, சேர்த்து ஜலத்தில்போட்டுக்கசக்கி ஜலத்தை நீக்கி மறுபடியும் புது ஜலத்தைச்சேர்த்துக் கசக்கவும், இவ்விதமாய் 24 தடவைக் கசக்கி எடுத்து தினம் 2-தடவை பாக்களவு கற்கண்டுப் பொடியில் சாப்பிட உஷ்ணம்வயிற்றிலுள்ளரணம் நீர் எரிவு நீர் அடைப்பு நீர்த்தாரைப்புண் முதலியவைகள் குணமாகும், இதை தினம் புதுஜலத்தில் போட்டு வைக்க வேண்டியது.

---

## பேரீச்சங்காய்கிருதம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| கிராம்பு | பலம் | ௨ | திப்பிலி | பலம் | ௨ |
| சீரகம் | ,, | ௨ | ஜாதிக்காய் | ,, | ௪ |
| மிளகு | ,, | ௨ | கசகசா | | ௪ |

இவைகளைச்சூரணித்து ஒருபலம் கொட்டை நீக்கின பேர்ச்செங்காயில் செலுத்தி அவைகளை ஒருசேர் பசும்நெய்யில் போட்டு தேன்சேர்-ஆழாக்கு விட்டுக்காய்ச்சி எடுத்து தினம் ஒருபேர்ச்செங்காய்வீதம் சாப்பிட்டுவர உஷ்ணவாயு பித்தவாயு அக்கினிமந்தம் அன்னத்துவேஷம் பாண்டு சோகை முதலியவைகள் குணமாகும். ரத்தத்தை விருத்திக்கும்.

---

## பொன்னுங்காணிகிருதம்.

| | | |
|---|---|---|
| பொன்னுங்காணிச்சாறு | படி | 2 |
| பொற்றலைக்கையாந்தகரைச்சாறு | ,, | 2 |
| எலுமிச்சம்பழச்சாறு | ,, | 2 |
| பசும்நெய் | ,, | 2 |
| பசும்பால் | ,, | 2 |

இவைகளைச்சேர்த்து அதில் அதிமதுரம் பலம்-4, பசும்பாலால் அரைத்துக்கரைத்து எரித்துவடித்து ஒரு சீசாவில் போட்டு அதில் சாதிக்காய் சாதிப்பத்திரி கோரோசனை கற்கண்டு வகைக்கு விராகனிடை-2, சூரணித்துப் போட்டு தினம் காலை மாலை 2-விராகனிடைவீதம் கொடுக்க மூலச்சூடு உஷ்ணரோகங்கள் கைகால்எரிவு தேகபெரிவு தேகம் வாய் நாற்றம் பிரமியங்கள் 20-ம், குணமாகும் கண்கள் குளிர்ச்சியாகும்.

---

## புளியாரைக்கிருதம்.

| | | |
|---|---|---|
| புளியாரைச்சாறு | படி | 2 |
| வள்ளிக்கிழங்குச்சாறு | ,, | 2 |
| பொன்னுங்காணிச்சாறு | ,, | 2 |
| செவ்விளநீர்ஜலம் | ,, | 4 |

| | | |
|---|---|---|
| ஆவின்நெய் | படி | 10 |
| ஆவின்பால் | ,, | 10 |

இவைகளைச் சேர்த்து அதில் சிரகம் மாசிக்காய் அதிமதுரம் வகைக்கு விராகனிடை-8, பசும்பாலால் அரைத்துக் கரைத்து பெரித்து வடித்து ஒரு சீசாவில் போட்டு அதில் ஏலம் ஜாதிக்காய் ஜாதிப்பத்திரி வகைக்கு விராகனிடை-4, கற்கண்டு பலம்-2, இவைகளைச் சூரணித்துப்போட்டு தினம் 2-தடவை 3-விராகனிடைவீதம் கொடுக்க பித்தவாயு, பித்த வெட்டை, பித்தயெரிவு, பித்தமயக்கம், நீர்ச்சுருக்கு, வாந்தி, அரோசகம் குணமாகும்.

கி ரு த வ கை ப ர ணி

மு ற் றி ற் று.



இவ்வளவு வெள்ளிய நடையாய் அச்சிட்டு பயிரங்கப் படுத்திய அனுபோக வயித்தியத்திற்கு சரக்கு சுத்திகள் சொல்லவில்லையென கவலைப்படவேண்டாம் இதற்கு முதற் பாகத்திலும் எட்டாம் பாகத்திலும், சுத்திகள் விவரமாக தெரிந்துக்கொள்ளவும்.

இனி ஏழாம்பாகத்தில்

அற்புதமுறைகள் சொல்லப்படும்.

உ

தேவிசகாயம்.

ஐந்தாவது

# பஸ்மவகைபாணி

## ரஜதபஸ்மம்.

அரிதாளம் பலம்-1, கல்வத்திலிட்டு எலுமிச்சம் பழச் சாற்றால் ஒரு சாமம் அரைத்து சுத்திசெய்த வெள்ளித்தகடு பலம்-3-க்கு கவசமிட்டு சீலைமண்செய்து 30-எருவில் புடம் போடவும் இவ்விதமாகவே 14-புடம்போட்டு எடுத்துப் பார்க்க மகா வெண்மையான பஸ்மமாயிருக்கும் இதை அனுபானத்திலிட மேகம் பிரமேகம் கிரச்சரம் மூத்திரரோகம் அஸ்திசுரம் முதலிய அநேக பயங்கரமான ரோகங்கள் குணமாகும்.

சுத்திசெய்த வெள்ளியைத் தகடுகட்டி ரசபஸ்மம் வங்க பஸ்மம் நாகபஸ்மம் இம்மூன்றையுங்கூட்டி உமிழ் நீர்விட்டு மைபோலரைத்து வெள்ளிக்குச் சமயிடைசேர்த்து ரவியில் உலர்த்தி சீலைமண்செய்து சுண்ணாம்புக்குள் வைத்து வாராகல் புடம்போட்டு எடுத்துப்பார்க்க பஸ்மமாயிருக்கும் அதில் ஒரு குன்றிமணியிடை தேனிலிட கல்லடைப்பு சதை படைப்பு கிரிச்சரம் காசம் இரைப்பு லிங்கப்புற்று போனிப் புற்று கிரந்தி மேகம் முதலிய பயங்கரமான ரோகங்களும் குணமாகும்.

## தாம்பிரபஸ்மம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அண்டத்தோல் | பலம் | 2 | வெங்காரம் | பலம் | 2 |
| வீரம் | ,, | 2 | நவக்ஷாரம் | ,, | 2 |
| பூரீர் | ,, | 2 | பூரம் | ,, | 2 |
| சீனகாரம் | ,, | 2 | வெடியுப்பு | ,, | 2 |

இவைகளை ஒருபடியெலுமிச்சம்பழச்சாற்றால் அரைத்து பில்லைத்தட்டி உலர்த்தி, பத்துபலம் நாகூர்செல்லியை குகையில்போட்டு உருக்கி அதின்முகத்தில் ஒவ்வொரு பில்லைக்கொடுத்து மறுபடியும் உருக்கி 2-படி எலுமிச்சம்பழச் சாறும் ½-படி முலைப்பாலும் சேர்த்து ஒவ்வொரு துளியாக விட்டு சுருக்குக்கொடுத்து தாளகம்பலம்-2, வெங்காரம் நவாக்ஷாரம் வகைக்குப் பலம்-5, இவைகள் மூன்றும் கல்வத்தில் இட்டு திருகக்கள்ளிப்பால் படி-2, பூநீர் பூரம் வெடியுப்பு சீனாகாரம் நவக்ஷாரம் வீரம் கல்லுப்பு வகைக்கு விராகனிடை-2, இவைகள் எட்டும் மூன்றுநாள் சேர்த்துவைத்து அதின்ஜலத்தால் 8-நாள் அரைத்து பில்லைத்தட்டி உலர்த்தி முதலில்கொடுத்தபடி ஒவ்வொருபில்லையாக உருக்கினமுகத்தில் கொடுக்க வெங்கலம் போலாகும் இந்த தாம்பிரம் ரசம் வீரம் கற்பூரம் வெள்ளுரம் வகைக்குப்பலம்-4, வெள்ளைப் பாஷாணம் பலம்-1, இவைகள் ஆறும் வெள்ளெருக்கம்பாலால் 8-ஜாமம் அரைத்து பில்லைத்தட்டி உலர்த்தி ஒருசிறு கலயத்தில் போட்டு ஒரு ஓட்டால் வாயைமூடி ஏழுசீலைமண் வலுவாய்ச்செய்து கஜபுடம்போட பஸ்மமாகும், அதில் ஒரு குன்றிமணியிடை தகுந்த அனுபானத்திலிட மேகம்-20, குஷ்டம்-18, பிரமேகம்-21, க்ஷயம்-4, சூலை-18, பவுத்திரம்-15, குன்மம்-8, வாதம்-30, பித்தம்-40, சிலேஷ்மம்-20, கபரோகங்கள்-96, முதலிய மகாபயங்கரமான ரோகங்கள் குணமாகும். பத்தியம் அன்னமும் பசும்பாலும் சாப்பிடவும்.

---

## வங்கபஸ்பம்.

மனோசிலையை வெற்றிலைச்சாற்றால் அரைத்து அதற்கு சமமாக சுத்திசெய்த ஈயத்தகடுகளுக்கு கவசமிட்டு ஓட்டிலிட்டு மேல்ஓட்டால்மூடி சீலைமண்செய்து கஜபுடம்போடவும் இவ்விதமாகவே 32-புடங்கள்போட்டு எடுத்துப்பார்க்க வெகுவெண்மையான பஸ்மமாயிருக்கும் இதை அனுபானத்திலிட மூர்ச்சை அபஸ்மாரம் கபரோகம் அதிசாரம் இரகணி பேதி முதலிய அநேக பலமான ரோகங்கள் குணமாகும்.

## கருவங்கபஸ்மம்.

சுத்திசெய்த 3-சேர் காரீயத்தை உருக்கி 8-சேர் சங்கயிலைச்சாற்றில் 21-தடவை வார்த்து பிறகு அதை ஒரு கம்பியாக்கி கத்தியால் சீவினபொடியை தாமரையிலைச்சாற்றால் 4-ஜாமம் அரைத்து கல்வத்தோடு ரவியில்வைத்து உலர்த்தி பிறகு அதை ஒருசட்டியில்போட்டு ஆகாசதாமரையிலையை கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுவறுக்க ஈயத்தைபொடியாக்கிவிடும், அந்தப் பொடியும் அதற்குச் சரியானயிடை கோழிக்குஞ்சுபொரித்த முட்டையின் உள்தோலை நீக்கி மேலோட்டைச்சேர்த்துச் சூரணித்து ஒருகுகையில்போட்டு ஒட்டால்வாயைமூடி 7-சீலைமண் வலுவாய்ச்செய்து உலர்த்தி உலையில்வைத்து துருத்தியால்-3-4 மூட்டம்போட்டு குகையை உருகுஞ்சமயத்தில் எடுத்து ஆற்றி குகையை உடைத்துப்பார்க்க பஸ்மமாயிருக்கும் அதில் ½-குன்றிமணியிடை நெய்யில் தினம் காலைமாலை 3-4-நாள் கொடுத்து பிறகு 10-நாள் பொறுத்து 3-4-நாள் கொடுக்க மூர்ச்சை-4, அபஸ்மாரம்-4, பயித்தியம்-6, முதலிய மகாகொடிய ரோகங்கள் குணமாகும்.

---

## ரசபஸ்மம்.

ஒருமண்பாண்டத்தில் ஒருபலம் கந்தகத்தைப்போட்டு காடாக்கினியாய்பெரித்து கந்தகம் உருகும்சமயத்தில் 7-பலம் ரசத்தைவிட்டு துளாவிக்கொண்டிருந்தால் ரசம்கந்தகத்துடன் கலந்து கறுத்துத்தூளாகிவிடும் பிறகு வேறொரு பாண்டத்தில் பாதிக்குச் செங்கல்பொடியைப் போட்டு அதின்மேல் 8-ஆழாக்கு கறி உப்பைக்கொட்டி அதின்மேல் ரசகந்தியை வைத்து வேறொரு பாண்டத்தால்மூடி பொருந்துவாய்க்குக் களிமண் தடவி ஏழுசீலைமண் வலுவாய்ச்செய்து காடாக்கினியாய் நாலுஜாமம் எரித்துக் குளிரவைத்து உடைத்துப்பார்த்தால் மேல்பாண்டத்தில் ரசபஸ்மம் பதங்கித்திருக்கும். அதை எடுத்து ½-பணவிடைவீதம் அனுபானத்திலிட சுரம்-64, மாந்தம்-8, காசம்-5, சன்னி-3, நேத்திரரோகம்-94, அதிசாரம்-6, மேகம்-21, முதலிய பற்பல கடூரரோகங்கள் குணமாகும்.

## வேறு ரசபஸ்மம்.

காட்டுக்கள்ளியும் கெந்தகமும் ஓர்நிறையாய் அரைத்து பில்லைதட்டி கலசத்திலிட்டுத் தயிலமிறக்கி வாலைரசத்தில் விட்டு ரவியில்வைக்க நீறும் அதை அந்தத் தயிலத்தாலாட்டி பில்லைசெய்துகொண்டு நன்றாய்வெந்த செங்கல்லைப் பாக்கு போலுடைத்து ஒரு குண்டுசட்டியில் அரைவாசி போட்டு அதின்மேலொருபடி உப்புக்கொட்டி பரப்பி அதில் மேற் படி பில்லையை வைத்துமூடி ஏழுசீலைமண்செய்து அடுப்பேற் றிக் காடாக்கினியாய் மூன்று ஜாமம் எரித்து ஆற்றிஎடுக் கப் பதங்கித்திருக்கும் அதையெடுத்து பணவிடை பனை வெல்லம் முதலான அநுபானங்களில் 7-நாட்கொள்ள குஷ் டம் குரைநோய் பவுத்திரம் கழலை காமாலைவிப்புருதி விக் கம்வெள்ளைபடருதல் சூலை அரையாப்பு யோனிப்புற்று மூல முளை கண்டமாலை கிரந்தித்தடிப்பு வெள்ளை கருங்கரப்பன் வண்டுகடி மேகம் வாயுகுன்மம் தீரும் வாய்வேகாது.

ஒருபலஞ் சூதகத்தை முந்திரிக்கொட்டைத் தயிலத்தா லும் விடந்தீஞ்சான் மூலிச்சாற்றாலும் வால்தேவிக் கிழங்குச் சாற்றாலும் வெள்ளெருக்கம் பாலாலும் வகைக்கொரு ஜாம மாட்டி பில்லைசெய்து முன்போலெரித்து பதங்கித்து பண விடை வெல்லம் முதலான அநுபானங்களிலிட மேற்காட் டிய்வியாதிகள் தீரும் வாய்வேகாது.

பன்னிரண்டு விராகனிடை சுத்திசெய்த கெந்தகத்தை யும் 80-விராகனிடை இரசத்தையும் இரசசெந்தூரத்திற் சொல்லியபடி. ஒன்றாய்த்தொந்திப்பொடித்து முன்போற் பதங்கித்துக் கொண்டு நாலுவிராகனிடை ஒமத்தைப்பொ ரித்து அதற்கு நிகர் கருப்புக்கட்டியும் 8-விராகன் ஷைபற்ப மும் இதனடியிற் சொல்லியிருக்கிற கெந்தகபற்பமுஞ்சேர்த் து மெழுகுபோலாட்டி 16-மாத்திரைசெய்து 8-நாள் அந்தி சந்திகொள்ள மேற்சொல்லிய வியாதிகள்தீரும்.

---

## கெந்தக பஸ்மம்.

பூநீரும்வெடியுப்பும் ஓர்நிறையாய்ச் சுத்தஜெலம்விட்டு அரைத்து பில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டு அதற்குக் கீழும்மேலும் இரண்டுவிரற்கடை உவர்மண்போட்டு இரண்டு

ஜாமமெரிக்கச் சுண்ணமாகும் அதற்குப்பாதி சாரஞ்சேர்த்து மெல்லியசீலைபால்முடிந்து ஒருபீங்கானில் தொங்கவிட்டு மூடி பூமியிற்புதைத்து ஒருமண்டலஞ் சென்றெடுக்கச் செயநீரிறங்கும் அதைச் சீசாவில் அடைத்துக்கொண்டு கெந்தகமுஞ்சினமும் ஓர்நிறைபாய்க் கல்வத்திலிட்டு மேற்படிசெயநீரால் அரைத்து பில்லிசெய்து காயவைத்து சிறுசின்னியிலைபரைத்து குகைசெய்து அதில் பில்லை வைத்து மூடிக் காயவைத்து அதற்குமேல் ஏழுசீலைமண்செய்து காயவைத்து அஞ்செருவிற் புடம்போட நீறும் இந்தப்படி தாளகத்தையும் நீற்றி மேற்படி பஸ்மமும் ரசபஸ்மமும் வகைக்குப் பணவிடை தேனிலாவது மற்ற அனுபானத்திலாவது கொள்ள ரசபஸ்மத்திற் சொல்லிய வியாதிகள் தீரும்.

கெந்தகமும் சீனிக்காரமும் ஓர்நிறைபாய்ப் பொடித்துக் கவசத்தில்இட்டு சிறுசின்னிச்சாறுவிட்டுப் பிசறி ரவியிலுலர்த்தி மேலோடுமூடி மூன்றெருவிற் புடம்போட நீறும் அனுபானங்களிலிட ஷை வியாதிகள் தீரும்.

சுத்திசெய்த கந்தகத்திடை காளாணைச்சேர்த்தரைத்து பில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டுச் சீலைசெய்து காடைப்புடம்போட நீறும்.

---

## வீ ர ப ஸ் ம ம்.

ஒருபடி பூநீரை நாலுபடிஅமுரியிற் கரைத்துத் தெளிவிறுத்து ஒரு பாண்டத்தில்விட்டு அதில்வாயிற் சீலைபால் ஏடுகட்டி அதின்மேல் அஞ்சுவிராகனிடை வீரக்கட்டியை வைத்துமூடி நீர்வற்றும்வரை தீயெரிக்கப்பஸ்மமாகும்அதை கிரந்திநாயகச்சாற்றால் 12-ஜாமமெரித்து பில்லைசெய்து காயவைத்து ஷை யிலையை அரைத்துக் குகைசெய்து அதற்குள் மேற்படி பில்லையை வைத்துமூடி ஒருசட்டியில் நாலுவிரற்கடை மணற்போட்டு அதின்மேல்வைத்து நாலுநாழிகையெரிக்கச் சிவந்த நிறமான பஸ்மமாயிருக்கும் அதிற் பணவிடை திரிகடிச்சூரணத்தில் வைத்து தேன்விட்டு மத்தித்து மூன்றுவேளை கொடுக்கச் சன்னிதோஷம் கபக்கட்டு வாயு வாதந்தீரும்.

## தாளகபஸ்மம்.

ஒருபலத்தாளகத்தை பெரும்பூசினிக்காயைபிடித்துப் பிழிந்தசாற்றில் இரண்டுஜாமம் வேகவைத்தெடுத்துச் சுண்ணாம்புக்கல்லுக்குள்வைத்து நூறுதபா நீற்றியெடுத்து நல்லெண்ணெயி லிரண்டுஜாமமெரித்து சாரம்பூநீர் சவுட்டுப்பு சுண்ணாம்பு கல்லுப்பு சூடன் சீனம் வெடியுப்பு இந்துப்பு வகைக்குப்படி-1, நாலுபடி சிறுநீரிற்கரைத்துத் தெளிவிறுத்து கட்டிக்குச் சுருக்குக்கொடுக்க சுத்தியாகும் மூக்கரைச்சாரணை சமூலம் ஒருதேங்காய்ப் பிரமாணமரைத்து அதற்கு நடுவில் கட்டியைப்பொதித்து சட்டிக்குள் வைத்து மேற்சட்டிமூடி சீலைசெய்து தீபம்போல் நாலுஜாமம் யெரிக்கப் பஸ்மமாகும் அதில்பணவிடைதேனிற்கொடுக்க க்ஷயம் கபாலசூலை பெரும்பூசினிக்காய்ச்சாற்றிம் மேகமும் மற்ற அனுபானங்களில் கிரந்தி சூலையும் சுரம் குஷ்டமுந்தீரும்.

சுத்திசெய்த ஒருபலத்தாளகத்தை வாழைக்கிழங்குக்குள் வைத்துமூடி ஏழு சீலைமண்செய்து காயவைத்து அன்பதெருவிற்புடம்போட நீறும் அனுபானத்திலிட சிலேத்மநோய் 96-ம் சுரம் அரையாப்பு கிரந்திசூலை குட்டமுந்தீரும்.

சுத்திசெய்த ஒருபலத்தாளகத்திற்கு சுருள்ளிச்சாறு சிவகரந்தைச்சாறு வகைக்குப்படி-1, சுருக்குக் கொடுத்து சிற்றண்டம் பேரண்டம் பூநீர் இவைகளின் சுண்ணத்தை ஓர் நிறையாய் எருக்கம்பாலாலாட்டி கட்டிக்குக்கவசஞ்செய்து காயவைத்து புரசம்பட்டை. புளியம்பரணை நாயுருவி இவைகளின் சாம்பல் வகைக்குப்படி-2, ஒரு சட்டியிற்போட்டு அதற்கு நடுவில்வைத்து மேற்சட்டிமூடிச் சீலைமண்செய்து நாலுஜாமம் கமலாக்கினியாய் தென்னமட்டையாலெரிக்கப் பஸ்மமாகும் அதில் பணவிடையும் ரசபஸ்மம் பணவிடையுஞ்சேர்த்து அனுபானத்திலிட ஷை வியாதிகள் தீரும்.

---

## துருசுபஸ்மம்.

துருசுக்கட்டியைக்கவுதும்பைச் சாற்றில் ஆறுஜாமம் ஊறவைத்து ரவியிலுலர்த்தி அப்பாலந்தச்சாற்றால் ஒருஜாமமாட்டி பில்லைசெய்து காயவைத்து ஷை இலையை யரைத்து

அதற்கு அக்கிபூட்டி எழுசிலைசெய்து கதுவாலிப்புடம் போட்டு கருஊமத்தஞ்சாற்றாலாட்டி பில்லைசெய்து காய வைத்து ஷை யில்லையை யரைத்து அக்கிபூட்டி எழுசிலைசெய்து முன்போற் புடம்போட நீறும் அதையனுபானத்திலிட சுரம்கெண்டை ஜன்னிதோஷம் கட்டி அஷ்டகுன்மம் பக்க வாயு ஈளை இளைப்பு காசம் வயிற்றுப்பொருமல் பெருவயிறு வீக்கம் காமாலை பித்தம் சோகைபாண்டு விஷநீர்க்கோர் வைதீரும் ஷை பஸ்மத்தை சாறுவராத்தைகளிலிடச் சாறு வரும்.

---

## தாம்பிரபஸ்மம்.

தாம்பிரசெந்தூரத்திற் சொல்லியபடி சுத்திசெய்த தாம்பிரம் வீரம் இரசம் சூடன் வெள்ளுரம் வகைக்குப் பலம்-1, பாஷாணம் பலம்-½, இவைகளை வெள்ளெருக்கம்பால்விட்டு ஒருநாளாட்டி பில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டுச் சீலை செய்து கெஜபுடம்போட பஸ்மமாகும் அதிற் பணவிடை அனுபானங்களிலிட பிரமேகம் மேகம் க்ஷயம் பவுத்திரம் சூலை-18, குன்மம் வாயுவகை பித்தமுதலான வியாதிகள் தீரும் பத்தியம் ஆவின்பாலும் அன்னமும் கொள்ளவும்.

சுத்திசெய்த தாம்பிரம் விராகனிடை-12, சூதம்கெந்தி தாளகம் வகைக்கு விராகனிடை-8, இவைகளை வெள்ளெருக்கம்பாலாலாட்டி பில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டுச் சீலைசெய்து கெஜபுடம் போட்டு அப்பால் சத்திச்சாரணைச் சாற்றால் ஒருநாளாட்டி முன்போற் புடம்போட பஸ்மமாகும் அதில் பணவிடை தேளிற்கொள்ள குன்மம் வாயு கவுசி கெண்டை சூலை மூலந்தீரும்.

---

## வெள்ளிபஸ்மசெந்தூரம்.

சரிகைவெள்ளியை லேசாய்த்தட்டி பழுக்கக்காய்ச்சிப் பளுபாகற்கிழங்குச் சாற்றில் எழுதபாதோய்த்துக் குகை யில் வைத்து உருக்கிக் கண்விட்டாடும்போது மகிழம்பூச் சாற்றை சிறுகச்சிறுகவிட்டு ஊதப் பொடியாய்ப்போகும் அதை மேற்படி சாற்றாலாட்டி பில்லைதட்டிக் காயவைத்து

முக்காவேளைவேரை ஷை சாற்றாலாட்டிக் குகைசெய்து வைத்துமூடி ஏழுசீலைமண்செய்து நூறெருவிற் புடம்போட நீறும் அதில் பணவிடை திப்பிலி லேகியத்தில் கொள்ள சிலேத்துமம் 96-ம். சூலையும் தீரும் ஷை வெள்ளிப்பொடிக் குச் சமம் லிங்கம் சேர்த்து எருக்கம்பாலாலும் அரசம் பட்டை தாமரைக்கிழங்கு எலுமிச்சம்பழம் இவைகளின் சாற்றிலும் தனித்தனியே அரைத்து வகைக்கொருபுடம் முப்பது பெருவில்போடச் செந்தூரமாகும் இதை ஷை வியாதிகட்கு உபயோகப்படுத்திக்கொள்ளவும்.

---

## பவளபஸ்மம்.

முயலெலும்பைச் சுட்டசாம்பல் பலம்-1, குமரிச்சாற் றாலாட்டி குகையும் மூடியுஞ்சேர்த்து பவளம் பலம்-1, கிராம்பு சடமாஞ்சில் வீரம் வகைக்குக் கழஞ்சு-½, இவை களை ஷை இரத்தத்தாலாட்டிக் காயவைத்து ஷை குகைக் குள் வைத்து ஏழுசீலைசெய்து ஐம்பதெருவில் புடம்போட நீறும் ஷை பற்பத்தைச் சீந்தில் சர்க்கரையில் கொள்ள சகல மேகமுந்தீரும்.

எலுமிச்சம்பழச்சாற்றில் பவளத்தை ஒருநாள் ஊற வைத்துக் கழுவிப்போட்டு எருக்கம்பாலால் மூன்றுநாள் அரைத்து பில்லைசெய்து காயவைத்து முன்போல் புடம் போட தீரும்.

கிழ்க்காய் நெல்லியிலையை அரைத்துக் குகைசெய்து அதற்குள் பவளத்தைவைத்து ஏழு சீலைசெய்து முன்போல் புடம்போட பஸ்மமாகும் அதை பனுபானங்களிலிட சுரம் குளிர் ஜன்னி வயிற்றிரைச்சல் பித்தம் கண்புகைச்சல் விக் கல் வயிற்றுளைச்சல் ஈளை இருமல்தீரும்

ஒருபசும் பவளத்தை ஒருநாள் தண்ணீரி லூரவைத் துக் கழுவிப்போட்டுதேட்கொடுக்கிலையை பரைத்துக்குகை பிடித்து அதற்குள் மேல்படி பவளத்தைவைத்து மூடி ஏழு சீலைசெய்து காயவைத்து முன்போல் புடம்போட்டெடுத்து பிங்கானிலிட்டு அதில் ஆவின்பால்விட்டு ரவியிற்காயவைத் து அப்பாலதை ஆலம்பழுப்பிற்கட்டி நெற்குழியில் மூன்று நாட் புதைத்தெடுத்து அனுபானங்களிலிட க்ஷயம் ஈளை மங்

நாரசாசம் சிரங்கு சொறிமுதலான மேற்காட்டிய ரோகங்களெல்லாம் தீரும்.

ஒருபலம் பவளத்தை எலுமிச்சம்பழச்சாற்றிலிட்டு ஒருநாள் ரவியில்வைத்துக் கழுவிப்போட்டு இலந்தையிலையையாவது தைவேளையிலையையாவது அரைத்துக் குகைசெய்து அதற்குள் வைத்துமூடி ஏழுசீலைசெய்து காயவைத்து முன்போற் புடமிட்டெடுத்து ஒருபிங்கானில் இட்டு ஆவின்பால்விட்டு ரவியிற்காயவைத்து தேன் ஆவிநெய்யிற் கொள்ள மேகச்சூடு காங்கை க்ஷயம் ஈளை இருமல் நீர்க்கடுப்பு நீங்கும்.

---

## நாகபஸ்மம்.

இலுப்பைநெய்யில் இருபதுதபா உருக்கிச் சாய்த்துச் சுத்திசெய்த ½-பலம் நாகத்தைக் குகையிலிருக்கிக் கண்விட்டாடும்போது சிற்றாமணக்கிலையைக் கசக்கி 5-6-சொட்டுப் பிழியச்சத்தமிடும் மறுபடியும் 5-6-சொட்டுப்பிழிய சத்தமடங்கும் துருத்திப்பை விசையாய்ஊதி மறுபடியும் 5-6-சொட்டுப்பிழிந்து ஷை வேறாற்கிண்ட மல்லிகைப்பூப்போல் நீறும் அதைஅனுபானங்களிலிட வெள்ளை வெட்டை சிலேத்மம் குன்மம் மூலம் நீங்கும் தாதுவிர்த்தியுண்டாகும்.

சுத்திசெய்த நாகத்திடைக்குப் பாதி இருதஞ்சேர்த்துருக்கி வேலிப்பருத்திச்சாற்றால் அரைத்து பில்லைதட்டிக் காயவைத்து அதற்குமேல் துத்தியிலையை பரைத்துக் கவசஞ்செய்து 7-சீலைமண்செய்து முழப்புடம்போட நீறும் இப்படி 3-புடம்போட்டு வெண்ணெயில் பத்தியமாகக் கொள்ள மேல்படி வியாதிகள் தீரும்.

---

## கெருடபஸ்மம்.

கற்றாழஞ் சோற்றில் கடுக்காயைப் பொடித்துப்போட்டுப்பிசைந்து வைக்கத் தண்ணீராகும் அதில்கெருடக்கல்லைப் போட்டுக் கொதிக்கவைத்துக் கழுவிஓட்டிலிட்டு அதற்குக் கீழுமேலும் ஆனைபறகங் கிழங்கை யிடித்த தூளைப்போட்டு

மூடிச் சீலைசெய்து கெஜபுடம்போட நீறும் வெண்ணெயிற் கொள்ள கடுப்பு எலும்புருக்கி அஸ்திசுரம் அஸ்திவெட்டை மேகவெட்டைதீரும், தேகங்குளிரும் விந்திறுகும்.

---

## வெள்வங்கபஸ்மம்.

புளியமடற்கிழங்கை அரைத்து எருமைத்தயிரிற் கலக்கிவங்கத்தை 10-தபா உருக்கிச் சாய்த்துச் சுத்திசெய் தது விராகனிடை-3, வாலைரசம் விராகனிடை-3, இவைகளை யொன்ருய்த் தொந்தித்து கற்பூரசிலாசத்து விராகனிடை3, கூட்டிச் சுண்ணநீராலிரண்டு சாமமாட்டி பில்லைதட்டிக்காய வைத்து ஒட்டிலிட்டுச் சீலைசெய்து 30-எருவிற்புடம்போட்டு மறுபடியும் ஷை நீராலாட்டி 3-4-புடம்போட நீறும் மாதுளம்பூ விதழை நிழலில் உலர்த்தி அதினிடை சீரகஞ் சேர்த்துச் சூரணித்துத் திரிகடிப்பிரமாணத்தில் பணவிடைபஸ் மம்வைத்து நாளொன்றுக் கிருநேரமாக மண்டலங்கொள்ள நவமூலம் மெய்நோய்மேகம் பெலும்புருக்கி தீரும் நாடி வலுத்துத் தாதுண்டாகும் கரப்பன்பதார்த்தம் நீக்கவும்.

சுத்திசெய்த வெள்வங்கத்திற்குப்பாதி ரசஞ்சேர்த்துருக்கி கஞ்சாவிலைச்சாற்றுலாட்டி பில்லைசெய்து காயவைத்து அதற்கு ஷை இலையையலரைத்து கவசஞ்செய்து ஒட்டிலிட்டு மூடி முன்போற் புடம்போட பஸ்மமாகும் அதை யனுபானங்களிலிட ஷை வியாதிகள் தீரும்.

---

## கருவங்கபஸ்மம்.

கருவங்கத்தைப் பிரண்டைச்சாற்றில் 10-தபா உருக்கிச்சாய்த்துச் சுத்திசெய்தது பலம்-1, சட்டியிலிட்டுஉருக்கி ஆடுதீண்டாப் பாளைவேரால் பஸ்மமாகும்வரை கிண்டி நிறுத்து அதற்குப் பாதிரசஞ்சேர்த்து மூக்கரைச் சாரணைச் சாற்றுல்-4 ஜாமமரைத்து 2-புடம்போடநீறும் அனுபானங் களிலிட மேகவியாதிகள் தீரும்.

கருவங்கத்திற்குப் பாதிரசஞ்சேர்த்துருக்கி ஆலம்பாலால் மெழுகுபோலரைத்து பில்லைதட்டிக் காயவைத்து

மறுதம்பட்டையும் உப்புஞ்சேர்த்து இடித்து பில்லைக்குக் கீழும் மேலும் போட்டுமூடிச் சீலைமண்செய்து 30-எருவில் புடம்போட்டு மூக்கரைச்சாரணைச் சாற்றாலரைத்து 3-புடம் போடத் தவளம்போலநீறும் அனுபானங்களிலிட மேக முதலான வியாதிகள் தீரும்.

---

## கற்பூரசலாசத்துப்பஸ்மம்.

கர்ப்பூரசலாசத்தை ஆவின்பாலிற்போட்டுக் காய்ச்சிக் கழுவிச் சுத்திசெய்து சிறுசெருப்படைச்சாற்றால் 4-ஜாம மாட்டிலேசாய் பில்லைதட்டிக் காயவைத்து ஓட்டிலிட்டுச் சீலைசெய்து 50-எருவிற் புடம்போடவும் இந்தப்படி ஷை சாற்றாலாட்டி 3 - புடம்போட்டு ஆவின் வெண்ணெயிற் கொள்ள மேலெரிவு பித்தவெட்டை நீர்க்கடுப்புநீங்கும், மேற்படி பற்பத்திடை சுத்திசெய்த வெங்காரஞ்சேர்த்து சிறுநீராலாட்டி பில்லைசெய்து காயவைத்து ஓட்டிலிட்டுச் சீலைசெய்து 1-எருவிற் புடம்போட்டு வெண்ணெயிற்கொடுக்க நீர்க்கட்டு நீர்க்கடுப்புத்தீரும்.

வெள்ளரிவிரை விராற்றலைக்கல் ஷை பற்பம் இவைகளை யரைத்து ½-படி வெள்ளரிக்காய்ச் சாற்றிலொருவேளையும் முள்ளங்கியையிடித்த பிழிந்தசாற்றி லொருவேளையும் கொடுக்க கல்லடைப்புத்தீரும்.

---

## சொர்னபஸ்மம்.

தங்கரேக்கை முள்ளிக்கீரைச் சாற்றில்3-நாளூறவைத்து ரவியிற்காயவைத்துக் கல்வத்திலிட்டு சித்திரைப்பாலடைச் சாற்றில் மைப்போல் அரைத்து பில்லைதட்டிக் காயவைத்து அதற்கு கடம்பிலையை யரைத்துக் கவசஞ்செய்து அகலில் வைத்துமூடி 7-சீலைமண்செய்து 100-எருவிற் புடம்போடப் பஸ்பமாகும், சவுரிரியிலைச்சாறுபடி 8, சிறுகச் சிறுக ஒரு சட்டியில் இட்டுக்காயவைத்துத் திரட்டிநிறுத்து அந்தவிடை ஆடாதோடைஇலையும், 1-பலம் புனுகும், 2-கழஞ்சு ஷை பஸ்மமும் சேர்த்து மெழுகுபோல் அரைத்து நெல்லிக்காய்

போல் உருட்டி எள்ளெண்ணெயிற்போட்டு அந்தி சந்தி ஒவ்வொரு உருண்டைவீதம் 6-மாதஞ் சாப்பிட்டு மேற்படி எண்ணெயை வாரத்துக்கிரண்டுமுறை ஸ்நானஞ்செய்து சையோகமும் கரப்பன்பதார்த்தமுந் தள்ளிவைக்க வெண்குஷ்டமுதலான சகலகுஷ்டமுந்தீரும், கிராம்பை மயனமாய்ப்பொடித்து ஆவின் வெண்ணெயில் மத்தித்து அதில் பணவிடைதங்கபஸ்மம் வைத்துச் சாப்பிட்டு பாலும்அன்னமும்பொசித்துவர விந்தூறும் தாதுகட்டும் தேகம்பலக்கும்

## முத்துபஸ்மம்.

முத்தைச் சங்கம்பழச்சாற்றில் 2-நாள் ஊறவைத்து முள்ளிப்பழச்சாற்றால் மெழுகுபோல் அரைத்து பில்லை செய்து காயவைத்து ஒட்டிலிட்டுச் சீலைசெய்து 30-எருவிற் புடம்போட்டு தங்கபஸ்மத்துடன் சேர்த்துச்சாப்பிட தாது கட்டும் மேகவியாதிகள் தீரும்.

## அயபஸ்மசெந்தூரம்.

4-பலம் சுத்திசெய்த அயத்தில் மாஞ்செவிக்கள்ளிப் பால்விட்டு ரவியில்வைக்க நீரும் அதை ஒதிபம்பட்டைச் சாற்றால் 4-ஜாமமாட்டி 10-புடம்போட செந்தூரமாகும் அனுபானத்திலிட தேகம் இறுகும் விந்தூறும் தாதுகட்டும்.

## சிங்கிபஸ்மம்.

மான்கொம்பை நாளாய்ப்பிளந்து சிறுதுண்டுகளாய் நறுக்கி ஒருநாள் குப்பைமேனிச்சாற்றால் ஊறவைத்து ஷெயில்லையரைத்துக் கவசஞ்செய்து காயவைத்து ஒட்டிற் பரப்பிமேலோடுமூடிச் சந்துவாய் சீலைமண்செய்து 50-எருவிற் புடம்போட்டெடுத்து ஆவின்பால் விட்டரைத்து பில்லை தட்டிக் காயவைத்து முன்போற்புடம்போட பஸ்மமாகும், அனுபானங்களில் ஷெ பஸ்மத்துடன் பவளபஸ்மஞ் சேர்த்துக்கொடுக்க நீரடைப்பு, கல்லடைப்பு, சதையடைப்பு, நீரெரிவு, க்ஷயம், ஈளை, இருமல், உஷ்ணம், மேககாங்கை தீரும்.

மான்கொம்பை இழைத்து கோவைச்சாற்றில் ஒருநா ளூறவைத்து மறுநாள் நன்றாய்க் காயவைத்து ஒட்டிலிட்டுச் சீலைசெய்து முன்போற் புடம்போட நீறும் அதைஅனு பானங்களிலிட மேற்காட்டிய வியாதிகள் தீரும்.

## கல்நார்பஸ்மம்.

கல்நாரைச் சிறுதுண்டாய்ப்பிளந்து ஒட்டிலிட்டு அதற் குக்கீழுமேலும் கோங்கிலவம்பட்டையை இடித்துப்போட் டப்பால் ஷை பட்டைக்கஷாயம்விட்டரைத்து 3-புடம்போ டத்தவளம்போல் நீறும் தேனிலாவது தூதுளை லேகியத்தி லாவது கொள்ள சிலேத்மரோய் 96-ம் நீங்கும் மேககாங் கைதீரும், ஷை பற்பத்தைப் பல்விலக்கத் தந்தம் இறுகும்.

கல்நாரைச் சிறுதுண்டுகளாய் வெட்டி ஒட்டில்வைத்து அதற்குக் கீழுமேலும் எருக்கம்வேரை யிடித்த தூளைபோ ட்டு மூடி கெஜபுடம்போட்டு ஷை பாலிலரைத்து 4-புடம் போட்டு அநுபானத்திலிட ஷை வியாதிகள் தீரும், தந்தம் இறுகும்.

## பஞ்சலவணபஸ்மம்.

பஞ்சலவணம் வகைக்குப்பலம்-வ, கல்வத்தில்இட்டு பிரண்டை முருங்கைப்பட்டை குப்பைமேனி நொச்சி குமரி இவைகளின்சாற்றால் வகைக்கு ஒருஜாமமரைத்து பில்லைதட் டிக்காயவைத்து ஒட்டி லிட்டுச் சீலைசெய்து 10-எருவிற் புடம் போடப் பஸ்மமாகும், அதற்கு நாலிலொன்று பெருங்கா யஞ்சேர்த்து தேன்விட்டு மெழுகுபோல் அரைத்துச் சிமி ளில் வைத்துக்கொண்டு வேளை யொன்றுக்கொரு கழஞ்சி விதம் வியாதியின் பலத்துக்குத் தகுந்தபடி கால்மண்டலம் அல்லது ½மண்டலங்கொள்ள வாதம், வாயு, குற்றல், குடை தல், வலிகடுப்பு, குன்மம், அண்டவாரி, கிரகணி, பவுத்திரம் ருத்திரவாயு, குடற்புரட்டல், வயிற்றுப்பொருமல், செரி யாமை, மந்தம், மகோதரம் நீங்கும்.

## பஸ்மவகைபரணி.

முற்றிற்று.



உ

தேவிசகாயம்.

---

# ஆரூவது

# கண்டாவிழ்தபரணி.

## வியாதிகட்கு மூலிகைப்பிரயோகம்.

கொடிவேலிவேர்ப்பட்டையை அரைத்து ஒரு கொட்டைப்பாக்களவு அரைக்காற்படி ஆவின்பாலிலாவது வெள்ளாட்டுப்பாலிலாவது வியாதியின் வலிமைக்குத் தக்கதாய் ஒருமண்டலம் அரைமண்டலங்கொள்ள சுரம் வெட்டை அரையாப்பு வாயு சூலைக்கட்டு சூலைபிடிப்பு வெடிசூலை மேனியிற்கரடு முரடாய்க் கட்டுஞ்சூலை உள்மூலம் கருப்பத்தை அழிக்குங்கிரந்தி யோனியைத்தின்னுங்கிரந்தி செங்கிரந்தி கருங்கிரந்தி அரிகிரந்தி கருவாப்பு வாயுதீரும் மேனி பொன்போலாகும், புளிதள்ளவும் பாலும் அன்னமுமாய்ப் பத்தியங்கொள்ளவும்.

ஒருபடி ஆவின்பாலில் ஒருபலக்கொடி வேலிவேரை நைபத்தட்டிப்போட்டு பாலைச்சிவக்கக்காய்ச்சி புரைகுத்தி வைத்திருந்து மறுநாட்கடைந்து வெண்ணெய்எடுத்து அந்த வெண்ணெயையும் மோரையும் அன்னத்துடன் புசித்து அந்தமோரைத்தானே தாகத்துக்குக் குடிக்கவும் மூலமுளை வேரோடே அழுகி விழுந்துவிடும் இந்தப்படி மூன்றுமுறை செய்யவும் நோயாளினுடையதேகஸ்திதிக்குத் தக்கபடிஷை வேரின் அளவைக் குறைத்துக்கொள்ளலாம். ஷை வேரை வெள்ளாட்டின் பாலிற்கொள்ள சிலவிஷங் விஷத்தாலுண்டாகும் வியாதிகள் தீரும்.

---

சஞ்சீவிமூலியென்ற நீலிவேர்ப்பட்டையை அரைத்துக் கொட்டைப்பாக்களவு ஆவின்பாலிலாவது வெள்ளாட்டுப் பாலிலாவதுகொள்ள விஷசெந்துக்களின் கடிவிஷமும், நஞ்சுப்பொருள் விஷமும், கரப்பன் வகைகளும் தீரும். நரை திரைமாறும்.

ஷை வேருடன் மிளகு சித்தரத்தைசேர்த்துக் கஷாயஞ் செய்து 3-நாள்கொள்ள பெண்ணைசிச்கலாலுண்டாகும் நீர்த் தோஷம் சுரம் வெப்பு நெஞ்சிச்சளி நீங்கும் புளிதள்ளவும்.

ஷை இலையைஅரைத்து கொட்டைப்பாக்களவு அரைக் காற்படி வெள்ளாட்டுப்பாலில் 3-நாட்கொள்ள மஞ்சட் காமாலை தீரும் புளிதள்ளவும்.

ஷை இலையை அரைத்து சிரங்கிற்பூசி வைத்திருந்து மாலையில் ஸ்நானஞ் செய்துவரத்தீரும்.

---

மகாமூலி என்ற ஆகாசக்கருடன் கிழங்கை அரைத்து கொட்டைப்பாக்களவு ஆவின்பாலிற்கொள்ள நரை திரை மாறும்மேனி பொன்போலஒளியுண்டாகும் காலன் ஓடி ஒளிப்பன் சருவநோய்களும் நீங்காதவிஷகடி நோய்களும் விஷமும் நீங்கும் புளிதள்ளி பாலும் அன்னமுமாய் ஆகாரங் கொள்ளவும்.

---

அப்பைக்கிழங்கை கொட்டைப்பாக்களவாய் ஆவின் பாலிற்கொள்ள மூலைக்குத்துகடிவிஷம் கரப்பன்வியாதிகள் தீரும், புளி கரப்பன் பதார்த்தம்தள்ளவும்.

---

வராகிமூலமென்ற நிலப்பனங்கிழங்கை ஆவின் பாலிற் கொள்ள விந்துகட்டும் தாதுண்டாகும் ஆண்மை மீறும். தேகம் இறுகும் தேகம்பொன்போற் பிரகாசிக்கும் சகல வியாதியுந்தீரும் சித்தர் தரிசினமுண்டாகும்.

ஷை கிழங்கை மேனிச்சாற்றால் அரைத்து நல்லெண் ணெயிற் காய்ச்சி பல்வலிக்கும் பாகத்திற்றடவ பல்வலிநீங் கும் அதிலிருக்கும் புழுக்கள் சாகும்.

ஷை கிழங்கும் பூமிசக்கரைகிழங்கும் பூனைக்காலிவித் தும் சமன்தூக்கி ஆவின் பாலிற்கொள்ள கோசம்பூரித்து விம்மும்.

---

பங்கம்பாளை என்ற ஆடுதீண்டா மூலிவேரை யரைத் துக்கொட்டைப்பாக்களவு வெள்ளாட்டுப்பாலிற் கலக்கிக்

கொள்ள சகலவிஷங்களும் புண்பிளவை சிரங்குவங்கு பல கரப்புன் குஷ்டம் தீரும் சித்தர் தரிசனமுண்டாம்.

ஷை மூலிகை சமூலத்தையும் கருங்குருவை நெல்லுடன் அவித்து அவல் இடித்து வேளை ஒன்றுக்கு அரைக்காற்படி அவல்வீதம் ஒருமண்டலங்கொள்ள சிரங்குசொறி குஷ்டம் தழுதணை வங்குவண்டுகடி அரணைகடி செய்யான்கடி பூரான் கடி விஷங்களும் பதகிரி வெள்ளைப்புள்ளிக் கரப்பன் தீரும் பாலும் மிளகுந் தேய்த்து ஸ்நானஞ்செய்துவரவும் 3-மாதம் நல்லெண்ணெய் புணர்ச்சியை நீக்கவும்.

ஷைமூலிகைசமூலம் இடித்துப்பிழிந்தசாறு வெள்ளாட்டுப்பால் வெள்ளாட்டுநெய் வகைக்குப்படி-1, ஒன்றாய்க் கலந்துஅதில் வ-பலம்மிளகை அரைத்துப் போட்டுக்காய்ச் சிதேய்த்து ஸ்நானஞ் செய்துவரவும் ஷை வியாதிகள் தீரும் வேப்பம்வித்து எண்ணெயில் ஷைமூலிகைசமூலம் அரைத் துப்போட்டுக் காய்ச்சித்தேய்த்து ஸ்நானஞ் செய்துவர ஷைவியாதிகள் தீரும்.

---

தாமரைக்கிழங்கை ஆவின்பாலிற் கொள்ள மேகம் வெட்டை கிரிச்சிரம் தீரும் தேககாந்தியும் கண் ஒளிவும் குளிர்ச்சியுண்டாம்.

ஷை மணிப்பருப்பை பொடித்து முலைப்பாலிற் கலந் துக்கொடுக்க விக்கல் நாவரக்ஷி தீரும்.

ஷை கிழங்கை ஆவின்பால் விட்டரைத்து நல்லெண் ணெயிற் போட்டுக் காய்ச்சித் தேய்த்து ஸ்நானஞ்செய்து வர கண்ணுக்குக் குளிர்ச்சியும் ஒளிவுமுண்டாம்.

---

குண்டலாதி மூலமென்ற சங்கம்வேரை பாலிற்கொள் ளவண்டுகடி குஷ்டம் தழுதணை சொறி தேமல்கிரந்திவெட் டை சூலை செங்கரப்பன் கருங்கரப்பன் சிறுசிரங்கு பெருஞ் சிரங்கு தீரும் தேககாந்தியுண்டாம்,

ஷை வேர்ப்பட்டை பலம்-1, மிளகுபலம்-½, ஆவின்பா லால்விட்டு அரைத்து உடம்பிற்றேய்த்து ஸ்நானஞ்செய்து வர ஷை வியாதிகள் தீரும்.

ஷை வேர்ப்பட்டைத்தூள் பலம்-1, மிளகுதூள் பலம்½ சர்க்கரை பலம்-1, கூட்டி திரிகடிப்பிரமாணம் சாப்பிட்டு வர ஷை வியாதிகள் தீரும்.

---

நன்னாரிவேரை யரைத்து கொட்டைப்பாக்கு பிரமாணம் ஆவின்பாலில் இருபதுநாட்கொள்ள மூலக்கொதிப்பு அஸ்திகாங்கை மேகச்சூடு மேகவெட்டை நீர்கடுப்பு நீர் இத்து விழுதல் மூத்திரக் கிரிச்சரம் பதினெட்டும் சில்லரை விஷஜெந்துக்களின் கடிவிஷங்கள் உள்வரட்சியினாற்காணும் இருமல் தாபசோபம் நீங்கும் இந்தமூலியை நாட்பட சாப்பிட்டு வந்தால் நரைதிரைமாறும்.

ஷை வேர் சீரகம் மல்லி சமன் சூரணித்து சர்க்கரை கலந்து சாப்பிட்டுவர ஷை வியாதிகள் தீரும்.

( அமுதவல்லி ஆகாசக்கருடன்யென்ற பொற்சிந்தி வேரை அரைத்து கொட்டைப்பாக்கு அளவாய் ஆவின் பாலிற் சாப்பிட்டுவர சகல மேகங்களும், சகலவிஷகடிகளும், சுரம், தோஷம், கபாலச்சூடு, வெட்டைநீங்கும் இந்தமூலத்தை நாட்படச் சாப்பிட்டுவந்தால் அவமிருத்து விலகும் தேகம் பொன்போல் ஆகும். )

ஷை தண்டின்மாவும் வில்வப்பூவும் கோரோசனையும் சமன்கலந்து திரிகடிப்பிரமாணம் எருமைமோரில்கொண்டு வரமேகநீரழிவு நீங்கும்.

மரவீழியென்ற பூமிசக்கரைக்கிழங்கை பாலிற் கொள்ள பாண்டு, விஷபாகவீக்கம், மூத்திரக்கிரிச்சரம், மேகம், வெட்டைதீரும், காமம்மிகும், நாதங்கட்டும், நாவில்அமுதம் ஊரும்.

ஷை கிழங்கை பாலில் அவித்துக் காயவைத்து தூட் செய்து உளுந்துவறுத்துப் பொடித்தமாவும் பெள்ளும் பொரியும் சமன்கலந்து திரிகடிப்பிரமாணம் சப்பிட்டுவர தேகபலமுண்டாம் நாதங்கட்டும்.

---

பனங்கோவைபெருங்கோவையென்றகுரட்டைமூலத்தை பாலிற்கொள்ளநரைதிரைமாறும்சரசுபதிகடாக்ஷமுண்டாம்

நல்லெண்ணெய் மேற்படி பழச்சாறு வகைக்குப்படி-¼ மிளகு கருஞ்சீரகம் சித்தரத்தை சாம்பிராணி வகைக்கு விராகனிடை-1, பொடித்துப்போட்டுப் பதமாய்க் காய்ச்சி தலைமுழுகிவர பீனிசம்தீரும் செம்பட்டைமயிர் கருக்கும்.

---

முத்தக்காசு என்ற கோரைக்கிழங்கைப் பாலிற் கொள்ள கற்றாழைநாற்றம் பித்தத்தாலுண்டாகும் வீக்கம் சத்திசுரம் நாவரட்சி தாபசோபம் நீங்கும்.

---

ஷை கிழங்கு மல்லி பேய்ப்புடல் சுக்கு சிற்றரத்தை ஓர் அளவாய்ச் சிதைத்துக் கஷாயஞ்செய்து சாப்பிட பித்த சுர நீங்கும்.

பழுபாகல்மூலத்தைப் பாலிற்கொள்ள பலவிஷங்கள் குஷ்டம் தழுதணை தொழுதணை கிருமிநீக்கும் அந்தக்கிழங்கை நாட்பட பத்தியமாய்ச் சாப்பிட்டுவந்தால் தேகம் பலக்கும்.

---

தலைசூடி என்ற தலைசுருளி மூலத்தைப் பாலிற்கொள்ள அரவுக்கடிவிஷம் சில்லரை விஷங்கள் விஷகரப்பன் குஷ்டம் சூலை சொரிசிரங்குதீரும், தேகபலமுண்டாகும் விஷம் அமுதமாகும்.

---

திசைகருடன்என்ற கட்டுக்கொடி மூலத்தை பாலிற் கொள்ள விஷகுஷ்டம்தீரும் விந்துகட்டும் உடல் இருகும் ஆணைப்பலமுண்டாம் பேதிகட்டும் மேற்படியிலை தண்ணீரைக்கட்டும் நீரழிவைப்போக்கும்.

---

மலைதாங்கிஎன்ற பொன்முசுட்டை மூலத்தை பாலிற் கொள்ள விந்துகட்டும் குஷ்டம் வாயுகடிவிஷம் மலக்கழிச்சல் நீங்கும் மேற்படியிலை தண்ணீரைக்கட்டும் அதிக மூத்திரத்தைச்சுருக்கும்.

இந்தயிலை மேற்படி கட்டுக்கொடியிலை ஆவரைக்கொழுந்து இம்மூன்றையும் அரைத்துக் கொட்டைப்பாக்களவாகச் சாப்பிட்டுவர நீரிழிவு பெருநீராய் அடிக்கடி இறங்

குவளைதச்சுருக்கும் ஷை இலையைத் தண்ணீரில் ஊறவைத்து அந்தத் தண்ணீரைச்சாப்பிட்டுவர அதிதாகம்நீங்கும் (நாய்க்கொட்டான்மூலத்தைப் பாலிற்கொள்ள வண்டுகடி சிலந்திப்பூச்சிக்கடி மற்ற சில்லரை விஷஜெந்துக்களின் கடிவிஷம் பெருவிஷக்கடி கிரந்தி பலவகைக்கருப்பன் வங்கு சொறி கருங்குஷ்டம் புண்புரைவீக்கம் தீரும்.)

பிராய்மூலத்தைப் பாலிற்கொள்ள பதினெட்டுவகை வண்டுகடி வெண்குஷ்டம் கருங்குஷ்டம் விரியன்கடி விஷத்தாலுண்டாகும் குஷ்டம்நீங்கும் பிராய்போல் உடலில் எழும்பும் சரசரப்புநீங்கும்.

ஷை மரத்தின்பாலை பச்சைக்கடலைமாவில் பிரட்டிக் கடலைப்பிரமாண முண்டைசெய்து சாப்பிட்டுவர நாதங்கட்டும்.

ஆதியில் மூலத்தைப் பாலிற்கொள்ள அண்டவாதசூலை பலவகைகிரந்தி குஷ்டம்பிளவை அரையாப்பு வாதத்தில் எழுந்தநோய்கள் சில்லரைவிஷம் நீங்கும்.

புங்குமூலத்தைப் பாலிற்கொள்ள புண் புரைகள் சூலை அரையாப்பு கிரந்தி பலகரப்பன் குஷ்டம் சிலவிஷம்தீரும்.

வெள்ளெருக்கின்மூலத்தைப் பாலிற்கொள்ள கிரந்தி குஷ்டம் விஷங்கள் வண்டுகடி செய்யான்கடி அறுபுள்ளி வண்டுகடி மரவட்டைகடி குறைநோய்தீரும்.

வேலிப்பருத்தி சமூலத்தைப் பாலிற்கொள்ள கடிவிஷம் கரப்பன்வெட்டை பலவகைக்கிரந்தி சூலை மருந்தீடு கைகால்பிடிப்பு வாயுதீரும்.

வெள்ளறுகு சமூலத்தைப் பாலிற்கொள்ள சில்லரைவிஷம் சிரங்கு சொரி குஷ்டம் கிரந்தி வெட்டை வெடிசூலை காமாலை விஷகரப்பன் வீக்கம்தீரும்.

மேற்படி மூலிகை சமூலத்தையும் தண்ணீரில் வேக வைத்து வெதுப்பத்துடன் வாயில்விட்டுக் கொப்பளிக்கப் பல்வலி தீரும்.

---

சிவன்வேம்பு மூலத்தைப் பாலிற்கொள்ள தீராத சிலவிஷம் காலிற்காணும் பிளப்புகுஷ்டம் கரப்பன்வகைகள் வாயுதீரும்.

ஷை மூலிகைசமூலத்தையும் உலர்த்திச் சூரணஞ்செய்து சர்க்கரைகலந்து திரிகடிப்பிரமாணம் மண்டலங்கொள்ள குஷ்டம் 18, பாதத்திலுண்டாகும் விரிவு மேல்தடிப்பு படர் தாமரை அரிப்பு தேகத்தில் முள்ளுகொண்டு குத்துவது போல்குத்துதல் திமிர் தலைநோய் தீரும்.

---

60-வருடம்சென்றவேம்பின்வேர்ப்பட்டை, கொழுந்து, பூ, பிஞ்சு, இவைகளை ஓர்நிறையாய் உலர்த்தியிடித்து திரிகடிப்பிரமாணம் ஒருமண்டலம் ஆவின்பால்நெய் தேனிற் கொள்ள சகலநோய்களும் தீரும், தேகம்இறுகும், நரை திரை மாறும்.

மேற்படிதூளில் வாழைப்பழத்தைப் புதைத்து நாற்பதாம்நாளெடுக்க காயாயிருக்கும் அதைத்தின்ன தேகம் கற்றாணுகும்கிழவன் வாலிபனுவான் தேகம் ஒருபோதும்தளராது.

---

செங்கத்தாரி, கருஞ்சூரை, செஞ்சூரை மூலத்தைப் பாலிற்கொள்ள கரப்பன் கிரந்தி செவ்வாப்புக்கட்டி செங்கரப்பன் கொள்ளிக்கரப்பன் முதலான கரப்பன்களும், பலவிஷங்களும்தீரும், மேற்படி மட்டையை அரைத்து உடம்பிற்பூச ஷை வியாதிகள் தீரும்.

---

தூதுவளையை ஆதித்தவாரத்தில் பிடித்துக்கொண்டு சோடசகணபதி மூலமந்திரத்தை 100-உரு ஜெபித்து சமூலம் பிடுங்கி உலர்த்தித் தூட்செய்து திரிகடிப்பிரமாணம் ஆவின்பாலிற்கொள்ள பித்தம்-40-ம் தீரும், வெள்ளாட்டு நெய்யிற்கொள்ள கபந் தீரும். சிற்றாமணக்கெண்ணெயில் கொள்ள சீரவரட்சி தீரும்.

ஷை இலையைச் சமைத்துத்தின்ன பசியுண்டாம், ஷை பூவை நெய்யில்வதக்கியுண்ண தாதுபுஷ்டியுண்டாம், ஷை காயை இந்தப்படி சாப்பிட வாதபித்தசிலேத்மம்நீங்கும், ஷை வேரை வெத்திலைப்பாக்குடன் தின்றுவர திரிதோஷம்நீங்கும், தூதுவளைசமூலம், பேய்ப்புடல், கரிப்பான், மிளகு, சீரகம், ஜாதிக்காய், கிராம்பு, வால்மிளகு, இவைகளைச் சூரணித்துப்பிட்டவித்து நெல்லிக்குச்சியாற்கிண்டி ஆற்றி சர்க்கரையிற் கொள்ள காந்தல் விக்கம் சோகைதீரும்.

---

சித்தாமணக்கிலைச்சாறு வேப்பெண்ணெய் சமன்கலந்து பதமாய்க்காய்ச்சிவடித்து ஒருமண்டலம் புளித்தள்ளிச் சாப்பிட கருங்குஷ்டம், வெண்குஷ்டம், சொரிகுஷ்டம், கிரந்தி, கழுதலை, குறைநோய், பெருவியாதி, திமிர், கிரந்திப்புண் தீரும், ஆமணக்கெண்ணெய் பல அவுஷதங்களுக்கு ஆவதுமன்றி உடலிலுள்ள வெப்பையும் மூலச்சூட்டையும்நீக்கி உடலைவளர்க்கும், ஷை எண்ணெய் கற்றாழைச்சோற்றின்நீர் ஈருள்ளிச்சாறு எலுமிச்சம்பழச்சாறு வகைக்குப்படி மாகாணி ஒன்றாய்க்கலந்து அதில் ஒரு விராகனிடை வெந்தயத்தைப் பொடித்துப்போட்டு சாப்பிட விரோசனமாகும் மலக்கட்டுத்தீரும.

ஷை எண்ணெயில் கதலிவர்ழைப்பழம், பேரீச்சம்பழம் முந்திரிப்பழம், ஏலம், கிராம்பு, ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, குங்குமப்பூ, கோரோசனை, கற்கண்டு இவைகளைப் பொடித்துப்போட்டுரவியில் வைத்துக்கொண்டு குழந்தைகளுக்குக் கொடுத்துவரகணை, பிரளி, மாந்தம், கரப்பன் தீரும். மேனி பருக்கும் பளபளப்பாகும்.

---

மூக்கரைச்சாரணைவேரை ஆவின்பாலிற் கொள்ள ஒரு மண்டலத்தில் நரைதிரைமாறும் உடல்இருகும் பகலில் நட்சத்திரம் கண்ணுக்குத்தோற்றும் குன்மம் 8-ம் தீரும்.

---

நிலவாகைச்சமூலத்தை இடித்துத் தூட்செய்து பேய்ச்சுரைக் குடுக்கையில் அடைத்துக்கொண்டு திரிகடிப் பிர

மாணம் ஆவின் நெய்யிற்கொள்ள உடம்பு பூரிக்கும், தேனில் கொள்ள உடம்புவற்றும், சிற்றாமணக்கெண்ணெயிற்கொள்ள எலிகடிவிஷம் சில்லரைவிஷகடியும், ஏப்பமும், வெந்நீரில் கொள்ள கிரிமியும், பசுவின்மோரில்கொள்ள செறியாமை யும், எருமைமோரில் எலிகடிவிஷமும், எருமைச்சாணிப் பாலில் பாண்டும், எருமைப்பாலில் பெண்கள் கைமசக்கும் தீரும்.

பாகலிலைச்சாற்றில் கொள்ள உடலில்தடிக்கும் செய் யான் விஷமும், மேனிச்சாற்றில் தேள்விஷமும், ஆலம்பழுப் புச்சாற்றில் பெருச்சாளிகடிவிஷமும், வேம்பாடம்பட்டைச் சாற்றில் செவ்வெட்டைகடியும், செம்மறிஆட்டுநீரில் அர ணைக்கடியும், விழிச்சாற்றில் விரியன்கடியும், தேசிப்பழச் சாற்றில் சர்வவிஷமும், பாகலிலைச்சாற்றில் நட்டுவக்காலி விஷமும், அவிரியிலைச்சாற்றில் அரணை, வண்டுகடி, புடை யன், குத்துதவளை, குரங்குநாய், பிள்ளை, பேய்நாய், பேய்நரி, இவைகளின்விஷமும், கையாந்தகரை கண்டங்கத்திரிச்சாற் றில் ஈளை, ஷயமும், கொடிக்கள்ளிச்சாற்றில் மாரல்சுரமும், குளிர்சுரமும், நல்லெண்ணெயில் விக்கலும், வெள்ளாட்டு நீரில் குஷ்டம் சோகை காமாலையும், பசுவின்நீரில்கொள்ள சொறிசிரங்கு உளைவு பெருவயிறு மகோதரம் நீராமையும் நீங்கும், புளிபுகை யிலைதள்ளவும்.

---

வெப்பாலைமூலத்தைப் பாலிற்கொள்ள குஷ்டம் சில விஷம் கரப்பன் வண்டுகடி முதலிய வியாதிகள் தீரும்.

---

குளப்பாலைமூலத்தைப் பாலிற்கொள்ள எலிகடிவிஷம் விஷகரப்பன் உடல்சுரப்பு காலசுரப்பு சருவ விஷக்கடி வீக் கம் பருபடுவன் தீரும்.

---

முத்துருக்கஞ்செவி மூலத்தைப் பாலிற்கொள்ள முக வசியமுண்டாம் சிரியமுலை பருத்துவிம்மும் கரப்பன் சில விஷக்கிலந்தி பருபிளவை புண் தீரும்.

ஆதளைமூலத்தை ஆவின்பாலிற்கொள்ள பதினெட்டு வகை எலிகடிவிஷம் நீங்கும் பாலைக் கொப்புளிக்க வாய் வேக்காடு வெட்டைதீரும்.

பூவரசுமூலத்தை பாலிற்கொள்ள சொறிகிரந்தி கரப்பன் விஷகரப்பன் வீக்கம் சிலவிஷம்திரும்.

---

(அறுகுமூலத்தைப் பாலிற்கொள்ள சகல விஷமும் தீரும்) தேகபலமுண்டாகும், நரைதிரைமாறும், நரம்புகள் இறுகும். மூலச்சூடு வெட்டை நீர்க்கடுப்பு நீங்கும்.

ஷை மூலத்துடன் மிளகு சீரகம் அதிமதுரம் மாதுளம் பூ இவைகளைக் கஷாயம்செய்து அதில் ஆவின் வெண்ணெய் போட்டுக்குடிக்க ஷை வியாதிகள் தீரும்.

---

அமுக்கிராக்கிழங்கை பாலிற்கொள்ள விந்துகட்டும், மேனிகாந்தியாகும், தேகத்திலுள்ள துர்நீர் கபம் சூலை கரப்பன்பாண்டு வெப்பு வெட்டை வீக்கம் கட்டி பித்தக் கிருகிருப்பு நீங்கும்.

மேற்படிவேரைப் பாலில்அவித்துச் சுத்திசெய்து இடித்ததூள் விராகனிடை-64, இலவங்கம் விராகனிடை-1, சிறுநாகப்பூ விராகனிடை-2, மிளகு விராகனிடை-8, திப்பிலி விராகனிடை-11, இவைகளைச் சூரணித்து ஒன்றாய்க்கலந்து சரியிடை சர்க்கரைசேர்த்து திரிகடிப்பிரமாணம் சாப்பிட்டு வரக்ஷயம் இருமல் புகைச்சல்அரோசிகம் தாதுநஷ்டம் தீரும்.

---

மரள்கிழங்கை பாலிற்கொள்ள மூலம் கரப்பன் புண் சிலந்தி வண்டுகடி எரிகுஷ்டம் தீரும்.

ஷை மரளை வாட்டிப்பிழிந்து சிசுக்களுக்குக் கொடுக்க நெஞ்சிற்கபக்கட்டு கரப்பன் செங்கிரந்தி கருங்கிரந்திதீரும்.

---

சரக்கொன்னை மூலத்தைப் பாலிற்கொள்ள வண்டுகடி குஷ்டம் சொறி தேமல் விஷநீர் வாதசூலை வாதகரப்பன் தீரும்.

மேற்படி பூவையும் கொழுந்தையும் அரைத்துப்பாலிற் கொள்ள பிரமியம் வெட்டை காமாலை பாண்டு பித்தம் விஷபாகவீக்கம் தீரும்.

மேற்படி பூவைசாலுமிச்சம்பழச்சாற்று லரைத்து உடம்பிற்றேய்த்துக் குளித்துவர சொறி கரப்பன் தேமல் பத்துத் தீரும்.

---

ஆவரைப் பஞ்சாங்கத்தைப் பாலில் ஒருமண்டலம் கொள்ள நீரிழிவு பிரமேகம் ஆண்குறியெரிவு நீங்கும்.

ஷை பஞ்சாங்கத்தையும் வெந்தயத்தையும் சிவக்க வதக்கி கஷாயஞ்செய்து அதிற் கோரோசனையை உரைத்துக் கொடுக்க இரத்தக்கடுப்புத் தீரும்.

ஷை வேர்ப்பட்டை கல்வத்திப்பட்டை மருதம்பட்டை சரக்கொண்ணைப்பட்டை இவைகளைக் கஷாயம் செய்து அதிற் கல்மதத்தை உரைத்துச்சாப்பிட நீரழிவுதீரும்.

---

காட்டாமணக்கு மூலத்தைப் பாலிற்கொள்ள குஷ்டம் பாண்டு சோகை காமாலை வீக்கம் வயிற்றுக்கட்டி பெறு வயிறு தீரும், ஷை முத்தப்பருப்பை பாலிற்கொடுக்க விரோசனமாகும், கொடிக்கள்ளி மூலத்தைப் பாலிற்கொள்ள சோகைபாண்டு எலிபாகவீக்கம் கெண்டை மகோதரம் வயிற்றுச்சூலை கரப்பன் எலிகடிவிஷம்தீரும், மேற்படி இளங்கொழுந்தை பிட்டவித்து பிழிந்தசார் படி அரைக்காலில் கொஞ்சம் மிளகுத்தூள் போட்டுக்கொடுக்க மேற்படி வியாதிகள் தீரும் பத்தியம் மோர் அன்னம் சாப்பிடவும் விரோசனமாகும்.

மிளகு மேற்படி கொழுந்து வெள்ளெருக்கம்பூ இம்மூன்றையும் வகைக்கு ஒருவிராகனிடை வீதம் சிதைத்துக் கொடுக்க குளிர்சுரம் சுரம்தீரும், ஷை மருந்துகளுடன் ஒரு களச்சிப் பருப்புச் சேர்த்துக்கொடுக்க அண்டவாயு தீரும்.

---

மாவிலிங்கமூலத்தைப் பாலிற்கொள்ள சுரம் வெட்டைசூலை சுரோணிதக்கட்டு மந்தவாயு குன்மம் அரையாப்பு கண்டமாலை புண் புரைகள் பிளவை வீக்கம் வாதம் ஜன்னிரூச்சை கல்லடைப்பு விஷக்கடி தீரும்.

மேற்படி பட்டை மூங்கிலை சித்தரத்தை சுக்கு அரி சித்திப்பிலி சதகுப்பை கொடிவேலிவேர் இவைகளை ஓர் நிறைபாய்ச் சிதைத்து ஒருபடி தண்ணீரில்போட்டு அரைக் கால்படியாய் வற்றவைத்து வேளையொன்றுக்கு மாகாணிப் படி வீதம் பனங்கருப்புக்கட்டிக்கூட்டி மூன்று நாள் கொடுக்க பிரசவகாலத்தில் தடைப்பட்டு இருக்கும் சூதகத்தை புடைத்துவிடும்.

---

உகாய்மூலத்தைப் பாலிற்கொள்ள பலவகை வாயுக்கள் சூலைவாதம் குன்மம் கழலை கட்டி கண்டமாலை அரையாப்பு பிளவை தொடைவாழை விப்புருதிவெட்டை ஜன்னி தோஷம் தீரும், ஷை இலை கழற்சிப்பருப்புக்கு அண்டவாயு தீரும்.

---

புரசமூலத்தைப் பாலிற்கொள்ள, எலிவிஷம் குன்மம் வாயு வாதம் நீங்கும்.

ஷை விரையை எருமைச்சாணிக்குள் புதைத்துக் காலையில் 2 விரையை தோல்நீக்கி அரைத்து ஆவின்பாலிற் கொடுக்க வயிற்றிலுள்ள பெருங்கிருமிகள்விழும் அவைகளினுண்டாகும் வயிற்றுவலி தீரும்.

ஷை விரையை யெலுமிச்சம்பழச்சாற்றி லரசிப்போடப்பத்து நீங்கும்.

---

சுடுதுரட்டி மூலத்தைப் பாலிற்கொள்ள புடைகிரந்தி சூலை அரையாப்பு கண்டமாலை கரப்பன் வாயு சில்லரைவிஷம் நீங்கும்.

---

ஷை இலைச்சாறும் நல்லெண்ணெயும் கலந்து வேளையொன்றுக்கு மாகாணிப்படி வீதம் 3-நாள் புளிதள்ளிச் சாப்பிட இரத்தவெட்டை தீரும்.

---

கடுக்காய் மூலத்தைப் பாலிற்கொள்ள கரப்பன் குஷ்டம் சிலவிஷம் கிரந்தி வங்கு தீரும்.

பெருவாகை மூலத்தைப் பாலிற்கொள்ள சூலைப்பிடிப்பு வீக்கம் சில்லரைவிஷம் கிரந்தி கரப்பன்தீரும்.

---

உசிலமூலத்தைப் பாலிற்கொள்ள சிலவிஷங்கள் மேகம் புண் கிரந்தி வண்டுகடி குஷ்டம் கைகால்பிடிப்பு சூலைதீரும்.

---

வக்கணத்தி மூலத்தைப் பாலிற்கொள்ள கிரந்தி மேகம் கரப்பன் சிலவிஷம் வண்டுகடி தீரும்.

---

அளிசமூலத்தைப் பாலிற்கொள்ள சகலவிஷம் சுவாச காசம்மந்தாரகாசம்வயிற்றுகிருமிகள் கரப்பன்கிரந்திதீரும்.

---

நெய்க்கொட்டான் மூலத்தைப் பாலிற்கொள்ள சகல விஷகடிகள் கரப்பன் கிரந்தி மேகம் சூலைப்புண்தீரும்.

---

நல்வல்மூலத்தைப் பாலிற்கொள்ள பெரும்பாடு வெட்டை மேகம் கழிச்சல் கிராணிதீரும், ஷை பழரசம் மேகநீரழிவைக்கேட்கும்.

---

அரசுமூலத்தைப் பாலிற்கொண்டாலும் அந்த மரப் பட்டையை அரிசியுடன் இடித்து மாவுசெய்து களிக்கிண்டித் தின்ன பெரும்பாடு தீரும்.

---

ஆலின்விழுதையும் மேற்படி விரையையும் பாலிற் கொள்ள பாலில்லாதபெண்களுக்குப் பாலுண்டாகும் வெட்டை மேகம் உடல்எரிவு காந்தல்தீரும்.

---

ஆலவிரையையும் அரசவிரயையும் பாலிற் கொள்ள இரத்தங்கக்கல் நீங்கும்.

---

சந்தனமூலத்தைப் பாலிற்கொள்ள மேகம்பிரமியந் தீரும் அழகுண்டாகும், ஷை வேரைக் கஷாயஞ்செய்து கற்கண்டுபோட்டுச் சாப்பிட மேற்படி வியாதிகள் தீரும்.

தேவதாரமூலத்தைப் பாலிற்கொள்ள பீனிசம் பழஞ்சுரம் நீரேற்றம் தீரும்.

---

அகில்மூலத்தைப் பாலிற்கொள்ள வாந்தி அரோசிகம் சுரம்தீரும், இதன்புகையால் ஷெ வியாதிகள் தீரும்.

---

சிறுகொண்ணை மூலத்தைப்பாலிற்கொள்ள கண்ணேய் உஷ்ணம் உள்மூலம் தீரும், தேகபலமும் அழகுமுண்டாம்.

---

நரிக்கொண்ணைமூலத்தைப் பாலிற்கொள்ள ஆனைச்சொறி கிரிமிப்புடை அரிப்புப்புடைதீரும்.

---

மைக்கொண்ணைமூலத்தைப் பாலிற்கொள்ள குடல்வாதம் சூலை மேகந்தீரும்.

---

பிரமிசமூலத்தைப் பாலிற்கொள்ள கிரந்தி சூலை மேகம் வெட்டை குஷ்டம் வீக்கம் க்ஷயம் நீங்கும் பாடவல்லவமுண்டாம் நரை திரைமாறும்.

---

வல்லாரைசமூலத்தைப் பாலிற்கொள்ள மருந்தீடு க்ஷயம் காசம் இருமல் ஈளை கைகாலில் உண்டாகும் ஊறல் நீங்கும் நெடுநாட்கொள்ள நரைதிரைமாறும்.

---

பொன்னங்காணி என்ற கொடுப்பை சமூலத்தைப் பாலிற்கொள்ள உடல்குளிரும் பகலில் நக்ஷத்திரம் கண்ணுக்குத் தோன்றும்.

---

கீழ்க்காய்நெல்லிசமூலத்தைப் பாலிற்கொள்ள சோகை காமாலை பாண்டு உடல்வெளுப்பு வாதபித்தரோகம் நீங்கும் இரத்தம்மிகும் கண்குளிரும் காயசித்தியாம்.

---

கருங்குருவைக்காடியில் ஷெ சமூலச்சூரணத்தை நாட்பட பத்தியமாய்ச் சாப்பிட்டுவந்தால் நரைதிரை நீங்கி வாலிப வயதுண்டாம் உடலழியாது.

பொற்றலைக்கரிப்பான் சமூலத்தை பாலிற்கொள்ள இருமல் காசம்பாண்டு சோகைகாமாலை கரப்பன்தீரும்,ஷை மூலிகையை நாட்படகொண்டுவந்தால் நரைதிரைமாறும்.

மேற்படிசமூலம் அபக்கிட்டம் கடுக்காய் மிளகு சமனிடையாய்க் கஷாயஞ்செய்துசாப்பிட பாண்டு சோகை காமாலைதீரும்.

செங்கழுநீர்க்கிழங்கைப் பாலிற்கொள்ள உடல் குளிரும் விந்தூறும் நாட்படச் சாப்பிட்டால் எப்போதும் தேகத்தில் நோய் உண்டாகாது.

பற்பாடகம்சமூலத்தைப் பாலிற்கொள்ள வெட்டை மேகம் எரிவு காந்தல் அஸ்திகாங்கை வாயு பித்தம் தீரும்.

சதைஒட்டியிலையைப் பாலிற்கொள்ள ஷை வியாதிகள் தீரும் சீரசெங்கழுநீர் மூலத்துக்கும் ஷை வியாதிகள்தீரும்.

விஷ்ணுகரந்தை சமூலம் பாலிற்கொள்ள சுரம் மேகம் க்ஷயம் காசம் இருமல் ஈளை விஷங்கள் வாதபித்தம் தீரும் கண்ணுக்கு ஒளிவுண்டாம்.

ஷை சமூலச்சாற்றில் சித்தரத்தையை அரைத்துக் கலக்கிசுடவைத்துச்சாப்பிட ஷை வியாதிகள் தீரும்;

தண்ணீர்விட்டான்கிழங்கைப் பாலிற்கொள்ள விந்தூறும் சுக்கிலப்பிரமியம் நீர்எரிவு காந்தல் கரப்பன் வரட்சி தீரும்.

ஊமத்தின்வேரும் அதின்வித்தும் வகைக்குவிராகனிடை 1, வீதமாக அரைத்து ஆவின்பாலிற்கலக்கி காலையில் மூன்றுநாள்கொடுக்க எலிகடிவிஷமும் பேய்நாய் பேய்நரி கடிவிஷமும் குளிர் சுரமுந்தீரும்.

கற்றாழைச்சோறும் ஆவின் பாலும் கலந்து உண்ண விந்துகட்டும் சொறிகுஷ்டம் சோகை காமாலைதீரும், மூலச்சூடுதணியும் கண்குளிரும்.

### ஆனந்தவாயுவுக்கு

தும்பையிலையை எலுமிச்சங்காயளவு அரைத்துப் பழச் சாற்றில்கலக்கிக் கொடுக்கத்தீரும்.

### இதுவுமது

ஒரு எலுமிச்சங்காயளவு இலுப்பைப் பிண்ணாக்கை ஆழாக்கு எருள்ளிச்சாற்றில் ஊறப்போட்டு வெதுப்பிக் கொடுக்கத்தீரும்.

### வாய்வுக் குத்துக்கு

| | |
|---|---|
| கொடுவேலிப்பட்டை | சுக்கு |
| பரங்கிப்பட்டை | பிரப்பங்கிழங்கு |

இவைகளை வகைக்குவிராகனிடை-3, வீதஞ் சிதைத்து நாலுபடி ஜலத்திற்போட்டு எட்டொன்றாய்க் கியாழஞ் செய்து நாளொன்றிற்கு மூன்றுநேரங் கொடுக்கத்தீரும்.

---

### வாயுப்பொருமலின்குணம்

வாயுப்பொருமி அக்கினிமந்தித்து உண்ட அசனத்தை வாந்திக்கும் புளித்தேப்பமிடும் காற்றுப்பரியும்.

### நிவர்த்தி

பத்துவிராகனிடை சுக்கை வேலிப்பருத்திச்சாற்றால் மைப்போலரைத்து பில்லைதட்டி ஒருசட்டியில் இரண்டுவிராற் கனம் உப்பைப்பரப்பி அதின்மேல் பில்லையைவைத்து அதின் மேலும் முன்போல் உப்பைப்பரப்பி ஓடுமூடிச் சீலைமண் செய்து நாலு எருவில்புடம்போட்டு பொதித்து தேனிற் கொள்ளத்தீரும்.

---

### குண்டலவாயுவுக்குணம்

வாயுமிகுத்துக் கூப்பிட்டோடித் திரிந்து வயிற்றில் வந்து கற்போற்றிரளும் மறுபடியும் சிதறி உடம்பெங்கும் பரந்து பின்வந்து அடங்கும் தீபனத்தை மிகவுடுக்கும்.

### குடகரி வாயுவுக்குணம்

வாயு அதிகரித்த குடல்முதுகு நெஞ்சு விலா முதலான இடங்களிலோடிப் புடைத்துப் புரண்டு அழன்று வலிக்கும் உடலயரும் மலங்கருகும்.

707

## அனுகதவாயுவுக்குணம்

மென்மேலும் உண்பதினாலும் நொந்த அன்னம் ஊசக்கறி புசித்தாலும் மலங்கட்டினாலும் வாயு அதிகரித்து வயிறு பொருமி வாந்தி பிராந்தியாகும்.

## அத்தருவாயுவுக்குணம்

அக்கினிமந்தித்து சீரணமாகாமல் உண்டவண்ணமாய் பிரவர்த்திக்கும் புளித்தேப்பம் வாந்தி தாகம்காணும் வாயு தரிக்காமற் பரிந்துகொண்டிருக்கும்.

## துடிவாய்வுக்குணம்

வாயு அடிக்கடி உடலிற் பறந்தோடித் துடிதுடித்துச் சில நேரமடங்கியிருக்கும் நாடோறுமதிகரித்து இப்படியே செட்டை மிகச்செய்யும் குடல்வாய்வுபுரண்டு வலித்துக் குமுறியிரையும் அலைபோறகலங்கும் மந்திக்கும்.

## சகலவாய்வுக்கு

வேப்பீர்க்கு மூக்கரைச்சாரணைவேர் கருவேப்பிற்கு முருங்கையீர்க்கு வகைக்கொருபிடி, சுக்கு, மிளகு, மஞ்சள் வகைக்குவிராகனிடை-3, இவைகளைச்சிதைத்து இரண்டுபடி தண்ணீரிற் போட்டு அரைக்காற் படியாய் வற்றவைத்து போசனத்தின்பேரில் சாப்பிட்டுவரத்தீரும்.

## இதுவுமது

| | |
|---|---|
| சீரகம் | இந்துப்பு |
| ஓமம் | திரிகடுகு |
| கருஞ்சீரகம் | பெருங்காயம் |

இவைகளை ஓர்நிறையாய் வெதுப்பிச் சூரணித்துத் திரிகடிப்பிரமாணம் தேனிலாவது நெய்யிலாவது உண்ணத் தீரும்.

## இதுவுமது

| | |
|---|---|
| சுக்கு | திப்பிலி |
| மிளகு | வெள்ளுள்ளி |
| ஓமம் | வாலுளுவையரிசி |

இவைகளை ஓர்நிறையாய் வெதுப்பி பனைவெல்லங்கூட்டி மெழுகுபோல் அரைத்துக் கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவரத் தீரும்.

## இதுவுமது

நற்சீரகம் கருஞ்சீரகம்
திரிகடுகு ஓமம்
பெருங்காயம்

இவைகள் வகைக்குப்பலம்-௳, வெதுப்பிச் சூரணித்து கரியுப்பை எருக்கம்பழுப்பிலைச்சாற்று லரைத்து-4-அல்லது 6-புடம்போட்டு பஸ்மம்பண்ணி யதை யிச் சூரணத்துக்கு நிகர் கூட்டித் திரிகடிப்பிரமாணம் 7-நாள்கொள்ளத் தீரும்.

## இதுவுமது

செவியம் கொடுவேலிவேர்
திப்பிலி கண்டத்திப்பிலி
சுக்கு

இவைகளை வகைக்குவிராகனிடை-3, சிதைத்து இரண்டு படி தண்ணீரிற்போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்து அதில் ஜாதிலிங்கத்தை உரைத்துக்கொள்ளத் தீரும்.

## இதுவுமது

மிளகு ஓமம்
வெந்தயம் சீரகம்
தைவேளைவேர்

இவைகளை வெதுப்பிப்பொடித்துத் தேனிற்கொள்ளத் தீரும்.

## வாய்வுக்கு விரோசனம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மிளகு | கழஞ்சு | 1 | கடுக்காய் | கழஞ்சு | 15 |
| இந்துப்பு | , | 1 | சத்திசாரணைவேர்சூரணம் | | 10 |
| நற்சீரகம் | , | 2 | சுக்கு | விராகனிடை | 5 |
| ஓமம் | , | 3 | அரியசிவதை | , | 5 |
| திப்பிலி | , | 4 | | | |

இவைகளை நிழலிலுலர்த்திச் சூரணஞ்செய்து திரிகடிப் பிரமாணங்கொள்ள விரோசனமாகி வாய்வுதீரும்.

# ஏழாம்பாகம்

## முற்றிற்று



இனி எட்டாம்பாகம்

உ

தேவிசகாயம்.

—o—

# ANUBOGAVYTHIA

## BRAMAHRAHASIAM

# அநுபோகவயித்திய

## பிரம்மரகசியம்.

எட்டாம்பாகம்.

இஃது

ஜெகந்நாதஸ்தலம்.

## கோஷாயி சுவாமிகள்

அநுக்கிரகத்தின்படி

பூவிருந்தவல்லி.

சுந்தர முதலியார் குமாரர்

பூ. சு. குப்புசாமி முதலியார்

அண்டு சன்ஸ் அவர்களது

ஸ்ரீ சுந்தர விலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை-புரசை.

—o—

1935.

உ

தேவிசகாயம்.

# அவுஷதங்களின் அகராதி.

## அவுஷதங்களின் அகராதி.

முற்றுப் பெற்றது.



உ

தேவிசகாயம்.

# அனுபோகவயித்திய

## பிரம்மரகசியம்.

# எட்டாங்காண்டம்.

## சூரக்காவயித்தியம்.

### விநாயகர் துதி.

விருத்தம்.

அவனியிலுள்ளோரெல்லா மனுபவமாகச்செய்ய
குவலயம்புகழுமிந்தக் கூரக்காவயித்தியந்தன்னை
பவமரப்பிணிகளோடப் பகரசெந்தமிழினாலே
சிவனருளைங்கரன்தன் சேவடிசென்னிவைப்பாம்.

### முகவுரை.

ஆசிரிய விருத்தம்.

ஆராய்ந்துபலபலநூல் தேடித்தேடி
அனுபோகமாகவே தேர்ந்தோர்தன்னை
ஏராளமாகவே யடுத்துவாங்கி
எண்மர்களின்பாதமலர் தினமும்போற்றி
நேராகுங்கூரக்கா வயித்தியந்தானும்
நெடுநாளாயோசித்து மனதுகூர்ந்து
சீராகப்புவியிலிது விளங்கவேண்டி
செஞ்சியேகாம்பரமும் வெளியிட்டானே. (1)

வெளியிட்டயின்னாலே நம்பவேண்டும்
விளங்கவேதிரைகடல்சூழுலகமெங்கும்
தெளிவாகும்மூலிவகை யரியக்கண்டும்
தான்புகலும்முறையளவு போலேயுண்டும்
ஒளியாமலுரிதியென்றே கொள்ளவேண்டும்
ஒட்டமதுபிணிகளென்றே பறக்கவேண்டும்
அளவாகுந்தாவரவர்க் கங்களென்றும்
அனுபோகக்கூரக்கா வயித்தியப்பாரே. (2)

பார்க்கவேசித்தர்கை யாண்டமூலி
பல்லோர்க்கும்பதார்த்தவகை யாச்சுதப்பா
ஏர்க்கவேயதையரியா யுலகிலேதான்
ஏங்கியேவலைந்தலைந்து விழலாகாமல்
தீர்க்கவேபிழைகடைக்கு ளிருக்குங்கீரை
தனையரிந்துஉண்பதற்குச் சூக்ஷமாகக்
கோர்க்கவேகூரக்கா வயித்தியந்தன்னை
குணமாகவோதிவைத்த வுண்மைகாணே. (3)

உண்மையெனுமொருமொழியே யுரிதியாக
உலகுதனில்கீர்த்தியது கொள்ளவேண்டும்
எண்ணமதுயின்னூல்மேல் வைக்கவேண்டும்
எத்தொழிலைச்செய்தாலும் பக்திவேண்டும்
தன்மையுள புத்திதன்னை வளர்க்கவேண்டும்
தன்புகழைதான்புகழா திருக்கவேண்டும்
வண்மைபெருமுன்னோர்கள் சொன்னவாக்கை
வரமெனவேநம்பிமனம் மகிழுவீரே. (4)

நாதாக்கள்சொன்னமொழி பொய்யாகாது
நம்பாதவம்பருக்கு மெய்யாகாது
சோதியாம்பதினெண்பேர் சொன்னவாக்கு
ஜெகமீதுஒருக்காலும் வீண்போகாது
நீதியாமிதைவிடவே ரினங்கிட்டாது
நிரையாகுங்கூரக்கா வயித்தியந்தன்னை
ஆதியாய்க்கையேந்தி கண்ணுற்றோர்கள்
அகிலமிசைப்பிணியணுகா வாழ்வார்தாமே. (5)

முகவுரை-முற்றிற்று.

## ஸ்திரீகளுக்குக்காணும் சூதகக்கட்டுக்கு.

காட்டாமணக்குகிழங்கை பச்சையாகக்கொண்டுவந்து அம்மியை சுத்தப்படுத்தி அதில் வைத்து பசும்பால் விட்டு மைபோலறைத்து எடுத்து கொட்டைபாக்களவுவீதம் பசும் பாலில் கலந்து மூன்றுநாள் காலையில் கொடுத்துவர குண மாகும்.

## இதுவுமது.

செம்முள்ளியிலையைக் கொண்டுவந்து உரலிலிட்டு துவைத்து பிழிந்தசாறுபடி (காலேஅரிக்கால்) பசும்பால் படி (காலேஅரிக்கால் இவை ரெண்டையுஞ்சேர்த்து நாள் ஒன்றுக்கு ஆழாக்குவீதம் காலையில் மூன்றுநாள் கொடுத்து வர குணமாகும் இச்சாபத்தியம்.

---

## சூதகத்தை கிரமமாக வுண்டாக்க.

வெங்காரத்தூள்-எ௨, குன்றிமணியிடையும், கிராம்புத் தயிலம் ஒருதுளியும், வாலேந்திரபௌலம் ௬-குண்டுமணி யிடையும், குங்குமப்பூ க௨, குண்டுமணியிடையும், இவைக ளைச் சேர்த்து அரைத்து நாள்ஒன்றுக்கு துவரைப்பிரமா ணம் ஒருதடவை அல்லது இரண்டுதடவை கொடுக்க குண மாகும்.

---

## சூதகவாயு சூசிகவாயு இவைகளுக்கு.

குப்பைமேனி, பொற்றலைக்கரிப்பான், சிறுசெருப் படை நிலவாகைவேர் இவைகளைக்கொண்டுவந்து உலர்த்தி வகைக்கு விராகனிடை-௫, சேர்த்து சூரணித்து வஸ்திரகா யஞ்செய்து வைத்துக்கொண்டு திரிகடிவீதம் தேனில்குழை த்து-௨௰-நாள் சாப்பிட்டுவர குணமாகும், இச்சாபத்தியம்.

---

## சூதகவலிக்கு.

துத்தியிலை, வெள்ளைப்பூண்டு, மிளகு, வகைக்குப்பலம்-க வசம்பு விராகனிடை-க, இவைகளை ஜலம்விட்டு அரைத்து மூன்றுபங்காக்கி மாதாந்திர ருதுகாலமாகியநாளில் (3) நாளும் காலையில் ஒருபாகங்கொடுக்க குணமாகும்.

## கெர்ப்பஸ்திரீகளுக்குக் காணும் துவாலைக்கு.

நெய்தற்கிழங்கு, அதிமதுரம், சந்தணம், வெள்ளிலோத்திரம் இவைகள் வகைக்கு விராகனிடை-உ, சேர்த்து ஜலம் விட்டரைத்து ௩-பங்குசெய்து ஒருபங்குவீதம் பச்சரிசி கழுநீரில் கலக்கி காலையில் மூன்றுநாள்கொடுக்க குணமாகும்.

---

## துவாலையால்காணும் தாகமூர்ச்சைக்கு.

அரசன்கொழுந்து, ஆலன்கொழுந்து, மாயிலைக்கொழுந்து, அத்தியிலைக்கொழுந்து இவைகள் வகைக்கு அவுன்சு-க சேர்த்து ஒருபடி ஜலம்வைத்து அரைப்படியாக வற்றக்காய்ச்சி யிரைக்கி வடித்து (வ) சேர்வீதங்கொடுக்க குணமாகும்.

---

## கெர்ப்பஸ்திரீகள் சுரத்திற்கு.

சிற்றுமுட்டிவேர், பேருமுட்டிவேர், சீந்திற்கொடி, திப்பிலி, சுக்கு, நிலவேம்பு இவைகள் வகைக்கு விராகனிடை-க ஒருபடிஜலத்தில் பொடித்துப்போட்டு அரைப்படியாக வற்றக்காய்ச்சிய கஷாயத்தில் (வ) சேர்வீதம் நாளொன்றுக்கு இரண்டுதடவை கொடுத்துவர குணமாகும்.

---

## கெர்ப்பஸ்திரீகளின் நீர்சுரப்புக்கு.

நன்னாரிவேர் அல்லது ரோஜாப்பு இவைகளில் ஒன்றில் விராகனிடை-ந, எடுத்து அரைப்படி ஜலத்தில்போட்டுகால்படியாக கஷாயமிரக்கி ௩-நாள் கொடுத்துவர குணமாகும்.

---

## கெர்ப்பஸ்திரீகளின் கல்லடைப்பிற்கு.

மாதுளம்பழத்து விதையைக்கொண்டுவந்து பசும்பால் விட்டு அரைத்துக்கரைத்து அறைஅவுன்சு வீதங்கொடுத்துவர குணமாகும்.

---

## கெர்ப்பஸ்திரீகளுக்கு 10-மாதங்களில்வரும் கெர்ப்பவலிகளுக்கு.

### 1-வது, மாதத்திற்காணும் வலிகளுக்கு.

தாமரைப்பூ, சந்தணம், விலாமிச்சுவேர் வகைக்கு விராகனிடை-உ, யெடுத்து பசும்பால்விட்டு அறைத்து பாக்களவு வீதம் பசும்பாலில் கலக்கிக்கொடுக்க வலிதீரும்.

---

### 2-வது, மாதத்திற்காணும் வலிகளுக்கு.

தக்கோலம், தாமரைப்பூவும் வகைக்கு விராகனிடை-ரு சேர்த்து பசும்பால்விட்டு அரைத்து பாக்களவுவீதம் பசும் பாலில் கொடுத்துவர தீரும்.

---

### 3-வது, மாதத்திற்காணும் வலிகளுக்கு.

வெண்தாமரைப்பூ, செங்கழணிநீர்க் கிழங்கு வகைக்கு விராகனிடை-உ, சேர்த்து பசும்பால்விட்டு அரைத்து பாக்களவு பசும்பாலில் கலக்கிக் கொடுத்துவர வலிதீரும்.

---

### 4-வது, மாதத்திற்காணும் வலிகளுக்கு.

நெய்தற்கிழங்கும், நொச்சிவேரும் வகைக்கு விராகநிடை 3, சேர்த்து பசும்பால்விட்டு அரைத்து பாக்களவு பசும்பாலில் கொடுக்க வலிதீரும்.

---

### 5-வது, மாதத்திற்காணும் வலிகளுக்கு.

ஆம்பற்பூவும், விலாமிச்சுவேரும் வகைக்கு விராகநிடை ௩, சேர்த்து பசும்பால்விட்டு அரைத்து பாக்களவுவீதம் பசும்பாலில் கலக்கிச் சாப்பிட்டுவர வலிதீரும்.

---

### 6-வது, மாதத்திற்காணும் வலிகளுக்கு.

திப்பிலி, திராக்ஷை, நெய்தற்கிழங்கு வகைக்கு விராகனிடை-உ, சேர்த்து அரைத்து பாக்களவு பசும்பாலில் கலக்கிக் கொடுத்துவர் வலிதீரும்.

---

## 7-வது, மாதத்திற்காணும் வலிகளுக்கு.

விலாமிச்சுவேர், சந்தனம், தக்கோலம் வகைக்கு விராகனிடை-௪, சேர்த்து பசும்பால்விட்டு அறைத்து பாக்களவு பசும்பாலில் கலந்துக்கொடுத்துவர வலிதீரும்.

---

## 8-வது, மாதத்திற்காணும் வலிகளுக்கு.

தாமரைப்பூ, நெய்தற்கிழங்கு வகைக்கு விராகனிடை-உ சேர்த்து அறைத்து பாக்களவு பசும்பாலில் கலக்கிகொடுக்க வலிதீரும்.

---

## 9-வது, மாதத்திற்காணும் வலிகளுக்கு.

அரசம்பட்டை, மருதம்பட்டை வகைக்கு விராகனிடை ௩, சேர்த்து அறைத்து பாக்களவுவீதம் பசும்பாலில் கலக்கிக் கொடுத்துவர வலிதீரும்.

---

## 10-வது, மாதத்திற்காணும் வலிகளுக்கு.

சக்கரையும், இலுப்பைப்பூவும் வகைக்கு விராகனிடை-உ, சேர்த்து அரைத்து பாக்களவு பசும்பாலில் கலக்கிக் கொடுத்துவர வலிதீரும்.

---

## வயற்றில் பிள்ளைபிழைத்திருப்பது தெரிய.

வயற்றில் பசும்வெண்ணெயைத் தடவ அது உருகினுல் பிள்ளை பிழைத்திருக்கின்றதென்று அறியவும், வெண்ணெய் உருகாவிட்டால் இறந்ததென்று அறிந்துக்கொள்ளவும்.

---

## வயற்றில் இரந்தபிள்ளைவிழ.

நிலக்குமிழம்பட்டையை ஜலம்விட்டுஅரைத்து சுண்டக்காப்பிரமாணங் கொடுக்க வயிற்றில்லிறந்தபிள்ளை விழும்.

## இதுவுமது.

உக்தாமணிவேர் விராகனிடை-௫, யெடுத்து அம்மியில் வைத்துஅரைத்து பசும்பாலில்கலக்கிகொடுக்கபிள்ளைவிழும்

## இரந்தபிள்ளைவிழ பூசுமருந்து.

பிரண்டைவேரும், குறிஞ்சாவேரும் வகைக்கு விராகனிடை-ரு, சேர்த்து ஜலம்விட்டு அரைத்து வயற்றின்மீது பூச விழும்.

## நஞ்சுக் கொடிவிழ.

கருவேப்பிலை, வேப்பங்கொழுந்து, முருங்கைக் கீரைக் கொழுந்து இவைகளில் வகைக்கு அவுன்சு க, சேர்த்து அத்துடன் ஒரு கடுக்காய் நொருக்கிச்சேர்த்து ஒருபடிஜலத்தில் கறைத்து அடுப்பேற்றி காய்ச்சி அரிக்கால்படியாய் வற்றின பின் வைத்துக்கொடுக்க விழும்.

## பிரசவித்த ஸ்திரீயின்சுவாசம் தீர உருண்டை.

முருங்கைப் பட்டை கழற்சிப்பருப்பு, பனவெல்லம் வகைக்கு விராகனிடை க, சேர்த்து மைபோல் அரைத்து பாக்களவு கொடுத்துவர சுவாசந்தீரும்.

## இதுவுமது.

| | |
|---|---|
| சந்தனம் | முல்லைவேர் |
| அதிமதுரம் | கோரைக்கிழங்கு |
| கோஷ்டம் | விலாமிச்சுவேர் |
| சாஸ்திரபேதி | வெட்டிவேர் |
| தக்கோலம் | நெல்லிப்பருப்பு |

இவைகள் வகைக்கு விராகனிடை-ரு, சேர்த்து இளநீர் ஜலத்தாலரைத்து சுண்டைக்காயளவாக மாத்திரைகளாக்கி உலர்த்திவைத்துக்கொண்டு ஒருமாத்திரைவீதம்வென்னீரில் கரைத்து-ய-நாள் கொடுத்துவரத்தீரும் பத்தியமில்லை.

## பிரசவித்த ஸ்திரீகளுக்கு கீழ்வயறு-மார்பு-சிரசு-இவைகளின் குத்தல் நோவிற்கு.

| | |
|---|---|
| ஏலம் | சுக்கு |
| மிளகு | திப்பிலி |
| லவுங்கப்பத்திரி | லவுங்கப்பட்டை |

வகைக்கு விராகனிடை-உ, இவைகளைசூரணித்து வைத்துக்கொண்டு உ-விராகனிடைவீதம்யெடுத்து வெல்லத்திலாகிலும் அல்லது கழுநீர் ஜலத்திலாவது சேர்த்துக் கொடுக்க மேற்கூறிய வியாதி குணமாகும்.

## பிரசவித்த ஸ்திரீயின் மார்பில் பால்சுரக்க.

தோல்நீக்கின வெள்ளைப்பூண்டு-ரு, விராகனிடை எடுத்து உ-சேர்பாலில் வேகவைத்துக் கடைந்து அத்துடன் ஏலரிசிதூள் விராகனிடை-க, சீனி விராகனிடை-ரு, சேர்த்து பாயசம்போல் செய்து தினம் காலையில்-கூ-மணிக்குகொடுத்து-ஙு-ச- மணி நேரஞ்சென்றபிறகு போஜனஞ் செய்யவும் பால் உண்டாகும்.

### இதுவுமது.

பார்லி அரிசியைக் கொண்டு வந்து கஞ்சிகாய்ச்சிக் கொடுத்துவர பால்சுரக்கும்.

### இதுவுமது.

சிற்றாமணக்கு யிலையைக் கொண்டுவந்து வதக்கி மார்பில்போட பால்சுரக்கும்.

### பால் வரண்டுபோக.

மல்லிகைப்பூவாகிலும் அல்லது கோழிக்கீரை யாகிலும் வதக்கிக்கட்ட பால்வரண்டுபோகும் தொந்தரவிராது.

---

## மூலக்காம்பு ரணமாற பத்து.

வெங்காரம்-வ-அவுன்சு, சாராயம்-ஹ-அவுன்ஸ், ஜலம் மூணேமுக்கால் அவுன்சு, இவைகளைச்சேர்த்து அதில் துணியை நனைத்து ரணத்தின் மேல்போட-உ-ஙு, நாளில் ரணம் ஆறும்.

---

## ஸ்தன்னியக் கட்டுக்கு பத்து.

நவாச்சாரம் அவுன்சு (அரிக்கால்) பன்னீர் பயின்ட்(க) இவை ரெண்டுஞ்சேர்த்து அதில் துணியைநனைத்துக் கட்டியின்மேல் போட்டுவர குணமாகும்.

---

## குழந்தைகளின்

## சுரமாந்தத்திற்கு.

குட்டிவிளாயிலை, வெள்ளைப்பூண்டு, அவுரியிலை இந்த மூன்றுதினுசும் வகைக்கு அவுன்சு-க, சேர்த்து வெதுப்பிக் கஷாயஞ்செய்து ஒருபாலடைவீதம் கொடுத்துவர குண மாகும்.

---

## ஊதுமாந்தத்திற்கு.

வேலிப்பரித்தியிலையை வதைக்கிப் பிழிந்தசாறு அவுன் சு-க, சீரசம் கடுகுரோகணி இவைபிரண்டும் வகைக்கு அவுன் சு-வ, சேர்த்து அரைத்துப் பிழிந்தசாற்றில் அரைப் பால டை முலைப்பாலுடன் கலந்து கொடுக்க குணமாகும்.

---

## விஷமாந்தத்திற்கு.

| | |
|---|---|
| நருவேர் | பொடுதலை |
| நொச்சிவேர் | வெள்ளைப்பூண்டு |
| வேலைவேர் | வசம்பு |
| ஓமம் | |

இவைகள் வகைக்கு விராகனிடை-ക, சேர்த்து நொ ரிக்கி வெதுப்பி ஒழக்கு ஜலம்வைத்து அதில்போட்டு ஆழாக் காய் வற்றக்காய்ச்சி வடித்து ஒரு பாலடைவீதம் கொடுக் கக் குணமாகும்.

---

## நீர்மாந்தத்திற்கு.

மூக்கரட்டை வெங்காயம் இவைகளின்சாறு படி அரிக் கால், ஆமணக்கெண்ணெய் படி அரிக்கால், சேர்த்துக்காய்ச் சிவடித்து ஒரு பாலடைவீதம் கொடுத்துவர குணமாகும்.

---

## பால்மாந்தத்திற்கு.

வெள்ளைப்பூண்டு, மிளகு, வசம்பு, இந்துப்பு, பொடு தலைக்காய் இவைகள் வகைக்கு (௩ய) குன்றிமணியிடை

சேர்த்து நொரிக்கி வெதுப்பி ஒழக்கு ஜலத்தில்போட்டு ஆழாக்காய்க் கஷாயஞ்செய்து ஒரு பாலடைவீதம் கொடுத்துவர பால்மாந்தம் குணமாகும்.

---

## செரியாமாந்தத்திற்கு.

| | |
|---|---|
| வசம்பு | மிளகு |
| சடாமாஞ்சில் | வெள்ளைப்பூண்டு |
| ஓமம் | கருஞ்சீரகம் |
| சுக்கு | ஆமையோடு |

இவைகள் வகைக்கு விராகனிடை-க, சேர்த்து நொரிக்கி அரைபடி ஜலத்தில்போட்டு கால்படியாக வற்றக்கஷாயஞ்செய்து ஒரு பாலடைவீதம் கொடுத்துவர செரியாமாந்தம் குணமாகும்.

---

## சுழிமாந்தத்திற்கு.

இண்டின்சாறு, வெங்காயச்சாறு, ஆமணக்கெண்ணெய் வகைக்கு அவுன்சு-உ, சேர்த்து யெரித்து வடித்து ஒரு பாலடைவீதம் கொடுத்துவர குணமாகும்.

## இதுவுமது.

சுக்கு, கழற்சிப்பருப்பு, மஞ்சள் ஒற்றைத்தலைப்பூண்டு பெருங்காயம் வகைக்கு விராகனிடை-க, சேர்த்து முலைப்பாலால் அரைத்து அரைசேர் வேப்பெண்ணெயிற்கலந்து காய்ச்சி வடித்து ஒரு விராகனிடைவீதம் முலைப்பாலில் சேர்த்துக் கொடுத்துவர சுழிமாந்தம் குணமாகும்.

---

## தலைமாந்தத்திற்கு.

வெள்ளெருகு, வெதுப்படக்கி, வேலிப்பருத்தி, பெருந்தும்பை இவைகளின்சாறு வகைக்கு அவுன்சு-க, சேர்த்து அதில் திப்பிலி, வசம்பு, பூண்டு, சதகுப்பை, தேசாவரம் வகைக்கு அவுன்சு (அரிக்கால்) சேர்த்தரைத்து சாற்றில் கலக்கி ஒரு பாலடைவீதம் கொடுத்துவர குணமாகும்.

## மாந்தம்-8-க்கும் விபரம்.

மேற்சொல்லிய 8-வித மாந்தரோகங்கள் தவிர வயருப்பினுல் உப்புமாந்தமென்றும், மலங்கட்டினுல் கட்டுமாந்தமென்றும், கண்சொரிகினுல் சொரிகிமாந்தமென்றும், வாதமதிகமானுல் வாதமாந்தமென்றும், பித்தமதிகரித்தால் பித்தமாந்தமென்றும், சிலேஷ்ம மாந்தமென்றும், இழுப்புமாந்தமென்றும், சன்னிமாந்தமென்றும், பலவாராக சொல்லுவார்கள் ஆகையால் ரோகங்களின் லக்ஷணங்களை அறிந்து மருந்துகளைச் சேர்த்து கொடுக்கவேண்டியது, மேற்கூறிய மாந்தங்களுக்கு இச்சாபத்தியம்.

---

## மாந்தம்-8-க்கும்.

முருங்கைப்பட்டைச்சாறு ١படி-க, நல்லெண்ணெபடி-உ, இவைரெண்டுஞ் சேர்த்து அதில் வசம்பின் சாம்பல் விராகனிடை-உ௦, வெள்ளைப்பூண்டு விராகனிடை-க, இவைகளை பசும்பால்விட்டரைத்து மேற்படி சாற்றில் கரைத்து அடுப்பேற்றி எரித்து வடித்து வைத்துக்கொண்டு ஒரு பாலடைவீதங் கொடுக்க மாந்தம் 8-ம், தீரும் இச்சாபத்தியம்.

## மாந்த வலிப்புக்கு.

குப்பைமேனிச்சாறு, முடக்கத்தான்யிலைச்சாறு மூக்கரச்சாரணைச் சமூலச்சாறு வகைக்கு அவுன்சு-க, ஆமணக்கெண்ணெ அவுன்சு-க, கூடச்சேர்த்து அடுப்பேற்றிக் காய்ச்சிவடித்து ஒரு பாலடைவீதம் கொடுத்துவர குணமாகும், இச்சாபத்தியம்.

---

## வயற்றுப்பொருமல் மாந்தத்திற்கு.

குப்பைமேனிவேர்ப்பட்டை பலம்-ச, வறுத்த ஓமம் விராகனிடை-உ, இவைகளை அரைபடி ஜலத்தில்போட்டு அடுப்பேற்றிக் காய்ச்சி கஷாயமாக்கி வடித்து ஒருபாலடைவீதம் கொடுத்துவர குணமாகும், இச்சாபத்தியம்.

## இதுவுமது.

ஓமம், வசம்பு, வகைக்கு(அரிக்கால்)அவுன்சுயெடுத்து இளம்வருப்பாய் வறுத்து வைத்துக்கொண்டு வேலிப்பரித்தி

யிலைவதக்கி எடுத்தசாற்றில் ஒருசிட்டிகை சூரணத்தைப் போட்டு ஒருபாலடைவீதம் கொடுத்துவர குணமாகும்.

---

## கருங்கிரந்திக்கு.

ஆமணக்கெண்ணெ, கருங்கழுதைலத்திச்சாறு, அவுரியிலைச்சாறு, இவைகள் வகைக்குப்படி (அரிக்கால்) சேர்த்து அதில் வசம்பு வெள்ளைப்பூண்டு வகைக்கு விராகனிடை-க, பொடித்துப்போட்டு அடுப்பேற்றி யெரித்து வடித்து ஒரு பாலடைவீதம் கொடுத்துவர குணமாகும்.

## இதுவுமது.

ஒருபாலடை கழுதைப்பாலில் உ-ங-துளி ஒனான் ரத்தத்தைவிட்டுக் கொடுக்க குணமாகும், ஆனல் தாயார்கடும் பத்தியமாக யிருக்கவேண்டும்.

## செங்கிரந்தி.

முருங்கையிலைச்சாற்றைமுரித்து ஒருபாலடைகொடுக்க குணமாகும், அல்லது முலைப்பாலில் கோரோஜனையை உ-ங-உரைவுரைத்துக் கொடுக்க குணமாகும், இச்சாபத்தியம்.

---

## கிரந்திஒன்பதிற்கும்.

செம்பரித்திஎண்ணெ, செம்பரித்திச்சாறு, தேங்காய்ப்பால், ஆமணக்கெண்ணெ வகைக்குப்படி-க, சேர்த்து அதில் சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலம், கிராம்பு, சுத்திசெய்த ரசகர்ப்பூரம் வகைக்கு விராகனிடை-க, சேர்த்து ஷை தேங்காய்ப்பாலிலரைத்து எண்ணெயிற்கரைத்து அடுப்பேற்றி பதமாகக் காய்ச்சி வடித்து வைத்துக்கொண்டு ஒரு விராகனிடைவீதம் கொடுத்துவர குணமாகும் ஆனலிந்தஎண்ணெ சூலை 18-க்கும் கொடுக்கலாம், இச்சாபத்தியம்.

## சுரத்திற்கு.

கீழ்க்காநெல்லிச்சாறு, பாதரிவேர்ச்சார் இவைகள் வகைக்கு அரிக்கால் அவுன்சுசேர்த்து முலைப்பால் கால் அவுன்சில் சேர்த்துக் கொடுத்துவர சுரம் நிவர்த்தியாகும்.

## தோஷம் 9-க்கும் மாத்திரை.

| | |
|---|---|
| மஞ்சள் | முத்தக்காசு |
| வசம்பு | தேவதாரம் |
| அதிமதுரம் | கடுக்காய் |

வகைக்கு விராகனிடை-உ, சூரணித்து பொடுதலைச் சாற்றாலரைத்து பரித்திவிதை அளவாக மாத்திரைகளாக்கி உலர்த்தி வைத்துக்கொள்ளவும், ஒரு மாத்திரைவீதம் தேனிலாவது முலைப்பாலிலாவது உரைத்துக்கொடுக்க குணமாகும், இச்சாபத்தியம்.

---

## அதிசார பேதிக்கு.

ஒரு ஜாதிக்காயைத் தொளைத்து அதினுள் ஒரு குண்டுமணியிடை அபினியைவைத்து மஞ்சளை அறைத்து அதற்குக் கவசமிட்டு புடம்போட்டு வெந்தவுடனே மஞ்சளை நீக்கி முலைப்பால்விட்டு கல்வத்தில்போட்டு ஒருமணிநேரம் அரைத்து கடுகுபிரமாணம் மாத்திரைகளாக்கி நிழலில் உலர்த்தி வைத்துக்கொள்ளவும், அதில் ஒருமாத்திரைவீதம் முலைப்பாலில் உரைத்து கொடுத்துவர குணமாகும், ஆனால் அதிகமாகக் கொடுத்தால் மயக்கங்காணும் கெடுதிநேரிடும்.

---

## சீதபேதிக்கு.

வில்வப்பழத்து ஓடு சதையுடன் உலர்ந்ததை நொரிக்கி ஜலத்தில்போட்டு காய்ச்சின கஷாயத்தில் ஒரு அவுன்சு வீதம் கொடுத்துவர குணமாகும்.

---

## கால்கடுவனுக்கும் மண்டைக்கடுவனுக்கும்.

| | | | |
|---|---|---|---|
| ஆமணக்கெண்ணெய் படி-வ | | வெங்காயம் விராகனிடை- | ரு |
| வசம்பு விராகனிடை- | ரு | இலுப்பைப்பட்டை ,, | ரு |
| சதுரக்கள்ளிம்பட்டை ,, | ரு | பாலப்பட்டை ,, | ரு |

இதை ஜலம்விட்டரைத்து ஷை வெண்ணெயில் கரைத்து அடுப்பேற்றி யெரித்துவடித்து வைத்துக்கொண்டு ஒருபாலடைவீதம் ரெண்டுநாள் கொடுக்கக் குணமாகும், இச்சாபத்தியம்.

## வட்டருப்பல் மந்தத்திற்கு.

உப்பை வருத்துக்கொட்டின ஒருசட்டியில்-ரு-விராகனிடை வேளைப்பூண்டைபோட்டு வருத்து சிவக்கும்போது உற, விராகநிடை ஓமத்தைச்சேர்த்து வருத்து உ-படி ஜலம்விட்டுக் கால்படியாக வற்றக்காய்ச்சி அதில்-வ-விராகநிடை பெருங்காயத்தைச் சேர்த்து-உ-ரு-பாலடைவீதம் கொடுத்துவர குணமாகும், இச்சாபத்தியம்.

## சிரங்குகள் ஆர.

சந்தணம் நீர்வெடிமுத்து வகைக்கு-ரு-விராகனிடை சேர்த்து ஜலம்விட்டு அரைத்து சிரங்குகளின்மீது பூசிவர குணமாகும்.

## வயிற் றுப்பலுக்கு.

| | | | |
|---|---|---|---|
| நுணாயிலை | ஒருபிடி | சுக்கு | விராகனிடை உ |
| ஓமம் | விராகனிடை உ | வேப்பிலை | ,, உ |
| மிளகு | ,, உ | | |

இவைகளில் நுணாயிலையும், வேப்பிலையும் சட்டியிற் போட்டுவருத்து சிவக்கும்போது மற்றவைகளையும் பொடித்துப் போட்டு ஒருபடி ஜலம்விட்டுக் கால்படியாக வற்றக் காய்ச்சி வடித்து அதில் நாலுபாலடைவீதம் கொடுத்துவர குணமாகும்.

## தொப்புள் புண்ணுக்கு.

வருத்த சிறுகாரத்தைக் கொண்டுவந்து பொடித்து தொப்புளின்மேல் போட்டுவர குணமாகும்.

## இருமலுக்கும் ரத்தம் விழுதலுக்கும்.

காற்படி கோதுமையைக் கொண்டுவந்து ஒருபடி ஜலத்தில் ஊரப்போட்டு ஊறினபின்பெடுத்து மைபோல அரைத்து அந்த ஜலத்தில் கரைத்து வடித்துக் காய்ச்சி கால் சேராக்கி சீனிசர்க்கரை சேர்-க, சேர்த்து சுண்டக்காய்ச்சி புன்னக்காயளவு தினம் உ-தடவை கொடுத்துவர குணமாகும்.

---

## வயற்றில் எண்ணெய்தங்கினால்.

வெந்தயமும் ஜலமும்சேர்த்து கஷாயமிட்டுக் கொடுக்கத்தீரும், அல்லது நாயுருவிவேரும் ஜலமும்சேர்த்து கஷாயமிட்டுக்கொடுக்கத் தீரும், அல்லது ஆமணக்குவேரும் ஜலமும் சேர்த்துக்கொடுக்க யெண்ணெய் கழியும், ஒருவிராகனிடை வேருக்கு கால்படி ஜலம்வைத்துக் கஷாயமிட வேண்டும்.

---

## சாம்பல் மண் தின்னால் அதற்கு.

கத்தரிக்காயில் சார்பிழிந்து அதில் பெருங்காயம் சிறுபயறளவு உரைத்து ஒரு பாலடை கொடுக்கக் குணமாகும், அல்லது முள்ளங்கிச்சாற்றில் மேற்சொன்னபடி பெருங்காயத்தை உரைத்து ஒரு பாலடை கொடுத்துவர சாம்பல் மண் கழியும் குணமாகும்.

---

## பால்உண்ணாவிடில்.

அதிமதுரத்தை முலைப்பாலில் உரைத்து முலைக்காம்பிற் குத்தடவி குழந்தைவாயில் வைத்துக் குடிக்கச் செய்விக்க பால்குடிக்கும்.

---

## குடித்தபாலைக்கக்கினால்.

வெள்ளைப்பூண்டும் ஓமமும் வகைக்கு விராகனிடை-க, சேர்த்து ஆழாக்கு ஜலம்வைத்து அரையாழாக்காய் கஷாயமிட்டு ஒருபாலடைவீதம் கொடுத்துவர குணமாகும்.

## வாந்தியை நிறுத்த.

நன்னாரிவேர்பட்டைச்சாற்றில் மயிலிரகுசாம்பல் அல்லது மிளகு வசம்பு இவைகளின் சாம்பலைச் சேர்த்துக் கொடுக்க குணமாகும் இவைகளைசுட்டு சாம்பலாக்கிக் கொள்ளவும்.

---

## ஜலுப்பிற்கு கியாழம்.

தூதுளையைக்கொண்டுவந்து சார்பிழிந்து ஒருபாலடை வீதம் கொடுக்கத்தீரும். அல்லது துளசியிலையை கொண்டுவந்து புட்டுவைத்து ஒருபாலடை உள்ளுக்குக்கொடுக்கத் தீரும்.

## ஜலுப்பிற்கு பத்து.

வெற்றிலைச்சாற்றில்-வ-விராகநிடை குங்குமம் சேர்த்துக் கொதிக்கவைத்து மூக்கு புருவம் முதலிய இடங்களிற் பற்றுப்போட குணமாகும், அல்லது ஜாதிக்காயை ஜலம் விட்டரைத்து சுடவைத்துப் பற்றுப்போட ஜலுப்புத்தீரும்.

## பேதியை நிருத்த.

| | |
|---|---|
| மஞ்சள் | சிறுநாகப்பூ |
| கடுக்காய்ப்பூ | போஸ்தக்காய் |
| அதிவிடையம் | |

இவைகள் வகைக்குப் பலம்-க, ஜடாமாஞ்சில் பலம்-வ, இவைகளைச் சூரணித்து அரைப்படி கொதிக்குஞ் சலத்தில் போட்டு ரு-மணிநேரம் ஊறவைத்து வடித்துக்கொண்டு-உ பாலடைவீதம்-ந-ரூ-மணிநேரத்திற் கொருவிசை கொடுத்து வர பேதிநிற்கும்.

---

## பேதியுண்டாக.

சிற்றாமணக் கெண்ணெயும் முலைப்பாலும் சமமாகச் சேர்த்து இரண்டையும் நன்றாய்க் கலந்து ஒருபாலடை அல்லது ஒன்னரைபாலடை கொடுக்க மலமிரங்கும், அல்லது காட்டுக் காட்டாமணக்குச் சாறுபிழிந்து ஒரு பாலடை கொடுக்கப் பேதியாகும்.

733



## கக்குவான் தீர நெய்.

மீன்முள்ளு, எலிச்சதை, நத்தைச்சதை, வேங்கைப் புலியின் கண்டத்தோல் இவைகளில் எதையாகிலும் (வ) பலம், எடுத்து (ரு) பலம், பசும்நெய்யில்போட்டுக் காய்ச்சி வடித்துக்கொண்டு (ந-ச) விராகனிடைவீதம் கொடுத்துவர குணமாகும்.

## இதுவுமது.

மிளகு மயிலிறகு இவைகளின் சாம்பலை சமமாக சேர்த்து விராகனிடைவீதம் பசும்நெய்யில் கொடுக்க கக்குவான் தீரும்.

---

## வாய்ரிணத்திற்கு பூசுமருந்து.

(ய) குண்டுமணியிடை படிகாரத்தூள் ஒரு அவுன்சு தேன்சேர்த்து குழைத்து காலை மாலை குழந்தையின் வாய் ரிணத்திற்கு தடவிவர குணமாகும். அல்லது பசும்நெய்யில் கோரோசனையை உரைத்து வாய்ரிணத்திற்குத் தடவிவர ரெணமானது ஆறும்.

---

## நீர்க்கட்டுக்கு.

வெங்காரத்தைப்பொரித்து அரைகுண்டுமணி யிடை முதல் (உற) குண்டுமணிவரைக்கும் வயதுக்குத்தக்கபடி முலைப்பாலிற்கொடுக்க நீர் இறங்கும் குணமாகும்.

---

## அண்டவீக்கத்திற்கு.

| | |
|---|---|
| கழற்சிப்பருப்பு | சாரணைவேர் |
| சுக்கு | முடக்கொத்தான்வேர் |

இவைகள் வகைக்கு அவுன்சு (க) யெடுத்துப்பொடித்து (யந) அவுன்சு ஜலத்தில்போட்டு (சு) அவுன்சு கஷாயமாகும்படி யெரித்து வடித்து ஒருபாலடைவீதம் தினம்ரெண்டு தடவைகொடுக்க குணமாகும்.

---

## அண்டவீக்கத்திற்குக் கட்டு.

சிற்றாமணக்கெண்ணெயும் சிற்றாமணக்கு இலையும் வதைக்கிக்கட்ட குணமாகும்.

---

## சகல சுரங்களுக்கும் குளிர் சுரத்திற்கும் மாத்திரை.

மிளகுவிராகனிடை ஒன்ணே அரிக்கால், பெருங்காயம் அரைபேவிசம் விராகனிடை, கழற்சிப்பருப்பு, மூணேவிச விராகனிடை, இவைகளைச்சேர்த்து தேன் போதுமான வரைக்கும் விட்டு மைபோல் அரைத்து (௩௰) மாத்திரைகளாக்கி பெரியவர்களுக்கு (௨) மாத்திரையும், சிரியவர்களுக்கு (க) மாத்திரையும், தினம் (௨-௩) தடவை கொடுத்து வர சுரந்தீரும்.

---

## விஷசுரத்திற்குக் கியாழம்.

| | |
|---|---|
| நிலவேம்பு | சிந்திற்கொடி |
| பேய்ப்புடல் | சுக்கு |
| வேப்பம்பட்டை | கடுக்காய் |

இவைகள் வகைக்கு விராகனிடை (ரு) பொடித்து ஒரு படி ஜலத்தில்போட்டு அடுப்பேற்றி யெரித்து நாலில் ஒன்றாக்கி கால் ஆழாக்குவீதம் கொடுத்துவர விஷசுரந்தீரும்.

---

## பழயசுரத்திற்குக் கியாழம்.

| | |
|---|---|
| பற்பாடகம் | ஆடாதோடை |
| சிறுதேக்கு | முத்தக்காசு |
| கோஷ்டம் | நில்வேம்பு |
| சிந்திற்கொடி | சுக்கு |
| திப்பிலி | சிறுகாஞ்சொரி |

இவைகள் வகைக்கு விராகனிடை (ரு) சேர்த்துப்பொடித்து நாலுபடி ஜலத்தில்போட்டு அடுப்பேற்றி யெரித்து ஒரு படியாக்கி வீசம்படி வீதம் கொடுத்துவர பழையசுரந் தீரும் இச்சாபத்தியம்.

---

735



## அஸ்திசுரத்திற்குச் சூரணம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தாளிசப்பத்திரி | பலம் | உ | சீரகம் | பலம் | ௨ |
| ஏலம் | ,, | ௨ | திப்பிலி | ,, | ௨ |
| கிராம்பு | ,, | ௨ | கோஷ்டம் | ,, | ௨ |
| ஜாதிக்காய் | ,, | ௨ | அக்கிராகாரம் | ,, | ௨ |
| ஜாபத்திரி | ,, | ௨ | கடுக்காய் | ,, | ௨ |
| வால்மிளகு | ,, | ௨ | தானிக்காய் | ,, | ௨ |
| லவங்கப்பட்டை | ,, | ௨ | நெல்லிவற்றல் | ,, | ௨ |
| வாய்விளங்கம் | ,, | ௨ | சடாமாஞ்சில் | ,, | ௨ |
| மல்லி | ,, | ௨ | சோம்பு | ,, | ௨ |

இவைகளை நிறுத்தெடுத்து இளம்வறுப்பாய் வறுத்து சூரணித்து வஸ்திரகாயஞ்செய்து அத்துடன் (ரு) பலம் சீனியைச்சேர்த்து வைத்துக்கொண்டு தினம் காலே மாலே இரண்டு வேளேயும் திரிகடிப்பிரமாணம் சாப்பிட்டுவர அஸ்திசுரம் அஸ்திவெட்டை தீரும், இச்சாபத்தியம்.

---

## அசாத்திய சுரத்திற்குக் கியாழம்.

தேவதாரம் சுக்கு கொத்தமல்லி வகைக்கு விராகனிடை (ய) நிறுத்தெடுத்து பொடித்து ஒருபடி ஜலத்தில் போட்டு அடுப்பேற்றி யெரித்து கால்படியாய் வற்றினபின் வடித்து அதில் நாலிலொருபாகம் தினம் காலே மாலே இரண்டுதடவை கொடுத்துவர தீரும், இச்சாபத்தியம்.

---

## அதிசார சுரத்திற்குக் கியாழம்.

வில்வப்பழச்சதை, நிலவேம்பு, முத்தக்காசு, மாம்பட்டை, சுக்கு, பெருமரத்துப்பட்டை வகைக்கு விராகனிடை (ய)நிறுத்தெடுத்து பொடித்து இரண்டுபடி ஜலத்தில்போட்டு அரைபடியாய் வற்றக்காய்ச்சி வடித்து நாளொன்றுக்கு வீசம்படி வீதம் கொடுத்துவர அதிசாரசுரம் தீரும், இச்சா பத்தியம்.

---

## நடுக்கல் சுரத்திற்குக் கியாழம்.

| | |
|---|---|
| சுக்கு | பற்பாடகம் |
| கோஷ்டம் | குமிழ்வேர் |

தேவதாரம் சிறுதேக்கு
கடுக்காய் கண்டங்கத்திரி

இவைகள் வகைக்கு விராகனிடை (௫) நிறுத்தெடுத்து பொடித்து (௧) படி ஜலத்தில்போட்டு ($\frac{1}{8}$) அரிக்கால் படியாகும்படி வற்றக்காய்ச்சி கொடுக்கத்தீரும், இச்சாபத்தியம்.

## இதுவுமது.

மிளகு விராகனிடை (௫) யெடுத்து நெய்யில் வறுத்து பொடித்து கால்படி ஜலத்தில்போட்டு வீசம்படியாய் வற்றக்காய்ச்சிக் கொடுக்கக் குணமாகும்.

---

## அஜீர்ணசுரத்திற்குக் கியாழம்.

சுக்கு, கடுக்காய், தானிக்காய், நெல்லிவற்றல், பேருமுட்டி, சிற்றுமுட்டி வகைக்கு விராகனிடை (௧௭) நிறுத்தெடுத்துப்பொடித்து அரைபடி ஜலத்தில்போட்டு கால்படியாய் வற்றக்காய்ச்சி இருவேளை கொடுத்துவர அஜீர்ணசுரந் தீரும், இச்சாபத்தியம்.

---

## விடாசுரத்திற்கு.

மிளகு விராகனிடை (௭) அவுரிவேர் விராகனிடை (௧௭) இவைகளை அரைத்து வென்னீரில் கலக்கி அதில் அரைபலம் இடை சுண்ணாம்பைப்போட்டு மிசிரித்துக்கொடுத்துவர குணமாகும், இச்சாபத்தியம்.

---

## வாதசுரத்திற்குக் கியாழம்.

சுக்கு, கிராம்பு, கோரைக்கிழங்கு, நிலவேம்பு, கொத்துமல்லிவிதை வகைக்கு விராகனிடை (௫) பேய்ப்புடல் விராகனிடை (௨௰) இவைகளை நிறுத்தெடுத்தும்பொடித்து ஜலத்தில்போட்டுக் காய்ச்சி கஷாயஞ்செய்து அத்துடன் கொஞ்சம் தேன்விட்டு (௨) அவுன்சு விதம் காலைமாலை கொடுத்துவர தீரும்.

---

## சிலேஷ்மசுரத்திற்குக் கியாழம்.

செம்முள்ளி தூதுளை
சுண்டை கண்டங்கத்திரி

இவைகளின்வேர்கள் சுக்கு வகைக்கு விராகனிடை (சு) நிறுத்தெடுத்துப் பொடித்து (உ) படி ஜலத்தில்போட்டு கால்படியாக வற்றக்காய்ச்சி வடித்து அதில் வீசம்படிவீதம் தினம் காலே மாலே இரண்டுதடவை கொடுத்துவர குணமாகும் இச்சாபத்தியம்.

---

## யானைக்கால் சுரத்திற்குக் கியாழம்.

சிந்திற்கொடி பலம் (க) கொண்டுவந்து அரைப்படி ஜலத்தில்போட்டு கஷாயஞ்செய்து தினம் காலையில் சாப்பிட்டுவர நின்றுவிடும்.

---

## ஊஷ்ண சுரத்திற்குக் கியாழம்.

ஒரு அவுன்சு வில்வவேர்பட்டையை ஒரு ஆழாக்கு ஜலத்தில்போட்டு (೨) ஆழாக்காகவற்றக்காய்ச்சி அரிக்கால் ஆழாக்குவீதம் தினம் (உ) தடவை கொடுக்க ஊஷ்ணசுரம் குணமாகும், இச்சாபத்தியம்.

---

## நேத்திரரோகங்கள் சுசு-க்கும் அஞ்சனம்.

சிறுகீரை, பூலா, பொன்னாங்காணி இவைகளின்வேர், துத்தம், துரிசி, திப்பிலி, புளியம்பூ, இவைகள் வகைக்கு விராகனிடை (ரு) நிறுத்துச் சேர்த்து யெலுமிச்சம் பழச்சாற்றால் மைபோலரைத்து நீண்டமாத்திரைகள் செய்து உலர்த்தி வைத்துக்கொண்டு யெலுமிச்சம் பழச்சாற்றில் உரைத்துக் கண்களில்போட குணமாகும்.

---

## கண்ணெரிவிற்கு

## மிளகு அஞ்சனம்.

வெள்ளாட்டுப் பிச்சியைக் கொண்டுவந்து அதிலுள்ள நீர் வெளியேபோகாமற்படிக்குமிளகை அதிலுள் கொண்ட மட்டும் நிரைப்பி வாயைக்கட்டி நிழலில்தூக்கிட்டுக் கட்டி வைத்து மிளகு உலர்ந்தபிறகு யெடுத்துவைத்துக்கொண்டு ஒருமிளகை ஜலம்விட்டு உரைத்து தினம் (உ) தடவை கண்ணிலிட குணமாகும், ஆனால் இதை (க) மண்டலும் அல்லது அரைமண்டலம் இடவேண்டும்.

---

## கண்ணோவுக்கு மருந்து.

(கூ) குண்டுமணியிடை படிகாரத்தை (க) அவுன்சு ஜலத்தில்போட்டுக் கரைத்து குழந்தையின் கண்ணோவுக்கு தினம் தினம் (ச-ரு) தடவை கண்ணிலிட்டு கண்களைக் கழுவவும் அல்லது துணியைமடித்து நனைத்து கண்களின்மேல் போடவும் பெரியவர்களுக்கு அதிகமாய் சீனுகாரத்தைச் சேர்த்துக் கொண்டு ஜலத்தைக் கண்ணிலிட குணமாகும்.

---

## கண்ணோவுக்கு ஒத்தடம்.

போஸ்தக்காயும் துத்தியிலையும் ஓர் அளவாக ஜலத்தில் போட்டு காய்ச்சி சுடசுட்டெடுத்து ஒத்தடங் கொடுக்க குணமாகும்.

---

## கண்குளிர்ச்சிக்கு மருந்து.

சிற்றாமணக்குவேர் பலம்(உ)கொண்டுவந்து அரைத்து அரைபடி பசும்பாலில் சேர்த்துக்காய்ச்சி புரைகுத்தி மறுநாள் காலையில் யெடுத்துக் கடைந்து அதில்வரும் வெண்ணெயை யெடுத்து வைத்துக்கொண்டு கண்களில் தீட்டிவர கண்குளிர்ச்சியாகும்.

---

## கண்றெப்பை வீக்கத்திற்கு
## ஒ த் த ட ம்.

பசும்பாலைக் காய்ச்சி சுடசுட ஒத்தணம் கொடுக்கக் குணமாகும், அல்லது மிளகை ஜலம்விட்டு உரைத்து ரெப்பையின் மேல்போட குணமாகும், அல்லது சங்கை கரிவேப்பிலைச் சாற்ருல் உரைத்துத் தடவிவர குணமாகும்.

---

## கண்சிவப்பு பூவிழுதலுக்கு.

புளியன் கொட்டைத்தோல், தேற்ரும்விதை, கடுக்காய்த்தோல் வகைக்கு விராகனிடை (க) சேர்த்து மை போல் அரைத்து துணியில் மூட்டைகட்டி பசும்பாலில் ஊர வைத்து கண்ணில் பிழிந்துவர குணமாகும்.

---

## கண்படலம் எ - க்கும் பத்து.

(க) பலம் வெள்ளைப்பூண்டை பசுவின்மூத்திரத்தில் அரைத்து இராத்திரியில் படுக்கைக்குப் போகும் பொழுது சிரசின்மேல் (எ) நாள் பத்துபோட குணமாகும், ஆனல் பெருங்காயத்தைநீக்கி இச்சாபத்தியமாகயிருக்கவேண்டும்.

---

## வேறுமுறை அஞ்சனம்.

சமுத்திரத்திலுள்ள ஆமைஒட்டை ஜலத்தில்போட்டு வேகவைத்து நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு பிறகு முலைப்பாலில் உரைத்து கண்ணிலிட குணமாகும்.

---

## கர்னரோகங்களுக்கு தைலங்கள்.

நிலப்பனங்கிழங்கைக் கொண்டுவந்து (ரு) விராகனிடை நிறுத்தெடுத்து அரைத்து அரைபடி நல்லெண்ணெயில் சேர்த்து அடுப்பேற்றி யெரித்து வடித்து ஸ்நானஞ் செய்துவர குணமாகும், பகல் நித்திரை நீக்கவும், இப்படி ஸ்நானஞ்செய்துவர கர்னநோய் (உரு-ம்) தீரும், கர்னரோகமென்பது காதுநோய்.

---

## காதுநோயிற்கு முசுறுமுட்டை யெண்ணெய்.

| | |
|---|---|
| குங்கிலியம் | கோழிமுட்டைமஞ்சட்கரு |
| வசம்பு | வெள்ளைப்பூண்டு |
| பூவரசன்காய் | நண்டிரைச்சி |
| முசுறுமுட்டை | |

இவைகள் வகைக்கு விராகனிடை (உ) சிதைத்து கால்படி வேப்பெண்ணெயிற்சேர்த்து அடுப்பேற்றி யெரித்து வடித்து (ச-ரு) துளிகள்விட குணமாகும், முசுறுமுட்டை யென்பது ஓர்விதயெரிம்பின்முட்டை கடையில் கிடைக்கும்.

## இதுவுமது.

| | | |
|---|---|---|
| வெங்காயம் | விராகனிடை | உ |
| வசம்பு | ,, | உ |
| மஞ்சள் | ,, | ச |

இவைகளை பொடித்து ஒருபடி வேப்பெண்ணெயில் கரைத்து அடுப்பேற்றி யெரித்துவடித்து வைத்துக்கொண்டு (ச-ரு) துளி காதில்விட்டுவர காதுரோகங்கள் தீரும்.

---

## காதில்வரும் சீழ்நிற்க யெண்ணெய்.

ஒருசேர் வேப்பெண்ணெயில் வசம்பு வெள்ளைப்பூண்டு பெருங்காயம் வகைக்கு விராகனிடை (க) சூரணித்துப் போட்டு அடுப்பேற்றி யெரித்து வடித்து வைத்துக்கொண்டு காதில் (ரு-அ) துளிவிட்டுவர காதில்வரும் சீழ்நிற்கும் குணமாகும்.

## இதுவுமது.

ஒருசேர் வேப்பெண்ணெயில் கால்சேர் வில்வப்பழச் சதையைப்போட்டு அடுப்பேற்றி யெரித்து வடித்து வைத்துக்கொண்டு வேளையொன்றுக்கு (ச-ரு) துளிவிட குணமாகும்.

---

## காதுஇரைச்சல்தீர எண்ணெய்.

உ௰-அவுன்சு நல்லெண்ணெயில் உ-அவுன்சு தைவேளைச் சாரைசேர்த்து அடுப்பேற்றி யெரித்து வடித்து காதில்-ரு-சு துளிவிட்டுவர காதிரைச்சல் தீரும்.

## இதுவுமது.

முசுமுசுக்கையிலைச்சாறு படி (அரிக்கால் நல்லெண்ணெ படி (அரிக்கால்) இவை ரெண்டையுஞ்சேர்த்து அதில் வெள்ளைப்பூண்டு விராகனிடை-ரு, எடுத்து ஷெ சாற்று லரைத்துக் கரைத்து அடுப்பேற்றி யெரித்துவடித்து வைத்துக்கொண்டு காதில்விட்டுவர இரைச்சல் நிற்கும்.

## காதுமந்தம்தீர இஞ்சிச்சாறு.

முக்காலரிக்காவிராகனிடை இஞ்சிச்சாறும், ஒருவிராகனிடை குதிரைலெத்திச்சாறும், இவை ரெண்டும்சேர்த்து ச-ரு துளிவிட்டுவர காதுமந்தம் தீரும்.

## இதுவுமது.

உ-அவுன்சு புங்கம் பெண்ணெயில் இரண்டேமுக்கால் விராகனிடை பன்றிமுள்ளைச் சிதைத்துப்போட்டு அடுப்பேற்றி யெரித்து வடித்து வைத்துக்கொண்டு அதை காதில் விட்டு பஞ்சால் அடைத்து (ச) நாள்வரையில் காற்றுப் புகாமல் வைத்து இருக்கக் குணமாகும்.

## காதுப் புழுவுவிழ.

முருங்கையிலைச்சாறு-ரு-அவுன்சு, நல்லெண்ணெ-ச-அவுன்சு இவைரெண்டுஞ்சேர்த்து அடுப்பேற்றி யெரித்து வடித்து வைத்துக்கொண்டு காதில்விட்டுவர குணமாகும், புழு வெளியாகும்.

## காதுயெகுக்ஷிதீர.

ஒரு அவுன்சு நல்லெண்ணெயில் கிலுகிலுப்பை வேர் (௰) அவுன்சு அரைத்துப்போட்டு அடுப்பேற்றி யெரித்துவடித்து வைத்துக்கொண்டு ரு-சு-துளிகாதில் விட்டுவர காது யெகுட்சி குணமாகும்.

## கா து வ லி தீ ர.

அபினிப்பாவன திராவகமும் தேங்காயெண்ணெயும் சமனிடையாய்ச்சேர்த்து வைத்துக்கொண்டு (ங-சு) துளி காதில் விட்டுவரகுணமாகும்.

---

## சிரரோகங்களுக்கு வைத்தியம்.

## ஒற்றைத்தலைநோய்தீர தைலம்.

இஞ்சிச்சாறும் நல்லெண்ணெயும் வகைக்கு அவுன்சு (ச) சேர்த்து அடுப்பேற்றி யெரித்து வடித்து ஸ்நானஞ் செய்து வர ஒற்றைதலைநோய் தீரும்.

---

## இருபக்கத் தலைநோய்தீர தைலம்.

பேய்ப்புடல் சாறும் நல்லெண்ணெயும் வகைக்குசேர் (க) சேர்த்து அடுப்பேற்றி யெரித்து வடித்து வைத்துக்கொண்டு ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

---

## நீர்கொண்ட மண்டையிடிக்கு புகை.

கர்ப்பூரம், மிளகு, சதகுப்பை, கடுகு, திப்பிலி, மஞ்சள், மரமஞ்சள் வகைக்கு விராகனிடை (க) நிறுத்து பெடுத்து குன்றிமணியிலைச் சாற்றால் மைபோல் அரைத்து மல்துணி யில் தடவித் திரியாக்கி உலர்த்தி கொளுத்தி அதில்வரும் புகையை நாசியில் பிடிக்க மண்டைநோய் தீரும்.

---

## கபாலவாயுவிற்குத் தைலம்.

குப்பைமேனிச்சாறு படி (கஉ) நல்லெண்ணெய்படி (உ) இவை ரெண்டுஞ் சேர்த்து அடுப்பேற்றி யெரித்து வடித்து ஸ்நானஞ்செய்துவர குணமாகும்.

## கபாலவர்ய்வுக்குப் புகை.

நெருக்கன்வேர் விராகனிடை (உ௫) அரிதாரம் (உ௫) இவை ரெண்டையுஞ்சேர்த்து வெலுமிச்சம்பழச் சார்விட்டு மைபோலரைத்து மல்துணியில் தடவித் திரியாக்கி உலர்த்தி கொளுத்தி அதில்வரும் புகையை நாசியில்பிடிக்க கபால வாய்வு கபாலவலி மண்டையிடி ஒற்வறத்தலிவலி இவைகள் தீரும்.

## சுவாசகாசம் க்ஷயம் இருமல் இவைகளுக்கு.

## வைத்தியம்.

### காசம்-96-க்கும் சூரணம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| திப்பிலி | பலம் | ௫ | மிளகு | பலம் | உ௫ |
| சுக்கு | , | உ௫ | சோம்பு | , | ௫ |
| குரோசானிஓமம் | , | ௫ | சீரகம் | , | ௫ |
| தும்மராஷ்டகம் | , | ௫ | சன்னராஷ்டகம் | , | ௫ |
| தாளிசப்பத்திரி | , | ௫ | லவங்கப்பத்திரி | , | ௫ |
| லவங்கப்பட்டை | , | ௫ | கடுக்காய் | , | ௫ |
| தானிக்காய் | , | ௫ | நெல்லிமுள்ளி | , | ௫ |
| லவங்கம் | , | ௫ | ஏலம் | , | ௫ |
| சித்திரமூலம் | , | ௫ | | | |

இவைகளை நிருத்து யெடுத்து இளம்வருப்பாய் வருத்துச் சூரணித்து வஸ்திரத்தில் வைத்து அத்துடன் சீனிசேர் (உ) சேர்த்து தேன்விட்டுப் பிசைந்து வைத்துக்கொண்டு தினம் காலை மாலை யிருவேளையும் கொட்டைப்பாக்குப் பிரமாணம் சாப்பிட்டுவர காசம்முதலிய (கசு) ம் கபரோகங்களும் தீரும் இச்சாபத்தியம்.

## சுவாசகாசத்திற்குப் புகை.

ஒரு விராகனிடை பொட்டிலுப்பை (க) படி ஜலத்தில் கரைத்து அதில் ஒருதளமான கடுதாசியைத் தோய்த்து கொஞ்சம்நேரம் ஊரவைத்துப் பின்பு காற்றில் உலர்த்தி ஒரு சுங்கானில் வைத்துக்கொளுத்தி அதில்வரும் புகையை உட்கொண்டால் உடனே குணமாகும்.

## காசம்-5-க்கும் எண்ணெய்.

யானையின் நகத்தைக் கொண்டுவந்து கத்தியால் சீவி ஒரு விராகனிடை யெடுத்து ஒருசேர் வேப்பெண்ணெயைக் காய்ச்சி அதில் சீவினநகத்தைப்போட்டுக் கரிகிப்போகாமல் பதத்தில் யிறக்கி வடித்து வைத்துக்கொண்டு ஒரு விராகனிடை வீதம் சாப்பிட்டுவர காசந்தீரும், இச்சாபத்தியம்.

## இதுவுமது.

குன்றிமணியிடை தங்கரேக்கைக் கொண்டுவந்து போஜனஞ்செய்யும்போது முதல் அன்னத்தில் மேல்போட்டு நெய் யைக்காய்ச்சி அதின்மேல்விட்டு பிசைந்து சாப்பிட்டுவிட்டு பிறகு பத்தியமாக வழக்கப்படிச் சாப்பிட்டுவர காசந்தீரும்.

---

## ரத்தகாசந்தீரப் பால்.

முக்கால்விராகனிடை படிகாரத்தை (அ) அவுன்சுபசும் பாலில் போட்டுக் காய்ச்சி ஆறினபின் அரை அவுன்சுவீதம் தினம் (ந) தடவை கொடுக்க ரத்தகாசம் குணமாகும்.

---

## இருமலுக்கு மிளகு சூரணம்.

ஒரு குமட்டிக்காயைக் கொண்டுவந்து அதற்கு ஒரு சிரு துவாரஞ்செய்து அதில் மிளகைச் செலுத்தி நிழலிலுலர்த்தி யெடுத்தமிளகில் ஒரு தடவைக்கு (எ) மிளகை சூரணித்து அத்துடன்தேன் திப்பிலித்தூள் இவைகளைச்சேர்த்துச் சாப்பிட்டுவர குணமாகும் இருமல் நிற்கும்.

## இதுவுமது.

குன்றுமணியில் கருப்பு சிவப்பு வெள்ளையென ந-விதங்களுண்டு, அதிலொன்றைக் கொண்டுவந்து அந்த யிலையை உலர்த்தி சூரணித்து அத்துடன் சர்க்கரைசேர்த்து தினம் திரிகடிவீதம் சாப்பிட்டுவர இருமல்தீரும்.

---

## கிரகணிரோகம்-11-க்கும் வைத்தியம்.

### கிரகணி-11-ந்திர மாத்திரை.

மாதுளம்பிஞ்சி, ஜாதிக்காய், ஜாதிப்பத்திரி, கருவாப் பிசின், காந்தம், கல்மதம், லிங்கம், இந்த (எ) தினுசும் வகைக்குப் பலம்-க, நிறுத்தெடுத்து சுத்திசெய்து சேர்த்துக் கல்வத்தில் போட்டு அத்திபால்விட்டு (உ) ஜாமம் அரைத்து குன்றிமணி அளவாக மாத்திரைகளாக்கி நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு தினம் (உ-ஙு) தடவை ஒரு மாத்திரைவீதம் பெல்லத்தில் கொடுத்துவர குணமாகும்.

---

### வாய்வுகிரகணி ஊஷ்ணபேதிக்கு சூரணம்.

நூறுவருஷஞ்சென்ற வேப்பமரத்தின் பட்டைவெட்டி உலர்த்தி விராகனிடை-உ0, மிளகு விராகனிடை-ய௨0, இவைரெண்டுஞ்சேர்த்துச் சூரணித்து அத்துடன் சர்க்கரை விராகநிடை (பதினெட்டேமுக்கால்) சேர்த்து வைத்துக் கொண்டு உ-விராகனிடைவீதம் (எ) நாள் சாப்பிடக் குணமாகும்.

---

### வாதபித்த சிலேஷ்ம கிராணிகளுக்கு அடை.

ஒருபலம் சீரகத்தை ஒருபலம் கொட்டாங் கரந்தையுடன்சேர்த்து மைபோலரைத்து சிறுவடைகளாகத்தட்டி நல்லெண்ணெயில் வருத்து தினம் ஒருவடை சாப்பிட குணமாகும், இச்சாபத்தியம்.

---

### வயறுகடுப்புத்திர சூரணம்.

சீரகம் விராகனிடை-க, வெங்காயம் விராகனிடை-உ, கற்கடகசிங்கி விராகனிடை-ச, இவைகளை இளம்வருப்பாய் வருத்து சூரணித்து வைத்துக்கொண்டு திருகடிகைவீதம் பெருமைத்தயிரில் கொடுக்கத் தீரும்.

---

### வயர்கடுப்பில் வேறுமுறை.

(எ) பலம் சீரகத்தை இளம்வருப்பாய் வருத்து சூரணித்து ஒருபலம் சீனிகற்கண்டுப் பொடியை சேர்த்து வைத்

துக்கொண்டு தினம் (௩) விராகனிடைவீதம் பசும் நெய்யில் சாப்பிட்டுவர குணமாகும்.

---

## வயர்கடுப்பிற்கு வேறுமுறை.

ஒருபலம் ஒருதலை வெள்ளைப்பூண்டைக் கொண்டுவந்து அதற்கு கரிஉப்பை அரைத்து கவசஞ்செய்து உமிக்காந்தலில் வெதுப்பி பருப்பையெடுத்து அரைத்துத் தயிரில் கொடுக்கக் குணமாகும்.

---

## வயர்கடுப்பிற்கு வேறுமுறை.

வெங்காயம் விராகனிடை (க) சீரகம் விராகனிடை(௨) கற்கடகசிங்கி விராகனிடை (௨) இவைகளை இளம்வருப்பாய் வருத்து சூரணித்து பெருமைத்தயிரில் கொடுக்கத்தீரும்.

---

## மூலக்கடுப்பிற்குச் சூரணம்.

வெந்தியம், நெல்லிவற்றல், சுண்டக்காய்வற்றல், மாம்பருப்பு, கருவேப்பிலை, ஓமம் மாதுளம்பழத்தோல் வகைக்கு விராகனிடை ஒண்ணுயெடுத்து இளம்வருப்பாய் வருத்துச் சூரணித்து வைத்துக்கொண்டு தினம்(௩) விராகனிடைவீதம் தயிரில் கொடுக்கக் குணமாகும்.

---

## சகலகழிச்சலுக்கும் கஷாயம்.

புளியாரை, வாழைப்பூ வகைக்கு(ச) அவுன்சயெடுத்து பிட்டவிழ்த்துப் பிழிந்தசாற்றில் தேன் (ய) துளிவிட்டுக் கொடுக்க சகல கழிச்சலும் தீர்க்கும்.

---

## அதிசாரரோகங்களுக்கு வைத்தியம்.

### அதிசாரம் 6-க்கும் சூரணம்.

ஓமத்தின் அரிசியும், காட்டாத்திப்பூவும் வகைக்குவிராகனிடை-ய, எடுத்து சூரணித்து திரிகடிகை பிரமாணம் இஞ்சிச்சாற்றில் கொடுத்துவர குணமாகும்.

## சுரமில்லாத அதிசாரத்திற்கு சூரணம்.

காசிக்கட்டி விராகனிடை காலும், கருவாப்பட்டை விராகனிடை காலும், எடுத்து சூரணித்து தேனில் கலந்து கொடுக்க உடனே தீரும்.

---

## அதிசார சீதபேதிக்கு மாத்திரை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ஜாதிக்காய் | விராக | க | ஜாதிப்பத்திரி | விராக | க |
| மாசிக்காய் | ,, | க | கடுக்காப்பூ | ,, | க |
| சீரகம் | ,, | க | அதிவிடையம் | ,, | க |
| லவுங்கப்பூ | ,, | க | அபினி | ,, | க |
| வெந்தயம் | ,, | க | கசகசா | ,, | க |
| கோரோஜனம் | ,, | க | | | |

இந்த பதினோருசினுசையும் கல்வத்தில்போட்டு முலைப் பால்விட்டு அரைத்து உளுந்துப்பிரமாணம் மாத்திரைகள் செய்து நிழலிலுலர்த்தி வைத்துக்கொண்டு பெரியவர்களுக்கு (உ) மாத்திரையும், குழந்தைகளுக்கு (ஹ) முதல் (க) மாத்திரையும் தேனிலுரைத்துக்கொடுக்கக் குணமாகும் இச்சாபத்தியம்

---

## அஜீரணபேதிக்கு கஷாயம்.

(உ) விராகனிடை ஓமம், ஒருபிடி பெரண்டையும் சேர்த்தரைத்து ஹ-படி ஜலத்தில்போட்டு ஆழாக்குபடியாய் வற்றக் காய்ச்சிக் கொடுக்கக் குணமாகும் பேதிநிற்கும்.

---

## சீதபேதிரோகங்களுக்கு வைத்தியம்.

| | | |
|---|---|---|
| சுக்கு | பலம் | க |
| கிராம்பு | விராகனிடை | க |
| கண்டத்திப்பிலி | ,, | க |

இவை மூன்றையுங் கல்வத்தில்போட்டு எருமைத்தயிர் விட்டு மைபோலரைத்து சுத்தமான சிறுதுணிகளில் கொஞ்சம் கொஞ்சமாகவைத்து முடித்து ஒருசட்டியில் ஹ-படி எருமைமோர்விட்டு அதில்மேற்படிமுடிச்சிகளெல்லாம்போட்டு

அடுப்பேற்றி எரிக்க அவைகள்வெந்து மேலே மிதக்கும் அப்போது எடுத்து அத்துடன் ரு, விராகனிடைதேனும் ரு-விராகனிடை நெய்யுஞ்சேர்த்து வைத்துக்கொண்டு பாக்களவு கொடுத்துவர சீதபேதிநிற்கும்.

---

## சீதபேதிக்கு மாத்திரை.

உ0-விராகனிடை ஜாதிக்காயைச் சீலைமண் செய்து (உ) எருவில் புடம்போட்டு எடுத்து நெய்யும் தேனுஞ்சேர்த்து கல்வத்திலிட்டு அரைத்து பாசிப்பயர் பிரமாணம் மாத்திரைகள் செய்து உலர்த்திவைத்துக்கொண்டு வேளைக்கு ஒருமாத்திரைவீதம் முலைப்பாலில் இழைத்து காலை மாலை யிருவேளையுங் கொடுத்துவர சீதபேதிதீரும், தீபனம் ரத்தவிர்த்தி யுண்டாகும், இச்சாபத்தியம்.

---

## குழந்தைகளுக்கு வேறுமுறை.

மாம்பருப்பும் கருவேப்பிலையும் சமமாகச்சேர்த்தரைத்து பிழிந்தரசத்தில் (க) விராகனிடை கொடுக்க வேண்டும் ஆனால் ச-மணிக்கு ஒருவிசை கொடுக்கவேண்டும் அப்படி கொடுத்துவரக் குணமாகும்.

---

## பெரியவர்களுக்கு வேறுமுறை.

| | | |
|---|---|---|
| கடுக்காய்ப்பூ | விராகனிடை | ச |
| வெங்காயம் | , | ச |
| சீரகம் | , | க |

இவைகளை வெதுப்பி அரைத்து எருமைத்தயிரில் கரைத்துக்கொடுக்கக் குணமாகும்.

---

## குழந்தைகளுக்கு வேறுமுறை.

மாசிக்காய் தேரினதாய்-க, கொண்டுவந்து நொறுக்கி நெய்யில்வறுத்து சூரணித்து (உ0) குன்றிமணி யெடை தேனில் கொடுக்கக் குணமாகும்.

---

## பல்-நாக்கு-வாய்-ரோகங்களுக்கு வைத்தியம் உண்ணுக்குவளர்த்தியால் காணும் இருமல்தீர பத்து.

நவாக்ஷாரத்தை தூள்செய்து உண்ணாக்கின் பேரில் தடவ உண்ணுக்குவளர்ந்துகாணும் இருமல் உ-ந-வேளையில் தீரும்.

### இதுவுமது

நவாக்ஷாரமும் கல்சுண்ணும்பும் சமமாகச் சேர்த்து பெலுமிச்சம்பழச் சார்விட்டரைத்து உண்ணாக்கில் தடவ குணமாகும்.

---

## ரிணவாடை பிடிக்கு கொப்பளிக்கும் கியாழம்.

கருவேலம்பட்டையைக் கொண்டு வந்து சிதைத்து ஜலத்தில்போட்டுக் காய்ச்சினகஷாயத்தில் வாயைக் கொப்பளித்து வரக்குணமாகும்,

---

## தொண்டைகரகரப்பிற்கு சூரணம்.

ஒருவிராகனிடை மஞ்சளை தூள்செய்து கால்படி பசும் பாலில் போட்டுக் காய்ச்சி சாப்பிடக் கரகரப்புத்தீரும்.

### இதுவுமது

முக்காவேளைவேர் விராகனிடை(வ)முசுமுசுக்கைவேர் விராகனிடை (க) இவைகளைப் பொடித்துக் கால்படி பசும் பாலில் போட்டுச் காய்ச்சிக்கொடுக்கக் கரகரப்புத்தீரும்.

---

## சுண்ணும்பைத்தின்ன வாய்ரிணத்திற்குக் கியாழம்,

மஞ்சளை பரைத்துரணத்தின்மேல் தடவி ஒரு நிமிஷம் வைத்திருந்து பிறகு வாயை ஜலம் வார்த்துக்கொப்பளிக்க இவ்விதமாய் தினம் (ந-ச) தடவைசெய்ய ரிணம் ஆரும்.

---

## நெஞ்சு ரிணத்திற்குக் கியாழம்.

படிகாரம் ஒண்ணேமுக்கால் விராகனிடை மாசிக்காய் கஷாயம் (௰அ) அவுன்சு, தேன் ஒண்ணேமுக்கால் விராகனிடை இவைகளைச் சேர்த்துக் கலந்து வாய் கொப்பளிக்க நெஞ்சுப்புண் ஆறும்.

---

## தொண்டை கம்மலுக்கு.

கடலைப்பிரமாணம் காசிக்கட்டியை வாயிலடைக்கி வைத்துக்கொண்டு ரசத்தை மிழுங்க கம்மல் தீரும்.

---

## தொண்டைநோயிற்கு கியாழம்.

(கஉ) விராகனிடை மொளகாய்தூளும் (ச) அவுன்சு ரோஜாப்பூக் கஷாயமும் இவைகளைச் சேர்த்து வாயைக் கொப்பளிக்க குணமாகும்.

---

## வாய்ரிணத்திற்கு கஷாயம்.

படிகாரம் விராகனிடை (உ) ஜலம் சேர் (க) தேன் விராகனிடை (உ) இவைகளைச்சேர்த்து வாயைக்கொப்பளித்து விழிய வாய்ரிணம் அதிசீக்கிரத்தில் ஆரும் அல்லது கருவேலன் பட்டை கஷாயத்தையும் கொப்பளிக்க வாய்ரிணம் ஆரும்.

---

## தந்தவாயுக்குப்பொடி.

ஒரு சிறுகலையத்தில் கரியுப்பு (ச) அவுன்சு செங்கொட்டை (அ) அவுன்சு கரிக்கிகுடுவையில் போட்டு அதின்மேல் ஒரு விரற்கடை உயரம் எருக்கன்பால்விட்டு ஓட்டால் மூடி சீலை மண்செய்து ஒருபலம்பிடையில் (ருய) எருவால் புடம் போட்டு யெடுத்துச் சூரணித்து வைத்துக்கொண்டு பல் துலக்கிக் கொண்டு வந்தால் தந்தவாய்வைக் கண்டிக்கும் பற்கள் கருக்காது இதுமெத்த நல்லமருந்து.

---

751



## ஷ வாய்விற்கு வேறுமுறை.

எருக்கன் பழுப்பு சேர் (உ) பழங்கொட்டைப்பருப்பு செங்கொட்டைப்பருப்பு செங்கொட்டை கொட்டைபாக்கு வகைக்கு (எ௰) கரிவுப்புபடி (வ) இலுப்பையிலை சேர் (௰உ) களிப்பாக்குபலம் (உ௨) இவைகளைத் தனித்தனியே கருகிய நிரமாக வறுத்து அத்துடன் காசிக்கட்டி துருசு வகைக்குப் (பலம்)(கவ) சேர்த்துச் சூரணித்துப் பல்விளக்ககுணமாகும்

---

## பல்பூச்சிகள்விழ மேல்பூசும் எண்ணெய்.

உமிக்காந்தலில் (ருள) கண்டங்கத்திரிப்பழத்தைக்கரிகிப் போகாமல் சுட்டு கல்வத்திலிட்டு பாசல் இலைச்சார் விட்டு மை போலரைத்து அரைசேர் நல்லெண்ணெயில் சரைத்து (அ) நாள் சூரியபுடம் வைத்தெடுத்து வைத்துக் கொண்டு பல்லில் பூசிவர பல்லிலுள்ள புழுக்கள் வெளியாகும் நோய்தீரும்.

---

## உதடுமேகப்புண்ணுக்கு எண்ணெய்.

மயிர்மாணிக்கம்வேர் வெந்தயம் வெங்காயம் வகைக்கு அவுன்சு (அ) சேர்த்து பசும்பால் விட்டு மைபோலரைத்து (ச௰) அவுன்சு சிற்றுமணக்கெண்ணெயில் கரைத்து அடுப்பேற்றி யெரித்துவடித்து வைத்துக்கொண்டு தினம்காலையில் (௨) அவுன்சு கொடுத்துவர குணமாகும், இச்சாபத்தியம்.

---

## பச்சைதாவரவர்க்க கூரக்கா வைத்தியங்கள் குப்பைமேனி உபயோகம்.

குப்பைமேனியிலையைக் கொண்டுவந்து உலர்த்தி சூரணித்து வைத்துக்கொண்டு அதில் அரைவிராகனிடை சர்க்கறைச் சேர்த்து விசம் ஆழாக்கு ஜலத்தில் கலக்கிக் கொடுக்க வயிற்றிலுள்ள கிருமிகள் வெளியாகும் இதின் வேரை சூரணித்துக் கொடுக்க மலம் நன்றாகக்கழியும் இதின் யிலையைப் பச்சையாகக் கொண்டுவந்து ஒரு பாலடை ரசம் பிழிந்து அத்துடன் அரைபாலடை வேப்பெண்ணெய்

சேர்த்து வைத்துக்கொண்டு குழந்தையின் நாக்கில் தடவ குமட்டலும் உண்டாகி கபத்தை வெளியாக்கும்.

---

## சிவதைவேர் உபயோகம்.

சிவதைவேரின் பட்டையைக் கொண்டு வந்து அரைத்து அதில் பாக்களவுயெடுத்து பசும்பாலில் கரைத்துக் கொடுக்க பேதியாகும் இத்துடன் திராக்ஷி உப்பு பலம் விராகனிடை சேர்த்துக் கொடுப்பது மிகநன்று.

---

## சீமைஅகத்தியிலையின் உபயோகம்.

சீமை அகத்தியிலையைக் கொண்டு வந்து சார்பிழிந்து அத்துடன் தேங்காய்ப்பால் சமமாகச் சேர்த்து சொரி சிரங்குகளுக்குமேல்பூச சொரியோடு நமச்சல் தீரும், ஆனால் விடாமல் ௪-௫ தினத்திற்குப் பூசிக் குளித்துவரவேண்டும்.

---

## சீக்காய்க்கொழுந்தின் உபயோகம்

சீக்காய்க் கொழுந்தைக் கொண்டுவந்து அதற்கு திட்டமாக காய்ந்தமிளகாயும், புளியும், உப்பும், திட்டமாகவைத்துத் துவைபல் செய்து காலை மாலை யிருவேளையும் (௨) நாள் சாப்பிட பித்தத்தைசாந்தியாக்கும் போஜனத்தோடும் உபயோகிக்கலாம். காயை துவையல்செய்து சாப்பிட பேதியாகும்.

---

## சுருள்பட்டையின் உபயோகம்

சுருள்பட்டை பலம்(௨) கொண்டுவந்து அரைத்து அத்துடன் தேங்காய்நெய் பலம் (௧) சேர்த்துக்காய்ச்சி வடித்து வைத்துக்கொண்டு ரணங்களுக்கு தடவிவர உடனே உலரும் ஆனால் ஆரும்வரைக்கும் தடவவும்.

---

## கீழாநெல்லி உபயோகம்

கீழாநெல்லி யிலையைக் கொண்டுவந்து சாறுபிழிந்து(௨) பலம்யெடுத்து பசும்பாலில் சேர்த்துக் காலை மாலைஇருவேளை

புஞ்சாப்பிட மஞ்சள்காமாலை தீரும், சாப்பிட்டுவரும் மூன்று நாளும் கடும்பத்தியமாக யிருக்கவேண்டும். இதின்யிலையை உலர்த்தி தூள்செய்து திருகடிகைப்பிரமாணம் பசும்பாலில் கலந்துக்கொடுக்க பசிதீவினை யுண்டாகும், இதின் துளிரும் வெந்தயமும் சமனிடையாகச் சேர்த்து கால்படி ஜலத்தில் போட்டு அரிக்கால்படியாய் வற்றக் காய்ச்சிக்கொடுக்கவயர் கொட்டல் தீரும் இச்சாபத்தியம்.

## தகரைவேரின் உபயோகம்

(உ) பலம் தகரவேரைக் கொண்டுவந்து எலுமிச்சம் பழச் சார்விட்டு அரைத்து படர்தாமரைக்குமேல் பூசிவர தீரும், இதின் விரையை அரைத்து மோரில்கலக்கி சொரி சிரங்குகளுக்குப் பூசிவர குணமாகும்.

## திருநீற்றுப்பச்சையின் உபயோகம்

திருநீற்றுப் பச்சிலையைக் கொண்டுவந்து ஜலம்விட்டு அரைத்துக் கொட்டைப்பாக்களவு கொடுக்க மேகம் இருமல் வயறுகொட்டல் இவைகள் தீரும், இச்சாபத்தியம் இதின் சாறு காதில்விட காதுவலி தீரும்.

## ஆகாயத்தாமரையின் உபயோகம்

ஆகாயத்தாமரை ஒருபிடி யெடுத்து அரைபடி ஜலத்தில் போட்டு கால்படியாய் வற்றக்காய்ச்சி (ஙு) நாள் கொடுக்க நீர்சுருக்குத் தீரும் இலையையரைத்து மூலத்துக்குத்தடவ மூலம் தீரும்.

## ஆடுதின்னாப்பாளை யிலையின் உபயோகம்

ஆடுதின்னாப்பாளை யிலையைக் கொண்டுவந்து சார்பிழிந்து அதற்குச்சமனிடையாக நல்லெண்ணெய் சேர்த்து வைத்துக்கொண்டு கருங்குஷ்டம் கரப்பான் சிரங்கு சிலந்தி இவைகள்மேல் பூசிவர தீரும்.

## எள்ளின் உபயோகம்

எள்ளையாவது வெள்ளுயிலையையாவது அரைத்து கால் முள்ளு தைத்தயிடங்களில் வைத்துக்கட்ட முள்ளை வெளிப் படுத்தும் எள்ளெண்ணெயை அப்பட்டமாகக் கொண்டுவந்து வைத்துக்கொண்டு தினம் உச்சிக்கரண்டிவீதம் சாப்பிட்டு வர யிருமல் சொரிசிரங்கு தீரும் தேகம் பூரிக்கும்.

---

## கஞ்சாங்கோரை யிலையின் உபயோகம்

கஞ்சாங்கோரை யிலையைக் கொண்டுவந்து கசக்கிச் சார்பிழிந்து குழந்தைகளுக்கு (க) பாலடைகொடுக்க சுரம் மாந்தம் பேதி இருமல் இவைகள் தீரும்

---

## கருநொச்சி யிலையின் உபயோகம்

ஒருபிடி கருநொச்சியிலையைக் கொண்டுவந்து அரை படி ஜலத்தில்போட்டு கால்படியாய் வற்றக்காய்ச்சிக் கொடுக்க சுரம் தீரும், இலையும் உப்பும் சேர்த்துவருத்து மூட்டு வலிகளுக்கு ஒத்தடம் கொடுக்கத்தீரும், இலைச்சாறும் வெண்ணெயுஞ் சேர்த்து வீக்கங்களுக்குத் தடவிவர குணமாகும்.

---

## கர்ப்பூரவள்ளியிலையின் உபயோகம்

கர்ப்பூரவள்ளியிலையைக் கொண்டுவந்து அரைபாலடை ரசம்பிழிந்து அதில்(உ-ரூ)உரைகோரோஜன மாத்திரையை உரைத்துக்கொடுக்க குழந்தைகளின் ஐலுப்பு, இருமல், இவைகள் தீரும்.

---

## காக்கட்டான் வித்தின் உபயோகம்

காக்கட்டான் விதையைக் கொண்டுவந்து நெய்யால் வருத்துப் பொடித்து ஒருவிராகனிடை வீதம் கொடுக்க பேதியாகும் இதின்வேரை சூரணித்து அரை விராகனிடை குழந்தைகளுக்குக் கொடுக்க வோக்காளம், வாந்திகாணும், கபத்தை வெளியாக்கும் ஆனால் இதில் வெள்ளை நீலமென

இரண்டு விதங்களுண்டு அதில்வெள்ளை சிரேஷ்டமென்று அரியவும்.

## நிலவிளாம் நரிவிளாம் குட்டிவிளாம் இலையின் உபயோகம்

இதில் யேதேனு மொன்றில் அரைபிடி யிலையைக் கொண்டுவந்து கால்படி ஜலத்தில்போட்டு அரிக்கால்படியாய் வற்றக் காய்ச்சிக்கொடுக்க சுரம், பித்தம், அதிசாரம் இவைகள் தீரும், இச்சாபத்தியம்.

## சிருநெருஞ்சி சமூலத்தின் உபயோகம்

(உ) பலம் சிருநெரிஞ்சி சமூலங்கொண்டுவந்து (௨) படி ஜலத்தில்போட்டு கால்படியாக வற்றக்காய்ச்சி வடித்து சர்க்கரைசேர்த்து காலையில் மூன்றுநாள் கொடுத்துவர நீர் யெரிவு சிழ்மேகம் இவைகள் தீரும், இச்சாபத்தியம்.

## ஆனைநெரிஞ்சின் உபயோகம்

ஆனைநெரிஞ்சிச் சமூலங் கொண்டுவந்து அரைத்து கொட்டைப்பாக்களவு யெருமைத்தயிரில் கலக்கி (ந) நாள் காலையில் கொடுத்துவர மயக்கம், தாகம், வெள்ளை, வெண் குஷ்டம் தேகயெரிவு இவைகள் தீரும்.

## பிரண்டை சமூலத்தின் உபயோகம்

பிரண்டையைக் கொண்டுவந்து கணுவைப்போக்கி (உ) பலமெடுத்து அரைத்து தினம் பாக்களவு எட்டுநாளைக்குக் கொடுத்துவர ஆசன தினவுரத்தமூலம் தீரும்.

## பூவரசன்பட்டை உபயோகம்

பூவரசன் பட்டையைக் கொண்டுவந்து ஜலம்விட்டு அரைத்து பாக்களவு நீராகாரத்தில் கலக்கிக்கொடுக்க பேதி

பாகி சொரிசிரங்கு தீரும், இதின் காயின்ரசத்தை எச்சத் தழும்பின்மேல் ஊரல் அடங்கும்படி தேய்த்துவர குணமா கும்.

## பொடுதலைசமூலத்தின் உபயோகம்

ஒருபலம் பொடுதலையிலையைக் கொண்டுவந்து ஆழாக்கு ஜலத்தில்போட்டு அரை ஆழாக்காய் வற்றக்காய்ச்சி குழந் தைகளுக்கு ஒருபாலடைவிதம் கொடுக்க மாந்தம், சுரம், இவைகள் தீரும்.

## வல்லாரைசமூலத்தின் உபயோகம்

வல்லாரை யிலையைக் கொண்டுவந்து நிழலில் உலர்த்தி சூரணித்து வைத்துக்கொண்டு (வ) விராகனிடைவிதம் ஜலத் தில் கலக்கி காலைமாலையும் கொடுத்துவர திரேக சௌக்கிய முண்டாகும் இதின் தூளை ரணத்தின்மேல் தூவினால் ரணம் ஆறும்.

## விஷ்ணுகிரந்தியின் உபயோகம்

விஷ்ணுகிராந்தியிலை ஒருபலம்கொண்டுவந்து அரைப்படி ஜலத்தில்போட்டு கால்படியாக வற்றக்காய்ச்சி (ரு) நாள் காலையில் கொடுத்துவர சுரம், இருமல், இவைகள் தீரும்.

## வெட்டிவேரின் உபயோகம்

அரைபலம் வெட்டிவேர் கொண்டுவந்து கால்படி ஜலத் தில்போட்டு அரிக்கால்படியாய் வற்றக்காய்ச்சிக் கொடுத்து வர தாகசுரம், வாதரோகம் இவைகள் தீரும்.

## வெண்டயிலையின் உபயோகம்

வெண்டயிலையைக் கொண்டுவந்து ஜலம்விட்டு அரைத் து போஷ்டுசெய்து கட்டிகளுக்குக் கட்டலாம் இதின் விதை யைக் கஞ்சிக்காய்ச்சிக் கொடுக்க இருமல் நீர்பெரிவு மலக் கட்டு இவைகள் தீரும்.

## அம்மான்பச்சரிசி சமூலத்தின் உபயோகம்.

அம்மான்பச்சரிசியில் வெள்ளைசிகப்புஎன இரண்டு விதமுண்டு இதில் வெள்ளையைக் கொண்டுவந்து ஜலம்விட் டரைத்துப் பாக்களவு காலையில் (ந) நாள் சாப்பிட்டுவர தேகத்தடிப்பு எரிப்பு புண் பிரமேகம் மலக்கட்டு இவைகள் தீரும், சிகப்பை இவ்விதமாகச் சாப்பிட்டுவர சுக்கிலத்தை விர்த்தியாக்கும் பிரமேகத்தை நீக்கும் இச்சாபத்தியம்.

---

## கற்றாழைசோறின் உபயோகம்.

கற்றாழைமடலைக் கொண்டுவந்து அதின் உள்ளிருக் குஞ் சோற்றையெடுத்துக் கழுவி (உ) பலம் எடுத்து அத் துடன் கால் விராகனிடை படிகாரத்தூளைச்சேர்த்து துணி யில் மூட்டைகட்டி கண்ணோவுக்கு ஒத்தடங்கொடுக்க கண் ணோவு தீரும் வீக்கங்களுக்குக் கட்ட கரையும்.

---

## விலாரியிலையின் உபயோகம்.

விலாரியிலையைக் கொண்டுவந்து ஆமணக்கெண்ணையில் வதைக்கி வீக்கம் கட்டி இவைகளின்மேல் போட்டுக் கட்டத் தீரும்.

---

## அத்திப்பட்டையின் உபயோகம்.

ச-பலம் அத்திப்பட்டையைக் கொண்டுவந்து க-படி ஜலத்தில்போட்டு அரைபடியாக வற்றக்காய்ச்சி ந-நாள் ஆறுவேளை சாப்பிட சீதபேதி, புண், பெரும்பாடு, ரத்தமூத் திரம் இவைகள் தீரும். இதின் விதையில் காலாழாக்குப் போட்டு பாயாசஞ்செய்து அதில் சீனிக்கலந்து சாப்பிட மலம் நன்றாய் இரங்கும், அத்திப்பிஞ்சை சமையல்செய்து சாப்பிட ரத்தமூலம், வாயு, கிரகணி குணமாகும், அத்திப் பாலை ச-பலம் யெடுத்து வெண்ணையில்கலந்து சாப்பிட்டுவர ரத்தபேதி, நீரிழிவு இவைகள் தீரும். அத்திக்கள்ளை தினம் காலையில் காலாழாக்குச் சாப்பிட்டுவர மேகம், காரிகம், பித்தமயக்கம் இவைகள் தீரும்.

## புங்கன்வேரின் உபயோகம்.

புங்கன்வேர் பச்சையாகக்கொண்டுவந்து கத்தியால் அதின் பட்டையைச்சீவி பிழிய சார்வரும் அதைபெடுத்து புரையுள்ளரணத்தில் செலுத்தி தடவிவர ரணம்உலர்ந்து ஆரும் இதின்நெய்யை கரப்பான், கிரந்தி, செவிநோய் இவை கருக்குத் தடவ குணமாகும் காதில் விடவேண்டும்.

## நெல்லிவேரின் உபயோகம்.

ஒருபலம் நெல்லிவேரைக் கொண்டுவந்து (ஒ) படிஜலத்தில்போட்டு (வ) படியாகக்காய்ச்சி காலையில் சாப்பிட்டு வரபித்தம்தாகம் வாந்தி இவைகள் தீரும் மலம் நன்றாய்க் கழியும்.

## நெல்லிக்காயின் உபயோகம்.

இரண்டுபடி நெல்லிக்காயைக் கொண்டுவந்து உரலில் போட்டு துவைத்து கொட்டையைநீக்கி அதற்குப் போதுமான மிளகாயும் உப்புஞ்சேர்த்துப் பிசைந்து எலுமிச்சங்காய்ப் பிரமாணம் உருண்டைசெய்து அடைத்தட்டி வெய்யலில் உலர்த்தி வைத்துக்கொண்டு தேவையானபோது ஒரு அடையை துவையல்செய்து சாதத்தோடு உபயோகிக்க கபரோகம், மலக்கட்டு, வாந்தி இவைகள்தீரும், காலையில் கொட்டைப்பாக்களவு சாப்பிட நன்று.

## நெல்லிவிதையின் உபயோகம்.

நெல்லிவிதையைக் கொண்டுவந்து நொருக்கி அதினுள்ளிருக்கும் பருப்பையெடுத்து கால்பலம் வீதம் சாப்பிட்டுவர சூடு ஒக்காளம் இவைகள்தீரும்.

## அருநெல்லிக்காயின் உபயோகம்.

பிரதிதினம் காலையில் (ரு) அரிநெல்லிக்காய்வீதம்(உம) நாள் சாப்பிட்டுவர சுரம், அரோசிகம் இவைகள்தீரும், பித்தத்தை சாந்தப்படுத்தும்.

## பனங்கிழங்கின் உபயோகம்.

(உ) அல்லது (ந) பனங்கிழக்கைக்கொண்டாவது சுட்டாவது வேவித்தாவது தினம் (ந) கிழங்கு சாப்பிட்டுவர மேகம் (உ௰)ம், கரப்பான், ரணம், ரத்தசீதபேதி இவைகள் தீரும்.

## பனுங்கின் உபயோகம்.

பனுங்கு நாள் ஒன்றிற்கு (ச-ரு) வீதம் (௰) நாள் சாப்பிட்டுவர சீதபேதி இவைகள் தீரும், ஆனால் தோலோடு சாப்பிடவேண்டும்.

## பனங்கள்ளின் உபயோகம்.

தினம் பனங்கள்ளை காலையில் கால்படிவீதம் (ச௰)நாள் சாப்பிட்டுவர சுக்கிலம் விர்த்திக்கும் (எ) தாதுக்களும் வலுக்கும்.

## மாதுளம்பிஞ்சியின் உபயோகம்.

ஒரு மாதுளம்பிஞ்சைக் கொண்டுவந்து மேல்தோல் நீக்கி அதின் உள்ளிருக்கும் விதையை சாப்பிட்டுவர அதிசாரம் (கூ)ம்-தீரும், ஆனால்-௰-நாளைக்குச் சாப்பிடவேண்டும் மேற்சொன்ன பிரகாரம் பழத்தைச்சாப்பிட பித்தம், தாகம், கபம், வாந்தி இவைகள் தீரும்.

## இலந்தம்பழம் உபயோகம்.

உ௰-நாளைக்கு நாள் ஒன்றுக்கு ரு-மிலந்தம்பழம்வீதம் காலைமாலையில் சாப்பிட்டுவர வாந்தி,பித்தம்,மூர்ச்சைதீரும்.

## கள்ளியின் உபயோகம்.

கள்ளி, திருகுகள்ளி, சதுரக்கள்ளி, கொடிக்கள்ளி, இலைக்கள்ளியென-ரு-விதங்களுண்டு, இதில் ஏதேனும் ஒரு பாலை வெல்லத்தில் பணவிடை வைத்துக்கொடுக்க பேதியாகும்.

## வேப்பனிலையின் உபயோகம்.

ஒருபிடி வேப்பனிலையை (௨)படி ஜலத்தில் போட்டு கால்படியாய் வற்றக்காய்ச்சி (௩) வேளை கொடுக்க சுரம் (௩௪)ம் தீரும், அம்மைகண்டபேர்க்கு அரைத்து மேல்பூச குணமாகும் கட்டிக்குத்தடவ கட்டி உடையும் ரணத்துக் குத் தடவ ரணம் உலரும்.

---

## வேப்பங்கள்ளின் உபயோகம்.

வேப்பங்கள்ளை வீசம்படிவீதம் உ௰-நாள் காலையில்சாப் பிட்டுவர பசிதீபன முண்டாகும், இதின் கொட்டையை உடைத்து மேல்தோல்நீக்கி அரைத்துப் பாக்களவு (௩) நாள் சாப்பிட் ஜன்னிரோப்தீரும், இதின் எண்ணையைத் தடவ ரணம் ஆறும், இதின்பூவை சமைத்துச்சாப்பிட பித்த சாந்தியாகும்.

---

## வேப்பம்பட்டையின் உபயோகம்.

௩-பலம் வேப்பம்பட்டையைக் கொண்டுவந்து(௨)படி ஜலத்தில்போட்டு கால்படியாய் வற்றக்காய்ச்சி இருவேளை சாப்பிட பசியுண்டாகும் சீதசுரம்தீரும், சுரம்விட் டிருக்கும் போது பட்டையைச் சூரணித்து அதில் பணவிடைவீதம் ஜலத்தில் கலக்கி ௩-நாள் கொடுக்க பின்பு சுரம்வராது.

---

## பூவரசன்கொட்டையின் உபயோகம்.

கு-பூவரசன் கொட்டையை யெடுத்து மேல்தோல் போக்கி பசும்பால்விட்டரைத்து அந்தபாலில் கலக்கிச்சாப் பிட பேதியாகும், குன்மம், வயிற்றுயிரைச்சல், கிருமி கரப் பான் இவைகள் தீரும், ஆனால் பித்தம் அதிகரிக்கும்.

---

## அழிஞ்சில் வேர்ப்பட்டையின் உபயோகம்.

அழிஞ்சில்வேர்ப்பட்டை பச்சையாகக்கொண்டுவந்து அம்மியில்வைத்து ஜலம்விட்டு மைபோலரைத்து அதில்பாக் களவு காலையில்கொடுக்க பித்தசாந்தியாகும் மயக்கந்தீரும்.

---

## ஆலம்பாலின் உபயோகம்.

ஆலம்பாலைக் கரந்துவந்து கால்வெடிப்புகளுக்கும் பல் நோய்களுக்கும் மேல்தடவிவர கால்வெடிப்பு ஆறும் பல் நோய்தீரும் நாவரக்ஷிக்கு உச்சிக்கரண்டிவீதம் உள்ளுக்குச் சாப்பிட குணமாகும்.

## ஆலம்பட்டையின் உபயோகம்.

ஆலம்பட்டை பலம்-உ, கொண்டுவந்து ஃ-படி ஜலத்தில்போட்டு வ-படியாக வற்றக்காய்ச்சி தினம் காலையில் அரிக்கால் படிவீதம் ௩-நாள் சாப்பிட்டுவர நீரிழிவுதீரும்.

## சுரயிலையின் உபயோகம்.

சுரயிலையை கொண்டுவந்து சார்பிழிந்து தினம் காலையில் ஃ-படி சார்வீதம் (௩) நாள் சாப்பிட்டுவர திரேகவீக்கம் சோகை இவைகள் தீரும், இச்சாபத்தியம்.

## பாகயிலையின் உபயோகம்.

பாகயிலையைக் கொண்டுவந்து ரசம்பிழிந்து நாள் வொன்றுக்கு காலையில் ஒரு ரூபாயிடை ௩-நாள் சாப்பிட்டுவர விரோசனக்காரி, திரிதோஷம், கிரிமிரோகம் இவைகள் தீரும், இச்சாபத்தியம்.

## கொடிகுரிஞ்சாயிலையின் உபயோகம்.

கொடிகுரிஞ்சா யிலையைக்கொண்டுவந்து உலர்த்தி சூரணித்து வைத்துக்கொண்டு குழந்தைகளுக்கு (ஐ) விராகனிடை தூள் எடுத்து ஜலத்தில் கரைத்துக் கொடுக்க வாந்தியாகும், அன்றியும் நாக்குப்புண் காசம் இவைகளுக்கும் உபயோகிக்கலாம்.

## கொடிகுறிஞ்சாவேரின் உபயோகம்.

கொடிகுறிஞ்சாவேரைக் கொண்டுவந்து உலர்த்தி சூரணித்துக்கொண்டு திரிகடிகை பிரமாணம் பெடுத்துப் பெரியவர்களுக்கு ஜலத்தில் கரைத்துக்கொடுக்க வாந்தியாகிக் கபத்தை அறுக்கும்.

---

## கோவையிலையின் உபயோகம்.

கோவையிலையைக் கொண்டுவந்து ரசம்பிழிந்து தினம் காலையில் ௨-ஆழாக்குவீதம் (௩) நாள் சாப்பிட்டுவர நீர்க்கட்டு வாதம், இருமல், ஊஷ்ணம் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

---

## கோவைக்கிழங்கின் உபயோகம்.

கோவைக்கிழங்கைக் கொண்டுவந்து உலர்த்தி சூரணித்து வைத்துக்கொண்டு தினம் திரிகடிகைப் பிரமாணம் (௰) நாள் காலையில் சாப்பிட்டுவர கோழை, குஷ்டம், பித்தம், மதுமூத்திரம் இவைகள் தீரும், இச்சாபத்தியம்.

---

## கோவைக்காயின் உபயோகம்.

கோவைக்காயைக் கொண்டுவந்து வத்தலாக உலர்த்தி வைத்துக்கொண்டு சலமத்துச் சாப்பிட்டுவர கபம், சுரம், ஊஷ்ணம் இவைகள் முதலானதும் தீரும்.

---

## உத்தாமணியிலையின் உபயோகம்.

உத்தாமணியிலையைக் கொண்டுவந்து சார்பிழிந்து தினம் ௨-ஆழாக்குவீதம் (௩) நாள் காலையில் சாப்பிட்டுவர தீபனகாரியுண்டாகும், வயற்றெரிச்சல், வாதம் (அ௰)ம், சுவாசகாசம்-௫, சன்னி-௰௩, தேகவலிதீரும், இச்சாபத்தியம் இந்தயிலை ரசத்துடன் சுண்ணும்பைக்கலந்து வீக்கங்களுக்குமேல் பூசிவர விக்கம்வாடி நோய்தீரும்.

---

## சித்திரமூலவேரின் உபயோகம்.

சித்திரமூலத்தில் நீலம், சிவப்பு, வெள்ளை, (௩) விதங்களுண்டு அதில்ஏதாவது ஒன்றைக்கொண்டுவந்து ஜலம்விட்டு அரைத்துப்போடக் கொப்பளிக்கும், அரையாப்புக்கட்டியின் பேரில்போட கட்டி உடையும், இருமலுக்கு மார்பின் பேரில் போட இருமல்தீரும்.

## வெள்ளரிக்காயின் உபயோகம்.

வெள்ளரிக்காயைக் கொண்டுவந்து மேல்தோல்சீவி துண்டுதுண்டுகளாக அருத்து வைத்துக்கொண்டு மிளகும் உப்பும் சமமாகச்சேர்த்து பொடித்து வைத்துக்கொண்டு ஷை துண்டுகளை தூளில்தொட்டு நாள் ஒன்றுக்கு ஒருகாய் வீதம் பனிரெண்டுமணிக்குச் சாப்பிட்டுவர நீர்எரிவு நீர்க்கட்டு இவைகள் தீரும் ௫-௬-நாள் சாப்பிடவும்.

## வெள்ளரி விதையின் உபயோகம்.

வெள்ளரிவிதையை யெடுத்து மேல்தோல்நீக்கி உள்ளிருக்கும் பருப்பை (வ) ஆழாக்குவீதம் (உய) நாள் சாப்பிட்டுவர நீரடைப்பு, கல்அடைப்பு, சதைஅடைப்பு, பிரமேகம் (உக)ம் தீரும், பத்தியமில்லை.

## தாமரைக்கிழங்கின் உபயோகம்.

தாமரைக்கிழங்கைக் கொண்டுவந்து உலர்த்தி சூரணித்து சமனிடை சீனிகலந்து திரிகடிகைப் பிரமாணம்(ய) நாள் காலையில் சாப்பிட்டுவர கண்களைப் பிரகாசிக்கச்செய்யும், விதையைச் சாப்பிட சுக்கிலத்தை விர்த்திக்கும், தாமரைப் பூவைச் சாப்பிட தேகசூடு, நீர்யெரிவு, சுரம் இவைகள் தீரும் பத்தியமில்லை.

## பேய்ப்புடலின்வேரின் உபயோகம்.

பேய்ப்புடலின்வேர் கொண்டுவந்து ரசம்பிழிந்து வீசம் ஆழாக்குவீதம் (௩) நாள் காலையில் கொடுத்துவர மலங்கழியும் திரேக சவுக்கியமுண்டாகும் இதுபோல் இலைரசங்கொ

டுக்க வாந்தியாகும் சுரம் இருமல் இவைகள் தீரும் இச்சா பத்தியம்.

---

## மிளகரணைவேரின் உபயோகம்.

மிளகரணை வேராகிலும், பட்டையாகிலும், யிலையாகிலும், இம்மூன்றில் ஒன்றைக்கொண்டுவந்து அதில் பலம்-உ, யெடுத்து (ಖ) படி ஜலத்தில் போட்டு கால்படியாக வற்றக்காய்ச்சி வடித்து மூன்றுபோதுகொடுக்க கபம், அஜீரணம், வாயு இவைகள் முதலானதும் தீரும், இச்சாபத்தியம்.

---

## மராட்டிமொக்கின் உபயோகம்.

மராட்டிமொக்கில் ஒன்று எடுத்து கால்படி பசும்பாலில் போட்டுக் காய்ச்சிக் கொடுக்க வயற்றுவேதனை தீரும் பேதிகட்டும், ஆனால் இது மயக்கமுள்ளதாதலால் ஜாக்கிரதையாக உபயோகிக்கவேண்டும்.

---

## மூக்குரட்டைவேரின் உபயோகம்.

மூக்குரட்டைவேர் பலம்-ரு, கொண்டுவந்து உ-படி ஜலத்தில்போட்டு கால்படியாக வற்றக்காய்ச்சி இருவேளையுங்கொடுக்க மலம் நன்றாகக்கழியும் கிரிமிகள் வெளியாகும் வயற்று வலிதீரும்.

---

## திராக்ஷிபழத்தின் உபயோகம்.

பச்சை திராக்ஷிபழத்தை (உய) நாள் சாப்பிட்டுவர மயக்கம் பித்தம் இவைகள் தீரும், உலர்ந்ததைச் சாப்பிட்டு வர தாகம் சுரம் தீரும் சுக்கிலத்தை விர்த்திக்கும்.

---

## காட்டாமணக்கு யிலையின் உபயோகம்.

காட்டாமணக்கு யிலையைக் கொண்டுவந்து ரசம்பிழிந்து (அரிக்கால்) ஆழாக்குவீதம் தினம் காலையில் (ரு) நாள் கொடுத்துவர வெள்ளைவிழுதல், குன்மம்எட்டு, மேகப்புண், ஊஷ்ணம், உள்மூலம் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## துத்தியிலையின் உபயோகம்.

துத்தியிலையைக் கொண்டுவந்து ரசம்பிழிந்து அரிக்கால் ஆழாக்குவீதம் (௩) நாள் காலையில் கொடுக்க மூலம் தீரும், வயற்றிலுள்ள கிரிமிகள்விழும் பத்தியமில்லை

## துத்திவிதையின் உபயோகம்.

துத்திவிதையை (௧) விராகனிடை யெடுத்து அத்துடன் சீனிகலந்து நாளொன்றுக்கு இம்மாதிரியாக (௨௰) நாள் சாப்பிட்டுவர கருமேகம் குஷ்டம் தீரும் இச்சாபத்தியம்

## துத்திப்பூவின் உபயோகம்.

துத்திப்பூ (௫) பலமெடுத்து அரைபடிஜலத்தில் போட்டு கால்படியாக வற்றக்காய்ச்சிக் கொடுத்துவர காசம் தீரும்.

## விழுதியிலையின் உபயோகம்

விழுதியிலையைக் கொண்டுவந்து ரசம்பிழிந்து அரிக்காலாழாக்குவீதம் காலையில் சாப்பிட பேதியாகும்.

## விழுதிவேரின் உபயோகம்.

விழுதிவேர் பலம் (௨) எடுத்து அரைப்படி ஜலத்தில் போட்டு கால்படியாக வற்றக்காய்ச்சி வடித்து ஸ்திரீகளுக்குக் கொடுக்க வயற்றிலுள்ள கிருமிகள் செத்து வெளிப்பட்டு கெர்ப்பந்தரிக்கும்.

## தும்பையிலையின் உபயோகம்.

தும்பையிலையைக் கொண்டுவந்து ரசம்பிழிந்து அரிக்கால் படிவீதம் காலையில் (௩) நாள் கொடுத்துவர மந்தம் வாதம் சிலாரோகம் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## தும்பைப்பூவின் உபயோகம்.

தும்பைப்பூவை பலம் (உ) எடுத்து ஒருபலம் சுத்தமான எள்ளெண்ணெயில்போட்டு (சய) நாள் ஊறினபின் யெடுத்துக் கண்ணில் கலிக்கமிட ஐன்னி (யகூ) நேத்திரரோகம் தீரும்.

## கண்டங்கத்திரியிலையின் உபயோகம்.

கண்டங்கத்திரியிலையைக் கொண்டுவந்து ரசம்பிழிந்து (கூ) நாளைக்கு காலையில் (⅛-அரிக்கால்) படி வீதம் கொடுத் தாலுஞ்சரி அல்லது ஒருபிடியிலையை உ, படி ஜலத்தில் போட்டுக் கால்படியாய் வற்றக்காய்ச்சிக்கொடுக்க நீர் யேற்றம், யிளை, சுவாசம், ஜலபீனிசம் இவைகள் தீரும் பத்தியமில்லை.

## கண்டங்கத்திரிக்காயின் உபயோகம்.

கண்டங்கத்திரிக்காயைச் சமைத்துச் சாப்பிட சிலேஷ்ரோகம் (உய) குணமாகும், ஆனால் உஷ்ணஞ்செய்யும்.

## பசுமுன்னையிலையின் உபயோகம்.

பசுமுன்னையைக் கொண்டு வந்து எருமைபாலில் அவித்து சமைத்துச்சாப்பிட மந்தாக்கினி வாதம் இவைகள் தீரும்.

## நாவல்பட்டையின் உபயோகம்.

நாவல்பட்டையைக் கொண்டுவந்து பசும்பால் விட்டு அவித்துயிடித்து ரசம்பிழிந்து அரிக்கால்படி வீதம் (கூ) நாள் காலையில் சாப்பிட்டுவர வாய்ரோகம் கபரோகம் தீரும் இதுபோல் வேலரையிடித்துக்கொடுக்க சீதபேதி சுரம் அதிமூத்திரம் இவைகள் தீரும்.

## மாவிலிங்கம்பட்டையின் உபயோகம்.

மாவிலிங்கம்பட்டை பச்சையாகக் கொண்டு வந்து இடித்து ரசம்பிழிந்து ஆழாக்குவீதம் (கூ) நாள் காலையில்

கொடுத்துவர வாதம்-அ௰-ம், ஜன்னி-௰௩-ம், திரேக அஸ்தி தீரும், இச்சாபத்தியம்.

## பாதரிவேரின் உபயோகம்.

ஒருபலம் பாதரிவேரைக் கொண்டுவந்து உ-படி நல்லெண்ணெயில்போட்டு தயிலபதமாகக்காய்ச்சி வாரத்திற்கு இரண்டுமுறை ஸ்நானஞ்செய்துவர கை, கால், கண்கள், இவைகளின் எரிவு, மதுமூத்திரம் மேகசுரம், இவைகள் தீரும் ஸ்நானஞ்செய்யும் நாள் பகலில் நித்திரை நீக்கவேண்டும்.

## சண்பகவேரின் உபயோகம்.

அரிக்காபலம் சண்பகவேரை-உ பலம் நல்லெண்ணெயில் போட்டுக் காய்ச்சி ஸ்நானஞ்செய்துவர சுரம்தீரும், பசியுண்டாகும், பூவை உபயோகிக்க கண்ணெறிவு தீரும், சுக்கிலத்தை விர்த்திக்கும்.

## இலுப்பைவேரின் உபயோகம்.

இலுப்பைவேர் பலம்-உ, எடுத்து-௩-படி நல்லெண்ணெயில் போட்டுக் காய்ச்சி ஸ்நானஞ் செய்துவர சுரம்-சுசு அதிமூத்திரம் குணமாகும்.

## சாரைப்பருப்பின் உபயோகம்.

கால்படி சாரைப்பருப்புயெடுத்து ஜலம்விட்டு மைபோலரைத்து வைத்துக்கொண்டு ச-பலம் பூராசக்கரையைப் பாகுசெய்து அதில் அரைத்த பருப்பைப்போட்டுக் கிண்டி (உ) பலம் நெய்விட்டு லேக்கியபதமாகக்கிளரி இரைக்கி தேன்பலம் அரைவிட்டு பிசரிக்கலந்து வைத்துக்கொண்டு பாக்களவு காலை மாலை சாப்பிட்டுவர நீர்யெரிவு பிரமேகம் தீரும், சுக்கிலத்தை தடிப்பிக்கும், இச்சாபத்தியம்.

## முசுமுசுக்கையிலையின் உபயோகம்.

முசுமுசுக்கையிலையைக் கொண்டுவந்து ரசம்பிழிந்து அரிக்கால்படி வீதம் (௩) நாள் காலையில் சாப்பிட்டுவர கோழை சுவாசம் காசம் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

## கோவைக்கிழங்கின் உபயோகம்.

கோவைக்கிழங்கு சாதாரணமாகக் கடையில் அகப்படும் அதில் ஒரு விரல்பெருமனுயும் நரைபோல் வெளுத்த நிரமாயும் உள்ள கிழங்குகள் கொண்டுவந்து உலர்த்தி சூரணித்து வஸ்திரத்தில் வடிகட்டி வைத்துக்கொண்டு திருகடிகைப் பிரமாணம் சக்கரையில் கலந்து சாப்பிட்டுவர மூலவியாதிகள் தீரும் இச்சாபத்தியம்.

---

## தேள்கொடுக்கிலையின் உபயோகம்.

தேள்கொடுக்கி ளிலையைக் கொண்டுவந்து ஜலத்தில் அலம்பி ஜலம்போக வேர்சீலையில் ஒத்தி எடுத்து உள்ளங் கையில் வைத்துக் கசக்கி ரசம்பிழியாமல் துல்லியமாக மெல்லிய சீலையில் வைத்து மூட்டைகட்டி கண்ணேயிற்கு (ரு) நாள் மணிக்கொருவிசை ரசத்தைக்கண்ணில் பிழிந்து வர கண்ணேய் தீரும் கண் எரியாது ஆனல் யிலையை அப் போதைக்கப்போது கசக்கி உபயோகிக்கவேண்டும்.

---

## நன்னரிவேரின் உபயோகம்.

நன்னரிவேர் புதிதாகக்கொண்டு வந்து உலர்த்தி சூரணித்து வஸ்திரத்தில் வடிகட்டி வைத்துக்கொண்டு திருகடிகைப் பிரமாணம் நாள் ஒன்றுக்கு இருவேளையும் (சய) நாள் சாப்பிட்டுவர தீரும் வியாதிகள், ஸ்ரீகளால் உண்டாகும் சூடு உழலை சகலதோஷம், சுரம், தாகம், புண், மதுமேகம் இவைகள் குணமாகும், இதை-க-பலம் கற்றாழைச் சோற்றில் கலந்துக் கொடுக்கவும், அல்லது தேனில் வெதுப்பி அரைத்துப் பாக்களவு (ரு) நாள் சாப்பிட வண்டுகடி விஷந் தீரும், இச்சாபத்தியம்.

---

## நன்னரிவேரின் வேறுவித உபயோகம்.

நன்னரிவேர் பரித்தவுடன் (ச) அவுன்சு யெடுத்து அதை சதைத்து ஒரு மண் பாத்திரத்தில் ஒரு புட்டி ஜலம் விட்டு நன்றாய்க் கொதிக்கவைத்து அதில் ஷை வேரைப்

போட்டு மூடிவைத்து-உ-மணி நேரம் பொருத்து யெடுத்து வடிகட்டி இருத்துவைத்துக்கொண்டு பிராயமானவர்களுக்கு ஒரு நேரத்திற்கு ௩-அவுன்சுவீதம் நாள் ஒன்றுக்கு-௩ நேரங் கொடுக்கவும் குழந்தைகளுக்கு ஒரு நேரத்திற்கு-கஉ அவுன்சுவீதம் கொடுக்கலாம், பிராயமுள்ளவர்களுக்குயேது காரணத்தினாலாவது வரும் பலயீனமாகி பலனையுண்டாக்கும், குழந்தைகளுக்குக் கொடுக்க தேக ஒளி தீரும், அன்றியும், மேகவியாதிகள் பருக்கள் தோல்வியாதிகள் அஜீரணம் பசியின்மை நெடுநாள் சென்ற வாதம் இவைகளுக்கெல்லாம் உபயோகிக்கலாம், இச்சாபத்தியம்.

---

## நாகமல்லிவேரின் உபயோகம்.

புதிதான நாகமல்லிவேர் கொண்டு வந்து அதில் பலம் (உ) யெடுத்து சதைத்து (ய) பெரிதான எலுமிச்சம் பழம் கொண்டு வந்து ரசம்பிழிந்து அதில் ஷை சதைத்தவேரைப் போட்டுக் கலந்து வைத்துக்கொண்டு படர்தாமரைக்கும் தோலைப் பற்றி வந்த சொரி சிரங்குகளுக்கும் மேல் பூசிவர குணமாகும் (ய) நாள் பூசவும்.

---

## நீராகாரத்தின் உபயோகம்.

காலையில் மலசலங் கழிந்தவுடனே தந்தசுத்தி செய்துக் கொண்டு ஒருவேளை நீராகாரத்தில் போதுமான உப்பு சேர்த்து கலக்கிச் சாப்பிட்டுவர தாகம் முத்தோஷம் வரக்ஷி இவைகள் தீரும் தாதுபுஷ்டி யுண்டாம்.

---

## அருசுவையின் உபயோகம்.

பதார்த்தங்கள் சமைத்துச்சாப்பிடுவதில் துவர்ப்பு, புளிப்பு, மிஞ்சுமாகில் வாதமுண்டாகும் உவர்ப்பு, கசப்பு, மிஞ்சுமாகில் பித்தம் உண்டாகும், கார்ப்பு, இனிப்பு, மிஞ்சுமாகில் சிலேஷ்மமுண்டாகும், யாவும் சமமாக சமைத்துச் சாப்பிடில் பலனுண்டாகும் வியாதியில்லையாம்.

---

## அன்னபின்னத்தின் உபயோகம்.

அன்னம் பொசிப்பதற்கு-அ-பங்கு பலனும், அவல் பொசிப்பதில்-அ-பங்கு பலனும் முப்பழம்பால் பொசிப்பதில்-அ-பங்குபலனும், ஊண் ஊணிர்க்கு-அ-பங்குபலனும்.

## ஆகாபசும்பாலின் உ.பயோகம்.

பசுக்கள் அலேந்தும் திரிந்தும் சுடுகாட்டாடு பெறும் பைத்தின்றும் நோய்கொண்டதும் மலம் அரிந்தினதும் வெண்புள்ளியுடையதும் இவ்வகையான பசுக்களின் பால் சாப்பிடுவதில் கபமேயும் திரிதோஷமும் வயது குறைவுமுண்டாகும்.

## ஆட்டின் கொழுப்பின் உபயோகம்.

ஆட்டின் கொழுப்பு பலம்-உ-ல், ஜாதிக்காய் வால் மிளகு சங்கம்பழம் இவைகள் வகைக்குக்கால்பலம் சேர்த்து அரைத்து வைத்துக்கொண்டு பாக்களவு சாப்பிட்டுவர ரத்தகாசம் இரத்தரோகம், இமைக்காசம், க்ஷயரோகம், கோழைநோய் இவைகள் தீரும், இச்சாபத்தியம்.

## ஆட்டுப்பாலின் உபயோகம்.

வெள்ளாட்டுப்பால் கரந்துநாள் ஒன்றுக்கு இருவேளையும் வேளையொன்றுக்கு அரிக்கால் படி விதம் (உம)நாள் சாப்பிட்டுவர க்ஷயரோகங்கள், மூர்க்கமான மிருமல், பித்தகாசம் மந்தம் இவைகளுக்குக் கொடுக்கப்படும், அன்றியும் சரீர பலயீனர்களுக்கும் வயறு கழிச்சலுள்ளவர்களுக்கும் பசியின்மைக்கும் சந்தேகமின்றிக் கொடுக்கப்படும், இவை சஞ்சீவியென நம்பவேண்டும்.

## சித்தாமணக் கெண்ணெயின் உபயோகம்.

காலாழக்கு சித்தாமணக்கு எண்ணெயும் ஒரு எலுமிச்சம்பழச்சாறும் கால்பலம் சீனாகற்கண்டும் சேர்த்து நன்றாக மிசிரித்து காலேயில் சாப்பிட பேதியாகும் நீர்க்கட்டு

771 771



மலக்கட்டு இவைகளை வெளியாக்கும், திரேகத்திற்குச் சவுக்கிய முண்டாம் சிறு குழந்தைகளுக்கு முலைப்பாலும் வெண்ணெயும் ஒரு பாலடை வார்த்துவர மிக நன்றும், தோலுக்கடுத்த நோய்களுக்கு மேல்பூசிவர குணமுண்டாம்.

---

## இரவிலுண்ணும் பதார்த்தங்களின் உபயோகம்.

அத்திக்காய் அவரைப்பிஞ்சு ஆவின்பால்கண்டங்கத்திரிக்காய் துவரை தூதுளம் முருங்கைக்காய் இவைகள் சாப்பிட நன்றாய் போஜனம் செய்தானபிறகு சயனிக்கும்போது ஆழாக்குப் பசும்பால் சாப்பிட்டுவர க்ஷயரோகம் நேத்திரரோகம் தீரும், தாதுபுஷ்டியும் திரேகத்தில் ரத்தம் பரவலும் உண்டாகும்.

---

## இராப்பசுவின்பால் உபயோகம்

இரவில்கரக்கும் பசும்பாலை போஜனஞ் செய்தானபிறகு படுக்கைக்குப்போகும்போது (வ) படி அல்லது (ϑ) படிவீதம் பிரதிதினமும் சாப்பிட்டுவர அழல், ஈளை, கபம், கண்களிலுண்டாகும் பிணிகள் இவைகள் தீரும், தாதுகட்டும், திரேகம் மேனி கொடுக்கும், பாலைக்காய்ச்சி உபயோகிக்கவும்.

---

## இரும்புகரண்டியின் வென்னீர் உபயோகம்.

நாள்தோறும் இரும்புப்பாத்திரத்தில் ஜலம் விட்டுக் காய்ச்சி போஜனஞ் செய்யுங்காலமும் மற்றக்காலமும் சாப்பிட்டு வர பாண்டு நோய் போகும், இந்திரியபுஷ்டியுண்டாக்கும், நரம்புகள் உறப்பாகும், திரேகம் குளிர்ச்சியோடு மெத்தச் சுகமுண்டாகும்.

---

## இலந்தன்வேரின் உபயோகம்.

க-பலம் இலந்தன் வேரை கொண்டு வந்து சமைத்து அரைப்படி ஜலத்தில் போட்டுக் காய்ச்சிக் கால்படியாக வற்றினபின் வடித்து மூன்றுநாள் காலையில் கொடுத்துவர

ஆயாசந் தீரும், பசிதீவின முண்டாகும், இதுபோல் இதின் யிலையைக் கஷாயமிட்டுக்கொடுக்க இரத்தம்விழல் யெரிச்சல் கடுப்பு சீழ்மூலம் மேகம் பித்தம் இவைகள் தீரும், இச்சா பத்தியம்.

## இலுப்பைப்பிண்ணாக்கின் உபயோகம்.

இலுப்பைப் பிண்ணாக்கைக் கொண்டுவந்து அரைத்து அப்பியங்க ஸ்நானத்திற்குத் தேய்த்துக்கொள்ள வெண்ணெய்க்கசிவுதீரும், அன்றியும் பிரதிதினமும் உடம்பு குளிக்கும்போது உடம்புக்கு தேய்த்துக்கொண்டு குளிக்க, கடுவன், கரப்பான் ஜன்னிதோஷம் விரைவீக்கம் இவைகள் தீரும், விரை வீக்கத்திற்கு அரைத்து விரையின்மீது வைத்துக்கட்ட, குணமாகும், நோய்தீரும்.

## கொட்டைப்பாக்கின் உபயோகம்.

இளங்கொட்டைப்பாக்கை வெற்றிலைசுண்ணாம்பு இவைகளோடு சேர்த்து உபயோகித்தாலுஞ்சரி அல்லது சாதாரணமாக பெரும்பாக்கைப் போட்டு மென்று தின்றுக் கொண்டு வந்தாலுஞ்சரி (குணம்) கோழைக்கட்டு சிலேஷ்மம் வாதம் இவைகள் தீரும், ஆனால் சூடுண்டாம் இளங் கொட்டைப் பாக்கென்பது முற்றாதபாக்கு.

## இளநீரின் உபயோகம்.

இளநீர்க்காயில் வழுக்கைப்பற்றாதத்தேங்காயின் நீரை தினம் ஒருகாய்ஜலம் சாப்பிட்டுவர (குணம்) அனல் கபம் நீரடைப்பு பித்தம் வாந்திபேதிவாதம் இவைகள் தீரும், கண் ஒளிதரும் திரேகம் குளிர்ச்சியோடு மனது தெளிவுண்டாம்.

## உகரம்பட்டையின் உபயோகம்.

உகரம்பட்டையைக் கொண்டு வந்து கஷாயமிட்டுக் கொடுக்க சுரங்கள் நிவர்த்தியாகும், இதின் வேரின் பட்டையைக் கொண்டு வந்து ஜலம்விட்டு அரைத்து கட்டிகள்மீது வைத்துக் கட்டக் கட்டிகள் உடையும், பட்டை வாசனையாக விருக்கும்.

## ஊமத்தின்யிலையின் உபயோகம்.

ஊமத்தின்யிலையில் வெள்ளூமத்தன் கருவூமத்தன்யென இரண்டுவிதமுண்டு அதில் கருவூமத்தன் யிலையைக்கொண்டு வந்து உலர்த்தி புகையிலை சுருட்டைப்போல்செய்து புகைக் குடிக்கில் சுவாசகாசம் உடனேதீரும், நாள்பட்ட யிருமல் போகும், இந்தயிலையைப் பச்சையாக அரைத்து போஸ்டு செய்து வாதவீக்கம் வாதக்கட்டிகள் தோல்மேல் யிருக்கும் வீக்கங்கள் இவைகளுக்குக் கட்டகுணமாகும், மேகவியாதி கட்டிக்கு இந்தயிலையை சாராயத்தில் வூரவைத்து நோய் இருக்கு மிடத்தில் கட்ட குணமாகும், நரம்பு சிலந்திகளுக் கும் கட்டலாம், இந்த இலையைக்காயவைத்துப் பொடிசெய் துப் பன்றிக்கொழுப்பில் கலந்து வைத்துக்கொண்டு முகத்தி லுண்டாகும் வலிபோன்ற அனேகவித நரம்புவலிகளுக்கு மேல்தடவிவர குணமாகும், ஆனால் இது நஞ்சுள்ள வஸ்து வானபடியால் இதை அனுபோகமும் ஆலோசனையுங் கொண்டு உபயோகப் படுத்துவது மகா உத்தமமாம்.

---

## எருக்கன்பாலின் உபயோகம்.

ஜன்னிசட்டி புரங்கழுத்திசுவு கீல்வாய்வு இவைகளுக்கு எருக்கன்பாலைக்கரந்து நோயுள்ள விடங்களில் தளும்பப்பூசி அதின்மேல் கரிமஞ்சளை தூள்செய்து போடவும் இந்தப்படி மூன்றுநாள் செய்துவர குணமாகும்.

---

## எருமைசாணத்தின் உபயோகம்.

எருமைசாணம் போடும்போது அதில்கொஞ்சம் எடுத் து வந்து ஒருசீலையில்வைத்துப் பிழிய ரசம்வரும் அந்த ரசத் தில் ஒருகரண்டிவீதம் காலையில் (௩) நாள் சாப்பிட்டுவர குணமாகும், இரத்தவாந்தி காமாலை புண் பெரும்பாடு வய ருப்பிசம் இவைகளுக்கு உபயோகிக்கவும், ஆனால் அனலுண் டாம் உப்பில்லாத பத்தியம்.

---

## எருமைத்தயிரின் உபயோகம்.

எருமைத் தயிர் சாப்பிட்டுவரில் கண்ணெளிவு தரும் பித்தசாந்தியாகும் யெரிச்சல் இவைகள்தீரும், ஆனல் மந்த மும் வாதமுமுண்டாகும்.

## எருமைநெய்யின் உபயோகம்.

எருமைநெய்யை போஜனத்தோடு உபயோகப் படுத்தி வரில் கண்ஒளிவுதரும், ஆனல் புத்திகெடும் மெய்யின் அழகு போகும் கரப்பான் பித்தம் வாதம் இவைகளுண்டாம்.

## எருமைப்பாலின் உபயோகம்.

எருமைப்பாலைச் சாப்பிட்டுவரில் புத்தி தெளிவு போம் திமிருண்டாகும் மருந்துகளுக்கு முறிவென்றறியவும்.

## எருமைமோரின் உபயோகம்.

எருமைமோர் சாப்பிட்டுவரின் காமாலை கிராணி ஜலக் கழிச்சல் தாகம் கெர்ப்பப்புழு இவைகளுக்கு உபயோகப் படுத்திவர மிகவும் நன்றாம்.

## எருமைவெண்ணெயின் உபயோகம்.

எருமைவெண்ணையைச் சாப்பிட்டுவரில் வெரிவு நீரிழிவு இவைகள் தீரும், ஆனல் கபம் கரப்பான் கிரிமி மந்த வாதம் இவைகள் உண்டாகும்.

## எருமைமூத்திரத்தின் உபயோகம்.

எருமை காலையில்விடும் மூத்திரத்தைப் பிடித்து அதில் வீசம்படிவீதம் காலையில் (௩) நாள் சாப்பிட்டுவர சோகை பாண்டு மேகம் வயற்றுநோய் இவைகள்தீரும் அனலுண்டாகும் உப்பில்லாத பத்தியமாக யிருக்கவேண்டும்.

## எலிக்காதிலையின் உபயோகம்.

எலிக்காதிலை பலம்-கற, எடுத்து அரைபடி ஜலத்தில் போட்டு-வ-படியாக வற்றக்காய்ச்சி (௩) நாள் காலையில் சாப்பிட்டுவர சுரம் தாகம் நீரிழிவு பிரமியம் கடுப்பு இவைகள் தீரும், தாதுபுஷ்டியுண்டாம் இச்சாபத்தியம்.

775



## எலியாமணக்கன்பாலின் உபயோகம்.

எலியாமணக்கன் பால்கரந்து வீசம்படிவீதம் காலையில் சாப்பிட்டுவர வெளிவிஷம் குன்மம் பலவிஷங்கள் பீலிகம் விரைவீக்கம் இவைகள் குணமாகும் ஆனால் பேதி பதிக மாகும் ஆள்பெலமரிந்து கொடுக்கவும் (௩) நாள் கொடுக்க வேண்டும் இச்சாபத்தியம்.

## வெள்ளெருக்கன் பட்டையின் உபயோகம்.

உ-பலம் வெள்ளெருக்கன்பட்டையைக் கொண்டுவந்து உலர்த்திப் பொடிசெய்து௫-பலம் வேப்பெண்ணெயில்கலந்து வைத்துக்கொண்டு கீல்வாதம் சத்துவாதம் இவைகளுக்கு மேல்பூச்சாகப் பூசிவர குணமாகும்.

## வெள்ளைக்கடுகின் உபயோகம்.

வெள்ளைக்கடுகை யரைத்து போஸ்டுசெய்து ஜன்னிக்கும் அகோர தலைநோயிற்கும் உள்ளங்காலிலும் கண்டசதையிலும் வைத்துக்கட்ட குணமாகும், வாந்திபேதிக்கும் குன்மத்திற்கும் வாய்விற்கும் குடல்வலிகளுக்கும் சுரமில்லாமலிருந்தால் வயற்றின்பேரிலும் திமிர்வாதமாகில் முதுகின் பேரிலும் வைத்துக்கட்ட குணமாகும். இதனோடு முருங்கை பட்டையுஞ்சேர்த்து அரைத்துக்கட்ட மிகவும் அதிகார முண்டாம்.

## புன்னக்கொட்டையின் உபயோகம்.

புன்னக்கொட்டையைக் கொண்டுவந்து மேல்தோல் நீக்கி அதிலுள்ளிருக்கும் பருப்பையெடுத்து வென்னீர்விட்டு அரைத்து தனுர்வாதங்களுக்கு மேல்பூசிவர குணமாகும். ஒருகொட்டையின் பருப்பை நசிக்கி-வ-பலம் நல்லெண்ணெயில் போட்டுக் காய்ச்சி காதில்விடக் காதிலுள்ள புண்கள் ஆரும்.

## நிலப்பனங்கிழங்கின் உபயோகம்.

நிலப்பனங்கிழங்கைக் கொண்டுவந்து உலர்த்தி சூரணித்து சீலையில் வடிகட்டிச் சமனிடை சர்க்கரைச் சேர்த்

துக்கொண்டு திருகடிகைப்பிரமாணம் காலைமாலை (ய) நாள் சாப்பிட்டுவர விலாக்குத்தல் மேகம்தீரும், வீரியவிர்த்தி யுண்டாம் நல்லெண்ணெயில் போட்டுக் காய்ச்சி ஸ்நானஞ் செய்துவர செவிநோய் தீரும், இச்சாபத்தியம்.

## முசுர்க்காதிலையின் உபயோகம்.

முசுர்க்காதிலையைக் கொண்டுவந்து வதக்கி கை கால் கீல் வீக்கங்களுக்கு மேல்வைத்துக்கட்ட வீக்கம்வாடி குண மாகும்.

## கோழியவரையிலையின் உபயோகம்.

கோழியவரை யிலையைக் கொண்டுவந்து ரசம்பிழிந்து விசம்படி வீதம் உள்ளுக்குக் கொடுக்க வயற்றுவலி ஆமைக் கட்டி இவைகள் தீரும், இச்சாபத்தியம்.

## சிறுபூனைக்காலிலையின் உபயோகம்.

ஒருபிடி சிறுபூனைக்காலியிலையைக்கொண்டுவந்துஉ-படி ஜலத்தில்போட்டுக் காய்ச்சிவடித்து அரிக்கால்படி வீதம் கொடுக்க க்ஷயம் கோழை மந்தம் இவைகள் தீரும்.

## செந்தாமரையிலையின் உபயோகம்.

ஒருபிடி செந்தாமரை யிலையைக்கொண்டுவந்து உ-படி ஜலத்தில்போட்டு கால்படியாகக் காய்ச்சி வடித்து (ரு) நாள் கொடுக்க பசியுண்டாகும், நீர் எரிவுமுளைமூலம் வாதம் இவை கள் தீரும், இச்சாபத்தியம்.

## சிந்தில்கிழங்கின் உபயோகம்.

சிந்தில் கிழங்கைக்கொண்டுவந்து உலர்த்திசூரணித்து சமனிடைச் சர்க்கரைக்கலந்து வைத்துக்கொண்டு காலை மாலை இருவேளையும் திரிகடிகைப்பிரமாணம் சாப்பிட்டுவர பசியுண்டாகும், பித்தம் (சய)ம் சாந்தியாகும் கஷாயமிட்டு குழந்தைகளுக்கு வார்க்க மாந்தசுரமிவைகள் தீரும் இச்சா பத்தியம்.

## தண்ணீர்விட்டான்கிழங்கின் உபயோகம்.

தண்ணீர்விட்டான் கிழங்கைக் கொண்டுவந்து உலர்த்திச் சூரணித்து சமனிடை சர்க்கரைக்கலந்து சாப்பிட்டுவர சோபை சுரம் வெள்ளை அதிமூத்திரம் இவைகள் தீரும், வேளையொன்றுக்கு திருகடிகைப் பிரமாணம் காலை மாலை சாப்பிட வேண்டியது.

---

## நெய்தல்கிழங்கின் உபயோகம்.

நெய்தல்கிழங்கைக் கொண்டுவந்து சூரணித்து வைத்துக்கொண்டு (உ) பலம் தூள் நிறுத்தெடுத்து (ந) பலம் சர்க்கரையை பாகுசெய்து அதில் தூளைப்போட்டு ஒருபலம் நெய்விட்டு லேக்கியபதமாகக்கிண்டி இறக்கி-வ-பலம் தேன் விட்டு மிசிரித்து வைத்துக்கொண்டு காலை மாலை இருவேளையும் கொட்டைப்பாக்களவு சாப்பிட்டுவர பித்தம் சயி, ரத்த கிரகணி சூடு இவைகள் தீரும், சுக்கிலத்தை விர்த்திக்கும், இச்சாபத்தியம் ஆனல் இது சீதளக்காரியென்றறியவும்.

---

## செங்கழநீர்க்கிழங்கின் உபயோகம்.

செங்கழணீர்க் கிழங்கைக் கொண்டுவந்து உலர்த்தி சூரணித்து வைத்துக்கொண்டு காலை மாலை இருவேளையும் திருகடிகைப் பிரமாணம் சாப்பிட்டுவர பித்தம்-சயி, மேகம் உயி, புணர்ச்சியின் ஊஷ்ணம் இவைகள் தீரும், இச்சாபத்தியம்.

---

## கோரைக்கிழங்கின் உபயோகம்.

கோரைக்கிழங்கைக் கொண்டுவந்து சூரணித்து சமனிடை சர்க்கரைக்கலந்து காலைமாலை இருவேளையும் திருகடிகைப் பிரமாணம் சாப்பிட்டுவர குளிர் சுரம் பித்தம் தாகம் கபம் மூர்ச்சை பேதி வாந்தி இவைகள் தீரும், அதிசுமூத்திர மிரங்கும்.

---

## இஞ்சிக்கிழங்கின் உபயோகம்.

ஒருபலம் இஞ்சிக்கிழங்கைக் கொண்டுவந்து நசிக்கிச் சார்பிழிந்து பொங்கக்காய்ச்சி இறக்கி அதில் ஒரு காசி யிடை தேன்விட்டு இவ்விதமாக மூன்றுபோது கொடுக்க சுரம் சன்னி ஒக்காளம் வாதம் கபம் இவைகளுக்குக் கொடுக்கத் தீரும்.

---

## கருஞ்செம்பைப்பூவின் உபயோகம்.

கால்பலம் கருஞ் செம்பைப்பூவை-ந-பலம்-நல்லெண் ணெயில்போட்டு காய்ச்சிவடித்து ஸ்நானஞ்செய்துவர கபால சூலை பீனிசம் நீர்க்கட்டு இவைகள் தீரும்.

---

## வெங்காயவிதையின் உபயோகம்.

வெங்காயவிதையும் பனங்கற்கண்டும் சமஎடையாக வேளை ஒன்றுக்கு ஒருபலம்வீதம் (ந) நாள் சாப்பிட்டுவர மேகம் மூலம் தேககாங்கை நீர்எறிவு இவைகள் குணமாகும்.

---

## துளசிவிதையின் உபயோகம்.

ஒருபலம் துளசிவிதையும், உ-பலம் பனங்கற்கண்டும் சேர்த்து ஒரு மண்பாத்திரத்திலாவது கோப்பையிலாவது போட்டு ஆழாக்கு ஜலம்விட்டு ஒரு ராமுழுதும் ஊரவைத்து மறுநாள் காலையில்எடுக்கப் பாயாசம்போல் இருக்கும் அதைச்சாப்பிட சிதம் விழுதல்தீரும், ஆனால் இவ்விதமாக (ந) நாள் சாப்பிடவேணும் அன்றியும் யிலையைப்பிட்டு வைத்து ரசம்பிழிந்து பெரியவர்களுக்கு (அரிக்கால்) படியும் குழந்தைகளுக்கு ஒருபாலடையும் கொடுக்க ஜலுப்புத் தீரும்.

---

## சங்கன்வேரின் உபயோகம்.

ஒருபலம் சங்கன்வேரைக் கொண்டுவந்து (உ) படி ஜலத்தில்போட்டு (வ) படியாய் வற்றக்காய்ச்சி வடித்து (ந) நாள் கொடுக்க கிரிமி வாதம் காசம் கோழை கபம் இவைகள் தீரும் இச்சாபத்தியம்.

779



## போராமுட்டிவேரின் உபயோகம்.

ஒருபலம் போராமுட்டிவேரை சதைத்து (௨) படி ஜலத்தில்போட்டு (௮) படியாக வற்றக்காய்ச்சி வடித்து (௩)நாள் சாப்பிட்டுவர பித்தம் சுரம் தாகம் மாந்தம் இவைகள் தீரும் சிற்றாமுட்டிவேரை இம்மாதிரியாக கஷாயமிட்டுக்கொடுக்க சுரம்-கூச-ம் கேழ்க்கும், இச்சாபத்தியம்.

---

## அவுரிவேரின் உபயோகம்.

௨-பலம் அவுரிவேரை (௨) படி ஜலத்தில்போட்டு கால் படியாக வற்றக்காய்ச்சி பாகித்து (௩) நாள் கொடுக்க வெள்ளைவிழுதல் வயற்றுவலி மூர்ச்சை இவைகள் தீரும். இச்சாபத்தியம்.

---

## முக்காவேளைவேரின் உபயோகம்.

ஒருபலம் முக்காவேளை வேரைக் கொண்டுவந்து ௨-படி ஜலத்தில்போட்டு கால்படியாக வற்றக்காய்ச்சி வடித்து இருவேளையும் (௩) நாள் கொடுக்க அன்னத்துவேஷம் சுரம் மந்தம் வாதம் இவைகள் தீரும்.

---

## பெரியாநங்கையிலையின் உபயோகம்.

௨-படி பெரியாநங்கையிலையைக் கொண்டுவந்து-௨-படி ஜலத்தில்போட்டு-௮-படியாக வற்றக்காய்ச்சி (௩)நாள் ஆறுவேளை கொடுக்க மலக்கட்டு பித்தம்-சயி-ம்-தீரும், இச்சாபத்தியம்.

---

## மிளகுதக்காளியிலையின் உபயோகம்.

ஒருபிடி மிளகுதக்காளியிலையை-௨-படி ஜலத்தில்போட்டு ௮-படியாக வற்றக்காய்ச்சி வடித்து நித்திரையில் கைகால்களைச்சேர்த்து முரிக்கிக்கொள்ளும் வாதத்திற்கும் பாண்டு மேகம் உட்சூடு இவைகளுக்கும் உபயோகிக்க குணமாகும், இச்சாபத்தியம்.

## பேரீச்சங்காய் பழத்தின் உபயோகம்.

நாள் ஒன்றுக்கு-ரு-காய்வீதம் (ஈ) நாள் சாப்பிட்டுவர மதுமூத்திரம் உமிநீர்வடிதல் இவைகள் குணமாகும், இம்மாதிரியாக பழத்தைச்சாப்பிட்டுவர நீர்கட்டு பித்தசுரம் இவைகள் குணமாகும்.

---

## தேயிலையின் உபயோகம்.

தேயிலையில் கருப்புப் பச்சையென இரண்டு விதங்களுண்டு இதில்கருப்பைக் காப்பிசெய்து உபயோகிக்க நரம்புகளில் வியாபித்து தென்பைக்கொடுத்து ஆயாசத்தை நீக்கும் வியாதியாளருக்கு இளப்பையாற்றும்.

---

## பச்சை தேயிலையின் உபயோகம்.

பச்சை தேயிலைப் காப்பிசெய்து கொடுக்க நித்திரையைப் போக்கடிக்கும் ரத்த ஓட்டத்தைக் குறைத்துவிடும் சாருயங் குடித்தவர்களுக்கு காணும் மயக்கத்தைத் தணிக்கும் திரேகமலுப்பாகக் காண்கிற உறக்கத்தையும் நீக்கும், தேய்த்தண்ணீர் காரமாகச்செய்து கொடுத்தால் சிலவேளை தென்பையும் சிலவேளை சோம்பலையுந்தரும், ஆனல் அல்ப ஊஷ்ணஞ்செய்யும்.

---

## காசிக்கட்டியின் உபயோகம்.

காசிக்கட்டியைக் கொண்டுவந்து ஜலத்திலாவது சாருயத்திலாவது உறைத்து முலைக்காம்பு வெடிப்புகளுக்கும் தொண்டைகம்மல்களுக்கும் பத்துப்போட குணமாகும் சீதபேதி வெள்ளைவிழுதல் அதிசாரம் இருமல் இவைகளுக்கும் பெரியவர்களுக்கும்-ம்ரு-குன்றுமணியிடையும் சிறியவர்களுக்கு-ரு குன்றுமணியிடையும் பொடித்துக்கொடுக்க குணமாகும்.

---

## சூரத்து நிலாவரையின் உபயோகம்.

அரைபலம்சூரத்துநிலாவரையைக்கொண்டுவந்துகால்படி ஜலத்தில்போட்டு (அரிக்கால்) படியாய் வற்றக்காய்ச்சி

781



இருவேளைகொடுக்க மலச்சிக்கல் நீர்யேற்றம் குணமாகும் குமட்டல் உண்டாகாமல் இருக்க காப்பிபோல்செய்து சாப்பிட வேண்டில் பசும்பால் சுக்குத்தூள் சீமையிந்துப்பு திராக்ஷிஉப்பு இவைகளில் ஏதாகிலும் ஒன்றைச்சேர்த்துக் கொடுக்கவும் கெற்பஸ்திரி மூலரோகி சிறுகுழந்தை இவர்களுக்கு நிலாவரை கொடுக்கப்படாது.

---

## நிலாவரை வேறுவித உபயோகம்.

உ-பலம் நிலாவரையும் வ-பலம் சுக்குத்தூளும் சேர்த்து கால்படி ஜலத்தில்போட்டு அரிக்கால்படியாய் வற்றக் காய்ச்சி வடித்து அதில் ஆமணக்கெண்ணெய் உ-பலம்விட்டுக் காலையில் சாப்பிட சுகபேதியாகும், நிலாவரை சிறு குடல்களில் வியாபித்து பேதியை உண்டாக்கும்,

---

## அதிமதுரவேரின் உபயோகம்.

ஒண்ணரை அவுன்சு அதிமதுரத்தை ஒருபயிண்டுஜலத்தில்போட்டுக் காய்ச்சி வடித்துக்கொடுக்க நீர்சுருக்கு மூத்திரரோகம் இவைகள் தீரும், அதிமதுரத்தின் சிறியதுண்டை வாயில்அடக்கி சாரத்தை முழுங்கினால் இருமல்தணியும், கரகரப்புத்தீரும், இதுபோல் பட்டையை உபயோகிக்க பேதி இருமல் தீரும்.

---

## சோம்புவிதையின் உபயோகம்.

சோம்புவிதையைக் கஷாயமிட்டு வடித்து குழந்தைகளுக்கு (யரு) குண்டுமணியிடைவீதங் கொடுக்க அதிசாரம் வாயுவால் காணும்வலி இவைகள் குணமாகும், முலைப்பாலைச் சுரப்பிக்கும்குண மிதற்குண்டு.

---

## சீரகத்தின் உபயோகம்.

வேளைக்கு ஒருவிராகனிடை சீரகமும், உ-விராகனிடை சீனிகற்கண்டும் சேர்த்து இவ்விதமாக (சு) நாள் சாப்பிட்டு வர பித்தம் சமமாகும் பசிதீவன முண்டாகும்.

## கொத்தமல்லிவிதையின் உபயோகம்.

ஒருபலம் கொத்தமல்லிவிதையை (வ) படி ஜலத்தில் போட்டுக் காய்ச்சிவடித்த கஷாயத்தில் கால்படி பசும்பாலும், ௨-பலம் சர்க்கரையுஞ்சேர்த்து தினம் இம்மாதிரியாகக் காய்ச்சிக் காலையில் சாப்பிட்டுவர பித்தத்தை சமமாக்கும், ஆரோக்கியத்தைத்தரும், வாதத்தைஹரிக்கும், தாகத்தை யடக்கும், வாந்தியை நிருத்தும்.

---

## காப்பிக்கொட்டையின் உபயோகம்.

காப்பிக்கொட்டை பித்தத்தை விர்த்திக்கும் திரேகத்திற்கு பலத்தையுண்டாக்கும் பசிதீவனங்கொடுக்கும் ஊஷ்ணத்தைச்செய்யும் இவ்வித குணங்களுண்டாம், காப்பி செய்து பால் சர்க்கரை சேர்த்து கொஞ்சமாகச் சாப்பிட்டால் பேதியைக்கட்டும் அதிகமாகக் குடித்தால் பேதியாகும் காசம் சுவாசம் இவைகளுக்குக் கொடுத்தால் உடனே சாந்தமாகும் குழந்தைகளுக்கு வாந்தியைநீக்கும், சுரம்முக ஜன்னி கக்கிருமல் தலைவலி முதலியவைகளுக்குங் கொடுக்கப்படும்.

---

## சடாமாஞ்சில்வேரின் உபயோகம்.

சடாமாஞ்சில்வேர் பலம்-௨, எடுத்து நொரிக்கி அரை படி ஜலத்தில்போட்டு கால்படியாக வற்றக்காய்ச்சி வடித்துக்கொடுக்க சூதகஜன்னி காக்கைவலி இரைப்பு இருமல் சுவாசம் கிரிமி அக்கினிமந்தம் குடைச்சல் சுரம் குஷ்டம் இவைகளுக்குக் கொடுக்க நன்று, சூதகஜன்னிக்கு அடிக்கடி உபயோகப்படுத்தவும்.

---

## அக்கராகாரத்தின் உபயோகம்.

அக்கராகாரத்தை வாயில்போட்டால் ஜலம்ஊறும் ௨-பலம் அக்கராகாரத்தை நொரிக்கி ௨-படி ஜலத்தில்போட்டு வ-படியாக வற்றக்காய்ச்சி வடித்து (௩) நாள் (௪) போது

சாப்பிட்டு வர தந்தரோகம் சுரம் தாகம் வாதம் இவைகள் தீரும், ஒருதுண்டை வாயில்போட்டுமென்றால் நீர்வடியும் பல்நோய் குணமாகும்.

## ஜாதிக்காயின் உபயோகம்.

முத்தினஜாதிக்கா ஒன்று கொண்டுவந்து பொடிசெய்து ௩-குன்றிமணியிடை தூள்யெடுத்து ௨-திராம் போர்ட்டொயினில் தூளைப்போட்டுக் கொடுக்க ஊஷ்ணவாய்வைக் கண்டிக்கும் இதை பேதிமருந்துகளோடு சேர்த்துக்கொடுக்க வயற்றுக்கடுப்பை நீக்கும் ஆனால் அசதி ஜன்னிக்கு இதை கொடுக்கப்படாது.

## மிளகின் உபயோகம்.

௨-பலம் மிளகையெடுத்து நெய்விட்டு வருத்து கடையவிட்டு(வ)படி ஜலம்விட்டு அரிக்கால்படியாய் வற்றக்காய்ச்சி வடித்துச் சாப்பிட ஊஷ்ணித்து வாய்வைக் கண்டிக்கும் பசியுண்டாக்கும் கண்கள்மேல்வரும் கண்கட்டிகளுக்கு மிளகையெடுத்து ஜலம்விட்டு உரைத்துத்தடவிவர உடனே குணமாகும் பேதி அதிசாரம் அஜீரணம் இவைகளுக்கு இந்தகஷாயங்கொடுக்க நன்மைதரும் வியாதியைக் கண்டிக்கும்.

## வெள்ளைப்பூண்டின் உபயோகம்.

வெள்ளைப்பூண்டை அரைத்து மேல்தடவ நோய்கள் தீரும் உட்கொள்ள மூத்திரம் ஊஷ்ணமும் அதிகரிக்கும் கபத்தை வெளிப்படுத்தும் கிரிமிகளை நீக்கும் யெண்ணெயில் போட்டுக்காய்ச்சி செவியில்விட காதுநோய்தீரும்.

## புகையிலையின் உபயோகம்.

புகையிலையை ௨-பலம் எடுத்து வ-படி ஜலத்தில்போட்டு அரிக்கால்படியாய் வற்றக்காய்ச்சி ௩-நாள் காலையில் கொடுக்க மலக்கட்டு நீர்க்கட்டு குடல்வாதம் இவைகள் குணமாகும், புகயிலையை சுருட்டுசெய்துப் பிடித்துவர மலம் நன்று

மிரக்கும் அதின்தூள் நாசிக்குஉபயோகித்துவர பீனிசரோகம் குணமாகும் இதைவாயிலடக்க உமிநீர்வடிந்து தந்தநோய் குணமாகும் இதற்கு இருதயத்தின் நடையைக் குறைக்கின்ற குணமிருப்பதால் அளவுக்கு அதிகமானல் மார்புநோய் உண்டாகும் குழந்தை பலயீனர் கிழவர் இவர்களுக்கு இதை கொடுக்கப்படாது.

---

## சாலாம்பிசிரிவேரின் உபயோகம்.

சாலாம்பிசிரிவேர் பலம்-ஐ, எடுத்துத் தூள்செய்து வடபடி பசும்பாலில் போட்டுக் காய்ச்சி வடித்து ஒருபலம் சர்க்கரைச் சேர்த்துச் சாப்பிட்டுவர திரேகத்திற்குப் பலமும் தாதுபுஷ்டியுமுண்டாகும் இதை க்ஷயரோகத்திற்குங் கொடுக்கலாம் உ0-நாள் சாப்பிடவேண்டும்.

---

## சுக்குஉலர்ந்தகிழங்கின் உபயோகம்.

தேரின சுக்கைக்கொண்டுவந்து சூரணித்து வஸ்திரத்தில் வடிகட்டி வைத்துக்கொண்டு காலைமாலை திருகடிகைப் பிரமாணம் சாப்பிட்டுவர வாய்வைக்கண்டித்துப் பசியை உண்டாக்கும், அதிசாரம் இரைப்பு செவிநோய் தலைநோய் வாதம் குன்மம் மந்தம் கபம் சூலை முதலியவைகளுக்கு இதை அடிக்கடி உபயோகப்படுத்த குணமாகும்.

---

## மஞ்சள்கிழங்கின் உபயோகம்.

மஞ்சள்கிழங்கை சூரணித்து சமனுச் சர்க்கரைகலந்து கொட்டைப்பாக்களவு சாப்பிட்டுவர வயறுபொருமல் தீரும், முழுகிழங்கை தீயில்கொளுத்தி தீயை யமர்த்தி அதில் வரும் புகையை நாசியில்பிடிக்க சலதோஷம் தீரும், தலைவலி வீக்கம் இவைகளுக்கு உரைத்து சுண்ணும்பும் கொஞ்சம் சேர்த்து பத்துப்போட குணமாகும்.

---

## கசகசாவிதையின் உபயோகம்.

கசகசாவை பால்விட்டு அரைத்து(அரிக்கால்)படிபால் பிழிந்து (ங) நாள் சாப்பிட்டுவர கிரகணி திமிரு அதிசாரம்

இவைகள் தீரும், தாதுபுஷ்டியுண்டாகும், கசகசாவும் அத்தியிலையும் சமமாகச்சேர்த்து காடிவிட்டு அரைத்து நமைச்சல்களுக்குப்பூச நமைச்சல்தீரும், மேற்கூறியபடி பால்விட்டு அரைத்துப் பால்பிழிந்துக் கொடுக்க சீதபேதி ரத்தபேதி நித்திரை பங்கம் இவைகளுக்குக் கொடுக்க குணமாகும்.

---

## அப்பியங்கஸ்நானத்தின் உபயோகம்

வாரத்திற்கு இரண்டுவிசை சனி புதன்கிழமைகளில் எள்ளெண்ணெயை சிரசில்தேய்த்து ஸ்நானஞ்செய்துவரதலை நோய் அணுகாது, மயிர்வளர்த்தியாகும், தலைக்கும் முழங்காலுக்கும் வலிவுவுண்டாகும் தாதுகட்டும் பித்தசாந்தியாகும்.

---

## துவரம்பருப்பின் உபயோகம்

முளைக்கட்டி உடைத்த துவரம்பருப்பைக் கொண்டுவந்து நன்றாய்வேகவைத்துக் கடையல்செய்து போஜனஞ் செய்யும்போது முதற்சாதத்திற்கு ஆழாக்குப் பருப்பும் கால் ஆழாக்கு நெய்யும் விட்டுக்கொண்டுச் சாப்பிடப் பிடிசாதத்திற்குப் பிடிசதை யுண்டாகும் ஆனல் அன்னம் நன்றாய் சமையாதிருந்தால் திரேகபலன்போம் ஆனல் மலஜல சிக்குகள் மற்றுநாள் உண்டாகும் சாதம் நன்றாய் வேகவேண்டும்.

---

## கடுக்காயின் உபயோகம்

கடுக்காய் (ருய) எடுத்து கழுநீரில் ஒருநாள் ஊரவைத்து மறுநாளும் புதுகழுநீரில் ஊரவைக்கவும் இப்படி (ரு) தடவைசெய்து யெடுத்து கொட்டைகளைநீக்கி எலுமிச்சம் பழச்சாற்றில் ஒருநாள் ஊரவைத்து எடுத்து (உ)படி புளித்த மோரில் போட்டு அடுப்பேற்றிச் சுண்டக்காய்ச்சி யெடுத்து வைத்துக்கொண்டு மிளகுசீரகம் திப்பிலிசுக்கு பெருங்காயம் வகைக்குப் பலம் (ரு) இந்துப்பு பலம் (கரு) இவைகளைச் சூரணித்து ஷை கடுக்காய்களில் செலுத்திஉலர்த்தி ஒருஜாடியில் வைத்துக்கொண்டு தினம் ஒரு கடுக்காய்வீதம் காலையில்

சாப்பிட்டுவர அரோசிகம் பித்தம் அக்கினிமந்தம் வாயு குன்மம் இவைகள் தீரும், நன்றாய் மலமிறங்கும்.

---

## பாவன சீரகத்தின் உபயோகம்

ஒருசேர் சீரகத்தை வல்லாரை கையாந்தகரை பொன்னாங்காணி புளியாரை இஞ்சி எலுமிச்சம்பழம் இவைகளின் சாறுகளில் தனித்தனியே ஒருநாள் ஊறவைத்து நிழலில் உலர்த்தி தினம் காலையில் உ-விராகனிடை வீதம் சாப்பிட்டுவர பித்தவாய்வு, உஷ்ணம், அக்கினிமந்தம், மலபந்தம் இவைகள் தீரும் ரத்தபுஷ்டி தாதுவிர்த்தியுண்டாகும்.

---

## பாவன மிளகின் உபயோகம்

அரைசேர் நல்லமிளகை ஒரு சேர் கையாந்தகரைச் சாற்றில்போட்டுச் சுண்டக்காய்ச்சிப் பிறகு ஒருசேர் பெலுமிச்சம் பழச்சாற்றில்போட்டு இந்துப்பு சேர்-வ, சேர்த்துச் சுண்டக்காய்ச்சி நிழலில்உலர்த்தி தினம் காலை மாலை (ரு) அல்லது (ய) மிளகுவீதம் சாப்பிட்டுவர அக்கினிமந்தம் உஷ்ணவாய்வு தீரும் ரத்தவிர்த்தியாகும்.

---

## பாவன திப்பிலியின் உபயோகம்

ஒருசேர் பெரிய அரிசிதிப்பிலியை எடுத்து கையாந்தகரை, வல்லாரை, நெய்சுட்டி, சிறுகீரை, இஞ்சி, முசுமுசுக்கை பொன்னாங்காணி, கீழாநெல்லி, நாயுருவி, இவைகளின் சாற்றில் வகைக்குமூன்றுநாள் ஊறவைத்து பிறகு எலுமிச்சம்பழச்சார் சேர்-க, இந்துப்பு சேர்-ஒ, இவ்விரண்டுஞ் சேர்த்து அதில் (௩) நாள் ஊறவைத்து உலர்த்தி வைத்துக்கொண்டு தினம் காலையில் ஒரு திப்பிலிவீதம் சாப்பிட்டுவர காசம்-ரு, சுவாசம்-ரு, உஷ்ணவாயு முதலியவைகள் தீரும் பசியுண்டாகும்.

---

## பாவன ஓமத்தின் உபயோகம்

ஒருசேர் ஓமத்தின் அரிசியை ஒருநாள் புளித்தமோரில் ஊறவைத்து உலர்த்தி பிறகு ரெண்டுசேர் எலுமிச்சம்பழச்

சாறும், அரைசேர் இந்துப்பும்சேர்த்து அதில் இரண்டுநாள் ஊரவைத்து உலர்த்தி வைத்துக்கொண்டு தினம் காலைமாலை இரண்டுதடவையும் ஒரு விராகனிடைவீதங் கொடுக்க வயற்றுவலி அக்கினிமந்தம் வாயு வயற்றுப்பல் அஜீரணம் குன்மம் முதலிய பற்பல ரோகங்கள் குணமாகும்.

## வாதுமை ஹல்வாயின் உபயோகம்

கோதுமை, கசகசா, சவ்வரிசி, சுத்தஜலத்தில் இரண்டு மணிநேரம் ஊரவைத்து மேல்தோல்நீக்கின வாதுமைப் பருப்பும் வகைக்கு சேர்-வ, ஜலத்தில் ஊரவைத்து மை போல் அரைத்து (ச) சேர் பசும்பாலில் கரைத்து அதில் சீனிசேர்-க, பன்னீர்சேர்-வ, நெய்சேர்-வ சேர்த்துக்காய்ச்சி பதத்தில் எடுத்து வைத்துக்கொண்டு கால்சேர் வீதம் சாப்பிட்டுவர தாதுபுஷ்டி யுண்டாகும்.

## கோதுமை ஹல்வாயின் உபயோகம்

கோதுமையின் வெண்மையான வரலாநொய்யை யேந்திரத்திலிட்டு மாவாக்கினமாவும், பச்சைசம்பா அரிசியை ஜலத்தில் ஊரவைத்து எடுத்து இடித்து வஸ்திரகாயம்செய்த மாவும் வகைக்கு ஆழாக்கு க-ம், எருமைப்பால் முற்றின தேங்காய்ப்பால் வகைக்குப்படி-க, இவைகளில் சேர்த்துக் கரைத்து பெரித்து அடிக்கடித்தொழாவிக்கொடுத்து பதத்தில் சீனி சேர்-௨, ஏலரிசிதூள் விராகனிடை (உ) முன் போல் செய்த வாதுமைப்பருப்பு சேர்-வ, நெய் சேர்-௨, பன்னீர் சேர்-௨, இவைகளையெல்லாஞ் சேர்த்து சரியான பதத்தில்பெடுத்து வைத்துக்கொண்டு கால்சேர்வீதம்தினம் சாப்பிட்டுவர தாது புஷ்டியாகும்.

## போகவல்லி ஹல்வாயின் உபயோகம்

சுத்தஜலத்தில் இரண்டுமணிநேரம் ஊரவைத்து தோல் போக்கின பாதுமைப்பருப்பு பலம் (அ) கசகசா பலம் (ச) சாலாம்மிசிரி பலம்-உ, நீர்முள்ளிவிதை பலம்-க, ஜாதிக்காய் பலம்-௨, வால்மிளகு பலம் (வ) யேலம் அரிக்கால்,

இவைகளை பசும்பாலால் அரைத்து (சு) சேர் பசும்பாலில் கரைத்து யெரித்து இரண்டுசேர் ஆக்கி அதில் பன்னீர் சேர் ௨, நெய்சேர் (க) சீனிசேர் ௨, போட்டுக்காய்ச்சி பதத்தி லிரைக்கி வைத்துக்கொண்டு தினம் கால்சேர்வீதம் சாப் பிட்டுவர நீர் யெரிவு, போகத்தா லுண்டாகும் ஊஷ்ணம் இவைகள்தீரும், தாதுபுஷ்டி யுண்டாகும்.

## கிராம்பின் உபயோகம்

ஒருபலம் கிராம்பை இரவில் முலைப்பாலில் ஊரவைத்து மறுநாள் அந்தப்பாலால் மைபோல் அரைத்து தேன் பலம் (வ) சேர்த்து சொதிக்கவைத்து பதத்தில் இரக்கி வைத்துக் கொண்டு கடலை அளவாகக் கொடுத்துவர தீபனம் ரத்த விர்த்தி யுண்டாகும்.

## வெந்தயத்தின் உபயோகம்

வெந்தயம் கோதுமை வகைக்கு அரைஅவுன்சு வருத் து இரவில் பசும்பாலில் ஊரவைத்துக் காலையில் அதைக் கடைந்து வடித்து நெய் தேன் சர்க்கரை வகைக்கு அவுன்சு அரை சேர்த்து தினம் காலையில் சாப்பிட்டுவர ரத்தவிர்த்தி யுண்டாகும் விந்து ஊறும்.

## பச்சைக்கடலையின் உபயோகம்

ஒருபிடி பச்சக்கடலையை இரவில் அரைசேர் ஜலத்தில் போட்டு ஊரவைத்து காலையில் வடித்து அந்த ஜலத்தில் ஜாதிக்காய் ஜாதிப்பத்திரி வகைக்கு விராகனிடை-௨, சூர ணித்துப்போட்டு தேன்-௨-விராகனிடைவிட்டு கொடுத்து வர வீரியவிர்த்தி யுண்டாகும்.

## கசகசாவின் உபயோகம்

கசகசா வால்மிளகு வகைக்குப்பலம்-௨, இளம்வருப் பாய் வருத்து அத்துடன் வாதுமைப்பருப்பு சீனுகற்கண்டு வகைகுப் பலம்-௨, சேர்த்து கல்உரளில்போட்டுக் கட்டப் பாரையால் இடித்து லேகியமாகச்செய்து பாக்களவு தினம் காலை மாலை சாப்பிட்டுவர தாதுபுஷ்டியுண்டாகும்.

## அகத்திக்கீரையின் உபயோகம்.

அகத்திக்கீரையைக் கொண்டுவந்து பழுப்பை நீக்கி சமைத்துச் சாப்பிட்டுவர பித்தசாந்தியாகும் மலத்தைக் கழிக்கும் மிகநன்று.

## முருங்கைக்கீரையின் உபயோகம்.

முருங்கைக்கீரையை காம்புப் பழுப்பும்நீக்கி சமைத்துச் சாப்பிட சிரசு, தாபனம், மூர்ச்சை, உட்சூடு தணியும் இதின் காயைச் சமைத்துச்சாப்பிட விந்தூறும்.

## புளியன்துளிரின் உபயோகம்.

புளியன்துளிரைக் கொண்டுவந்து உலர்த்தி சூரணித்து வைத்துக்கொண்டு துவையல் குழம்புகள் இவைகளில் சேர்த்துச் சமைத்துச் சாப்பிட பாண்டு கண்ணோய் இவைகள் சாந்தியாகும்.

## கீரைத்தண்டின் உபயோகம்.

கீரைத்தண்டை சமைத்துச் சாப்பிட ரத்தகழிச்சல் கிரிச்சாரம் சாந்தியாகும்.

## புதினாகீரையின் உபயோகம்.

புதினாவைக் கொண்டுவந்து நெய்விட்டு வதக்கி துவையல்செய்து காலையில் பாக்களவு வெரும்வயற்றில் சாப்பிட்டு வரவும், சாதத்தோடு உபயோகிக்கவும், பேதி மந்தம் அரோசகம் சாந்தமாகும்.

## வெள்ளைக்கீரையின் உபயோகம்.

வெள்ளைக்கீரையை சமையல்செய்து சாப்பிட மூலைப் பாலதிகரிக்கும் திரேகத்திற்கு சவுக்கியமுண்டாம்.

## பருப்புக்கீரையின் உபயோகம்.

பருப்புக்கீரையை சமைத்துச்சாப்பிட பித்தத்தைக் கண்டிக்கும்.





## பசலக்கீரையின் உபயோகம்.

பசலக்கீரையைச் சமைத்துச்சாப்பிட வெள்ளை விழு தல் மூத்திரரோகம் சாந்தியாகும்.

---

## பால்சொரி கீரையின் உபயோகம்.

பால்சொரி கீரையைச் சமைத்துச்சாப்பிட பித்தத் தைக் கண்டிக்கும் மயக்கத்தை தணிக்கும்.

---

## முளக்கீரையின் உபயோகம்.

முளக்கீரையைச் சமைத்துச் சாப்பிட பசியுண்டாகும், காசரோகத்தை நிவர்த்தியாக்கும் சுரமுள்ளவர்களுக்குக் கொடுக்கலாம்.

---

## முள்ளுக்கீரையின் உபயோகம்.

முள்ளுக்கீரையைச் சமைத்துச் சாப்பிட்டுவர மந்தம் நீர்க்கட்டு சாந்தமாகும்.

---

## அரைக்கீரையின் உபயோகம்.

அரைக்கீரையை சமைத்துச் சாப்பிட்டுவரில் காசம் சுரம் சாந்தமாகும் தாதுவிர்த்திக்கும்.

---

## சிறுகீரையின் உபயோகம்.

சிறுகீரையை சமைத்துச் சாப்பிட்டுவரில் கிரிச்சாரம் பித்தம் நேத்திரகாசம் குணமாகும் திரேககுளிர்ச்சி யுண் டாகும்.

---

## புளியாரைக்கீரையின் உபயோகம்.

புளியாரைக் கீரையைச் சமைத்துச் சாப்பிட்டுவரில் ரத்தமூலம் பித்தம் மூலவாயு இவைகள் சாந்தியாகும்.

## கோழிக்கீரையின் உபயோகம்.

கோழிக்கீரையை சமைத்துச்சாப்பிடில் கிருமி கரப்பான் இவைகள் சாந்தமாகும்.

---

## கொத்தமல்லிக்கீரையின் உபயோகம்.

கொத்தமல்லி கீரையைச் சமையல் செய்தாகிலும் தொவையல்செய்தாகிலும் சாப்பிட்டுவர அரோசிகம் பித்தம்-சயி, வாதம்-அயி-ம், சாந்தியாகும் வீரியவிர்த்தியுண்டாம்.

---

## தென்னங்குருத்தின் உபயோகம்.

தென்னங்குருத்தைச் சாப்பிட்டுவர கபம் பித்தம்மூலம் இவைகள் சாந்தமாகும்.

---

## செந்தாமரைப்பூவின் உபயோகம்.

இருமல் தொண்டைகம்மல் சிரசுதாபம் இவைகளுக்குக் கொடுக்க சாந்தமாகும்.

---

## பன்னீர்பூவின் உபயோகம்.

பன்னீர்பூவை பித்தம் வாந்தி இவைகளுக்குக் கொடுக்க சாந்தமாகும்.

---

## பிரம்மதண்டிப்பாலின் உபயோகம்.

கண்சிவப்பு, கண்கசிதல், கண்ணில் நீர்வடிதல், கண்குருகல், கண்வலி இவை முதலானதற்கும் ஒருதுளி இரண்டுதுளிவிட சாந்தமாகும்.

---

## கருவேப்பிலையின் உபயோகம்.

கருவேப்பிலையை துவையல்செய்தாவது அல்லது குழம்பு வைத்தாவது சாப்பிட்டுவர சீதபேதி சுரம் அரோசிகம் இவைகள் சாந்தமாகும்.

## தேங்காய்ப்பாலின் உபயோகம்.

தேங்காயை உடைத்து திரிகி அப்பட்டமாகப் பால் பிழிந்துச் சாப்பிட்டுவர கரப்பான்தீரும், சுக்கிலத்தை விர்த்திக்கும் ஆனல் வாதம் பித்தம் அதிகரிக்கும்.

## குன்மம் மூலவாயு பாரிசவாயு வயிற்று வலிக்கு.

ஒருபலம் வெள்ளுள்ளியை மேற்றேல் நீக்கி ஆவின் பாலிலவித்து அதில் சீரகம், இந்துப்பு, சுக்கு, திப்பிலி, மிளகு, ஓமம், பெருங்காயம் இவைகளை வகைக்குப்பலம் ஒன்றுவீதம் வெதுப்பிப் பொடித்துத் தூவிக்கடைந்துவேளை யொன்றிற்கு யெலுமிச்சங்காய்ப் பிரமாணம் ஒருமண்டலங் கொள்ளத்தீரும்.

## சகலகுன்மத்திற்கு.

நொச்சி தழுதாழை மாவிலிங்கு இவைகளினிலைகளை ஓரளவாய்ச் சிதைத்துப் பிழிந்தசாறு ஆழாக்கு வெள்ளுள்ளித் தயிலம் ஆழாக்கு பெருங்காயம் பலம்கூ, பொடித்துப் போட்டு குழம்பாய்க்காய்ச்சி ஒருகரண்டி வீதம் பத்துநாட் கொடுக்கத் தீரும்.

## அண்டவாதம்நடுக்குவாதம் முடக்கு வாதம் சந்துவாதம் முகவாதம் இவைகட்கு.

சித்திரமூலம், மாவிலிங்கு, கொன்றை, முறுங்கை, சங்கு, வெள்ளறுகு, வேம்பு, எருக்கு சுக்கு திப்பிலி மிளகு பஞ்சலவணம், இவைகளை ஓர் நிரையாய் ரவியிலுலர்த்திச் சூரணித்து ஒருமண்டலம் திருகடிகைப்பிரமானம். சாப்பிட்டு வரத்தீரும்.

## அரைவாதம் கால்வாதத்திற்கு.

முற்றின தேங்காயை கண்திறந்து நீரை நீக்கிப்போட்டு அதற்குள் திருகுகள்ளிப்பால்விட்டு காஞ்சிரை முளையடித்து புளியந்தணலிற்போட்டுச் சுட்டு சிரட்டை வெந்தபின் எடுத்

793



நாடுநீக்கி அரைக்குக்கீழ்பாதவரைத்தடவி மர்லையில் வென்னீரில் ஸ்நானஞ்செய்யத் தீரும்.

---

## வாதக்கடுப்பு குத்து கைகால் முடக்குதிமிர்வாதத்திற்கு.

புனலித்தண்டு, திருகுகள்ளி, சுடுதூரத்தி, தழுதாழை முடக்கொத்தான் வேப்பம்பட்டை சங்கு உத்தாமணிவெண்ணொச்சி, வெள்ளிண்டு, பிரப்பங்கிழங்கு வகைக்குப் பலம்-ம, இடித்து ஒருபாண்டத்திற் போட்டு அன்றாடம் ஜலம் விட்டுக் கொதிக்கவைத்து வேதுவிடவும்.

---

## பக்கவாதம் மூகவாதந் திமிர் நடுக்குவாதம் முதலான சகலவாதத்திற்கும் உட்குத்துப் புற வீச்சுக்கும் தலைவலிக்கும் மேற்பூச்சு.

உகாய் எருக்குகழற்பொடி மாவிலிங்குசாரணை குப்பைமேனி கருநொச்சி கொன்றை ஈசுரமூலி கொடுவேலி இவைகளின் வேர்ப்பட்டை, சுக்கு, திரிகடுகு, வசம்பு, வெளிச்சிப்பிசின், அரத்தை, வெள்ளைப்பூடு, கருஞ்சீரகம், இவைகளை ஓர்நிறையாய் உத்தாமணிச்சாற்றிலாட்டி கொதிக்கவைத்துப் பூசத்தீரும்.

---

## வாதக்கடுப்புக்கு மேற்பூச்சு.

கள்ளிக்கொழுந்தை வாட்டிப்பிழிந்த சாற்றில் பூநீர் சீரகம் வகைக்கு ஒருசிரங்கைபோட்டு மறுநாளந்தத் தண்ணீரால் கடுகையரைத்து கடுக்கிறவிடத்திற்பூசத் தீரும்.

---

## முழங்கால் வாதத்திற்கு.

வீழியிலை, பிண்ணாக்குப்பூடு, அவரையிலை, வெள்ளைப்பூடு இவைகளை யோர்நிரையாய் இடித்து ஒரு துணியில் முடிந்து விளக்கெண்ணெயில் வெதுப்பி ஒத்தணஞ்செய்து ஆறுநாள் கட்டத்தீரும்.

---

## வாதக்கடுப்பு வாயுக்கு

சங்கம்வேர், முக்கொழுஞ்சு, கொடுவேலி, பரங்கிப்பட்டை, சுக்கு, வாய்விளங்கம், சிறுதேக்கு, கொத்தமல்லி வகை

க்கு விராகனிடை-உ, இவைகளைச் சிதைத்து ஒருபடி தண்ணீரிற்போட்டு அரைக்காற்படியாய் வற்றவைத்து அதில் ஒரு விராகனிடை மிளகுப்பொடியும் ஒருதுட்டிடை விளக்கெண்ணெயும்சேர்த்து இப்படி ஆறுவேளைகொடுக்கத்தீரும்.

## வாதக்கடுப்பு முடக்குவாதம் மேக வாயுவிற்கு.

பரங்கிப்பட்டை சித்திரமூலம் சங்கு அமுக்கிரா இவைகளின்வேர்ப்பட்டை வகைக்குப் பலம்-ந, திரிகடுகு, சீரகம் ஏலம் வகைக்குப்பலம்-ம, இவைகளை இடித்துச் சூரணித்து ஒருசட்டியில் அரைப்படி ஆவிநெய்யும், காற்படி, தேனும் எட்டுப்பலம் சீனியுங்கூட்டிக் காய்ச்சி இறக்கி அதில்சூரணத்தைத்தூவிக் கிண்டி வேளையொன்றுக்கு ஒரு கொட்டைப் பாக்களவு கொள்ளத் தீரும்.

## அண்டவாதத்திற்கு.

ஒருபிடி கருஞ்சீரகமும், ம-வெள்ளைப்பூண்டும் தேனிற் குழைத்து இந்தப்படி ஆறுபோது கொள்ளத்தீரும்.

முருங்கையிலை ஒருபிடி, வெந்தயம், வெள்ளுள்ளி, கழற்பருப்பு வகைக்குப்படி அரைக்கால், சுக்கு மிளகு வகைக்கு விராகனிடை-உ, இவைகளை மயனமாயரைத்துக் காய்ச்சிக் கொடுக்கத் தீரும்.

## தண்டுவாதத்திற்கு.

பிரண்டைத்தண்டு கோவைத்தண்டுசிந்திற்றண்டு இவைகளைச்சிதைத்துக் காற்படிசாறுபிழிந்து சுக்கு மிளகு சருள்ளி வகைக்கு விராகனிடை-ந, அரைத்துக் கலக்கி இந்தப்படி-ந நாட்கொடுத்து காத்தட்டியிலையை அரைத்துத் தண்டிற்பூசத் தீரும்.

## சந்துவாதத்திற்கு.

தேங்காய்க்குள் கடுகைப்போட்டுமூடி ஓடு வெந்தபின்பு கடுகைக்கொட்டி மோரில் அரைத்துக் கலக்கி மூன்று நாட் கொடுக்கத்தீரும், முட்குருந்தம்பட்டையும் பாஞ்சா வேரும் ஒரு எலுமிச்சங்காய்ப் பிரமாணமரைத்து வெந்நீரிற்கரைத்து உள்ளுக்குச் சாப்பிட்டு மேற்படி வேர்களை யரைத்து சந்திற் பூசத்தீரும்.

## தோள்வாதத்திற்கு.

தழுதாழை, நொச்சி, வாதமடக்கி இவைகளை யிடித்துத் தண்ணீரிற்போட்டுக்காய்ச்சி வேதுவிட்டுவிளக்கெண்ணையைப் பூசிப் பிடித்துவிடத்தீரும்.

---

## நடுக்குவாதத்திற்கு.

காரெள்ளெண்ணெய் படி-உவ, ஆயிற்பட்டை வெள்ளைப்பூண்டு வகைக்குப் பலம்-க, வசம்பு பலம்-வ, காயம் திப்பிலி வகைக்கு விராகனிடை-டு, அரைதுப்போட்டுக் காய்ச்சி வடித்து ஒருகரண்டிவீதம் உள்ளுக்கும் கொடுத்து மேலிலும்பூசத் தீரும் பத்தியம் புளித்தள்ளவும்.

---

## கெண்டைக்கால் வாதத்திற்கு.

மாஞ்செவிக் கள்ளியிலைச்சாற்றை மூன்றுநாட் பூசி அப்பால் வெந்நீரில் குளிக்கத்தீரும்.

---

## இடுப்புவலி உளைவு
## மேகநீர்கட்டு சூலைகளுக்கு.

முற்றின ஆறுதேங்காயைப் பால்பிழிந்து அதில்கெந்தகம் கருஞ்சீரகம் வகைக்குக் கழஞ்சு-சு, தாளகம் மனோசிலை வகைக்கு விராகனிடை-ந, இவைகளைக் கொடிக்கள்ளிப்பாலாலரைத்துப்போட்டுக் காய்ச்சி நெய்வடித்து ஒரு தட்டிடை கொடுத்து பத்தியம் மிளகுநீரும் அன்னமும் பாசிப்பயறுங் கூட்டத்தீரும்.

---

## சூலைகடுப்பு வாயுஉட்குடைதல்
## வாதக்கடுப்புக்கு.

பாங்கிப்பட்டை திரிகடுகு வகைக்குப் பலம்-டு, இடித்துச் சூரணித்து திரிகடிப்பிரமாணம் வாததேகிக்குத் தேனிலும், இளைத்ததேகிக்கு ஆவிநெய்யிலும், வாயுபதார்த்தந் தள்ளி (௰) நாள் சாப்பிடத்தீரும்.

706ob24 page 5



## இடுப்புவலிகாசத்திற்கு.

விழிச்சாறும் நல்லெண்ணெயும் ஓரளவாய் மத்தித்து வேளை ஒன்றுக்கு அரைக்காற்படிவீதம்-ரு, நாள் கொள்ளத் தீரும்.

## மொளிவீக்கத்திற்கு.

பிரண்டையையிடித்து எருக்கஞ்சாறுவிட்டு வதக்கி வீக்கத்தில் வைத்துக்கட்டத் தீரும்.

## திமிருக்கு.

சங்கிலைச்சாறும் வெள்ளாட்டுப்பாலும் ஒன்றாய்க்கலந்து வேளையொன்றுக்குக் காற்படிவீதம் மூன்றுநாள் கொள்ளத்தீரும்.

## அலகுப் பூட்டுக்கு.

முருங்கப் பட்டை, வசம்பு, வெள்ளைப்பூடு, பெருங்காயம் இவைகளைத் தைவேளைச்சாறுவிட்டுச் சிதைத்துத் துணியில்முடிந்து நாசியில் நசியமிடத்தீரும்.

## எரிவாதத்திற்கு.

இலந்தையிலையை அரைத்துக் காடியிற்கறைத்து மத்தாற்கடைந்து அதில் வருகிற நுரையை உடம்பிற்பூச வெரிச்சல்மாறும்.

## தோள்கடுப்புக்கு.

சிறுபூளைவேர் பலம்-க, சுக்கு மிளகு மஞ்சள் பூடுவகைக்கு விராகனிடை-க, இவைகளைக் குன்றிமணிச்சாற்றாலாவது ஊசிநீராலாவது மயனமாயரைத்து அயக்கரண்டியில் கொதிக்கவைத்து நாலுவேளை பற்றுபோட்டு பிரப்பங்கிழங்கு மிளகு பரங்கிப்பட்டை சுக்கு அல்லது அரத்தைவகைக்கு விராகனிடை-கூ, வீதமிடித்து-கூ, பங்கிட்டு வேளை ஒன்றிற்கு ஒருபங்கை இரண்டுபடி தண்ணீரிற்போட்டு அறிக்காற்படியாய் வற்றவைத்து ஆறுபோது புளி புகைதள்ளிச் சாப்பிடத் தீரும்.

## எட்டாம்பாகம்

## முற்றிற்று.